உ

முருகன் துணை

பழநிஸ்தலம்

முத்தமிழ்ச்சக்ரவர்த்தியாகிய

ஸ்ரீமத்

மு. மாம்பழக்கவிச்சிங்கநாவலரவர்கள்

இயற்றியருளிய

# பிரபந்தத்திரட்டு.

முதற் பாகம்

இது

மதுரைஜில்லா பெரியகுளம் தாலூகா மார்க்கயன்கோட்டை

ஸ்ரீமாந். பிச்சாண்டி ஆச்சாரியாரவர்கள் குமாரர்

M. P. பழநிச்சாமியாசாரியரால்

தொகுக்கப்பெற்று

மதுரை

விவேகபாநு அச்சியந்திரசாலையில்

பதிப்பிக்கப்பெற்றது.



1908.

இதன் விலை ரூ 2—8—0.

# இப்புத்தகத்துளடங்கிய பிரபந்தங்களின் விவரம்.





ஆகச் செய்யுள் 1508.

உ

குமரகுருபரன் றுணை.

# முகவுரை.

---

## உபாஸனாமூர்த்திகள்.

பண்டான மறைகளுமெய் பண்ணவருந் துதித்துநிதம் பரவிப் போற்றிக்
கொண்டாடுந் தன்னருளைப் பூவுலகோர்க் கருள்வருள் கூர்ந்தெந் நாளும்
வண்டார்பூம் பொழிற்கழனி வளங்குலவுந் திருப்பழனி மலைவாழ் ஞான
தண்டாயு தக்குமர சற்குருவின் பாதமலர் தலைமேற் கொள்வாம்.

வெண்பா.

புத்தமுத வாரிதியாய்ப் போதானந் தத்தெளிவாய்ச்
சுத்தசிவ ஞான சுகாலயமாய்—நித்தலுமென்
சிந்தையினுஞ் சென்னியினுஞ் சேர்ந்துலங் குங்கருணைத்
தந்தைபிச்சாண் டிசர்மலர்த் தாள்.

---

அமிழ்தினு மினிய தமிழ்நலம்பருகும் ஐயன்மீர் !

சீருஞ் சிறப்பும் பொருந்திய இந்தச் செந்தமிழ் நாட்டில் இற்றைக்கு இருபதிற்றைந்தாண்டுகட்கு முன்ன ரெழுந்தருளியிருந்த முத்தமிழ்ச் சக்ரவர்த்தியாகிய ஸ்ரீமான் மாம்பழக் கவிச்சிங்க நாவலர், என்னும் நல்லிசைப் புலமையாளரின் மஹா வித்வ சாமர்த்ய கௌரவங்க ளனைத்தையும் இத்தமிழகத்துள்ள ஆன்றோ ரனைவரும் அறிந்திருப்ப துண்மையாகலான் என்னுலிங்கு எடுத்தியம் பற்பாலன வொன்றில்லை. எனினும் ஓர் நூலினை யாக்குதல், அல்லது தொகுத்தல் என்னுந் தொழின்மேற்கொண்டா னொருவன் றனக்கு அம்முயற்சியினிடையில் நேர்ந்த வர்த்தமானங்களை நான்முகத்துரைப்பது முறையெனக் கூறியமேலோருரைத் துணைக்கொண்டு சில கூறத்துணிந்து முன்வந்தேன்.

அதாவது:—முற்காலத்திருந்த கல்வியிற் பெரிய கம்பநாட்டாழ்வார் முதலிய பல புகழான்ற வித்வரத்னங்க ளியற்றிய நூற்றொகுதிகளானும், காலதேச வியல்புகட்குத் தக்கவாறு அவ்வவ் வமயங்களி லருள்புரிந்த தனிப்பாடல்களானும், இக்காலத்திற் கல்வியறிவிற் சுதித்துள யாவரு முணரவைத்தாங்கு, இக்கவ

வலரவர்களும் முத்திசாதனமாகத் தமது ஞானதேசிகன் மீதியற்றிய துதிப் பிரபந்தங்களுடன், "முனிவரு மன்னரு முன்னுவ பொன்னுன்முடியும்." என்றவாறு இக வாழ்வினுக்கும், தமக்கியற்கையாக நேர்ந்த அபார உதாரவண்மைக் குணத்திற்கும் பொருந்திய பொருள்வருவாய் குறித்துச் சென்ற சென்ற திசைகடோறுந் தம்மை யாதரித்தருளிய மன்னவர் முதலாம் மாண்புடையார்பாற் புகன்ற சீரிய சுவை முதிர் செந்தமிழ்க் கவிமணிகள் அனேக ஆயிரக் கணக்குகளாக விருக்கின்றன. இவற்றில் முந்திய துதிப்பிரபந்தங்கள் மட்டும், நாவலர் காலத்திலே அவர்களன்பின் வழிப்பட்ட சில மேதாவியரா லவ்வோ ரமயங்களிற் றனித்தனியாக அச்சியற்றி வெளிவந்திருந்தன. அத்தகைப் பழம் பிரதிகளி லொன்று மிக் காலத்திற் காண்ப தரிதாகியது. மருங்காபுரி ஸமஸ்தானத்திற் புகன்ற பாடல்களை அந்த ஆதீன கர்த்தர் ஓர் புத்தக மாக்கியுள்ளார். அதனைத் தவிர வெளிவந்த தனிப்பாடல்கள் வேறொன்று மின்றாம். இது நிற்க,

எனது ஞான சற்குருமூர்த்தியாகிய தந்தையார் ஸ்ரீமான் பிச்சாண்டி ஆச்சார்ய சுவாமிகள் திவ்ய அநுக்ரகத்தால் யான் சிறிது தமிழுணர்வு பெற்ற நாளிலிருந்து இக் கவிச்சிங்கத்தின் சரித்திராம்சங்களையும், கவிகளையும் புகல்வோர்வாய்க் கேட்டு அவற்றைப் பருகுமன்னன ஆர்வத்தனாகி யெக்காலமும் அவைகளிற் புக்க மனத்துட னிருந்தனன். இதை யறிந்த என தாருயிர்த் துணையான ஜேஷ்ட சகோதரர் ஸ்ரீமான் M. P. சுப்ரமண்ய ஆசாரியாரவர்கள் தமதரிய முயற்சியாற் சேகரித்திருந்த சில நூல்களையுந் தனிப்பாடல்களையும் கொடுத்தருள் புரிந்தார்கள். அவற்றினைக் காணுந்தொறு மிவைபோல்வன பிறவற்றையும் எவ்வாற்றானுந் துருவி யெடுத்துத் தொகுத்து ஓர் புத்தக மாக்கல்வேண்டுமென்னும் ஆசை யதிகரித்து அதற்கான எவ்விடங்களினுஞ் சென்று தேடிக் காணுஞ் செயன்மேற்கொண்டு, குரோதி வருடம் ஆடித் திங்களில் நாவலர் வாழ்ந்த நற்பதிக் கேகினேன்.

அவிடத்தில் என்னையாளுடைய நாதனுன தண்டாயுதப் பகவனது ஒப்புயர்வற்ற திருவருட்சேவை சாதித்துக்கொண்டு சில நாட்களிருந்து, நாவலரிடம் நண்பு பூண்டோருந் தற்கால மாங்கின்மையால், அவர்கள் வீட்டிற் றேடினுனுஞ் சில கவிகள் பொறுக்கலாமென்று நினைத்து, எனதாப்த நண்பர்கள் சிலருடன் சென்று பற்பலர் வீட்டினிலுள்ள நீண்ட காலங்கண்ட பேழைகள்கொண்ட காகிதக் குப்பைகளைக் கிளறியும் அவ்வவர் குடும்பகாரியத்திற்கேனு மொரு சிறு பயனுக்கு முதவாத அவற்றை நதிவாய்ப்புக விடுத்ததையன்றி யெமக்கானதொன்று மெடுத்திலேம், ஓர் மகம்மதிய நண்பரிடத்துமட்டும் மூப்பான்செய்யுண்மணிகளடங்கிய புத்தகமொன்று கிடைத்தது. இவ்வாறு யான் தேடித்திரிவதைக்கண்டு நாவலரவர்களின் உரிமையுள்ள சொந்த மைத்துனராகிய ஸ்ரீமான் தளி. சுப்பிரம

ண்ய ஆசாரியாரவர்கள் மனமகிழ்ந்து (திருப்பழநி வெண்பா, பழநபுரிமாலை, சிவகிரியமகவந்தாதி, செந்திற்பதிகம்) என்னும் நான்கு பிரபந்தங்களடங்கிய ஏட்டுப் பிரதியொன்றைக் கருணையுடன் உதவினார்கள். ஒரே இடத்தில் இத்துணைப் பாடல்கள் கிடைக்கும்படி செய்தது முருகக் கடவுளின் திருவருண் மகிமையெனக் கொண்டேன்.

இந்நகரிற் சிலரிடம் நாவலரியற்றிய விரண்டு குறவஞ்சி நாடகத் தமிழும் சித்திரப்பாக்களும் தனிக்கவிகளும் உண்மையாகவைத்துக்கொண்டு பார்க்கவுந் தர மனமின்றி வேறு காரணங் கூறிக் கிடையாதெனச் சாதித்துவிட்டு, கிடைத்தமட்டிலுள்ளவற்றை விரைவி லச்சியற்றும்படி யென்னை யூக்கமூட்டிய அன்பாளரும் உளர். இம்மாண்புடையார்க் கென்னொலியற்றுங் கைம்மாறுதான் என்னையோ ? அறியேன்.

இன்னணம் ஆங்கிருந்து கோயமுத்தூர், உடுமலைப்பேட்டை, ஆனைமலை, பொள்ளாச்சி முதலிய ஏனைய பிறவிடங்களினுஞ் சென்று தேடிய காலத்திலெனது முயற்சியி னளவிற்கேற்ப வாங்காங்குச் சில கவிகள் சேர்ந்தன. இச்சமயத்திலே எம்பெருமா னருளாற் சேலம் ஜில்லா ஸ்ரீமான் மாரியப்பமுதலியாரவர்களது ஒப்பற்ற கூட்டுறவுங் கிடைத்தது. அதிலிருந்தே முன்னரென் மனத்தங்குரித்த ஆசையென்னும் ஆலின் சிறுமுளை யிந்நாளடைவிலோங்கிப் பணைத்துத் தற்காலம் பலர் களிகூரும் பலனுறப் பொலிந்தது. எனதன்பிற் கணிகலமாகிய இவர்கள் தமதிதய கமலாசன வாசியான கவிச்சிங்க நாவலரவர்களின் ஞாபகசின்னமாக அவர்களியற்றிய தனிக்கவிகள் நூற்றுக் கணக்கானவற்றைத் தம தருமைத் திருக்கரத்தா லெழுதா வெழுத்தைப்போ லெழுதி யநுதினமும் பார்த்துக் கொண்டிருந்த புத்தகத்தையும் தாமச்சியற்றிய தனிப் பிரபந்தங்களையும் அன்புட னுதவினார்கள். மேலும் இத்தொகுதியை விரைவில் வெளியிடற்கான விஷயங்களில் அடிக்கடி கடிதமூலங்களாக, வழுக்கல் நிலத்திற்கோ ரூன்றுகோல்போலுறுதிபயப்பதான வசனங்களால் என்னைத் தூண்டுதல்புரிந்த கருணையின் திறனையோர் கணமும் மறந்திலேன்.

நாவலரியற்றிய தனிப்பாக்களை யெத்துணைக்காலம் முயன்று சேகரிப்பினு மவற்றின் எல்லை காண்பது யாவருக்கு மரியதாகலான் இவ்வாறு கிடைத்தவற்றை யிரண்டு பகுதியாக்கி, முதலிற் பதிக முதலாய நூல்களைப் பிரபந்தத் திரட்டெனவும், துதியமைந்த தனிச்செய்யுட்களைத் துதிப்பாசுரத்தொகை யெனவும், பிற்பகுதியிற் சந்திரவிலாசமும், தனிச்செய்யுட் கோவையும், முறையே நிறுவி, இத்திரட்டிறுதியில் சரித்திர சாரசங்கிரக மிருத்த லத்யாவசிகமானதால் இயற்றிச் சேர்க்கவேண்டுமென்ற அனேக நண்பர்களின் விருப்பத்தை மறுக்க

அவ்வாறே சங்க மஹோற்சவத்தின் மூன்றாந் திருநாளாகிய (1906-ம் ஞு மேமீ 26உ காலையிற் கூடிய மஹாசபையிற் சங்கஸ்தாபகரான ஸ்ரீமான் பாண்டித்துரைத்தேவரவர்களே அக்கிராசனாதிபதியாக வீற்றிருந்தார்கள். அத்தினமும் சங்கத்தார் நியமித்த காலவளவின்படி உபந்யாஸங்களும் சில மேதாவியரால் நன்கு நிறைவேறின.

அச்சமயத்தில் பிரம்மஸ்ரீ மஹா மஹோபாத்தியாயர் வே. சாமிநாதையரவர்கள் எழுந்து சிலகாலத்திற்குமுன் இவ்வுலகிலிருந்து அழியாப் பெரும்புகழ் நிறுவிய ஸ்ரீமான் மாம்பழக்கவிச்சிங்க நாவலரவர்களின் சுவைமுதிர்ந்த பாடல்களின் விருந்தினை அனைவரும் உட்கொண்டு களித்த லத்யாவசிகமானதெனப் பல அமுதவசனங்களால் இனிதாகவெடுத்தியம்பினார்கள். சங்கத்தாரனைவரும் அதனையாதரித்தார்கள். உடனே அக்கிராசனாதிபதியவர்களின் அநுமதிப்படி அவர்களருகில் நின்று நாவலரியற்றிய தேவஸ்துதியான செந்தமிழ்ப்பாக்களிற் சிலவற்றைக் கூறினேன். கேட்டு மகிழ்ந்து தனிக்கவிகளிற் சில கூறும்படி ஆக்ஞாபித்தார்கள். அப்பொழுது அக்கிராசனாதிபதியவர்களின் அருமைத் தந்தையாரவர்களாகிய மாட்சிமைபொருந்திய ஸ்ரீமான் பொன்னுச்சாமித்தேவரவர்கள் சமுகத்திற் பாடிய பாவினங்களைப் பாடினேன். அக்கிராசனாதிபதியவர்கள் இதுவரையுங் கேட்டிராத புதுமைவாய்ந்த இச்செய்யுண்மணிகள்மேலுள்ள அன்பினை யாவர்க்குந் துலங்கிக்காட்டுதல்போ லெழுந்த மந்தஹாஸத்துடன் ஒவ்வொரு கவிகளையும் இருமுறை மும்முறை சொல்லும்படி கேட்டானந்தித்தார்கள்.

இதற்கிடையிடையே நாவலரவர்களின் சரித்திர வாராய்ச்சியில் வந்த புகழ்நலங்களிற் சிலவற்றை பிரம்ம ஸ்ரீமான் மஹா மஹோபாத்தியாயரவர்களும், ராவ் பஹதூர் ஸ்ரீமான் நாகோஜிராயரவர்களும், வேம்பத்தூர் ஸ்ரீமான் பிச்சுவையரவர்களும், சேலம் ஸ்ரீமான் நல்லசாமிப்பிள்ளை யவர்களும், மதுரை ஸ்ரீமான் M. R. கந்தசாமிக்கவிராயரவர்களும், திருநெல்வேலி ஸ்ரீமான் கவிராஜ நெல்லையப்பபிள்ளையவர்களும், அன்புடன் புகழ்ந்து பேசினார்கள்.

பின்பு அறிஞர் பெருந்தகையாகிய ஸ்ரீமான் அக்கிராசனாதிபதியவர்களும், பிரம்மஸ்ரீ மஹா மஹோபாத்தியாயரவர்களும், இத்தகைய கவிச்சிங்கத்தின் கவிகளனைத்தையும் ஒருங்கே திரட்டிய நுமது நன்முயற்சி கற்றோ ரனைவராலும் வியந்து மகிழ்ந்துகொண்டாடற்பாலனவே, இவைகளைக் காலநீடிக்காமல் அச்சியற்றி வெளிவரச்செய்தல் நம் தமிழ்நாட்டிற்கோர் பேருபகாரமாகும், என்ற அன்பான வசனங்களைத் திருவாய்மலர்ந்தருளினார்கள்.

இங்ஙனம் ஆங்கு நடந்தனவனைத்தையும் அருட்பெருந்தகையரான ஸ்ரீமான் தந்தையாரவர்களிடம் வந்து தெரிவித்து, இந்நூல் அச்சியற்றற்கென்று

அவர்களருள்புரிந்த நன்கொடைப் பொருளுதவியை முன்னரே பெற்றிருந்தும் தெய்வாதீனமாக நிகழ்ந்த சில முக்ய காரணங்களா லிடையிற் சிலகாலம் இம்முயற்சி தாழ்ந்து நின்றது. பின்னர்ச் சில மாதங்கட்குமுன்னர் மதுரை விவேகபாநு அச்சியந்திரசாலையில் இவ்வேலை தொடங்கினேன். எக்காலத்திலும் என்மீது உழுவலன்பு பாராட்டும் உத்தமசீலராகிய ஸ்ரீமத் M. R. கந்தசாமிக்கவிராயரவர்கள் இக்காரியத்திற் புரிந்த பேருபகாரங்களை யென்று மெந்நாளு மறக்கற்பாற்றன்று, "காலத்தினாற் செய்த நன்றி ஞாலத்தின் மாணப்பெரிதென்பது" பொய்யாமொழியன்றோ!

இவ்வண்ணம் நிகழ்ந்த செயலனைத்தினுக்குந் தோன்றாத் துணையாகியிருந்து நிறைவேற்றி யாண்டருளிய திருவருள் நிறைந்த தாதையான தண்டாயுதக் கடவுளின் உபய திருவடித்தாமரைமலரை எனது மனமொழி மெய்யென்னுந் திரிகரணங்களானும் பத்தியுடன் வாழ்த்தி வணங்குகின்றேன்.

கீலகநாம சம்வற்சரம்
இடப-ரவி
24உ

M. P. பழநிச்சாமி,
மார்க்கயன்கோட்டை,
5—6—1908.





உ

ஸ்ரீ தண்டாயுதபாணி துணை.

தமிழ்ச் சக்ரவர்த்தியாகிய

# பழநபுரி

# மு. மாம்பழக்கவிச்சிங்க நாவலரவர்கள்

## சரித்திரச் சுருக்கம்.

மங்கலந்திணிந்த வளம்பல நிறைந்து பங்கமில் குணத்துப் பாண்டியராண்ட தென்னாடென்னு மிச் செந்தமிழ் நாட்டிற் சீருற்றோங்குந் திருப்பதியும் குன்றுதோறாடல்புரி குமரக்கடவுளினி துறைந்திடவுகந்த பிரதானத்தலங்களான படைவீடுக ளாறனுளொன்றும், திருவாவினன்குடியெனும் பெரிய திவ்யக்ஷேத்திரமுமான, பழநித் தலத்தில் வசிக்கும் விசுவப்பிரம்மகுலத்தினரில், உலகினருக்கிருமைச்சுகங்களையுங் கொடுப்பதற்கு இன்றிடமையாத் துணையினவாகும், கல்வி செல்வம், ஒழுக்கம் முதலான சகல நன்மைகளும் பொருந்தி யநுதினமும் அறுமுகப்பெம்மானடிமலர்க்கன்பராய், வாழ்ந்த உத்தம சீலராகிய முத்தையாசாரியாரென்றொருவரிருந்தனர். அவர் முன்னர்ச் செனனங்கடோறும் புரிந்த செழுந்தவப்பேற்றினருமையால், நப்புலவர் பெருமானார் கி. பி. 1836-ம் ஆண்டிற்குச் சரியான தமிழ் மன்மத வருடத்திலவர்களுக் கிரண்டாம் புத்திர ரத்னமாகவந்து அவதரித்தனர்.

இந்த நன்மகப்பேறடைந்த தந்தையார் மகிழ்வெய்தி ஜாதகன்மச் சடங்கு நன்கியற்றி மதிமரபுதித்த வழுதியராளுகையின் பின்பு ஆலவாய்ப்பதியி லரசு வீற்றிருந்து செங்கோலெந்தத்திசையினுஞ் செலுத்திப் புவிதனைக்காத்த புரவலர் பெருமான் திருமலை நாயக்கரவர்கள் முற்காலத்திற்புரிந்த அரிய பெரிய சிவாலயத் திருப்பணிகட்குப் பொருந்திய துணையினராகியிருந்த இவரது மூதாதையரின் சிற்பசாத்திரத்திறமைமிகுந்த அற்புதக்கைத்தொழிலினருமையைக் கண்டு மகிழ்ந்து கொடுத்த செம்பொருட் சிறப்புடன் அன்னவரின் வேதாகமப் பயிற்சி மிக்க வாக்கின் மதுரபாஷ்யத்தைக்கேட்டானந்தித்து அவ்வள்ளலாற் காரணச் சிறப்புப்பெயராகச் சூட்டப்பெற்ற அக்காலமுதற்கொண்டு தமது குல மக்களுக் கணிந்து வழங்கி வரும் பெருமை வாய்ந்த மாம்பழம் என்ற திருநாமம் புனைந்து மகவினை வளர்த்துவருவாராயினர். இங்ஙனம் சிலகழுங்காலத்திற் குழந்தையின்

மூன்றும் வயசிற் பிணித்த வசூரியம்மையென்னும் விதலை நோயினுற் குதலை மொழிபகரும் மதலைபடுந்துயரைக்கண்டு சகிக்குமாற்றலின்றித் தியங்கிப்பலவாறு சிந்தித்துத் தமது எம்முயற்சியாலுங் குழவியையக்கொடிய நோயினின்றும் விடுவிக்கும் வழிகாண்கிலாது வருந்தி மெலிந்து, இனிச்

சிவகிரிக்கட்புவனமுய்யச்சேரர்பிரான்புரிதருபச்சிமத்துவார
நவமணிப்பொற்சினகரத்துஞானகருணுநிதியாய் நவைதீரன்பர்
தவவுருச்சித்துபசரிக்குஞ்சமையங்கடொறும்பலசுந்தரசொரூப
மூவகைமுற்றக்காட்டியிருளோட்டியெழுசெழுஞ்சுடராயுதித்துவாழும்,

உமையிளங்குமரனையன்றி நமதிளங்குமரனைக்காக்க வல்லுநரொருவருமிலரெனத் துணிந்து குழவியையோர் பரியங்கத் தமனியுடனெடுததுச் சென்று தண்டாயுதன்றிருச்சன்னிதியடைந்து “என்னுளத்தகலாதிலங்கு வேலிறைவ! நினதருளால் யானெய்திய இந்த மைந்தனை யருப்பிணி வருத்துவதென்னை? ஐயகோ! இத்துயரினை எவ்வாறு கண்டுசகிப்பேன். தெய்வமே! யான் செய்வதொன்றறியாமற் றிகைத்து நின்று இத்தினம் உனது கிருபாநோக்கச் சன்னதியிற் கொண்டுவந்து கிடத்தினேன். கவலைநோய்தீர்த்துக் காப்பதுன் பாரம்” என்று பலமன்றாட்டத்துடன் பிரார்த்தனை புரிந்து போற்றித் துதித்து எம்பிரான் அருட்பிரசாதரூபமான திருநீற்றுக் காப்பினைக் குழவிக்கணிந்து பரனே! நினதடைக்கல மிதுவெனப்புகன்றகன்றேகினுர்.

பிற்றை நாளுதயத்தெழுந்து நலந்திகழ் ஷண்முக நதிப்புனல் படிந்து நித்தியகன்ம நியதிகள் முடித்துப் பூசனைக்குகந்த பொருள்களைக்கொண்டு கரிசறுந்தமது பரிசனக் குழுவுடன் இறைவனுர் சினகரத் தெய்தி நோக்குழி ஷண்முகத் தண்ணல் தண்ணருணலத்தால் அவ்விராப்போதினுக்குள் தம்மகவினுடலமுழுதுமிடையறாது நெருங்கி நிறைந்த விரணங்கள் யாவுஞ் செவ்வனேயாறித் தெளிவுடன் மதலை யெம்பெருமான் றிருநாமங்களை யன்புடன் ஓதிக்கொண்டிருக்கும் அருட்பெருஞ்செயலினைக் காண்டலும், உண்ணிறைந்தோங்கு முவகையம் பெருக்காற் கண்கணீர் ததும்பக் கதிததம்முடலம் பரவசமடைந்து பாங்குடனுயர்ந்த மகவினையெடுத்து மார்புடனணைததுப் பரிவொடு முகத்தைப் பார்க்கும்போது குலவிய கண்ணொளி குறைந்துள தன்மையை யறிந்துளம் மாழ்கி யாகுலித்தயர்ந்தனர்.

என்னை? மொய்ம்மலர்க் கடம்பணி மூழவுறழ்தடம்புய முருகப்பிரான் அன்றிரவிற் றம்பாலடைக்கலமுய்த்த வணிமகவினுக்கு நோயின் கொடுமையாற் பொருந்திய புறப்பொருள் விளக்குங் கட்புலனொளிக் குறைவினுக்குப் பிரதியுப

காரமாகவும், "கண்ணுடையரென்பவர் கற்றோர் முகத்திரண்டு புண்ணுடையர் கல்லாதவர்" என்று பெரியார் வகுத்த தெய்வத்திருவாக்கினுக்கிவர் சான்றாகவும், நுண்மாணுழைபுல நிறைவாற்றேடிக்கொள்ளும் புலமைத்திறத்தினுக்கான்ற நூலாராய்ச்சிகட்குத் தக்கபடி பின்னரிம் மகவால் நிகழும் ஏகசந்தக்கிராஹிய மூலமாக ஓதாதுணரலாகும் அரிய பெரிய சத்தியை யருள் புரிந்து, ஞானசற்குருமூர்த்தியாக சாக்ஷாத்கரித்து உபதேசஞ்செய்து நாவலர் பெருமானாகச் செய்தருளிய தேவரகசியமான உண்மையின் பெருமையை முன்னர்த் தெரிந்துகொள்வதென்பது சின்னாட் பல்பிணிச் சிற்றறிவினையுடைய விம்மக்கட் பிறப்பிற் கியலாதகாரியமன்றோ.

ஆகலின் இங்ஙனங்கவன்ற தந்தையார் ஒருவாறு தேறிக் கண்ணொளிகெடுத்த பகவனே நன்மதி கொடுத்தாளுவனெனத் துணிந்து பரிவொடு மகிழ்ந்து பலமுறை பணிந்து விரிநிலமடைந்து கிரிவலஞ்செய்து மகவினைக்கொண்டு தம் வளமனைக் கெய்தினார். அற்றை நான்முதற் குழவியும் வடிவேலிறைபத மறவாமனத்துடன் வளர்ச்சியுறுங்காலத்தில் ஐந்தாம் பருவம் போதரலுந் தந்தையார் இவரைக் கல்விபயிற்றல் கருதிக் கழகஞ் சென்று வருதற் கியலாதிருத்தலாற்றாமே தம்மடியிற் கிடத்தி மகவின் முதுகின்புறத்தி லெழுதிக் காட்டியவொரு சுபதினத்திலே உயிரு மெய்யுமான முதலெழுத்துக்கள் முப்பதினையும் நன்கறிந்துகொண்டனர். இவ்வாறு சிலதினப்பழக்கத்தினாலேயே உயிர்மெய்யெழுத்துக்கள் இருநூற்றுப்பதினாறையும், அவற்றின் எண் பெயர் முறை பிறப்பு உருவமுதலான பாகுபாட்டின் றன்மைகளுடன் செவ்வனே யறிந்துகொண்டு எத்தனையோ நெடிய தொடர் வாக்கியங்களாகப் புகலினும் வழூஉக்களில்லனவாகக் கற்பலகையிலெழுதும் வரிபிறழாது தீட்டித் தந்தையிடங் காட்டுவாராயினர்.

அதனைக்கண்ட பேரறிவாளரான தந்தையாரிணையிலாப் பேரானந்தத்துடன் ஆச்சரியமடைந்து இவ்வாறு சிந்தனை புரிகின்றனர். ஆஹா! ஈதென்னபுதுமை! விளையாட்டாக நாமிரண்டொரு தினம் பயிற்றுவித்தமையானே இச்செல்வனது கல்வியறிவிற் புகுந்த மனவுணர்வின் றிறன் நன்கு விளங்குகின்றது. ஓ இஃதன்றே முதன் மாணாக்கரியல். அன்றியும் "விளையும் பயிர் முளையிலே தெரியு"மென்ற மூதுரையின் பொருளீங் குணரத்தக்கதே. மேலும் "தந்தை மகற் காற்று நன்றி யவையத்து முந்தியிருப்பச் செயல்" என்றபொய்யா மொழியாரின் பொதுமொழியை உய்த்துணர்ந்து பார்க்குமிடத்து அதன் மெய்ப்பொருள் இத்தகைய சேயைப்பெற்ற செல்வனாகிய என்னனையார்க் கன்றி ஏனையர்பாற் படிவீய வல்லதோ? இன்று. ஏன்? தனயர்தம் நுண்ணறிவினது அதிதீவிர பக்குவமன்றோ தந்தையர் புரியு முயற்சித் துணைக்கு முதற்காரணமாக நிற்பது. ஆத

யின் இச்செல்வக் குமரனைக் கல்வியறிவிற் கதித்தோங்கச் செய்தலே எனது முக்கிய கடமைகளெவற்றுளும் முந்தியதெனத் தெளிந்து, ஓர் ஆசிரியரைத் தமது மனைக்கழைத்துவந்து அவர்பாலொப்புவித்தனர். நாவலரும் சிலகாலமவ்வாசிரியருடனிருந்து எண்ணெழுத்து முறையான யாவையு மோதியுணர்ந்து, இலக்கணவிலக்கிய நூலாராய்ச்சியுட் புக்கனர். புகவே, இவரது குசை நுனிபோற் கூரிய பேரிய லறிவின் றிறன் அபராவர்ணத்திற் றேன்றும் நிழற் சாயை போல நிமிடந் தோறும் அபிவிர்த்தியாகப் பெற்றதனாற் பாடம் சொல்லவந்த ஆசிரியரும் பலராயினர்.

ஞான குருபரன் நல்லருள் பெற்ற நாவலர் புதிது புதிதாக வந்த ஆசிரியரெவ்வெவரும், ஒருவாரம் ஒருபக்ஷம் ஒருமதி யென்னும் சிறிய காலத்தளவே யிவர் பக்கத்திலிருந்து பன்னூற் றொகுதிகளை யொவ்வொரு முறை வாசித்துக் கொண்டிருக்கவும் அவற்றினுட் பொருள் நுட்பங்களை யிவர்பாற் கேட்டானந்தங் கொள்ளவு மாயினரன்றிச் சில மாதங்களாகவேனும் ஆசிரியத் தன்மை பூண்டொழுகின ரொருவரு மிலரே யென்பது தேற்றம். இவ்வாறு சில வருடங்களுக்குள், தொல்காப்பிய ரூபங்களான இலக்கியங்களினுந் தொல்காப்பிய முதலான இலக்கண நூல்களினும் வடமொழி நூலாராய்ச்சியினும், வேதாந்த சித்தாந்தங்களினும் சோதிடம் சங்கீதம் ஏனைய சமய நூல்கள் முதலான சகல கலைகளினும் பயின்று தெளிந்து உலகநடை முழுது முணர்ந்து தாம் பாலப்பருவத் தெல்லையைக் கடக்குமுன்னரே கோலப்புலமைத்திற மனைத்தையுங் கொள்ளை கொண்டனராயினர்.

அவ்விளம்பருவத்தே இயற்றமிழ்க் கவிகளியற்றுந் தகையினராய்த் தமது ஞானாசிரியராகிய குமரகுருபரநாதன் குரைகழற் றுணைத்தாண் மலர்மிசை யணிந்த பாமாலைகளாகிய, பழநிப்பதிகம், குமரகுருப்பதிகம், செந்திற்பதிகம், சிவகிரிப்பதிகம் முதலானவைகளின் றன்மை பகருதற் கெளிதன்று. அதினின்றுஞ் சின்னாட்களிற் சீரிய நாற்கவித் துறைகளுந்தெரிந்த திறனுடைமையும், எத்தகைய கல்விமாண்பினருந் தம்மாலியற்றப்பட்டதொரு நூலை யொருமுறை யோதின் அவைகளைத் தாம் காந்தம் வலியு மிரும்பு போலேற்றித் தமதருமை தெரிதர, இது தொன்னூலெனச் சாற்றுந்துணிபுடைமையும் ஒலிக்குறிப் புணர்ந்துரைக்கும் நுண்மையும் "கேட்டார்ப்பிணிக்குந் தகையவாய்க் கேளாரும் வேட்ப மொழிவதாஞ் சொல்" என்ற தமிழ் மறைக்கிணங்க நவரசக் கற்பனாலங்காரப் பிரசங்கச் சொல்வன்மையு மிதுமுதலாக வின்னமு மனேக சமத்காரப் பெருமித குணப்ரபாவங்களனைத்து மொருங்கேயுடையராய்த் திகழ்ந்து கவிராஜ ரென்னும் சிறப்புப்பெயர் புனைந்து சிவிகை யேறித் தகுந்த கையேட்டினர்களுடன் சீர்ம

விந்த பல விருதுகள் துலங்கத் தமது கல்வியின் றிறனறிந்து கொடுக்குங் கொடைத் திறமுடைய அரசரெவரென நாடி, சம்பிரம வளம்பரவுதென்முகவை யம்பதித் தலைவராய் மணிமுடி பொறுத்த மங்களக்குரிசில் மின்னவிர் நெடுவேல் வேந்தர்கள் தம்பிரானாகிய முத்துராமலிங்க சேதுபதியவர்கள் தமதருமைச்சோதர சிகாமணியும், முற்காலத்தில் மதுரையம்பதியிற் றமிழ்முச்சங்கங்களை வளர்த்துவந்த பாண்டித்துரைமார்கள் சீர்த்திக்கிணங்கத் தற்காலத்தில் அத்திரு நகரில் நான்காஞ் சங்கமெனத் தாபித்து நஞ்செந்தமிழணங்கினைச் சீருடன் வளர்க்குந் தாயாய் மெய்ப்புகழ் தழைத்திடும் ஸ்ரீமாந். பாண்டித்துரைச்சாமியவர்கள் செல்வத் தந்தையாருமாகிய பொன்னுச்சாமித்தேவரவர்களுட னினிதுறைந் தோங்குந் திருப்பெருஞ் சமூகமடைந்து வருதலே வழுத்தரும் புகழுடைத்தெனத் தமது நுண்ணறிவா லறிந்து, இராமநாதபுரம் சமஸ்தானத்திற்குச் சென்று தகுந்தவோர் விடுதியிலமர்ந்து தமது கல்வித்திறமனைத்தையுங் காட்டிய சீட்டுக்கவி யென்று தீட்டி, இறையவர் பேட்டியின் விஷயமாய்க் கையேட்டினர்பாற் கொடுத் தனுப்பினார்.

அதனையறிந்த மன்னவரிருவரும் கவிதையின் றிறனைமக்கு வெகு ஆச்சரியமடைந்து என்ன செய்யலாமென்று விசனமுற்று கண்ணிலாதவரான இவரது வருகையைச் சமஸ்தானம் ஏற்றுக் கொள்ளுதல் தகுதியன்றென அங்கீகரியாது விடுத்தனர்கள்.

இதனைக் கையேட்டினர்களா லறிந்த நாவலர் நம்மைக் கண்ணில் ஆதவரென மதித்துத் தகுந்த காலத்தில் அழைத்துக்கொள்ள வெண்ணி யிங்ஙனங் கூறினார்கள் போலும், என்று இவ்வாறு நினைந்த மன்னர்களாலே தகுந்த பேரும் மிகுந்த சீரும் பெற்றாலன்றிப் பிரியேன் இவ்வூரென்று மஹா தீர்க்க வைராக்ய சித்தத்துடன் எத்துணைக் காரியங்களுக்குங் காலமுமிடமும் வலிதினோக்குதல் கற்றறிந்த மேலோர் கடனாதலால் தாம் கருதிய வினைத்தும் பெறுவதற்குரிய காலானுகூலத்தை யெதிர்பார்த்தாராகி அந்நகர் வித்வான்களுடன் சம்பாஷித்துப் பொழுது போக்கிக் கொண்டு தமது கைப்பொருளுதவியாற் பலநாளாங்கு வசித்தனர். அக்காலத்தில் ஓர்நாள் மஹா வித்வஜனப்பிரியரான ஸ்ரீமாந் பொன்னுஸாமித்தேவரவர்கள் தமது ஆஸ்தான வித்வான்களை நோக்கி ஸ்ரீலக்ஷ்மிதேவி ஸ்துதியான வடமொழிச் சுலோக மொன்றைக் கொடுத்து நும்மவரில் எவரேனு மிதன் கருத்தை யோர் வெண்பாவாக வியற்றிடிரென ஆக்ஞாபிக்க, அவர்களா லங்ஙனமியற்ற வியலாதிருந்த அந்த சுலோகத்தினை அவ்வித்வான்களு ளொருவர் மறுநாள் கவிராயரவர்களிடம் வந்து சொல்லி இதன்பொருளை வெண்பாவாகப் பாடுதிர் பார்ப்போமென்று பரீட்சிக்குமாறு கேட்டனர். அதற்கு உடனே

**வெண்பா.**

அர்புய்மென் றுதுசகி யாதுமது தாள்சகிமா
ரமபுதிகர் பார்வைசகி யாதுமெய்யவ்—வம்புயங்கை
தாங்கலம்மெய் மால்வலுரஞ் சார்தலரி தென்னிலென்வாய்
வீங்குரை யாற்றுங் கொறிரு வே.

எனப்பாடினர். இதனைக்கண்டு மகிழ்ந்து கொண்டு சென்ற விதவான் இறையவர் சமுகமடைந்து இசசெய்யுண் மணியைக் கொடுத்து நடந்த விர்த்தாந்தங்களைக் கூறுதலும், அத்தினமே, இபபுலவர் சிகாமணியை ஆதரிக்க வேண்டுமென் றெழுந்த வுள்ளன்பின் மிகுதியை வெளிக்காட்டலான புன்னகையுடன் கவியைப் படித்து மகிழ்ந்து சமுகத்திற்கு உடனே அழைத்துவரக் கட்டளையிட்டனர். கவி ராயரவர்களு மிதனை யறிந்து கையேட்டினர் சூழ இறைவர் முன்னர்ச் சென்று

புகழான்ற நகமீன்ற பொன்னின்முலைக் கன்னியொரு புறந்தழீ இப்பல்
லகிலாண்ட முதலாண்ட வருண்மோன சிவஞான வமலன் காக்க
பகர்பூங்காத் தொறும்பூவை பதங்கோவைச் செழும்பாவைப் படிக்குந்தேவை
நகரேந்த்ர சமுகமுத்து ராமலிங்க பூபவனை நாளுநதானே. என்றும்,

மங்கரிய பங்கவிடர் வெங்கடலின் முங்கலுறு வார்மீளற்குன்
பொங்கவக ளங்கசமு கங்கருணை வங்கமது போலுமாலோ
கொங்கர்சக ரங்கர்கள்க லிங்கர்பல ருங்கரமுன் கூப்பக் கீர்த்தி
தங்கவளர் துங்கஜய சிங்கமெனு மெங்கள்பொன்னுச் சாமிமாலே.

என்றும் இரண்டு கவிகளைப்பாடி ;

காவலர் போற்றும் காவலீர் ! கேண்மின் நாற்கவித் திறந்தெரி நலமனைத்தையும் நும்பாற் கவித்திரு நிதி படைத்திட வெண்ணி யானிப்பதிவந்து பலநாட்களாயின ஆயினும் நுந்தமருமையுள்ள பேட்டியைத் தருந்த காரணங்கொண்டு கையுறல் வேண்டுமென்றே இதுகாறு மிருந்தனன், நுமது திருவுள மின்றுதானிரங்கி யது போலும் என்றனர். அபபொழுது அரசர் பெருந்தகை இவரைப் பரீக்ஷிக்க வெண்ணங்கொண்டு, கலைவலீர் ! சமஸ்திகள் கூறவருமோ வென்றதற்கு ஈற்றடி கொடுத்தால் முதலடி யெடுக்கலா மென்றனர்.

ஆங்குக் கொடுத்த ஈற்றடிகளின் முறை வருமாறு:—

(1) கிரியிற் கிரியுருகுங்கேட்டு (2) கிரியின்மயல் காட்டறிஞர் கேள், (3) கனதன வெனக்கூறிற் கண்டு, (4) காளையுரு வழித்தோன் கண், (5)

குடத்தைப்பிடித்தவன் சட்டியை நோக்கக் குறைவில்லையே, (6 மஞ்ஞை மிடற் றுட் புகுந்த முள்ளெயிற்று வல்லரவ மகிழ்ந்தானே" என்னுமிவைகள் போன்ற வின்னும் பலவுள. அவையனைத்துக்கும் கூறிய விடைகள் முறையே வருமாறு.

வெண்பா.

மாலாம்பொன் னுச்சாமி மன்னர்பிரான் றன்னாட்டிற்
சேலாங்கண் மங்கையர்வா சிகருநல்யாழ்—நீலாப்
பரியிற் பெரியகொடும பாலைகுளி ரும் ஆ
கிரியிற் கிரியுருகுங் கேட்டு. (1)

என்றுமொரு தன்மைத தெனவினிக்கு மொன்னலரை
வென்றபொன்னுச் சாமி விறல்வேந்தே—துன்று
வரிசிலைக்கை வேளயிலான் மாய்ந்தகிர வுஞ்சக்
கிரியின்மயல் காட்டறிஞர் கேள். (2)

போதுரைமட் டேப்புகல்வர் பொங்குபொரு ளொன்றீயார்
சீலபொன்னுச் சாமியெனுஞ் சிங்கேறே—சால
மனமிரக்க மில்லாத வன்கணரைத தேடிக்
கனதனவெ னக்கூறிற் கண்டு. (3)

பத்திபுரி நெஞ்சே பகலிரவும் பேரின்ப
முததிதரு மையலிடை மூழ்காதே—சத்தியினால்
வாளை யுருவழித்த வள்ளுகிர்க்கைச் சிங்கமுகக்
காளை யுருவழிததோன் கண்.

கட்டளைக்கலித்துறை.

கடத்தைப் பழித்துக் களபந் திமிர்ந்து கதிர்த்தரள
வடத்தைத் தரித்துச் சுணங்கு படர்ந்தொளிர் வள்ளிதன
தடத்தைத் தழுவுந தனது மலர்க்கைத் தலத்தினிற்குக்
குடத்தைப் பிடித்தவன் சட்டியை நோக்கக் குறைவில்லையே' (5)

விருத்தம்.

அஞ்ஞைகளைத்தினந்தினங்கொண்டாடிநனிபாடிமிடியதனைறப்பல்லை
ஞஞ்ஞையெனத்திறக்காதெற்புரக்குமுத்துராமலிங்கநரேந்திராகேண்மோ
கஞ்ஞையுறுசிறியர்பெரியோரையும்வெல்லுவர்விதியார்கடப்பாரோர்தால்
மஞ்ஞைமிடற்றுட்புகுந்தமுள்ளெயிற்றுவல்லரவமகிழ்ந்தானே. (6)

## மு. மாம்பழக்கவிச்சிங்க நாவலரவர்கள்

அருணகிரியா ரருளிச்செய்த திருப்புகழில் "முத்தைத்தரு" எனனும் முதலடி முழுதையுமோர் வெண்பாவாகப் பாடுதிரென, அதற்கு "வரமுதனிக்காக்குமனமே வெண்சோதி பரவிய,, என்று முதலிற்சேர்த்துக்கொண்டால் வெண்பாவா மென்றனர்.

### வெண்பா.

வரமுதனிக் காக்கு மனமேவெண் சோதி
பரவியமுத் தைத்தரு பத்தித்—திருநகையத்
திக்கிறை சத்திச் சரவணமுத் திக்கொருவித்
துக்குருப ரென்னெனவோ து.

## வினா. எலிக்கும் புலிக்கும் சிலேடை.

### வெண்பா.

பாயுங் கடிக்கும் பசுகருவா டும்புசிக்கும்
சாயுங் குன் றிற்றாவிச் சஞ்சரிக்குந்—தூயபுகழ்
தேங்குமுத்து ராமலிங்கச் சேதுபதிப் பாண்டியனே
வேங்கை யொரு சிற்றெலியாமே. (என்பது விடை)

ஓர் வெண்பாவில் 4 காசி வரவும் முருகர் துதியாகவும் பாடுக என்னும்
வினாவிற்கு விடை.

### வெண்பா.

இக்கா சினிப்பா விலங்கா சினித்தேவர்
தொக்காசி கூறித் தொழக்கருணை—மிக்காளுங்
கந்தா முருகாசி காவளத்தின் மீதேறி
வந்தா தரித்தருளு வாய்.

### இதுவுமது 6 காசி.

துங்காசி வந்த சுமுகாசி லோதிவள்ளி
பங்காசி கிக்குதிரைப் பாகாசித்—தங்காசி
னிச்சைதனி லேங்கா தெனையாள்து காசிறந்த
செச்சைவடி வேலா தினம்.

### இதுவுமது 10 காசி.

வாகாசி ராகாசி வாகாசி ஞகாசித்
தாகாசி யோகாசி தாகாசி—யேய்காசி
வண்குழலி பாகாசி வந்தவுத்துங் காசிறிது
தண்கருணை கூர்சந்த தம்.

இவ்வாறு காலவளவு சிறிதுமின்றி உடனுக்குடனே கூறும் மறுமொழிகளைக் கண்டுவியந்து இவரது நல்லிசைப் புலமையை யின்னமுந் துலக்க நினைத்து 5 நிமிஷத்திற்குள் 14 காசி வரும்படி சிவஸ்துதியாகப்பாடுதிர் என,

## நேரிசை வெண்பா.

### 14 காசி இதில் 6 காசி யென்றும் 8 காசிவவென்றும்.

காசினிபுக் காசிவருங் காசிவணிக் காசிறியேற்
காசிதவே காசினநா காசிவைபா—காசிலேபோற்
காசிவண்வா காசிவதுங் காசிவமோங் காசிவழாக்
காசிவர் தாழ் காசிவளா கா. (எனப்பாடினர்)

பின்னர் ஓர்சமயம், கால், கொம்பு, விசிறி, ஒற்று, நீங்கிய அனுசிக நிரோட்டகம் (அதாவது) உயிரெழுத்திலும் மெய்யெழுத்திலும் முதலெழுத்தையன்றி யேனைய வெழுத்துக்கள் வராமலும், அவைகளிலும் நாசியின் றுணையைக்கொண்டு சப்திப்பதான, ஙகர ஞகரம் வராமலும் இரண்டுதடுகளும் பொருந்தப் பிறக்கும் பகர மகரங்கள் வராமலும், சிவபிரான் மேற் பேரின்பப் பொருள் கொண்டஸ்துதிவெண்பா வொன்று பத்து நிமிடத்திற் பாடுக வென்றனர்.

## அவ்வாறே பாடிய வெண்பா.

அலக கசட தடர ளகட
கலக சயச கதட—சலச
தரள சரத தரத ததல
கரள சரள கள.

இதன் பொருளை நவரசாலங்காரத்துடன் சவிஸ்தாரமாகப் பிரசங்கித்தனர். இன்னமும், இவைபோன்ற அருமையான கடாக்க ளனைத்தினுக்கும், தகுந்த விடைகள் கொடுத்தும், இடையிற் கிடைக்குஞ் சிறிதுகாலத்தில் உவமைவிலக்குகளாகவும் சிருங்காரங்களாகவும் அநேக கவிதா ரத்தினங்களைச் சொரிந்து அவ்வள்ளலார் மனத்தைப் பலவாற்றானும் மகிழ்வுறச் செய்தனர். அக்கவிகள் யாவையு மீண்டுக் கூறுதல் அத்யாவசிகமே யெனினும் சரித்திர மிக விரிதலானும் பின்னருள்ள தனிச்செய்யுட் சிந்தாமணியினுள் விவரமாகக் கோத்திருப்பதானும் நிறுத்தி அவற்று ளிரண்டொன்றை யிங்குக் கூறுவாம்.

## விருத்தம்.

தலைமைபெறு நிருபர்சிகா மணியாய்ச் சான்றோர்
    தமக்கணியா யுதித்தபொன்னுச் சாமியென்னுங்
கலைநிதியே கலாநிதிநின் முகம்போலென்பர்
    கவிஞர்சில ரதுநிதமிக் கவின்கொள்வாமென்

றலையினிடைப் படிந்துபடிந் தெழுந்துமா சோர்
வாமைகண்டு வெள்கிமெலிந் தறவுங்கூனி
யலையுமல துனதுமுகம் போன்று வெய்ய
வனுக்குமறுக் கலியிருளை மாற்றிடாதே.

மருவிரிபந்து வெருவுறநொந்து வனைசிமிழ் கடைபடமுந்து
வடகிரிகோடத் தடமுகைவாட மருண்டிபம் பரஞ்சுழன்றுடப்
பருமணிபொறுத்துப் பருத்துக் கச்சறுத்துப் பணைத்தொளிர் கண்கறுகறுத்துப்
பவத்தொடர் நீங்குந் தவத்தருமேங்கும்படியடிபடர்ந்தினிதோங்கும்
இருமுலையிருந்து மொருமுலைபொருந்து மெழின்மதன்வரவிவள்வருந்து
மியல்கொளலாமா நயகுணசோமா வின்பநன்கருள் செழுந்தாமா
தருவெனுநேமா பொருபலவீமா ஜகமெலாம் பணிரகுராமா
தயைமலர்மின்னுக் கிசைபுயபொன்னுச் சாமிராஜேந்த்ரவுத் தமனே.

இத்தகைய கவிகளைக்கேட்டுப் புளகாங்கிதமடைந்து, புவியரசர் செங்கரத்தாற் கவியரசர் தங்கரத்தைப் பிடித்துச் சபாஷென்று குலுக்கியபோது சொல்லியது.

அவனிபுக ழுனதுதிரு வடிமலரி னெழுதுகளா லன்றுநீங்காப்
பவமதகன் றொருகரிய பாறையும்பெண் ணுருமெனிற் பாராவாரந்
துவளவமு தெடுத்தினிய சுரர்க்கருணின் றிருக்கரத்தாற் றொடப்பேற்றேற்குக்
கவலையினி யுளதாமோ காமர்பொன்னுச் சாமியென்னுங் கருணைமாலே.

அப்போது, பொற்பணி சிவிகை யாடை புகலருஞ் செம்பொன் முதலானவனேக சம்மானங்கள் செய்து அற்புதமான வேலைப்பாடுள்ளதும் விலையுயர்ந்ததுமான பஞரிஸ் பீதாம்பர மென்னும் பொன்னுடை யொன்றினை நாவலரிரு தோள்களிலும் மாலையாக வணிந்து கவிச்சிங்கம் என்னும் பட்டம் சூட்டி, இது முதலாக நமது சம்ஸ்தானத்திலே யிருத்தல் வேண்டுமென்று அனேக முகமன் கூறி மிகுந்த அன்பு பாராட்டினர்கள்.

அப்பொழுது சொல்லியது.

கங்கங்குலவுகதிர்வேலான்கனகமேருகருணைமுகில்
பொங்கம்பெறுதென்புதுவைவளர்பொன்னுச்சாமிபூபனெனக்
கெங்குந்திறல்கூர்கவிச்சிங்கமெனவோர்பெயரிட்டெழில்வளமை
தங்கும்புகழ்மேலாங்கலைபுந்தந்தேயெனையாதரித்தனனே.

சந்தனம் கொடுத்தபோது 7 சந்தனம் வரும்படி ஓர் செய்யுளியற்றித் தருக என உடனே சொல்லியது.

### கட்டளைக் கலிப்பா.

கந்தச்சந்தனமெய்யிற்பொருக்கெழக்கனவசந்தனம்பாலுன்றன்மோகமே
முந்தச்சந்தனமேவிச்செந்தேனுமமுதுங்கசந்தனவென்றேமயங்கினள்
இந்தச்சந்தனகுந்தரளம்புனைந்தெழுகச்சந்தனயின்னிவட்குக்கந்
தந்தச்சந்தனதெவ்வமுந்தீர்த்திடத்தயவுகூர்பொன்னுச்சாமிநரேந்த்ரனே.

இங்ஙனம் செல்வமுங் கல்வியு மொருங்கநுபவிக்கும் பெருவள்ளலார்களான அம்மன்னவருடனிருந்து சதாகாலமும் கவிதாப்பிரசங்கங்களாலும் வசன சம்பிரதாயங்களாலும் சங்கீத நுணுக்கங்களாலும் ரமிக்கச் செய்து வந்தனர்.

நாவலர் தமது ஞானதேசிகன்மீது புகன்ற துதிப் பிரபந்தங்களைக் கேட்டு ஸ்ரீமாந் பொன்னுச்சாமித்தேவரவர்கள் சொல்லிய

### வெண்பா.

உன்னியவீ துண்மைபுலகைவலம்வந்தனனென்
றன்னைபின்னுமன்பாலளித்தனனோ — மன்னுபொழிற்
றேம்பழநி வேடன் செவிக்கூட் டினையிரத
மாம்பழநீ சொல்லெனு மதி.

என்ற அற்புத விசேடக் கற்பனை நிறைந்த செய்யுண்மணியே அம்மன்னர்பிரானிவர்மேற்கொண்ட கருணையின் பெருக்கைக் காட்டித்திகழும்.

இவ்வாறு நடந்துவருங்காலத்தில், ஒரு நாள் வடதேசத்திலிருந்து வந்த விசுவநாத பாரதியார் என்ற தமிழ்வாணரொருவர் சேதுபதியவர்கள் மீது பாடிய பிரபந்தத்தினை யரங்கேற்ற நினைத்து ராஜ சமூகத்திற்கு வந்தனர். அப்போதங்குள்ள கவிச்சிங்கத்தைக் கண்டு, இவரது கல்வித்திறத்தை முன்னரே கேட்டுளாராதலால் மனந்திடுக்கிட்டு, இவரில்லாத காலத்தி லரங்கேற்றினாலன்றி நமது நூலினிது நிறைவேறாதென்று மதித்து, அரசனிடஞ்சென்று வேறு காரணத்தாற் கூறுவார்போல, அரசே! சபைமங்களகரமாகவிருத்தல் வேண்டுமென்று மிருதுவாயறிவித்தனர். இவரது அகக் கருத்தத்தைத் தெரிந்த, இறையவர் நமது பார்வைக் கங்ஙனந் தோற்றவில்லையோ? என்றனர். நாவலர் அச்சமயத்தி லிந்தச் சூசனை வார்த்தைகளை யறிந்தும் அறியார்போ லிருந்தனர். பின்னர் பாரதியாரவர்களால் நூலினு ளமைந்த நூறு செய்யுட்களும், முறையே மூலபாடமாக ஓதப் பெற்றன. அச்சமயத்திற் கவிச்சிங்கம் மிகுந்த பதட்டமுடையார் போலபிநயித்து ஆ. ஆ. ஆ. ஈதென்ன அநியாயம், என்ன துணிவு? சில வருடங்கட்கு முன்

னரே, ஓர் பிரபுவின்மீது இப்பிரபந்தங்களைப்பாடிச் சம்மானம் பெற்றிருக்கிறேனே, அது இவர் கைக்கெவ்வாறு கிட்டியதோ? பேர்களைமாத்திரம் மாற்றிக்கொண்டு, குற்றமுள்ளோரை யடக்குங் கொற்றவர் சபையிலச்சமின்றிக் கூறவந்தது வெகு விந்தையே. வித்வான்களுள், ஒருவரியற்றிய நூன்முழுதையு மொருவர் கொள்ளையடிக்குங் காரணத்தை யிதுகாறுங் கண்டிலேன். இதைக்குறித்தென்ன கேள்விமுறை யின்று? என்றனர். அவையுளோரனைவரும் பிரமித்தார்கள். அந்தோ! இயற்றினர் கவலை யியம்பவும் பெறுமோ. ஆ ஹா! வெகு பரிதாபம் பரிதாபம் என் செய்வார், செய்வதொன் றறியாமற் றிகைத்து இவரையே நோக்குகின்றார். இஃதிங்ஙனமாக, வேந்தனும் என்னகாணும் நீவிரியற்றியதாகச் சொல்லிய பிரபந்தத்தினைக் குறித்து அவரென்னவோ சொல்லுகின்றனரே. இதனுண்மை தெரிந்தாலல்லவோ நன்மை யென்னலும் பாரதியார், கவிச்சிங்கத்தைப்பார்த்து, இந்நூல் உம்மா லியற்றப்பட்டதாக விருப்பில் சிற்சில பாடல்களாவது சொல்லவரு மன்றோ? அங்ஙனஞ் சொல்வீரேல் நமது வார்த்தைகளனைத்தும் மெய்யே என்றனர். உடனே, கவிச்சிங்கம், சிற்சிலவென்ன முழுதுங்கூறலாமென்று கவிகடோறும் வேறு பேரமைத்து முறைபிறழாது செய்யுட்களனைத்தையுங் கூறுவாராயினர். இதற்கிடையிடையி லித்தனையாம் பாடலில் இத்தனையாம் வரியைக் கூறுகவெனப் பலவாறு வினு யதற்கெல்லாம், நிராடங்கமாகச் சொல்லிமுடித்தனர். இம்மட்டோ நூதனமான விரண்டு செய்யுட்களியற்றியதனிலிந்நூலின் பாடற்றொகையும், அரங்கேற்றிய காலமு மிடமு மின்னதெனவமைத்துங் கூறினர். கிணறு வெட்டப் பூதம் புறப்பட்டவாறு போலிதுவென்ன காரணம். இங்ஙனம் நம்மைவந்து சூழ்ந்துகொண்டதே யென்று உண்மைப் பாரதியா ரொன்றும்பேச நாவெழாது விழித்தனர்.

இதனுண்மை யறிந்த இறைவரிருவரும், கவிச்சிங்கமோர் காரணார்த்தமாகக் காட்டிய திறமைப் பாடென்று மகிழ்ந்து கொண்டு, கவிஞரேறே! இவ்விஷயத்தை நீவிரே துலக்கவேண்டுமென்றனர். அதற்கு, நாவலர் பெருமான் அடைந்தார்ப் புரக்கும் அருட்பெருந்தகையீர்!

இந்நூலியற்றினர் அவரே. இதற்கி யாதோரையமுமின்று. ஆனுலிவ்வித மாறுபாடு நிகழ்ந்த தென்னையோ வெனில், "பொய்ம்மையும் வாய்மையிடத்த புரைதீர்ந்தநன்மைபயக்குமெனின்" என்பதுநீதிநூன்முறையாகலானும்,இப்பாரதியார் நூல் தொடங்குங் காலத்தில் என்னினைந்தோ சபை மங்களகரமாக விருத்தல் வேண்டுமென்ற வாக்கின் செருக்கை யடக்குதற்காகவும், ஏகசந்தக்கிராஹியமென்னும்எமதியற்கையானபழக்கத்திறமையை,இம்மஹா சமூகத்திலுமறிவித்தற்காகவு மன்றி வேறின்று மென்றனர். இந்த ஆச்சர்யகரமான திவ்விய சக்தியைக் குறித்து உடனே,இறையவராணையாற் சபையோர்களானந்த கரகோஷ முழக்கம் புரிந்தனர்கள். பின்னர் அம்மன்னவர் கவிச்சிங்கத்தை யந்நூலின் பொருட்பிரசங்கஞ் செய்யச் சொல்லிக் கேட்டானந்தித்து இருவருக்கும் தகுந்த சம்மானமளித்தனர். அன்று முதலாக யாவரும் நாவலர் விஷயத்திற் பயபக்தியுடன் அன்பு பாராட்டி வந்தனர்.

ஒரு சமயத்தில் நாவலர் தமக்குப் படியனுப்பும்படி சமத்காரமாகச் சொல்லியது.

வடிகொளமுதனை யபலகலையுமுணர்ந்தடைகுநர்புன்மருளாங்கங்குல்
விடிதரநன்கருள்செயுநின்பெருந்தகைமையறிந்திருந்தும்விருப்பாலின்னம்
படிபடியென்றடிக்கடியெப்படிமொழிவல்படிமகிழும்படிநாடோறு
நெடியபுகழ்வளர்க்குமனுநீதிபொன்னுச்சாமிமன்னுநிருபரேறே.

அன்றுமுதலெதேஷ்டமான போஜனவகைச் சாமான்களனுப்ப உத்தரவு செய்தார்கள். சின்னாள் கடந்த பின் படி விசாரணை நடத்துவோர் பராமுகத்தாற் பதார்த்தங்கள் மிகுந்துங் குறைந்தும் நியதியின்றித் தகுதியான காலங்களில் வரத்தாமதித்து மிருந்தன. அப்போது சொல்லியனுப்பியது.

கனப்படிகமிதுவெனும்பொற்கமலகரதலசுமுகாகனிந்தசெங்தே
னெனப்படிவண்டிமிர்குழற்பொன்னிணங்குபொன்னுச்சாமிமன்னவியம்பக்கேண்
மனப்படிநானினைத்தபடிவந்துபடிப்படியுணர்த்தமாட்டேனின்னே [மோ
தினப்படியிப்படியுனக்குச்செலும்படியென்னொருபடிநீசெய்குவாயே.

அதுமுதல் நாளொன்றுக்கு ரூபா பத்து வீதம் படி கொடுத்து வந்தார்கள்.

ஒரு நாள் மத்தியானவேளையில் ராஜசமுகத்திற்குக் கையேட்டினருடன் வழக்கப்படி சென்றபோது முதல் வாசலிலிருந்த பாராச்சேவகர் இவர்களை இன்னாரென்றறியாது தடுத்தனர். அங்குள்ள இவர் தரமுணர்ந்த சிலர் இக்காரணத்தை, இறையறிந்தா லென்னாமோ வென்றஞ்சி, நாவலரவர்கட்கு நலம்படு முகமன் கூறி உள்ளே போகும்படி யேவினார்கள். அவ்வாறு சென்று இறையவன் முன்னரெய்திக் கூறியது.

தருமகுணமிகுமுனதுசமுகமுறூர்வறுமையெனச்சலிக்கக்காய்ந்து
வருமிரவிவெயிலதனான்மயங்கியின்றுநானிங்குவந்தபோழ்தி
லருமைதவிர்பாராச்சேவகர்தமதுபெயர்ப்பொருளையறியக்காட்டிக்
கருவமொடுதடுப்பதென்னோகாமர்பொன்னுச்சாமியெனுங்கருணைமாலே.

இதைக்கேட்டவுடன் அச்சேவகரைத் தருவித்துத் தண்டிக்கலுற்ற பொழுது, கவிச்சிங்கம், அரசே! பாராச்சேவகர் தடுத்தாரென்ற தன்றிப் பார்த்தவர்களென்று கூறிலேன். நென்னல் காறும் அந்நிலையி னின்ற முதியோரன்று இவர்கள் புதியோராதலின் ஒருவாறு தடுக்கமுயன்றனர், இக்குற்றத்தை மன்னித்தருளவேண்டு மெனக்கேட்டு அவர்களைத் தண்டனையினின்றும் விடுவித்தனர்.

ஓர்தினம், இன்று நமது போஜனத்திற்கான சமையல்களென்ன வென்றபோது, அன்று நடந்தவைகளை, ஓர் துறையாக வமைத்துக் கூறியது.

முதிர்கொடிக்கொத்தவரைக்காய்கத்தரிக்காய்நண்பருப்புமிலைமாதஞ்சி
மதிமிகவுமிளகுரசமாகிமதனெய்ததியால்வருந்துவாளோ
கதிர்குலவுநினதுபுயக்காமருபூந்தாமமருள்கவினார்நாளுந்
துதிபுதுவைப்பதியதிபசுமுகபொன்னுச்சாமியெனுந்துரைக்கிங்கேதே.

நாவலர் சிவகங்கை தேவகோட்டை முதலான விடங்கட்குச் சென்று ராமநாதபுரம் வந்த காலத்திற் சுரநோய்பற்றிய போது சொல்லியது.

உன்னினியசன்னிதிநாடொருவியயன்மருவியதாலுடன்றசைவ
நன்னிலேவிட்டன்னியநாளடைபுகுமீனவணையன்றநவிந்தகாந்த
லென்னிடத்துந்துன்னிவருத்தியதுசற்றேவுனதருளுப்திருந்தேன்வெண்பூ
தன்னில்வருகன்னிதிருவென்னுமின்னுமன்னுபொன்னுச்சாமிமாலே.

காந்தல் தீர்ந்தபோது சொல்லியது.

சொற்செறிமுத்தமிழ்வலர்கருத்துரங்கமணிசரங்கவிகைதுலங்குந்தந்தப்
பொற்சிவிகைமுதலவருள்புனிதபொன்னுச்சாமியென்னும்புயலேவுன்றன்
மற்செழுந்தண்கருணைநெடுமழைபொழிப்பவந்தனுலென்வறுமையாய
முற்சுரமும்பிற்சினந்தமுதுசுரமுமிகவயலாய்முடிந்தமாதோ.

மூக்குத்தூள் போட்டுக் கொள்வதில் நாவலர் மிருந்த பிரியமுள்ளவர்களா னதால் ராஜசமுகத்திற் பிரசங்கஞ்செய்து கொண்டிருக்கும் பொழுதும், சர்வஜ்ஞாக் ஞையுடனெவருமறியொதபடி சம்பிரதாயமாக வுபயோகித்துக்கொள்ளுதல் வழக்கம். ஒருநாள் அவ்வாறு செய்துகொண்டு டப்பியைப் பக்கத்தில் வைத்திருந் தனர். அதனை யருகிலிருந்த இறைவர் கண்டெடுத்துக் கொண்டனர். பின்னரத னைத் தேடமுயன்ற பொழுது இதனையே கவனித்துக் கொண்டிருந்த மன்னர் பிரான் புலவரேறே! பிரசங்கத்தினிடையிற் றேடமுயன்றகாரிய மின்னதெனக் கழறுவிரென்றதற்கு, புரவலர் பெரும! நுமதருமைத் திருச்சமுகத்தி லஞ்சா தறிவிக்கற்பாலதான வத்துணைப் பெரிய காரிய மன்றே யென்றனர்.

ஆனாலது பொடிக்காரியமோ வென்னலும் ஆமென்றார். அதற்கு வேலவர் துதியான வொரு வெண்பாவில், ஐந்து பொடி வரும்படி, இந்தவிடத்திற் பாடுவி ரேல், அக்காரியத்தை யநுகூலப் படுத்தலாமென்றனர்.

அப்பொழுது கூறியது.

கரும்பொடிமாவஞ்சவெறிகைப்பொடிசில்வெற்பர்
தருங்கொம்பொடுசைதெய்வத்தையல்—விரும்புபுய
வான்பொடியாநின்றகிர்மாலுமயிலோயெனையாள்
தேன்பொடியார்பூம்பதந்தந்தே.

உடனே சொர்ணத்தாலமைந்த நவரத்ன கசிதமானதும் விலையுயர்ந்தது மான பொடிடப்பி ஒன்றைப் பரிசாக வளித்தனர்.

ஓர் நாள் அருணோதய காலத்தில், அரண்மனை வாசல் முகப்பில் அரசருட னின்று பேசிக்கொண்டிருந்தபொழுது, கீழ்த்திசையிலுதித்த சூரியன் றோற்றத் தை, அங்கு வலப்பாக மிடப்பாகங்களில் நின்ற புளியமரத்திற்கும் பனைமரத்திற் குமிடையே கண்டு, " இந்தப்புளிக்கும் பனைக்கும் நடுவே பொழுது புறப்பட் டதே " எனக்கொடுத்த ஈற்றிற்குச் சொல்லியது.

## கட்டளைக்கலித்துறை.

அளிக்கும் பனைக்குஞ் சரவுரியான்முத லாருமஞ்சங்
களிக்கும் பனைக்கும் பிட்டாறுமுகனைக் கலந்தெமது
நளிக்கும் பனைக்குந் தெரியாமற் சேர்தரு ணைத்திலிந்தப்
புளிக்கும் பனைக்கும் நடுவே பொழுது புறப்பட்டதே.

பனிக்காலத்தில் தமக்குப்போர்வை கேட்டது.

கற்போர்வை திகரெவருங் கவிதுறந்து புதுவைவயற் களங்கடோறு
நெற்போர்வை கியபடிநன் னிதிப்போர்வைத் திடவுதித்த நிபுணநாளும்
பொற்போர்வை வேலைருள் பூத்தபொன்னுச் சாமிமன்ற புகழுக்கேற்ற
நற்போர்வை யின்னமெற்கு நல்கவில்லை பனிவருத்த நவிலொணாதே.

சால்வைத்துப்பட்டி கொடுத்தபோது சொன்னது.

மால்வைத்துப்பட்டிலகுவள்ளுறைறவேன்மன்னர்மன்னன்மகிழ்பாவாணர்
மேல்வைத்துப்பட்டிகையன்னமுங்கொடுத்தாதரித்தருளும்விவேகநன்னி
ரேல்வைத்துப்பட்டினஞ்சூழ்முகவைமுத்துராமலிங்கமெனுநரேந்த்ரன்
சால்வைத்துப்பட்டியொன்றுதந்தெனதுபுறநடுக்கத்தையுந்தீர்த்தானே.

பீதாம்பர வித்தைக்காரர்கள் வந்து ராஜசமுகத்தில் வித்தைகளாடிக் கொண்டிருக்கும்பொழுது, கவிச்சிங்கம் தமக்கும் சில வித்தைகள் தெரியுமென்று உப்யார்த்தமாகச் சொல்லியது.

## ஆசிரியம்

அட்டவரைகளையுண்டனந்தனைவிழுங்கியேழுண்டத்தையுங்குலுக்கி
யஞ்சாமலிடியைப்பிடித்துப்பொடித்துமருவலர்தமைமெலாங்கசக்கி
மட்டரியகனலைப்பிழிந்துசாறுக்கியதைவயிறுகொளவாய்மடுத்து
வனவேங்கையைச்சிமிழில்வைத்தடக்கிக்கொடுமகிழ்ந்துவிளையாடவறிவேம்
துட்டவெங்கலிதனைவெருட்டவொருவித்தைநீசொல்லிக்கொடுத்தல்வேண்டும்
துங்கவகளங்கசதுரங்கதளவிங்கிதசுமங்களவலங்கிர்தகுண
வட்டுடைபகட்டுமெழிலிட்டொளமருட்டுமிளவட்டமுலையிட்டமடவார்
மதனவன்னப்பூமிதுதிசெய்பொன்னுச்சாமிமகராஜசுகபோஜனே.

இவ்வாறு பல மாதங்களாக இராமநாதபுரம் சமஸ்தானத்தில் வாசஞ் செய்து கொண்டிருந்து மேன்மேலும் தகுந்த சம்மானங்களுடன் அம்மன்னவரிடம் உத்தரவும் பெற்றுக்கொண்டு, இராசதானியாகிய, சென்னைநகர், தஞ்சை, சேலம், கோயமுத்தூர், மதுரை, திருநெல்வேலி முதலிய ஜில்லாக்களெங்கணும் சிருலாப் போந்து, அவற்றுள்ளடங்கிய அனேக ஜமீந்தார் மிட்டாதார் உத்தியோகஸ்தர் கனதனவான்கள் ஜட்ஜி கலெக்டர்க ளாதிய ஆங்கிலத் துரைமார்களிடஞ்சென்று, அற்புதக்கவிமாலைகள் சூட்டி, அவ்வவர்களாலளிக்கப்பெற்ற அநேக வரிசைக ளேற்று மகிழ்ந்து, ஆங்காங்கெதிர்ந்த புலவரை யடக்கி, உலகினிற் கல்விக் கொடி

நாட்டி புலாவித் திரிந்த காலத்தில், இக்கவிச்சிங்க மியற்றிய இசைத்தமிழ்ச் சிங்கார நூல்கள் பல. ஓலைத்தூக்குகள் முதலான திறக்கவிச் சிந்தாமணிகள் எண்ணிறந்தன.

செந்தமிழ் வித்வ சிகாமணியாயும் சங்கீத சாஸ்த்ர சம்பன்னராயும் அன்னதானப் பிரபுவாயும் விளங்கிக்கொண்டிருந்த சேலம் ஜில்லா வேளுக்குறிச்சி மிட்டா ஜமீன்தார் ஸ்ரீமாந் வேலப்பகவுண்டரவர்கள் சமுகத்திலிருந்து அற்புதானந்தமயமான கவிகளாலும் பிரசங்கங்களாலும் அவ்வள்ளலை யனவரதகாலமு மகிழ்வித்துவந்த காலத்திலோர் நாள் பிரபு பழம்பாடல்களான சித்திரக்கவிகளின் பெருமையைப் பேசிக்கொண்டிருந்தனர். நாவலரிக்குறிப்புணர்ந்து ஓகோ! நாமிதுகாறுமிவ் வள்ளியோன்மீது சித்திரப்பாக்களியற்றிலோமின்று. அவை கேட்கவிரும்பியன்றோ இங்ஙனம் கூறுது கூறினரென்று நினைத்து,

"நேரதிராகமின் வந்தா டதியிதி னேடியரு
டாரதின் வஞ்ச மிலட்டி தகாதய தண்கமலை
விரகண் பாரா விடிற்சந் திரன்பனு மெய்ப்புதுமை
பாரணி நேய புயாசல வேலப்ப பாண்டியனே."

"காம லகரி கடலா மமையாது
தாமசம தேது சலாமேவி—நீமருவே
சீராமா மாநேம தேகபுனி தாகமுவின்
மாராவே லப்பபூ மா."

என்ற சதுரங்கபந்தக் கலித்துறை யொன்றும் அஷ்டநாகபந்த வெண்பா வொன்றும் உடனே யியற்றிக் கூறினர் வேந்தன் இவைகளைக் கேட்டுப் புளகாங்கிதங் கொண்டு மேன்மேலுங் கவிச்சிங்கத்தின் கடலனைய கல்வியின் பெருமையைத் தம்மாலியன்றவளை காணுமவா மிஞ்சி நானிலம்புகழும் நாவலர் திலகமே! புராதனமான சித்திரங்கட்கிணங்கச் செய்யுளியற்றலினும், சித்திரமும் செந்தமிழும் நூதனமாகவிருப்பின் விசேஷ சம்பிரமமாகு மென்றெண்ணுகிறேன் என்றனர். இதனைக்கேட்ட நாவலர் புன்னகை காட்டி நீவிரெவரேனும் ஓர் அரிய சித்திரந் தீட்டுதிரெனவும், இறைவனதாணையால், அச்சபையிலிருந்தவர்களிலொருவரும் ஓவியத்துறையிற் கைதேர்ந்த உத்தமருமான ஸ்ரீமாந் சேலம் மாரியப்ப முதலியாரவர்கள் இரட்டை நாக பந்தத்திலிதற்கு முன் இல்லாத விதமாகவொன்று தீட்டி, அதற்கு விசித்ர உபயநாகபந்த மெனப்பேர்சூட்டி, இவ்வெண்பாவிலடங்கும் அறுபான் மூன்றக்கரங்களில், 6+8, 14+40, 16+18, 20+46, 22+24, 26+28, 30+48, 32+50, 34+52, 42+44, 58+60, என்னும் இலக்கத்தொடர்கள் ஒவ்வொன்றும் சந்திப்புள்ளன வெனத் தெரிவித்துக் கேட்டுக்கொண்டமாத்திரத்தில், அனைவருங் கூடியோசித்தெழுது மோவியத் தமைதியிவ் வளவுதானோ" வென்று உடனே,

## அனந்தவிசித்ர உபயநாகபந்தம்.

"மன்மதன்கை வாகை மடங்காது பன்னலென
தன்ம கனக தனிபனியிற்—றுன்று
சீலப்ர தாபசுக தேகவின்பந் துன்னுதுங்க
வேலப்ப பூபநீ மேவு."

என்று வெண்பாவை முன்னரே பாடிவைத்திருந்தவர்போல யோசியா மற் புகன்றதுமன்றி, நூதனமான இப்பாவினுளமைந்த சந்திகளைப் பிற்காலத்தினர் நன்குணரத்தக்க சூத்திரமாக

"எட்டினுக்காறுகுமெண்ணைந்தினுக்கேயியையுந்தபதினொலதாகும்
ஈரெட்டினுக்குவருபதினெட்டுநாலைந்தினுக்குநாற்பத்தாறுதான்
தொட்டவிருபத்திரண்டெண்மூன்றுநாலேழ்துலங்குமிருபத்தாறதாந்
தோன்றுமெண்ணுறுக்குமுப்பதாம்பத்தைந்துதாயமுப்பத்திரண்டாம்
திட்டமுறுமுப்பத்துநான்கினுக்கைம்பத்திரண்டதாமாறேழுடன்
செப்புநாற்பத்தினாலம்பதிற்றெட்டுடன்சேர்வதோராறுபதாகும்
கட்டமில்லாமலறுபத்துமூன்றக்கரங்களையுடையவெண்பாவிது
கமழ்விசித்திரவுபயநாகபந்தனமாங்கனிந்தருகுசெஞ்சொன்மாதே."

என்று மகடூஉ முன்னிலைகொண்ட செய்யுளையுங் கூறியருளினர். இதனில், "எத்தகைய மிறைப்பா வினத்துள்ளும் தமது நுண்ணறிவானது சிறிதுந் தட்டின்றிச் செல்லுந் திறத்தது" என்னு முண்மையைக் குறிப்பா லுணர்த்துவார்போல் "கட்டமில்லாம லறுபத்துமூன் றக்கரங்களையுடைய வெண்பாவிது" வெனுஞ் சொற்போங்காற் கூறியவாற்றல் காண்க.

இன்னணம் நிகழ்ந்தன வனைத்தையும் செந்தமி ழருமையிற் சிறந்த அவ்விறைவன் கண் டாச்சர்யமடைந்து ஆஹா இவர் சாக்ஷாத் தண்டாயுதப்பகவனது பூரணவரப்ரசாதம் பெற்றவரென்பதற்கு இக்காட்சியே தக்கசாட்சியென்று ஆனந்தாமிர்த பாஷிதங்களான ஸ்துதிகள் செய்து பயபக்தி பூர்வமாக வனேக சம்மானங்கள் செய்யப்பெற்று மகிழ்ந்தனர். இந்தப்பிரபுவின் வண்மைக் குணாதிசயங்கள் யாவும் தனிச்செய்யுட்கோவைப் பாடல்களால் நன்கு விளங்கத்தகுவனவே. ஆயினும் மருங்காபுரிச் சீட்டுக்கவிகளிலொன்றிலுள்ள

"தருராம நாதபுர சேதுபதி யாம்பொன்னு ஸாமிமக ராஜன்மெச்சித்
தந்தவெகு மதியோ கணக்குக் கடங்காது தருமவே ளுக்குறிச்சிச்
சத்ரபதி வேலப்ப முகிலொர்சீட் டுக்கவி தனக்குமுந் நூறுரூபா
தகுபெட்டி வண்டிமா டருளின னவன்மீது சந்திரா விலாசஞ்சொனேம்
அருகேயழைத்துரூபாயிரண்டாயிரமுமதிகவரிசையுநல்கினேன்."

என்ற ஐந்தடிகளும் இங்கு எடுத்தியம்பத்தக்கன. இலனென்னுமெவ்வமுரையாமை மேற்கொண்டு ஈத்துவக்குமின்பநலம்வாய்ந்த இம்மன்னவனேற்ற சந்திரவிலாசமென்னுந்தனிநூலானது, யமகம், திரிபு, சிலேடை, முதலிடைகடைமடக்கு, முதலிய வணிகளாற் பொலிந்து அகத்துறை நிறைந்து, சொல்லினும் பொருளினுஞ் சுவைபெற நிமிர்ந்து, வனிதையர் கலவிநுணுக்கங்களை விளக்கும் மதனநூலெனத் திகழ்ந்து, கவிவலரிதயங் களிப்புற நிலவும்.

மதுரைஜில்லாமார்க்கயன்கோட்டையிலிருந்தருளிய இல்லறமெய்ஞ்ஞானதிலகரும் நாவலரவர்களின் சிறியதந்தையாருமான ஸ்ரீமாந் பிச்சாண்டி ஆச்சார்ய சுவாமிகள் சமுகத்திலிருந்தபொழுது ஒருசமயத்தில் முன்னர்க் காளமேகப்புலவரியற்றிய பூட்டுவிற் பொருள் கோள்கொண்ட

"சிறுவனளைபயறுசெங்நெற்கடுகு
மறிதிகிரிதண்டுமணிநூல்—பொறியரவம்
வெற்றேறுபுள்ளன்னம்வேதனரன்மாலுக்குக்
கற்றூழும் பூவே கறி"

என்னும் வெண்பா முதன்மையிற் சிவபிரான், விஷ்ணு, பிரமன், என்பார்க்குக் கொண்டமுறை பின்னர்ப் பிறழ்ந்துளவால் அவற்றைத் திருத்தியும்; அம்மூவரின் றேவியரும், செய்தொழிலும் பொருத்தியும், முந்தைய "கற்றூழும்பூவேகறி" என்னு மீற்றையே கொண்டு முடிக்கவேண்டுமென்றபோது ஒருகணமும் பின்னிடாம லுடனே சொன்ன

வெண்பா.

"சேயளைமுற் கங்கடுகு செங்நெலுழை சக்கரந்தண்
டாயபணி மாமணிநூ லான்புளன்னம்—மாயைபொன்சொற்
பொற்றோகை போக்களிப்புப் பூப்பரன்மால் வேதனுக்குக்
கற்றூழும் பூவே கறி"

நாற்கவிச்சிங்க நாவலர் தமது இருபத்தொன்றும் பருவத்தியற்றிய தேவாங்க புராணமென்னுஞ் செந்தமிழ்நூன் முழுதினு நிறைந்த விலக்கணவமைதியுட னருமையான கற்பனைசாரங்களைப்பெற்று மதுரச் சுவைமிக்க கம்பீரமான செய்யுள் நடையிலமைந்திருத்தலாற் செந்தமிழறிவிற் சிறந்துள யாவர்க்குமுதவி நூலாய இலக்கியமெனத் திகழா நிற்கின்றது.

சேலமா நகர வாசிகளான சில மேதாவியர்களின் வேண்டுகோளால், வடமொழியிலிருந்த, சிங்காரரச மஞ்சரியை மொழிபெயர்த்து, இலக்கண விலக்கிய வியற்றமிழ்க் கவிகளால், மங்கையர் திறத்தெழின் மாண்புற வமுத்திச் செந்தமிழுலகந் தெரிதர வைத்ததும், இன்றியமையா விருந்துணைச் சிறப்பே, இதன் புகழ் பகராரேவருமிலர்.

நாவலர் தமக்கு நல்லன்பு செலுத்திய மித்ரரத்னமும் சேலநகர்ச் சுகவனமுதலியாரவர்க ளருமையுள்ள புத்ரரத்னமுமான ஸ்ரீமான் மாரியப்ப முதலியாரவர்களால் இந்நூலின் சீரினுக்கு மியற்றினார் பேரினுக்கு மிணங்கவியற்றிய அழிப்பரும் புகழ்சேர் பொழிப்புரையின்றிறன் கற்றவர் யாவருமகிழ்ந்துகொண்டாடற்பாலனவே.

இவ்வாறு இவர்களுடைய ஜீவிதகாலத்தில் நடந்த முக்யாம்ஸமானவுண்மைகளை யிங்குக் குறித்த சரித்திர வாராய்ச்சிக்குப் பொருந்தச் சிற்சில வாங்காங்கு கூறிச் செல்லுதன் முறையெனக் கொண்டெழுதுவதிற் சாலவிரிதல் கண்டஞ்சி, இம்மட்டில் நிறுத்தி இனிச் சரித்திரப்பொருண் முடிபுகாட்ட முயலுதும்.

இங்ஙனம் புகழ்விளைத்துயர்ந்த இப்புலமையாளர் இருபத்தேழாம் பருவத்தினிற் றிருமணம் புரிந்து இல்லறம் வழுவா தியல்புற நடாத்திச் சகல சௌபாக்யத்துடன் அரிய சுகபோகங்களெலா மநுபவித்துத் தண்டபாணிப் பிரானைப் பழநி நான்மணிமாலை, திருப்பழநிவெண்பா, குமரனந்தாதி, சிவகிரியமகவந்தாதி முதலிய திவ்யகவிப் பிரபந்தங்களியற்றித் துதித்து வாழ்ந்திருந்தனர்.

பின்னர்ச் சிலகாலங்கழித்துத் தமதுடலிற் றொடர்ந்தமேகரோகத்தின் வாதனை நீக்கியருள, வேதனைச் சிறையிட்ட நாதனைத்தினமும், பழநிவெண்பாவந்தாதி, பழனுபுரிமாலை, பழநிக்கோயில்விண்ணப்பம், கீதாமிர்த சாரமென்னும் பிரபந்த ரூபங்களாற் பிரார்த்தனை புரிந்து, விதிவலியால் விளைந்த அவ்வினையினின்றும் குருவருளாற் சிறிதுகாலம் நீங்கிச் சுகமுற்றிருந்து, நாற்பத்தெட்டாம் வயதான 1884-ம் ஆண்டிற்கிசைந்த தாருணநாம சம்வற்சரம் கும்பரவி சுக்கிலபக்கம் நவமிதிதிகூடிய சுபயோக சுபதினத்திரவு ஐந்துநாழிகையளவிற்றமது கையேட்டினர், மாணாக்கர், இஷ்டஜன பந்துவர்க்கத்தினர் யாவரு மொருங்குசூழ்ந்திருக்க, சச்சிதானந்தஸ்வரூபமான ஜீவான்மாவிற்காகரமாகியிருந்த ஸ்தூல தத்துவக் கருவிகளந்தக்கரணமு மொடுங்கி நிர்க்குண நிராமய நிரதிசயானந்த வாழ்வில் ஐக்யமாகுந்தருணத்தை ஜென்மாந்தர புண்யவசத்தாற் கிடைத்த தமது பேரறிவாலுணர்ந்து தமது பரிபூரணகால நிலைமையை அனைவர்க்குந்தெரிவித்து, அடியார்களை அரகரவேன் முழக்கஞ்செய்ய வாக்ஞாபித்துத் தமதிருகரங்களையுஞ் சிரமேற் குவித்துக்கொண்டு

"என்னபிழையான்செய்திருந்தாலுமெண்ணும
லன்னபிழையெல்லாமகற்றியின்னே—நின்னுபய
பாதநிழல்நல்கியெனைப்பாலித்துக்கொள்சமயம்
நீதருகனேநம்பினேன்"

என்ற திருப்பாடலைப்புகன்று நிருவிகற்ப சமாதியோகமாயிருந்து ஆங்ஙனமே குதைவரிவடிவேற்குகவரதன்றன் பதமலர்நிழலாம் பரகதியடைந்தனர். சுபம்! சுபம்!! சுபம்!!!

திருச்சிற்றம்பலம்.

சரித்திரச்சுருக்கம் முற்றுப்பெற்றது.

# சிறப்புப்பாயிரம்.

இது
சென்னை பிரஸிடென்ஸி காலேஜ் தலைமைத் தமிழ்ப்பண்டிதர்
கனம் ப்ரும்மஸ்ரீ மகாமகோபாத்தியாயர்
## உ. வே. சாமிநாதையர் அவர்கள்
இயற்றியது.

---

### நேரிசை யாசிரியப்பா.

சீருறு செந்தமிழ்க் கீரனும் பெரியனும்
அருண கிரியெனும் பொருணயக் கவியும்
போற்றுறு பெருமை வீற்றுற மேவி
அறுமுகன் படைவீ டாறனு ளொன்றாய்ப்
பல்வளஞ் செறிந்த பழனியம் பதியில்
விச்சுவ குலத்தின் மெச்சுறு தமிழ்பயில்
நன்மைசான் மரபிடைத் தொன்மையோர் செய்த
புண்ணிய மென்ன நண்ணிய வண்ணல்
கந்தன் பதத்திடை முந்தன் புடையோன்
உம்மைத் தவமிவன் செம்மையி னுளனெனச்
செந்தமிழ் மொழியி னைந்திலக் கணமுஞ்
சிந்தையே யேடாத் திரிபின் றுணர்ந்தோன்
தேனினும் பாலினுந் தானினி தென்னச்
சொன்னயக் கவிபல பன்னுறு வாக்கி
அயலவர் கருத்தினை நயனுற வறிந்தே
வேகமாக் காள மேகமே யென்னப்
பாடுபு வேத்தவை கூடிய தீரன்
ஏக சந்தக் கிராகி யிவனெனப்
பாகசந் தக்கவி பாடுவோ னிவனென
ஆசு கவியென வாசிலாக் கவியெனக்

கற்றவ ருவந்து சொற்றிட விளங்கியோன்
பன்னுறு முககைப் பதிவயி னடைந்து
மாது பதியுரச் சேது பதியும்
தோமில்சீர்ப் பொன்னுச் சாமியா மகிபனும்
ஆண்டுள புலவரு மகமகிழ்ந் திடப்பாத்
தேம்பழ மெனத்தித் தித்திடப் பாடி
மாம்பழக் கவியெனு மாப்பெயர் படைத்தே
இக்கார் விழுச்சுவை யக்கா ரக்கனி
நச்சும ருறெனு நாவல னெனவுட்
குவிவீரு மந்தகக் கவிவீர ராகவப்
பாவல னெனப்புகழ் மேவிய புலவன்
நன்றிபா ராட்டுறு நயமுடைச் சுகுணன்
இவன்போற் பாடன்மற் றெவர்க்குறு மோவெனக்
கவிஞர்க ளெண்ணப் புவியிடை மேயோன்
கூலமா மறுகிற் சேலமா நகர்வாழ்
மாரி யப்பவேள் மனமகிழ் நண்பன்
ஆகிய விவனை யறியா ரெவரே
அனையவ னியம்பிய புனைபல நூல்களும்
இனிப்பா வுளவாந் தனிப்பாப் பலவும்
தொகுத்தே நிரையா வகுத்தே யெவர்க்கும்
பயன்பட வச்சிற் பதிப்பித் தீந்தனன்
ஈண்டிய வளஞ்செறி பாண்டிநன் னாட்டிற்
சீர்க்கயஞ் சுலவு மார்க்கயன் கோட்டையன்
மேற்கூறியகவி விழுக்குடிப் பிறந்தோன்
தேற்றுறு தமிழ்ச்சுவை தெரிந்து
சாற்றுறு பழனிச் சாமியென் பவனே.

---

மதுரைத்தமிழ்ச்சங்கம் செந்தமிழ்ப்பத்திராசிரியர் ப்ரும்மஸ்ரீ.
மு. ராகவய்யங்காரவர்களியற்றியது.

காவலர் சிகாமணியா மெங்கள்பொன்னுச் சாமிமன்னன் களிக்கு மேலாம்
பாவலர் சிகாமணிமாம் பழக்கவிச்சிங் கேறுரைத்த பாக்க ளெல்லா,
நாவலர் சிகாமணியா நயந்தேறப் வச்சிலிட்டு நனிசீர் பெற்றான்
பூவலர்நீர் மார்க்கயனூர்ப் புகழ்ப்பழநிச் சாமியெனும் புலவன் மன்னோ.

மதுரைத்தமிழ்ச்சங்கம் சேதுபதி செந்தமிழ்க்கலாசாலை உபாத்தியாயர் ப்ரும்மஸ்ரீ
சுந்தரேசய்யரவர்களியற்றியன.

நதியமலை யெறிந்தவனை நங்கைவளை யெனமனமா றோடு நன்னீர்ப்
பொதியமலை முனியெனுமாம் பழக்கவிச்சிங் கேறுபல புத்தே ளிர்க்குத்
துதியமலை தரப்பகரும் பன்னூலு மதுரரசந் துளும்புஞ் செந்தேம்
பொதியமலை யாதபொருள் போதரச்சொல் கவிபலவும் பொதுளக் கோத்து

அத்தகுநன் னாவலவன் சரித்திரமும் வரைந்துபிணைத் தளிகூ ரச்சுப்
புத்தகமா யிரமாக்கிப் புலவரெலாம் வியந்தேற்பப் புரிந்தான் மேலா
முத்தமன்மார்க் கயன்கோட்டை யூரிலுறை பிச்சாண்டி யுரவோன் மைந்தன்
முத்தமிழ்ச்சுப் பிரமணியன் றணைபழநிச் சாமியெனு மொழிவல் லோனே.

---

சென்னை எக்ஸிகியூடிவ் இன்ஜினீயர் கனம் ப்ரும்மஸ்ரீ உத்தமபாளையம்
U. S. இராமசாமி அய்யரவர்களியற்றியது.

குமரனடிக்கே கண்ணுள்ளார் கொடுவெம்பிறவிக் கண்ணில்லார்
குறுமாமுனியே நிகரானார் குணத்தினுயர்வி னிகரில்லார்
அமரர்முனிவர் தினநாடு மருமைப்பழனித் திருநாடர்
அருளாற்கவிதை விரைந்துரைப்பா ரனிதமொருநா ளினுமுரையார்
பமரமிசைநீ பத்தாரார் பத்தர்மகிழத் திருத்தருவார்
பயிலுமுலக மயக்கவித்தார் பகர்மாம்பழக்க விராயரென்பார்
விமலவிசுவ குலமணியார் வியன்செந்தமிழின் மிகவணியார்
விந்தைத்தனிப்பாப் பலவுரைத்தார் வேறுரவற்றி னிணையுரைப்பார்.

வேறு.

அன்னவற்றை யுலகிலுளோ ரணைவருநன் கறிந்துவியந் தனுப விக்க
வுன்னியசீர் விசுவகுலத் துதித்தவள்ளல் கவிச்சிங்க முகந்த பாலன்
மன்னிய மார்க் கயன்கோட்டைப் பிச்சாண்டி மகராசன் பெற்ற மைந்தன்
பன்னுகவி நாவலவ னும்பழனிச் சாமியச்சிற் பதித்திட் டானே.

---

மதுரைத் தமிழ்ச்சங்க வித்துவான்களி லொருவராகிய கனம் ப்ரும்மஸ்ரீ
பின்னத்தூர் அ. நாராயணசாமி ஐயரவர்களியற்றியது.

மாற்றரிய நெடுந்தவத்துக் குறுமுனியின் றமிழ்ப்பெருவா ரிதியை வாங்கி
யாற்றன்மிகு மாம்பழப்பேர்க் கவிமுகில்பொன் மணிசிதறி யவிரு மாறே

தோற்றமிகு கொடைச்செம்ம லவரேனும்பற் பலசிலம்பு தொறுங்கா லூன்றிக்
காற்றியவொண் கவிமாரி நெடுவெள்ளங் கணக்கிலவாங் கவற்றைக் கண்டு (1)

பண்டுகுட கினுமற்றும் பொழிமாரி பயனறுதல் பண்பி னாங்கே
கண்டரச னூன்சுவைத்துக் கனலுமழு வாளியங்கீர் கரையு ளாக்கி
யெண்டிசையும் பொன்னிநதி யெனப்போற்றி யாடிநய னெய்தி மல்கக்
கொண்டுவந்து விளைவமைத்துப் பல்லுயிரும் வாழவைத்த கொள்கை யொப்ப (2)

ஆயபெரும் புலவர்பிரா னேகியவூர் தொறுமேகி யவற்றைச் சொல்லு
நேயரைத்தா னுசாவியயன் றளவிட்டி நிசியுரைகன் னின்றபுல்ல
பாயமெழு கினிற்றிரட்டிப் பல்வளமாக் கிடுந்தனது பான்மைக் கேற்ப
வேயவெழு தாவெழுத்தி னேற்றியருந் தமிழ்வாண ரேற்பத் தந்தான் (3)

ஈர்க்கையங்கோட் டரியகன தனப்பாவை பங்கரடி யேத்து மன்ப
னீர்க்கையங்கோட் டுயர்வாளை நெடுந்தெங்கிற் பாயவஞ்சி நின்ற மேதி
கார்க்கையங்கோட் டிடப்பாய்ந்து கயமுழக்கிக் கஞ்சமலர் கறித்து வைகு
மார்க்கையங்கோட் டையிலினிது வாழ்பழனிச் சாமியெனு மதிவல் லோனே. (4)

---

மதுரை மாணவர் செந்தமிழ்ச் சங்கத்து அக்கிராசனாதிபதியும்,
மதுரைக் காலேஜ் தமிழ்ப்பண்டிதருமான ப்ரும்மஸ்ரீ.

### ம. கோபாலகிருஷ்ணையரவர்களியற்றியவை.

உலகுதனி மறைப்பொருளென் றோதுமுமை பாகனுக்கு மொருகா லத்தில்
நிலவியநற் பிரணவமெய்ப் பொருளைநனி நேர்ந்துரைத்த நிமல ஞான
குலவுபுகழ்க் குமரகுரு பரமுருகன் குடியிருப்பாங் குன்று மேவும்
பலவளமுஞ் செறிந்ததிருப் பழனியெனுங் கழனிநிறை பதியின் பேறாய் (1)

கண்ணுடையார் கற்றவரே முகத்திரண்டு புண்ணுடையார் கல்லா தாரென்
றெண்ணிய பொய் யாமொழிக்கோ ரிலக்கியமா யிவ்வுலகி லிலங்கா நிற்குங்
கண்ணியனா மனிதர்முகக் கண்ணுணராப் பொருளையகக் கண்ணா னோக்குந்
திண்ணியனாப் புலவர்புரி புண்ணியமோ ருருவெடுத்துத் திகழ்வோ னாகி (2)

முத்தையனா சாரியெனு மூதறிஞன் முயன்றதவ முளையாய் மூவா
எத்திசையும் புகழ்மணக்க வினிதுதித்தே விளமையினி லினிமை யார்ந்த
முத்தமிழு நாற்கவியு மொழிந்திடுமைந் திலக்கணமு முறையி னோர்ந்து
வித்தகநற் பிரசங்க விற்பனவற் புதனாகி விளங்கா நின்று (3)

பொன்னமரும் புதுவைநகர் பொலியவரும் புகழ்ப்பொன்னுச் சாமித் தேவ
மன்னவன்றன் மனக்கிசையத் தருஞ்சமிசைக் குரியவிடை வகுத்துக் கூறிக்
கன்னலுங்கைத் திடத்தமிழின் மின்னலினுந் தீவிரமாக் கவிகள் பாடி
அன்னவனாற் கவிச்சிங்க நாவலனென் றுயர்பட்ட மணியப் பெற்று (4)

பூதவுடல் பொன்றிடினும் பொன்றுமாம் பழக்கவிஞப் புலவ ரேறு
மேதகைய வாரணத்தோ கையைமருவி வள்ளியையு மேவும் வேலன்
மீதுறநுந் தமிழ்க்கவிஞர் தமைப்புரக்கு மேலோர்கண் மீதுஞ் சொற்ற
ஓதரிய மாதுரிய சாதுரிய கவிதைபல வொருங்கு கோத்து (5)

நதிபுனையுந் திருமுடியா ராதியசெந் நாவலரு நண்ணித் தாமே
மதுரநறுந் தமிழ்வளர்த்த மதுரையெனும் பதியிலதன் மாண்பை யோர்ந்து
துதிமருவு சைவமொடு தொன்மை மிகு தென்மொழிக்குந் தொண்டு ளுற்று
நிதிகொடைநல் லறிவுபுகழ் நேர்பாண்டித் துரையென்னு நிருபர் கோமான் (6)

காதலினு ளிறுவியங் கச்செயுநான் காமதுரைக் கழகந் தன்னில்
வேதியர்சி காமணியாய் மிளிர்பெரும்பே ராசிரிய விமலன் சாமி
நாதனுய ரணையிருப்ப வரங்கேற்ற மற்றவற்றை நவிலக் கேட்ட
கோதகலவ் வேதியன்பாண் டித்துரையா தியர்கள்களி கூர்ந்தோ ராசி (7)

ஏதிதனைப் போலுளது தீதுபதி யாப்புலவோ யெம்மைப் போன்று
மேதினியோர் களுமகிழ வேண்டுமென யாங்கண்மிக விருப்பங் கொண்டேம்
ஆதலினம் மேதகுநன் னுவலவ னருங்கவிக ளனைத்துஞ் சேர்த்துத்
தீதறுமச் சியற்றிமிகச் சிறப்புறுக வெனச்சொலவத் திரட்டை யாய்ந்து (8)

பாமருவு தாதையெழி லுறமையன் றன்பெயரின் பான்மைக் கேற்பக்
காமருவு மாமதுரை மேவுகந்த சாமியெனுங் கவிவ லோன்சீர்
மீமருவி மாமகளு நாமகளு மேவிமகிழ் விவேக பாநு
நாமமுறு சாலையிலச் சியற்றியவன் யாவனெனி னவிலக் கேண்மின் (9)

சாதுசங்கப் பிரியமுளான் சற்குணவான் றனையடைந்தோர் தம்மைக்காப்போன்
ஓதுபுங்கப் பிச்சாண்டி யீசனது திருத்தவத்தி லுதித்த மேலோன்
கோதுதங்கா விசுவகுல மணியெனமாம் பழக்கவிஞன் குலத்தில் வந்தோன்
மாதுபங்கற் கிசைகுமரன் மலர்ப்பதமே மனத்திருத்து மாண்பு வாய்ந்தோன் (10)

மருமலரார் குழலுமையாண் மதுரைநகர் மாணவர்செந் தமிழ்ச்சங் கத்தின்
பொருளுதவும் போஷகனுப் புகழுறுமங் கத்தினனுப் பொலிவோன் கோம்பைத்
திருமலைசக் கயகவுண்டன் செய்தசிவ பிரான்யமகத் திரிபந் தாதிக்
கொருதனிநேருரைவகுத்தவுத்தமன்மார்க்கயன்கோட்டையூரில்வாழ்வோன் ()

கருப்பழகு திருக்கரத்தான் றகைபெறுசுப் பிரமணியன் றனக்குப் பின்னோன்
திருப்பழனி மாலையைப் பொருப்புறைசெவ் வேள்புயத்திற் றிகழச் சாத்தி
விருப்புறுவோன் சிறப்புறுஞா னம்பிகையா தியர்பதிகம் வியக்கச் சொற்றோன்
உருக்குருகப் பிரசங்கம் புரிபழநிச் சாமியெனு மொருவன் மாதோ. (12)

---

பெரியகுளம் தாலூகா சின்னமனூர் கனம் ப்ரும்மஸ்ரீ - வித்துவான்

வெங்கடநரசிம்மய்யரவர்களியற்றியவை.

நத்திருக்கு நத்தனுநான் முகனுமிவர் நாடரிய னரியென் றேத்தும்
முத்திருக்கு மொளிர்வதன முதல்வனுக்குப் பிரணவத்தை மொழிந்தோ னன்பர்க்
கெத்திருக்கு மணுகாம லெழிற்பழநு புரியுறைவோ னிசைவண் டார்க்குங்
கொத்திருக்குங் கடம்பணிதோட் குகனடிதன் முடிசூட்டுங் கொள்கை யாளன்.()

மன்னுபுகழ்த் தபதியர்தம் மரபோங்க மலைமுனியே வந்தா னென்னப்
பன்னுதமிழ்க் கரைகண்ட பண்டிதரெ லாம்பகரப் பன்னூ லாய்ந்தோன்
பொன்னுலக மனபுதுவைப் பதிபுரக்கும் புரந்தரனும் பொன்னுச் சாமி
என்னுமகி பதியளித்த கவிச்சிங்க மெனும்பெரும்பே ரிசையப் பெற்றோன். (2)

இன்னபெரும் புகழுறுமாம் பழக்கவிச்சிங் கக்குரிசி லிலகுந் தோகை
வன்னமயில் வாகனன்மேன் மன்னர்கண்மே லேனையர்மேன் மகிழ்ந்தன் பாகச்
சொன்னநறுங் கவிகளெல்லாஞ் சோர்வறவச் சிட்டிலகிற் றுலக்கி னுனல்
நன்னயஞ்சேர் மார்க்கயன்கோட் டைப்பழனிச் சாமியெனு நாவ லோனே. (3)

---

அறுமந்த நகரம் கனம் ப்ரும்மஸ்ரீ

மதுரகவி ஸ்ரீநிவாசய்யங்காரவர்களியற்றியவை.

கனகமலைநிகர்பழனிச்சிவகிரிவாழாறுமுருகக்கடவுடன்கோ
கனகமலைபுரைகொளிருகழல்களனுதினமுமுளங்கருதுங்கற்பாற்
கனகமலையருள்பெருகுங்கடாட்சகவியெனக்கவிஞர்கலைவல்லார்கோ
கனகமலையிரும்புவியிற்புகழருமைபெருமைநிறைகடலொப்பாவான். (1)

நன்றாக்கார்பயன்வெஃகாநயன்சிறந்தவணமதியுள்ளோனதியோடந்தண்
பொன்றாக்காரிதழிமலர்புனைந்தசடாடவிப்பரமன்புனிதப்பொற்று
டன்றாக்கார்நிறையுளத்திற்றுங்கியமேதகைபுலமைத்தக்கோர்க்கெல்லா
மன்றாக்கார்கவிவாணர்வழுத்துசிதிருணமெனுநல்வரையேபோல்வான். (2)

முத்தமிழுநாற்கவியுமுதுக்குறைந்தகவிவாணர்மொழிந்தவண்ண
மித்தகையாலிவ்விசையாலிப்பரிசாலிக்கருத்தாலிசைத்தியென்போர்க்
கத்தகையுமவ்விசையுமப்பரிசுமக்கருத்துமமைந்துதோன்றச்
சித்திரமீதெனவிமைப்பிற்செப்புறுநாவீரனெனுஞ்சீமானுமால். (3)

எழுத்தாதியிலக்கணத்தாலியலிசைநாடகத்தமிழாய்ந்திசைக்குமாண்பாற்
பழுத்தாருங்கவிபாடும்பரிசதனாற்பழமைதரும்பண்புமேவி
வழுத்தாதியிலக்கியநூல்வகைதேர்ந்துபிறர்க்குரைக்கும்வழக்காறுடின்
முழுத்தாமநாவலர்க்குண்முதற்கம்பநாடரெனமொழியத்தக்கோன். (4)

மற்றுமிவன்பெருமைதனைவிரிவஞ்சிவிடுத்தாமிம்மதியோனுமங்
கற்றுணர்ந்தார்யாவருநன்கறிவரெனல்பெருமையெனக்கருதேங்காட்சி
யுற்றதிசையெட்டிடத்துமுறைதருவாரெல்லாருமுணர்வாரானல்
முற்றருமைத்தமிழ்ப்புலவீரன்னவர்தம்புலமைநலன்மொழியவற்றோ. (5)

இன்னபெரும்புகழ்பெருமாம்பழக்கவிநாவலவனெடுத்தினிமைகூரச்
சொன்னலங்கொண்டொவ்வொருகாற்சொற்றதனிப்பாடலொடுஞ்சுவைமிக்கான்ற
பன்னரியகடவுளர்தம்பிரபந்தமனைத்தினையும்பரிவிற்சேர்த்து
மன்னியநந்தமிழ்நிலத்துமாந்தரனைவரும்வியந்துமகிழ்வினேத்த (6)

கல்வியறம்பொருளறிவுகலையொழுக்கம்வாய்மைநிறைகனஞ்சீர்சான்ற
சொல்விசயன்விசுவகுலதுரந்தரன்மார்க்கயநகர்வாழ்சுப்ரதீபன்
செல்வியருள்பெறுபழநிச்சாமியெனுநாவலவன்றெளிவிற்றேர்ந்து
பல்விசையம்பெறுபாக்கிங்கச்சியற்றிப்புகழெவனும்பரப்பினனே. (7)

---

ஷை யாரவர்கள் சகோதரர் கனம் ப்ரும்மஸ்ரீ.

## அ. சு. கிருஷ்ணசாமி அய்யங்காரவர்களியற்றியவை.

விழுமியசெங் கேழிணர்க்கொன் றையங்கணிச்சிப் பராற்பரன்முன் விரிக்கயாணர்
பழுநியமாண் டமிழ்மணந்து நோற்றலினுற் றலிற்சிறந்து பரந்த மாண்பேரன்
எழுதியவைந் திலக்கணமுங் குழுவிகணீர் பிலிற்றவுரை யிசைத்த நூலும்
வழுவறவங் குரித்ததிந்த வழுதிவள நாடெனில்யாம் வழுத்தற் பாற்றோ. (1)

அருகாற்றுப் புறுந்துணர்ப்பைங் கமலமலர்த் தேத்தளிக ளளியே செய்யப்
பெருகாற்றுப் புடைதரள மொளியெறிக்குந் தமிழ்ப்பொதியப் பிறங்க னின்று
வருகாற்றுத் தொறுநறுஞ்சந் தனங்கமழு மிவ்வழுதி வளநாட் டோர்பால்
முருகாற்றுப் படையிலஞ்ஞான் றுரைத்தவொரு பெருந்தலனுய் முதுமை மேவி.

பன்னகரம் பரர்முனிவர் கடவுமென நிதமுறையும் பழநி யென்னும்
இன்னகர முளுற்றுதவ னெவன்கொலென மகிபுகழ வெழுத்திற் கெல்லா
முன்னகர மெனக்கவிஞர் தமக்குமுத லெனவுதித்து மும்ம தத்த
கன்னகர மலையளித்தோன் மருகனெனு முருகனிருங் கருணை வாய்ந்தோன். (3)

மீனவிழி மலைமடைந்தை கழன்மலரைச் சிரமணிந்து மேதக்கோர்கள்
மானவிழி யருள்சிறக்க மருள்துறக்கு மனவொழுக்க மாண்பு பூண்டே
ஊனவிழி பொறுத்தவர்க்கும் வானவழி நிறுத்துமுணர் வுற்ற கேள்வி
ஞானவிழி படைத்தவன்மாம் பழக்கவியென் றுயர்ந்தபுகழ் நாவ லோனே. (4)

தவாததிரு நாவெனுஞ்செங் கோனிறீஇத் திகந்தமெட்டுந் தழைத்த சீர்த்தி
யுவாமதியென் குடைநிழற்ற நகுமணிச்செஞ் சுடர்மகுட முயர்த்த வேந்தர் [பால்
அவாவுறுசெஞ் செலுந்திறைகொண் டேனைத்துலகு மமுதமுதென் றருந்த மூப்
நிவாசமுறப் பலவமையத் தறைந்தபல பாடலினன் னீர்மை நோக்கி (5)

மிகுத்தகலை யுணர்வொழுக்கம் வாய்மையறன் பொறைபுலமை மேவி மூக்கோ
துகுத்துமகா மகோபாத்தி யாயரென வரசர்தரு முரிமை பூண்ட
வகுத்தமறை யந்தணன்செந் தமிழ்ச்சாமி நாதவள்ளன் மாண்பா வெல்லாந்
தொகுத்துநனி யச்சியற்று கெனவியற்றி யழிவிலிருஞ் சுகமுற் றுநூல். (6)

அன்னவன்யா ரெனினறைது மறையுணரந் தணர்கெழும வணிய தாய்முன்
சொன்னதிரு நாட்டிடையே யெனைத்தறமு மிவணவெனத் துதித்தற் கேன்று
பொன்னகரின் நகர்பொருவா தெனும்புகழ்மார்க் கயன்கோட்டைப் புரியில் வந்தே
கன்னலுங்கைத் திடவமுதஞ் சிவணநல நாற்கவியுங் கழற வல்லான். (7)

மனக்கினிய தலதுமறந் தெனினுமுளுற் றிடலொழிந்தோன் வடிவேற் கையான்
றனக்கினிய னவன்கழலே நிரதமன மிசைநிறுவுந் தகைமை யாளன்
இனக்கினியன்சுக்கினியன்செவிப்பொருளும்புவிப்பொருளுமேன்றேயென்றும்
எனக்கினிய கேண்மையுளா னுயர்பழனிச் சாமியெனு மியல்வல் லோனே. (8)

---

சேலம் ஜில்லா சங்ககிரிதுர்க்கம் சப்ரிஜிஸ்தராபீசு ஹெட்கிளர்க்கு இராசிபுரம்
புவனேசுவரையரவர்கள் குமாரர் ப்ரும்மஸ்ரீ,

## அசுவத்த நாராயணையரவர்களியற்றியது.

அலைகடல் சுலவு மம்புவி தன்னி
னலனெலா மமைந்த நற்பர தந்தனிற்
புண்ணிய பதிக ளெண்ணில வாயினு
மண்ணலெம் பெருமா னருமலைப் பொற்கொடி

## சிறப்புப்பாயிரம்.

ஆன்னுடற் பாதியன் மன்னிய தலங்களி
லருள்விளை யாட லறுபத்து நான்கு
புரிதரப் பெற்ற புரிதிரு வாலவாய்
மூதூர் கங்கை முகமதி போன்ற
மேதகு திருவா வின்குடி செய்த
மாதவப் பயனு மண்ணிடை வந்தோன்
எக்கனி தனினு மிக்க வினிய
நற்கனி யாகு நவின்மாம் பழப்பெயர்
வாய்ந்த மாதவந் தோய்ந்த சிந்தையன்
புண்ணியத் தோகைப் புநிதமா மயிலூர்
வள்ளி மணாளன் வார்கழன் மலரடி
யல்லும் பகலு மகத்திடை நிறுத்திப்
பல்கலைக் கொடிநாப் பண்பா விருத்தி
முத்தமி ழெல்லை முநிபிற் கண்டோன்
சகதி சிவன்றாட் டலைமீக் கொளீஇ
யெத்துறை யாயினு மெப்பா வாயினும்
புத்தமு தம்போற் புகல் காம்பீரன்
கற்றோ ரிவன்சொற் கவித்திறங் கண்டே
நற்கவிச் சிங்க நாவல னென்றார்
பன்னிரு கரத்தோன் பாதாம் புயத்திற்
சொன்னநற் பதிகத் தொகைபல வுளவேன்
மன்ன ரவையின் மதவேழம்போற்
சொன்னயம் பொருணயந் தொடையணி நவரச
வின்னமு தூற விசைத்தபாப் பலவா
லவற்றைத் திரட்டி யறிஞர் தருகெனத்
தவத்தி னாரதன் றமிழி லகத்திய
னறிவி லனந்த னழகின் மதனன்
தருநிகர் பழனிச் சாமிப் பெயரோ
னச்சிட் டிந்தன னவனி
மெச்சும் புகழை விளம்பிலா ராரே.

## மதுரை அமெரிக்கன் மிஷன் காலேஜ் தமிழ்ப்பண்டிதர் ப்ரும்மஸ்ரீ உத்தமபாளையம் பி. நாராயண ஐயரவர்கள் இயற்றியவை.

### அறுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

மலர்பொதுளி மணமிகுநீள் வண்டலைதண் டலைபுடைசூழ் மணிநீர்ச் செந்நெல்
நிலமலிமார்க் கயன்கோட்டை நிலவவரு விசுவகுல நிமல னாளும்
பலபுலவர் புகழ்புனிதப் பிச்சாண்டிக் குரிசிறவப் பயனா வந்த
கலைவலவர் மதிபுலமை மிகுபழநிச் சாமியெனுங் கலைவ லோனே. (1)

முருகவிழ்பைந் தொடைபுனையெம் முருகனினி துறைபதியின் முதன்மை மேய
திருமருவு பழநிநகர் திகழவரு நாவலனற் றீம்பால் காலும்
பருவமழை நிகரவருங் கவிபொழிமாம் பழக்கவிஞன் பரக்கச் சொற்ற
வொருதனி நற் கவிகளெலா மொருங்கச்சி னுறுத்தியுயர் வுற்றான் மாதோ. (2)

## சேற்றூர்ச் சம்ஸ்தான வித்துவானும் மதுரைத் தமிழ்ச்சங்க நூற்பரிசோதகருமாகிய கனம் மகா-ா-ா-ஸ்ரீ மு. ரா. அருணாசலக்கவிராயரவர்களியற்றியவை.

அதிமதுரரசமாகத்தன்வாக்கில்வரும்பாக்களமைதலாலே
மதிமிகுமாம்பழமெனும்பேர்தக்கதெனுங்கவிச்சிங்கமகிழ்ந்துதான்வாழ்
பதியிலமர்பழநியாண்டவரருளுந்திருவருட்சம்பத்துமன்னர்
துதிபெருகக்கொண்டாடியுதவுபொருட்சம்பத்துந்துய்ப்பான்வேண்டி (1)

எத்தனையோவெவ்வொரமையங்தொறும்பாடியநூலுமின்னுஞ்சொல்லெண்
ணுத்தமமாகியகவிகள்சிரந்திளக்குந்தனிப்பாவுமொன்றனு
மித்தரையிற்றவறுமற்பற்பலநல்லிடங்களெளாமேகித்தேடி
யத்தனையுந்திரட்டிவந்துநன்முறையிதென்றுகண்டோரதிசயிப்ப (2)

அச்சினிலிட்டாயிரம்புத்தகமாக்கித்தமிழ்வழங்குமாங்காங்குய்த்தான்
உச்சியிற்கைகுவிப்பவரைப்புரந்தருளெமபெருமானுருவக்குங்கூடற்
பச்சிமதிக்கினிலிருக்குமார்க்கயன்கோட்டைப்பதிவாழ்பழநிச்சாமி
மெச்சியற்பாவலனென்னும்புலவர்குழாத்துள்ளெண்ணும்விவேகிமன்னே.

## மதுரை விவேகபாநுப் பத்திராதிபர் கனம் மகா-ள-ள-ஸ்ரீ மு. ரா. கந்தசாமிக்கவிராயரவர்களியற்றியவை.

---

### அறுசீர்க்கழி நெடிலடியாசிரிய விருத்தம்.

தருவாவி மலைகானம் பணையுவரி வளம்பலவுஞ் சமைந்தெந் நாடும்
பொருவாவி மலைபரசு புரிகன்னி தன்மகுடப் பொற்பிற் றாகி
யொருவாவி வரவூரு மெங்கருணைக் குகநாதற் குறையு ளான
திருவாவி னன்குடியான் விசுவகுல திலகமெனச் செனித்த செம்மல் (1)

எண்ணென்ப வெழுத்தென்ப விருவிழிபா மிவ்விழியை யேலார் கண்கள்
புண்ணென்ப வெனத்தேவர் புகன்மொழிக்கோர் காட்டாகப் புலமை வாய்ந்தோன்
மண்ணென்ப விண்ணென்ப வாழ்புலவர் மனமிவன்சீர் மதிக்குந் தோறுந்
துண்ணென்ப தன்றியொரு நிலைபடுமோ வெனக்கலைதேர் தகமைர் செல்வன் (2)

இடையினவல் லினபேத மெண்ணுகிலார் தளைமோனை யெதுகை யாதி
தொடையினல மறியகிலார் கவிஞர்நா வலரெனப்பேர் சூட்டிக் கொண்டு
கொடையினரைக் குறுகிப்பாப் பகருநுப்பா ரிறுமாப்புங் கொள்வார் யாரே
தடையினரிக் கலிக்கொடுமை யெனககவல்வா ருளக்கவலை தணிக்க வந்தோன் ( )

செவ்விதக்க கற்பனைய மகந்திரிபு துறைமடக்குச் சிலேடை யாதி
யெவ்விதக்க விதைகளையு மெழுதுபவர் கரஞ்சலிக்க விசைக்கும் வல்லோ
னவ்விதக்கல் வியினருமை யறிந்துபொன்னுச் சாமியெனு மதிபனிந்தக்
குவ்விதக்கக் கவிச்சிங்க நாவலவனெனப்பட்டங்கொடுப்பக் கொண்டோன் (4)

தேம்பழுக்க முறவினிக்குந் தெள்ளமுதப் பிரசங்கஞ் செய்யுஞ் சீரோன்
காம்பழுக்க வினுமிளந்தோட் கலைவாணி வீற்றிருக்குங் கமல பீட
நாம்பழக்கம் பனையறியோம் புதுக்கப்ப னிவனெனவே நாவ லோர்சொன்
மாம்பழுக்க விச்சிங்க நாவலப்பேர்க் கவிச்சக்ர வர்த்தி வள்ளல் (5)

ஏரம்ப மெய்க்கடவுள் வெண்கமலா சனத்தேவி யெம்மைக் காக்கும்
வாரம்ப னையநயன வள்ளிமண வாளனமுதன் மற்றுந் தேவர்
சீரம்ப னுவன்மலரரற் செறித்துலகர் தவமுருவாத் திரண்டா லொப்ப
வாரம்ப முதற்றொடுத்த பதிகமுதற் பிரபந்த மநந்த மாமால். (6)

இந்திரவி யுளவரையும் புகழ்நிறுவி வேள்குறிச்சிக் கிறைவ னாக
வந்திரவி னல்வருந்து நாவலரைக் காவலரா வாழ்வித் தோங்குந
தந்திரவி சாலதுரந் தரவேலப் பேந்திரவுத தமன்மேற் சாற்றுஞ்
சந்திரவி லாசமெனப் பெயர்படைத்த மிகச்சிறந்த தனிநூ லொன்றும் (7

மன்னவர்மன் னவன்பொன்னுச் சாமிமகி பதியுடன்பூ மன்னர்க் கெல்லா
முன்னவனு மிருந்தமுத்து ராமலிங்கச் சேதுபதி முதல்வ னாதி
பன்னவரும் புகழுடையார் பலர்வியப்புச் சமத்தியுடன் பல்லாற் றானுஞ்
சொன்னவருங் கற்பனைசா றணிக்கவிக ளளப்பிலவாத் தோன்று மாலோ (8)

இந்தவிதக் கவிகண்மட் டோ விசையினிலக் கணவழுவா தியம்பா நின்று
சந்தவிதச் சுரஜதிகீர்த் தனைகண்ணி பதம்பலவாஞ் சாற்றக் கேட்டோர்க்
கெந்தவித னமுந்தவிர்த்து மகிழ்வுறுத்து மிவற்றைப்பகருங் கெய்தி நாடி
முந்தவிதன் னினுமினிய பொருட்சுவைகண் டொருவாறு முறையிற் கோத்து

தாமுறுமின் புலகுறச்செய் ததிகவின்ப முறலறிஞர் தகவா மென்னத்
தேமலிசொற் றேவர்மொழிந் தமைக்கேற்ப முன்போலத் தென்கூ டற்கண்
ணாமமலி தருநான்காந் தமிழ்ச்சங்கத் தைநந்தகவை நன்னாட் கண்ணே
நேமமுடன் பலபுலவர் குழுமியுறு மவைக்களத்து நேயத் தெய்தி (10)

இன்னுமுறை யின்னுமுறை யென்னவன்னா ரகத்துமகிழ் வெழுந்தாங் கார்ப்பச்
சொன்னலங்கூர் பலபாடல் சொல்லியகாற் குறுமுனிபோற் றொன்னூ லாய்ந்து
சென்னைவளர் தமிழ்ச்சாமி நாதமா லிவற்றையச்சிற் செறித்துத் தருதான்
மன்னுபலன் மிகவாமென் றினிதுரைப்பப் பிறருமங்ஙன் வழுத்தக் கேட்டே (11)

நல்லார்கைப் படுபொருளொன் றுயிரமா மெனமுதிஞர் நவிலு மாற்ற
மெல்லாரு முணரவொரா யிரம்பிரதி யச்சியற்றி யியனூ லாதி
கல்லாருங் கற்றவருங் களிப்பெய்தப் பரப்பியுப கரித்தா னிந்த
வல்லானியா ரெனினெமது மனமகிழ்ந்து வாய்குளிர வழுத்து வாமால் (12)

புண்ணியத்தின் றுறையெனுமார்க் கயன்கோட்டை நகரியினப் புலவ ரேறு
நண்ணியசீர் விசுவகுலத் தினர்பெருமை யெந்நாளு நலம்பெற் றோங்க
வண்ணியபே ரறிவாளன் சாதுசங்க பரிபால னனைபு வாய்மை
கண்ணியஞ்சேர் பிச்சாண்டி யீசுவரப பேர்க்கருணைக் கடலொன் றுண்டால் (13)

அக்கடலிற் றோன்றிவள ரிருநிதிநா மகள்வதனத் தருண்மீக் கொண்டு
தொக்கவிரு விழிராம னிலக்குவன்போ லவதரித்த துணைவர் தமமுண்
மிக்கதிற லறிவடக்கம் வாய்மையின்சொல் சுகுணமெலா மேவக் கொண்ட
தக்கவன்சுப் பிரமணியப் பெருந்தகையின் பின்னவனாந் தகுதி யுள்ளோன். (14)

தண்டமிழ்நா வலரேனு மவர்விடுக்குங் கவியேனுந் தன்னை மேவக்
கொண்டதினந் தான்சுதின மெனக்களிக்கு மதியூகன் குணவி வேகன்
கண்டவருங் கேட்டவரு மதிசயிப்பப் பழுத்தசுவைக் கவிகள் சொல்வோ
னெண்டிசையும் புகழ்பரவ வளர்பழநிச் சாமியெனு மியல்வல் லோனே. (15)

ஸ்ரீமத் மாம்பழக்கவிச்சிங்கநாவலரவர்களின் அன்புள்ள நேசரும் சிங்காரரச
மஞ்சரி நூலின் உரையாசிரியருமான சேலம் கனம் மகா-ள-ள-ஸ்ரீ
**சு. மாரியப்பமுதலியாரவர்களியற்றியன.**

---

பம்புதிரைக் கருங்கடல்சூழ் மாநிலத்தி லினியதமிழ் பரவு நாட்டிற்
கும்பமுனி முதற்புலவ ரெல்லாருங் கண்டுகரங் கூப்பு மாறு
செம்பழநதேன் பொதிநதெனப் பலகவிதை யுலகுய்யச் செய்து வைத்த
நம்பியவ னென்னையன் பூம்பொழில்சூ ழுயர்பழநி நகரா னம்மா (1)

நாம்பழக்க முறவேண்டு மெனப்பெரிய புகழ்படைத்த நாவலோரு
மேம்பழக்க முறுமவையான் குணத்தெவரும பொருவாத மேம்பா டுள்ளான்
பாம்பழற்கண் ணுதலுடையாற் கடிமைபூண் டொழுகுதகை படைத்தோ னன்ற
மாம்பழக்க விச்சிங்க நாவலனு மென்னிதய மறவா நாதன் (2)

அப்பெரியோன் செய்தருள மற்றொன்றும் பொருவாம லமுதே போலச்
செப்பரிய சுவைபெறுபல் கவிதேடி யச்சிட்டுச் செழும்வை யத்துக்
குப்பெரிய பொருளாக வுதவினன் மார்க்கையன் கோட்டை வாழ்வோன்
தப்பரிய குணப்பழநிச் சாமிமே தாவியெனுந் தமிழ்வல் லோனே. (3)

---

திருமயிலை வித்துவான் சண்முகம்பிள்ளையவர்கள் மாணாக்கரும், சென்னை
எஸ் பி. ஜி. காலேஜ் தமிழ்ப்பண்டிதருமாகிய ஸ்ரீமத் கனம்
**கா. நமச்சிவாய முதலியாரவர்களியற்றியவை.**

---

கான்மடங்கா நறுங்கடுக்கை மிலைந்தசடைப் பெருமானூற் கனிவிற் கொண்ட
தேன்மடங்கா மாங்கனிககே விழைநதன்று தன்முன்னூர் செம்மன் முன்னே
நான்மடங்கா கியவிரைவின் மயிலுகைத்து வலம்வந்தும் நாரி பாகன்
வான்மடங்கா தருள்வேல பழநீயே யெனப்புகலும் மாந கர்க்கண் (1)

செவ்வேளும் விழைந்ததுவு மக்கனியா வதன்றியினிச் செகத்து ளாரும்
செவ்வியநற் கனியென்னு முக்கனியிற் சீரிதாச் செறிந வானே
கவ்விவிழி யார்மயலை யொருங்கவித்த புலமைசெறி நாவ லோன்றன்
திவ்வியமாம் பழக்கவிச்சிங் கப்பெயரே தனக்குரித்தாத் திகழ்ந்திட் டானல் (2)

ஊனக்கண் கொண்டுள்ள வெம்மனோர் காண்பரிய வுவையெ லாந்தன்
ஞானக்கண் ணதுகொண்டு நனிநாடி யாங்காங்கு நவின்ற வெல்லாம்
தேனக்கண் ணொளிர்சுவையா வயங்கியபாச் சுவையினிது தேர்ந்திங் கின்று
வானக்கண் வானோர்க்கு மரியதொரு தமிழமுதம் வயங்க வம்மா (3)

சேரலரும் விரும்புமெழிற் சீரியநல் வளங்குலவு சேர லத்தான்
நீரலருங் கடல்பருகி யுவர்நீக்கி யுலகுய்ய நீளு மாரிப்
பேரலரு மப்புவினற் பேரலரு மாரியப்பன் பெரிது ழைத்தே
நாரலர வினிதளித்து விரும்பியதொர் தனிமொழியை நலமாக் கொண்டே (4)

பதியுரிமை யொடுகுலத்துப் பண்புரிமை பெயருரிமை பரிவி னோர்ந்து
மதியுரிமை கொண்டிடுநல் விசுவகுல மணியன்னான் மாண்பு சான்றான்
நிதியுரிமை கொண்டமைக்குப் பெறும்பேறு விந்நூலே நிலவத்தந்தான்
கதியுரிமை கொளுமனத்தோ னுயர்பழனிச் சாமியெனுங் கலைவ லானே. (5)

---

நாகூர் தர்கா மகாவித்துவானும் மதுரைத் தமிழ்ச்
சங்கப் புலவருளொருவருமாகிய ஸ்ரீமத்

## வா. குலாம்காதிறு நாவலரவர்களியற்றியது.

## அகவற்பா.

---

வேங்கடங் குமரி கீழ்கடன் மேல்கட
லாங்கு நடுப் பட்ட வருந்தமி ழுலகத்துப்
புலவர் முன்னு ளிருந்தனர் பலரே—யவருட்
பத்துப் பாட்டின ரெட்டுத் தொகையினர்
பதினெண் கீழ்க்கணக் கினரொடு புதிய
பஞ்சகா வியத்தின ருஞ்சிறந் தனரே
சிந்தை கேள்வன் காதையுங் காந்தமும்
பிறவு முடையார் சிறந்தனர் நடுநா—ளிந்நா
ளீழத் தொருவரு மீங்குமற் றொருவரும்
சொல்வயி னின்பமும் பொருள்வ யினின்பமும்
புல்லிய விலக்கணப் பொலிவு மாகப்
பாடிய செய்யுட் டேடிப் படிக்குநர்
வாய்வழி நறவு பாய்வரு தன்மைய
பல்வகைச் செய்யுள் செய்யுழிச் சிறப்பு

மேய்வரு புலவன் யாரை யோவெனி
ஆய்வழி யொருவனே யாயின னவனே
மாதுங் கங்கையு மாதுமை தானுஞ்
செங்கையிற் சிரத்திற் றங்குபா கத்துக்
கொண்டவன் குமாரன் விண்டெனும் பழனி
மங்கலில் சீர்த்தி மாம்ப ழக்கவிச்
சிங்கநா வலனெனச் சிறந்தோன் றனே—யவனுடைக்
கவியுந் திறனுங் கல்வியு மிவையென
மற்றையர் கூறல் வேண்டா விற்றெனற்
கான்றவன் பெயரே சான்று யினதே—யவன்செய்
கவிபல திரட்டிப் புவியினர் வாய்கட்
கின்னமு தருத்தாங் கென்ன வாக
வச்சுவயிற் பதித்தும னிச்சையிற் பரத்தினன்
றீந்தமிழ்க் கல்வியிற் றேர்ந்துறு புலவன்
பூந்தொடை தாங்கிய வேந்தெழின் மார்பன்
றழ்வறு பொருளில் வாழ்வுறு செல்வன்
கற்றவர்த் தழீஇ யுற்றுணர் தன்மையன்
வறியவர்க் குதவுஞ் செறிமுகிற் கரத்தினன்
பெருமையி னொன்ற குணத்தி னருமையன்
சீரிய பழனிச் சாமியா சாரியென
வறிந்தவர் வியக்குஞ் சிறந்தவன் றனே.

---

இளையான்குடி மாஜி ஸ்பெஷல் மாஜிஸ்திரேட்டும் மதுரைத் தமிழ்ச்சங்க
வித்துவான்களில் ஒருவருமாகிய கனம் மகா-ா-ா-ஸ்ரீ சோதுகுடி

**M. K. M. அப்துல் காதிறு ராவுத்தரவர்களியற்றியன.**

---

வெண்கரிமேற் கரியவன்போற் செங்காவிக் குடைநிழற்கீழ் மேவி யின்சொற்
பண்கனிலும் பசுங்கொடிப்பொற் பாவையர்கள் பல்லாண்டு பாடு மோதை
விண்கதுவ வீற்றிருந்து முகவையிற்செங் கோல்செலுத்தும் வேந்தர் வேந்தன்
தண்கவிஞர்க் கிருநிதியுந் தருவுமெனத் தருபொன்னுச் சாமி வள்ளல் (1)

மனமகிழ்ந்து கவிச்சிங்க நாவலனென் றுயர்பட்டம் வழங்கப்பெற்றோன் [றும்
றனையடைந்தோர்க் கிருபொருளுந் தருசுகுணன் முத்தமிழுந் தழைப்பத் தோன்
தினகரனுங் கவிராஜ சேகரனைந் திலக்கணமுந் தேர்ந்தோ னுளுங்
கனைகடற்றெள் ளமுதெடுத்துக் கனிழ்த்தெனப்பற் பலபிரசங் கஞ்செய் வாயான்

புவியரசர் பலர்வியந்து போற்றவுளார் புகைதபுறாற் புலமை சான்ற
கவியரச ரெனுமொழியை யெல்லவர்க்குங் காட்டாகக் காட்டி னோன்கட்
செவியரச னுப்பிளக்க நிமிடக்கவி பலபாடுந் திறமை வாய்ந்தோன்
நவியரச னையவிழியார் செறிபழநி புரிவாழ்ந்த நன்மை யாளன் (8)

வியத்தகுசீர் மாம்பழக்க விச்சிங்க நாவலவன் விளம்பி வைத்த
நயத்தகுபன் னூல்கடனிக் கவிகடொகுத் தச்சிலிட்டு நல்கி னோற்
செயத்தகுவ தெனைத்தனைத்துஞ் செயுமுரவோன் விசுவகுல திலக னென்று
முயத்தகுசன் மார்க்கமிசை யொழுகுமார்க் கயன்கோட்டை யூரில் வாழ்வோன் ()

எமக்குண்மை விசுவாச னியற்புலவர் சகவாச னெம்போல் வார்க
ளமைக்குமன மலர்வாச னணிகொள்பரி மளவாச னழகார் செய்யு [ளோர்
ளிமைக்குமுனம் பலசொல்வோ னெத்தகையோ ரையும்வெல்வோ னினிமை சான்
றமக்குளுயர் தருபழநிச் சாமிகவி வலனிவன்சீர் சாற்றற் பாற்றே. (5)

---

கந்தபுராணக்கீர்த்தனையியற்றிய குமாரசாமி முதலியாரவர்கள் குமாரரும்,
திருச்செங்கோட்டுக் கலம்பகமியற்றிய சுந்தரமுதலியாரவர்கள் கனிட்டரும்
மதுரை ஜில்லா பெரியகுளம் ஐஸ்கூல் தமிழ்ப்பண்டிதருமாகிய
முத்தமிழ் வித்துவான் சேலம் மகா-௱-௱-ஸ்ரீ
சே. கு. விசாகப்பெருமாள் முதலியாரவர்களியற்றிய

---

## நேரிசை யாசிரியப்பா.

உலகெலாந் துதிக்கு முயர்மறைப் பொருளாய்
நிலவிய நன்மன னேர்ந்தவ ரகத்தினிற்
குலவியே யொளிரறு குணமுடைத் தேவாய்ச்
சலதியங் கையினிற் றனெடுத் துண்ட
குடமுனிக் கின்றமிழ் கோதற வுணர்த்திய
வடமேலே றிவருமைய னுமையவட்
கிடத்திருப் பாக மீந்தவன் கற்றைச்
சடையின் மதிநதி தரித்தவ னசைஇ
வினவப் பிரணவம் விழைவொ டுரைத்த
பனற்கரு மொண்கதிர் பரப்பிய வேலோன்

பவனமூண் கடுசேர் பன்னிறலை யரிதான்
கவலை கொளப்பாய் கனமயில் வாகன்
றண்டா யுதனோர் சரவண பவன்வா
ழொண்டா மரைமிக வோங்கிடுஞ் சரசோ
டாறுரு வோருரு வாகவேள் வந்தாங்
கீறுறு வளங்கொண் டிருமூன் றுறு
மொன்றாய்க் கூடி யோடிய தரத்தி
னன்றார் சண்முக நதியின் பெருக்கால்
வருக்கை கதலி மரவந் தமால
நெருக்கொடு பூக நீள்பனை தென்னை
பாடலம் வகுளம் பற்பல தருக்களின்
பீடமை தண்டலை பேசரு மாண்பார்
கன்னல் செந்நெல் கவினுறப் பொதுளிய
நன்னயந் தருசெறு நனிவளத் தொடுசூழ்
பழநியம் பதியிற் பான்மைமுத் தையமால்
கிழமையா லும்மையிற் கெழுமிய வரத்தாற்
புதல்வ னாகிப் பொருந்திய முகக்க
ணுதவி யருளென வொப்பிலா முருகன்
கழலிணை தொழுவகக் கண்ணிணைத் தருவே
மெனவருள் பாலித் திடமகிழ் வொடுநோ
மனனமெஞ் ஞான்று மாறா திலக்கண
விலக்கியம் யாவு மிளமையிற் றனே
துலக்கமுற வுணர்ந்து சொல்லிய நாற்கவி
யிமைப்பொழு ததனி லிசைக்கும்வன் மையுமர
னமைத்தவி னிசைநூ லாய்ந்திடு வன்மையுந்
தமிழ்க்கட னீந்தித் தரணியிற் புகழ்பெறு
நிமித்தமெக் காலு நேர்ந்தநா வலர்க்கெலாம்
பொன்னுத வியநற் பொன்னுச் சாமிமால்
மின்னுங் கதிர்முடி விளங்கிய செம்மல்
முத்து ராம லிங்கசே துபதி
யொத்து மனமுவப் புற்றிடு தம்முன்
மெச்சப் பலவகை விசித்திரக் கவிக
ளிச்சகத் துள்ளோ ரெவரும் வியப்பக்
கழறியிக் காலக் கம்ப னெனப்பே

ஏழகு மிகக்கொண் டரும்பிர பந்தம்
வேலவற் குயர்ந்த மாலையாத் தரித்துக்
கலியுகந் தனில்வரு கன்ன னெனச்சீர்
பொலியவே வாழ்ந்த புயன்மலி கொல்லி
மலைவள ஞெங்கு மாவேள் குறிச்சி
மிலைமலர் வேந்தன் வேலப் பேந்த்ரன்
றகைமைக் கினிய சந்திர விலாசம்
வகைவகைக் கற்பனை மடக்குச் சிலேடை
பலவுற வியற்றிய பாவல ரைய்ந்த
புலவர்சொற் றிடுநூல் பொருத்தமா வோர்காற்
செவியிற் கேட்டபோ தேயினு ளுரைத்தவ
ரவிர்மனந் திகைக்க வரைமாத் திரையிற்
செய்துட னக்கவிச் சிறப்பினைப் புகழு
மைதீர் வன்மையு மன்னவைக் களத்திற்
பிரசங் கம்மெனப் பிரசங் கம்பொழி
திரனோர் திறனாற் சிறந்தநா வலனெனு
மெத்தகு வன்மையு மொத்தவா றுற்ற
சீர்மாம் பழக்கவிச் சிங்கநா வலன்சொல்
பேர்நன் கொளிர்நற் பிரபந் தத்திரட்
டேர்மிக வெழுதா வெழுத்துறச் சேல
னேர்பதி தன்னி னிறையளி வளரு
மாரி யப்பமால் வண்கவிப் புலவன்
காரியம் வழாமற் காக்கும் வகையினைப்
பழத்தின் ரசமெனப் பைந்தமிட் கவிசொலும்
பழநிச் சாமிமா புலவ
னுதவியாற் புரிந்துசீ ரிதமடைந் தனனே.

---

கோம்பை நகரம் வித்துவான் மஹா-ள-ள-ஸ்ரீ

க. திருமலைச்சக்கயகவுண்டரவர்களியற்றியது.

நேரிசையகவற்பா.

குருகினமடர்தலின் மருவியநீள்வரால்
விசையொடுபாயா நசையுறநீரிடைப்
படிகருமேதியின் மடிநனியொல்க
உரந்தரமுட்டலிற் சுரந்ததீம்பால்
பொழிதருதலினால் முழுதும்வெளிரு
மன்னியவிசும்புலா மின்னினமென்ன

மிடைந்துநறுநீர் குடைந்தெழுமடவார்
திருமுதலாக வருமணங்குகளாய்ச்
சிறையளிமூசு நறைமலர்க்கமலம்
சசாகரனைய நிசாகரனாக
நீளமென்னாண்மலி நாளவரும்பாஞ்
சலசமமிர்த கலசமதாக
ஆன்றதன்பாற் றோன்றக்காட்டி
ஏற்குந்தவளப் பாற்கடலென்னத்
தடந்திகழ்வாவியோ டிடங்கொள்வான் றடவுங்
காவினன்மல்கு மாவினன்குடியெனு
நலனுயர்பழநித் தலநிவாசன்
வஞ்சநீள்கிர வுஞ்சநாம
மஞ்சூர்கிரியொடு வெஞ்சூர்தடிந்து
பண்ணவருய்வான் விண்ணரசளித்த
சரதமார்கலியுக வரதனாந்தண்ட
பாணியின்னருளைக் காணியாக்கொண்டோன்
தாமுயர்விச்சுவப் பிரமநன்மரபினன்
இலக்கணமேனை யிலக்கியமென்ப
வனைத்துமோருருவாச் செனித்துலகுய்ய
வந்தவனேக சந்தக்கிராகி
பொன்னங்கிரியின் மின்னவிர்குடுமியி
னேற்றுநீள்சுடரெனச் சாற்றினுமமையா
வானுலாங்கிரணப் பானுவின்யாண்டுந்
தெரிதரவிளங்கும் விரிபெரும்பாவலன்
நிறைந்தவேழ்கடன்மடை திறந்துசேறலின்
றுங்ககல்விப்பிர சங்கம்புரிவோன்
அனந்தன்வாயனைத்துந் தினந்தினம்புகலினு
முற்றுறுமகத்துவம் பெற்றுயர்வொப்பரும்
புங்கமாய்ப்பழக்கவிச் சிங்கப்பைம்புயல்
கிரணவேற்குருபரன் கருணைப்பெருக்கா
மிருங்கடன்மிசையா வருங்கலைமுதிர்வாங்
கமஞ்சூலெய்தி யிமஞ்சார்வரைவரை
யீட்டுபெரும்புகழ் வாட்டடிதடியா
அழுக்காறுடைய விழுக்காங்கவிஞர்க

மருண்மனக்கட்செவி வெருவுறத் தடைபடா
வசனவன்மையா மசனிமுழக்கித்
தடவுலகெங்கணு மிடனறப்பொழிதரு
கிரகவொண்கவிகளா மரதனமணிகளைத்
தொகுத்தொன்றாக வகுப்பான்முன்னுபு
திருத்தகுதேக வருத்தமதனை
விரவியசீர்சால் திரவியச்செலவினைச்
சிறிதும்பொருள்செயா துறுதியின்முயன்று
துன்றுபஃறிசைதொறுஞ்சென்றுசென்று
சேடமொன்றின்றி நாடிப்பொறுக்கி
வியப்புறுநூலிடை நயப்புறக்கோவா
உவர்சூழ்மகிதலத் தவர்நூலுணர்வோ
டாய்ந்தபேரறிவு வாய்ந்தபன்னலமாம்
பேரெழில்வாய்ப்பச் சீரியநெஞ்சிடைப்
புனைந்துய்தரநனி வனைந்தினிதளித்தனன்
காவலர்புகழுங் நாவலர்கோளரி
தனிட்டபந்துவாங் கனிட்டதங்கை
நயனுறுவைதிக நியமசிரேஷ்டன்
பிறவாவரனடி மறவாவுளத்தன்
கள்ளயில்வெள்வாய் மள்ளர்கிளர்கள்
சங்கின்புன்கனி நுங்குதோறும்
நந்தமைமீரிடைச் சிந்தவினக்கனித்
திரளெனவாரித் தரளம்வாய்ப்பெய்துமிழ்
கயல்குதிபாய்தரு வயல்வளமன்னுபு
காருலாந்தண்டலை யேருலாம்பொன்னி
நாட்டைநேர்மார்க்கயன் கோட்டைமாநகரான்
திருமகளுடனவள் மருமகள்பொருந்தி
நத்துமன்புடனித மொத்துவாழ்வுறுநன்
மாக்ஷிதனக்கோர் சாக்ஷியாயுயர்
செல்வங்கல்வி மல்கியவகத்தன்
தன்னுயிரினுநனி மன்னுயிரோம்பும்
பரமகாருண்யன் பிரமஞானிகளுங்
காண்டருபிச்சை யாண்டியோகீசன்
தன்னவியல்பெலாம் பின்னவருணர்வான்

சான்றதாவளித்த தோன்றல்நம்பிராட்டியார்
அன்னையும்பிதாவு முன்னறிதெய்வமென்
றோதியமுதுநூல் நீதியதனை
யியல்பாந்தனுது செயலாற்காட்டுவோன்
கண்யமார்சுப்ர மண்யோத்க்ருஷ்டமூ
தறிஞனைஞான்றும் வறிஞரையத்தனி
லன்னையிற்புரந்தருள் பின்னைகொழுனனோர்
அதுலசத்குணனை மதுரபாஷிதனை
முன்னவனுக்கொள் தென்னவன்பண்டை
யிலக்கணவிலக்கியக் குலக்கணங்கட்கோ
ருறையுளாத்தண்ணருள் நிறையுளமளித்தோன்
மருவலர்க்காய்ந்தணி மருவலர்த்தும்பைவேய்
வாசவன்களப வாசவன்புயத்தான்
அனகவின்குணன்மதி அனகவின்வதன
சித்தசன்றாயர்கே சித்தசன்மார்க்கன்
பூங்கஞ்சக்கரன் ஓங்கஞ்சக்கரன்
பதந்தனைமறவான் நிதந்தருமறவான்
கழல்நனியார்க்குங் கழலினன்யார்க்கும்
இடர்செயாதவன் சுடர்செயாதவன்
விண்ணினின்றோச்சுங் கண்ணொளிபாய்தராத்
தலத்தினுநிரம்பச் செலுத்துநற்புகழ்மலி
பண்பினுனையுமோர் நண்பனுக்கொண்டோன்
தேமிசைபழநிச்சாமி
யென்னுநன்னும மன்னுநாவலனே.

---

கோயமுத்தூர் ஜில்லா உடுமலைப்பேட்டை கனம் மகா-ா-ா-ஸ்ரீ

## அ. முத்துசாமிக் கவிராயரவர்களியற்றியவை.

### அறுசீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்.

மூந்தக் கடல்சூழ் மண்டலத்தே முதிய புகழ்ச்சிக் கம்பன்முத
லேந்தக் கவிவா ணருமிணையோ வென்றற் புதமா வெழுந்துநின்றோன்
சிந்தைக் கிறும்பூ தாயோர்காற் செப்பி னுய்பித் திடுமேக
சந்தக் கிராகி முத்தமிழ்க்குஞ் சக்ர வர்த்தி மாம்பழமே. (1)

மெச்சுஞ் சிலேடை தனிற்காள மேகஞ் சமுத்ர விலாசமென்பார்
தச்சுங் கிடந்து சுவைபருகச் சந்த்ர விலாசம் பகர்ந்தசிங்கம்
அச்சுந் தரச்செவ் வேள்சிவன்பால் அடையா திருந்த கனியடையப்
பச்சென் றிலங்கும் பொழிற்பழனிப் பதியி லுதித்த மாம்பழமே. (2)

தாது கமழ்ந்த தொடைமார்பன் றனதன் முத்து ராமலிங்கச்
சேது பதிமுன் கல்விநிறை சீமான் பொன்னுச் சாமிதுரை
பேது பெறநோர் பேட்டிபெற்றுப் பின்பு கரிசில் பரிசில்பல
போது மெனக்கொண் டாரினுயர் புலவர் பிரானெம் மாம்பழமே. (3)

பல்லக் கனந்தந் திகழ்பீதாம் பரங்க ளனந்தம் பொருளனந்தம்
ஒல்லக் கணசன் மானமுற்றே உவந்தான் பிறர்க்கு முதவிவந்தான்
சொல்லற் கரிய மாதுரியந் தொடர்சா துரிய மெவராலும்
வெல்லற் கரிய விதம்படைத்த வித்வா னெங்கண் மாம்பழமே. (4)

வீணைச் சுரந்தேர் மாதிடத்தான் விரிசோ திடத்தான் வயித்தியர்கோன்
சேணைக் குறித்த வேதாந்த திவாக ரன்சித் தாந்தரத்நம்
கோணைச் செல்வர் கவிஞர்கட்குக் குலைத்த மானங் குலையாத
பூணைத் தரித்தான் செல்வாக்குப் பொழிந்த பழனி மாம்பழமே. (5)

எட்டு மதன்மே லிரட்டியுமற் றியம்புஞ் சதமும் விதம்விதமாய்க்
கட்டு மவதா னங்களிற்றன் கருத்தை வெளிதிற் பொருத்த வல்லான்
விட்டுப் பிரிந்தார் பல்லாண்டின் மேலண் டினுஞ்சொற் குறியுணர்ந்து
கிட்டுங் கேண்மை ஞாபகஞ்சேர் கீர்த்திக் கொருவன் மாம்பழமே. (6)

ஆதி நிகண்டுங் காப்பியங்க ளோந்துந் தனிப்பே ரகத்தியமுங்
கோதி லிதிகாச ங்களுஞ்சீர் குலாவு மற்றைக் கலையுளவு
மோதி யுணர்ந்த வடமொழியி னுடன்றென் மொழியுந் தெளிந்தநுங்கள்
சோதி வடிவேன் மயின்மறவாச் சுகிர்தன் பழனி மாம்பழமே. (7)

மேலு மதுரஞ் சித்திரம்பன் வித்தா ரங்க ளத்தனையுஞ்
சாலு மாசு வல்லமையிற் றருகெம் பீர வாக்கின்னே
நாலு மறையுந் தொடர்ந்துதுதி நவிலும் விசுவப் பிரமகுலப்
பாலு தாத்தன் முகக்கண்ணைப் பழிக்கு மகக்கண் மாம்பழமே. (8)

விரித்த சிறுவ னளைபயற்று வெண்பாப் பண்டு நிரனிறைவிட்
டுரைத்த முரணை வசைப்புலமைக் கொருவன் வாக்கைத் திருத்துகென்னப்
பெருத்த புகழ்மார்க் கயன்கோட்டைப் பிச்சாண் டீசன் மகிழ்பூப்பக்
கருத்தி லிரண்டை யேற்றிவிண்ட கவிக்கோன் பழனி மாம்பழமே. (9)

ளாரங் கிலயக் கோலரசிற் கீர்த்தி புனைபல் லுத்யோகர்
களமேல் வரவா சாலகஞ்சேர் கவிஞர் கிளம்பாக் காலமம்மா
தளர்வே யின்றி யனையவருஞ் சன்மா னிக்கப் பன்மாண்பு
வளமா னியத்தில் வீற்றிருந்தான் வையா புரியின் மாம்பழமே. (10)

வேறு.

இப்பெருந்தகைமாம்பழக்கவிச்சிங்கமெங்கணுவலர்பெருமான்பேர்
வைப்பெழினுலவாக்களஞ்சியம்வளஞ்சால்வரிசைமுத்தமிழ்ச்சக்ரவர்த்தி
யொப்பெனுஞ்சுட்டுக்கொன்றையுங்காணுதோங்கியபுகழ்மலையோரங்
கைப்பெறுங்கல்விக்கடலுலாய்த்துறைகள்கண்டுவந்தண்டியவங்கம் (11)

எங்கண்மாம்பழப்பேர்வங்கத்திலெடுக்களடுக்கவென்றட்சயமதனுல்
அங்கண்மாநிலத்திலனேகர்வாரினர்மற்றவ்வங்கம்விதியின்மூழ்கினநாள்
இங்கடையார்க்கும்பொங்குமன்பாலேயியன்றமட்டுதவுவானெண்ணிக்
கங்கணதரனுத்தோன்றினுன்குலத்தைக்காக்குஞ்சன்மார்க்கவைராக்யன் (12)

கன்னிநன்னுட்டுமார்க்கயன்கோட்டைக்கையறுநிலைக்கவிபுனைந்து
மன்னியபுகழ்பிச்சாண்டியெஞ்சனகன்மாதவப்புத்திரமணியம்
பொன்னியல்வாழ்க்கைப்புண்ணியன்புலமைப்பொக்கிஷமுணருமஞ்சனந்துத்
தன்னியன்சுப்ரமண்யனெம்பழனிச்சாமிசோதராதுரந்தரனே. (13)

---

சென்னை சர்வே ஆபிசு ரயிட்டரும் தமிழ் வித்துவானுமாகிய ஸ்ரீமான்

## ம. இராஜகோபால பிள்ளையவர்களியற்றியது.

அறுசீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்.

சீரளிக்குந் தமிழுலகந் தினங்களிக்குந் திறனளிக்குஞ் செழிக்கும் வாக்கக்
காரளிக்குங் கனிந்தளிக்குங் கருணைமாம் பழக்கவிச்சிங் கம்மென் றேதும்
பேரளிக்கும் பெருந்தகையான் பெரிதளிக்குங் கவிதையெலாம் பெட்பி னுய்ந்திங்
கேரளிக்கும் வணந்திரட்டி யினிதளித்தான் கைம்மாறென் னீவ தம்மா. (1)

அந்நூற்கு மவைநூற்றச் சிட்டாற்கும் பெயரறிய வாசைநூற்கின்
பொன்னூற்குங் கச்சினையும் பொரநூற்கும் புதுமுலையாய் புகலக் கேணற்
சொன்னூற்கும் பிரபந்தத் திரட்டுதனிச் செயுட்டிரட்டுத் தூய கங்கை
மின்னூற்கும் வேணியரற் கினியபழ னிச்சாமி* வேளென்பாரே. (2)

---

சென்னைப் பச்சையப்பன் காலேஜ் தமிழ்ப்பண்டிதர் ஸ்ரீமத் பூ. கிருஷ்ணசாமி
முதலியாரவர்கள் மாணுக்கருள் ஒருவராகிய ஸ்ரீமான். ஆரணிமேடிக்கை

## சென்ன கேசவலு நாயுடவர்களியற்றியது.

எழுசீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்.

திருவளர் பழனு புரிதனில் வாய்மை பொறைமுதற் றிண்ணிய குணமே
யுருவளர் பெரியோன் பெருமைசால் கவிஞ ரெவரினு முயர்வினை யேற்றோன்
கருவளர் விடஞ்சே ராதிசே டனும்பின் காணவே கவிமழை பொழிவோன்
மருவளர் மாம்ப ழக்கவிச் சிங்க நாவல னெனும்பெயர் வாய்ந்தோன் (1)

காவஞ்சுங் கரத்தான் பொன்னுச்சா மித்தே வன்புகழ் கவிஞர்த மேறு
பூவஞ்சிக் கலிப்பா விருத்தம்பா டெனுமூன் பல்வளத் தக்கணம் பாடும்
மேவஞ்ச லில்லா னொடு மதுர கவிகளின் மேன்மையைப் பெற்றோன்
நாவஞ்சு மன்னோன் புகழையென் சொல்லி யேத்துவ னுனிலத் தோரே. (2)
இப்புல வன்செய் பிரபந்தத் திரட்டு மினியவாந் தனிச்செய்யுட் டிரட்டு
மொப்புட னய்ந்தே யொன்றெனச் சேர்த்திவ் வுலகெலாம் புகழ்ந்திடும் வண்ணம்
தப்பித மின்றி யச்சுவா கனததிற் றகையுடன் வெளியிடு வித்தான்
அப்பணி பெருமா னடிபணி பழனிச் சாமியா சாரிகா ணமமா. (3)

---

சென்னை இந்து தியலாஜிகல் ஹைஸ்கூல் தமிழ்ப்பண்டிதர் மகா-ள-ள-ஸ்ரீ

## கோ. வடிவேலு செட்டியாரவர்களியற்றியது.

அறுசீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்.

சிங்கலறு பன்னூ லுந திறனமைந்த தனிசசெய்யுளும செப்பம வாய்ப்பக்
கங்கையணி வேணியரற் கன்புடைமாம் பழககவிசசிங் கசசி ரேட்டன்
றுஙகமுறச சொற்றவற்றைப பழனிசசா மிபபுலவன் தொகுத்தச் சேற்றி
யிங்குறையுந தமிழ்மககட் கினிதளித்தான் கைமமாறென னியம்பு கேனே.

---

சேலம் ஜில்லா திருசசெங்கோடு விவேகதிவாகரன் பததிராதிபர் மகா-ள-ள-ஸ்ரீ

## தி. அ. முத்துசாமிக்கோனரவர்களியற்றியவை.

அரும்பாலை யிடததனடி முனிபோற்றிப் பெறுநதியுள ளமைகும பதமதை
வரும்பாலை ராவதற்காக் கொடிகவிழ்பபக் காவிரியா மாண்பு மற்றைக்
கரும்பாலை யொலிகேட்டுக் கரிபிலிற்றிச் சினைசாடக் கவிபாயந தாடும்
பெரும்பாலை கொல்லிமைகா வெள்ளிமலை யொல்லைவளம் பிறங்கு கொங்கில் (1)

நெஞ்சினினை வினைகூடப் பான்முதற்கா வடியினிறை நிரையா யுன்பு
மிஞ்சினவ ரெடுததவச மாகியடை வுறநடிகக மெய்யின் வேர்வை
எஞ்சிவரக் கண்டனைய ரயர்வகல நீர்தோய்தம மிரண்டு பொன்னம்
பைஞ்சிறகால் வீசியுள முருகனமார் கழனிசெறி பழனி மூதூர் (2)

அந்நகரந் தன்னில்விஸ்வப் ரம்மகுல தீபமென வவத ரித்துப்
பன்னிருகை வேளருளாற் பலகலையாய்ந் தவைக்களத்திற் பலர் திகைக்கச்
சொன்னயமும் பொருணயமுந் திணைநயமுந் துறைநயமுஞ் சுவை முதிர்ந்த
வண்ணயமும் நன்னயமாக் கடன்மடைபோ னிமிடகவி யியம்ப வல்லோன் (3)

த்யாகசிந்து வாக்வரு போஜனுன்மழை யோர்காற்பாச் செப்பச் சொல்லும்
ஏகசந்தக் கிராஹியிருந் தனரென்ப வொருமுறைநா லியம்பக் கேட்டு
யோகசந்த நுட்பவிரி பொருண்முதல பலகாலாய்ந் துற்றூர் போற்சொல்
சாகசந்தெய் வீகமெனப் பிரமைகொள்ளப் புகலவல்ல சதுர தீரன் (4)

பற்பலதே யத்தவரும் பார்த்துவியப் புறநீடு பான்மைத் தாகப்
பொற்பமையா லயகோபு ராதிபல பணிசூத்ரப் பொறிக ளியாவுஞ்
சிற்பவுறுப் புகளிரைந் தாலியற்று திறமோர்ந்த தென்கூ டற்கோ [டோன் ()
விற்பனரற் புடன்முன்னோர்க் கிந்த "மாம் மழம்" எனும்பேர் விரும்பிக் கொண்

வலியவெனே யழைத்தன்பு பாலித்த பாஸ்கரநன் மன்னே யீன்ற
கலைகொண்முத்து ராமலிங்க சேதுபதி சமுகமுற்றுக் கவிதை மாரி
பொலிவுபெறச் சொரியவிறும் பூதுற்றுச் சன்மானம் புரிந்து சிந்தை
மலைவில் "கவிச் சிங்கம்" என மகிழ்ந்தழைக்கச் சிறந்திலங்கு வண்மை யாளன் ()

இத்தகையோ னியற்றுதனிப் பாடல்பல பிரபந்த மெலாமச் சேற்றிப்
புத்தகமாக் கித்தருக வெனவேண்டு மறிஞர்குழாம் புகழச் செய்தான்
வித்தகமா கியமார்க்க யன்கோட்டைப் பிச்சாண்டி விவேக னீன்ற
முத்தமிழா யும்பழனிச் சாமியெனும் நலநிறைந்த முதியோன் முனே (7)

---

சிவகிரி சம்ஸ்தான வித்துவான் மகா-ா-ா-ஸ்ரீ

## ச. திருமலைவேற் கவிராயரவர்களியற்றியவை.

சிரசங்கஞ் சங்கத்தி ரைப்புனலுக் குமைக்கிடமாஞ் சிவனே யன்கார்
வரசங்கஞ் சங்கத்தி கைக்குழல்கந் தரநடைகா மருசெந் தேனி
னிரசங்கஞ் சங்கத்தி மொழிமுகங்க ணெனுமடவார்க் கெழின்மா ரன்பாப்
பிரசங்கஞ் சங்கத்தி னிடையிருந்து நடத்துகல்விப் பெருமை வாய்ந்தோன் (1)

சுகுமார மணிமலர்ப்பூம் பொழிறிகழ்மார்க் கயன்கோட்டை துலங்க வாழ்வோன்
றகுமார மணிபுயத்தான் பிச்சாண்டித் துரையருமைத் தவத்தாற் றோன்றி
யகுமார மணிசெயசுப் பிரமணிய முகிறனைவ னானோ னென்றும்
வெகுமார மணியமுறு புகழ்ப்பழநிச் சாமியெனும் விவேகன் மன்னோ (2)

குமுதகவின் மலர்க்கழனி சூழ்பழநி வேட்குவனைக் குலமுத் தஞ்சிந்
துமுதகவி யன்கடலுண் டவனைநிகர்த் தவன்மார்பிற் சொனக்குன் றென்ன
விமுதகவி னுயர்முலையார் பயின்மணிமா ளிகைமுகனை வேந்தன் மெச்சு
மமுதகவி ஞோர்திலக மாம்பழநி மாம்பழஞ்சொல் லருட்பா வெல்லாம் (3)

கண்டுகண்டு வியந்துதிரைக் கடலமுதை யப்புலவர் களிக்க வாலிற்
பூண்டுகண்டு யின்றவனங் களித்ததெனப் புலவர்களிப் பானச் சீர்மை
யண்டுகண்டு நிகர்சுவைப்பா வனைத்துமச்சிட் டுதவினன்கூ ரயரச் சோகூ
ணுண்டுகண்டு லவப்பொருதாற் பணியுமிவன் போற்புகழ்பெற் றுயர்ந்தோர் யாரே. (4)

---

கண்மணி, பன்னிருநீதிக்கதை முதலியவற்றின் நூலாசிரியரான

சென்னை மகா-ள-ள-ஸ்ரீ

## பு. வே. சபாபதி முதலியாரவர்களியற்றியது.

### அகவற்பா.

மஞ்சுகண்படுக்குமணிமுடிநெருங்கிய
மஞ்சனக்குவாலிடையகழ்ந்தவாவிபோற்
பாழிகண்மலிந்துபன்மருங்கமைந்துங்
காழகிற்றுறொடுகவின்சந்தேமுத
லேயபல்விருக்கமெங்கணுமுயர்ந்தும்
பாயலாவமர்ந்தபருமணியநந்தன்
பல்லுருக்கொண்டுபரவினபோன்ற
அருவிகள்பலவுமாங்குறைமணிகளை
யொருமையிற்றிரட்டியோடுபவாகியும்
தம்முயர்வறியாத்தகைமையோர்போல
வோங்கியபழநியொண்மலையடுத்துறாஉ
நகரிடைவந்தோன்நாவலர்தலைவன்
மூவிருமுகத்துமூவாமுதல்வன்
அடியிணைக்கன்புபூண்டவனதனால்
அகக்கண்கொண்டேயனைத்தையுமறிந்து
பாடும்புலவன்பலர்புகழ்சுகுணன்
அமுதெனவயுங்குமருந்தமிழ்க்கடலகத்துத்
தன்னுவதுவேதாழியாகக்
கடைந்தவணெழுநவநீதந்திரட்டி
மெய்ப்புலவோர்க்கிவண்விருந்தாயளித்தோன்
மாம்பழக்கவிஞனுமாண்பெயர்ச்சிங்கன்
அவ்வப்போதவனூர்வமொடியாத்த
வமிழ்தினுமினியவரும்பாத்தொகுதியும்

தில்லைநச்சென்றாற்சேமநிதியும்
சிதைந்துபோகாமேதிரட்டியச்சிட்டனன்
அன்னோன்யாரெனினறைகுவல்கேண்மோ
முதலிடைகடையெனமுச்சங்கங்களான்
இறைவனேமுதலோரிருந்தவணுய்ந்த
செந்தமிழ்வழங்குதிப்பியமதுரை
மாப்பதியணைந்தமார்க்கபன்கோட்டை
தன்னில்வதிவோன்றமிழறிவுடையோன்
விச்சுவகுலத்தன்வியன்குணநலத்தன்
அன்பருளங்கெதவிட்டாவமுதன்னோன்
அறிவோர்சொல்லாரணமாக்கொள்வோன்
சிரியபழநிச்சாமியென்னும்
ஆய்ந்தறிபுலவரவாவுவோனே.

---

இந்திரபீடம் கரபாத்திர சுவாமிகள் ஆதீனம் ஸ்ரீமத். ஈசூர் சச்சிதானந்த சுவாமிகள் அடியார்களிலொருவரும் பழனிபுரி ஸ்ரீமாந் மாம்பழக்கவிச்சிங்க நாவலரவர்கள் மாணாக்கர்களிலொருவருமாகிய சேலம் மகா-ள-ள-ஸ்ரீ

## திரு. கோமளேசுவர முதலியாரவர்களியற்றியது.

### நிலைமண்டில வாசிரியப்பா.

ஆரணமுடிவிலமர்ந்திடுபூரணன்
காரணகாரியகற்பனைக்கதீதன்
சச்சிதானந்தசற்குருசரவண
பவனெம்மிறைபயிலுஞ்சயிலப்
பழனிப்பதிவாழ்பருணிதனெங்கோன்
விசுவமறையவன்விண்ணவர்மண்ணோ
ரெவருமேத்திடுமியலிசைநாடக
மெனுமுத்தமிழ்க்கடலினிதுறப்படிந்து
பருகியகொண்மூபருவமழையெனச்
சிலேடையமகந்திரிபேமடக்குச்
சித்திரமாதியாஞ்செந்தமிழ்க்கவிபல
கருதுநர்மனப்படிகணப்பொழுததனிற்
பொழிந்திடுபாவலன்புலவர்பெருமான்

புவிசொலும்பிரசங்கப்புலவர்வியப்புறு
மற்புதப்பிரசங்கவிற்பனநாவலன்
கும்பன்கம்பன்குலவுதொல்காப்பியன்
துங்கமார்கீரன்சங்கத்தறிஞ
ராதியவான்றோரனைவருமோருருக்
கொண்டெனவிந்நாட்குலவியமதனிடை
முத்தையாசாரியன்முயல்பெருந்தவத்தான்
வந்தவரோதயன்வளர்பெருங்கருணையன்
அடக்கமிரக்கமன்பேவாய்மை
முதலியசற்குணமுற்றும்பெற்றுளோன்
சண்முகன்றண்மலருண்முகம்பொருத்திச்
சந்ததம்வந்தனைமுந்துறப்புரிபவன்
சேதுபதிபாற்போய்க்கோதுபதியாக்கவி
தேம்பழுந்தேனெனச்செப்பிப்பலர்புகழ்
மாம்பழக்கவிச்சிங்கநாவலனென்ன
மன்னுஞ்சிறப்பாற்றுன்னியபெயரை
யெய்தியமாட்சியனெண்ணருஞ்சீர்த்தியன்
வேங்கடங்குமரிமேற்கடற்கீழ்க்கட
லென்கினெல்லையினுப்பண்மருவிய
தமிழ்நாட்டன்பர்தவறறச்செவியி
னுண்டுகளிப்பானுதவியவமிழ்தின்
சுவையெனவவ்வவ்வமயஞ்சொல்லிய
செய்யுட்டிரட்டையுந்தெய்வப்பழனி
யையன்மலரடிக்கலங்கலாவன்பிற்
சூட்டியபிரபந்தத்தொகைபலவற்றையு
மன்றுணின்னிசையாருஞ்சரிதமு
நன்றுறவாராய்ந்தொன்றுறத்திரட்டி
யெழுதாவெழுத்திலேற்றியெண்டிசை
மட்டுங்கீர்த்திவளர்த்தினன்சீர்சால்
விசுவமரபினன்விண்ணோர்பூம்பொழி
லோங்குமார்க்கயன்கோட்டைவாழ்வுற்றவ
கற்றவர்நற்றுணைகல்விக்கலனணி
செல்வன்சிவன்றாட்சிந்தையிலென்று
மறவாமாண்பனறமேபுரிபவன்
பார்புகழ்பழனிச்சாமியாசாரி
யென்னுநாமத்திருந்தவத்தோனே.

---

பாரதம்பாடிய அஷ்டாவதான அரங்கநாதமுதலியாரவர்கள் பௌத்திரரும், சைவசித்தாந்த வேதாந்த தத்துவதீபரான, இராஜபுரம் மிட்டா ஜமீன்தார் குமாரசாமிமுதலியாரவர்கள் புத்திரருமான சேலம் மகா-ள-ள-ஸ்ரீ கு. ஐயாக்கண்ணுமுதலியாரவர்களியற்றியது.

நேரிசையாசிரியப்பா.

நான்முகன்படைத்தநானிலந்தன்னிற்
றேனிழிந்தளிகள்தேக்கிடவுண்ணுஞ்
சத்ததத்தீவினிலுத்தமத்தீவு
முத்துசெம்பவளமிரத்தினவினங்கண்
மற்றுளவளனெலாமுற்றும்பெற்றுப்
பல்லுயிரதனிற்றொல்வினைத்தொடக்கை
யெல்லைகண்டகற்றவேற்றவினிய
மக்கட்பிறப்பார்மறையங்கமாதி
தக்கநெறியிற்றன்வயின்மேவ
முக்கணெந்தைமுடிவிலாக்கருணை
பக்கம்வைத்துப்பார்விண்ணீர்கால்
கனன்மயமாகுங்காணியவுருவாய்
மனமுவந்திருக்குமாண்டகுநாவலன்
முத்திமுடிவாமொழிபொருணன்குஞ்
சித்திதருவதுசிறப்புடைக்கல்வியென்
றகத்தாலாய்ந்திட்டருந்தமிழ்க்கடலை
யகத்தியன்போலவருந்தியபெரியோன்
செந்நாப்புலவர்முன்னுளிருந்தோர்
பின்னுளிவன்வரிற்பிழைப்பிலையென்று
பெருந்திகில்கொண்டேபிறந்தனர்பலரே
இவன்காலத்திலெதிருறற்கஞ்சிச்
சிவன்பாதத்திற்சேர்ந்தனர்பலரே
தன்னேடொத்தார்தன்னிற்சிறந்தார்
பின்னுண்மேவாரென்னுர்துயராற்
பிஞ்சகன்றனக்குப்பிள்ளைமுன்னுளி
லஞ்செழுத்துண்மையளித்தனன்போன்று
தானுஞ்செப்பச்சார்ந்தனனவன்பாற்
போனவனெனிற்புகலுதுங்கேண்மோ

நாரணன் மருகனம்பிவாழூரித்
தாரணிநங்கைதனக்கணிதிலகம்
விழவொலிநீங்காப்பழநாபுரிசெய்
பழம்பெருந்தவத்தின் பலனுவுதித்தோன்
விச்சுவகன் மகிளாங்குங்குலத்தின்
மெச்சிடவந்தவுச்சிதவிற்பன
னட்டவிலக்குமியங்கங்குலவ
விட்டமென்றந்தைபாலிருத்தியபெருந்தகை
பாம்பணிபரமன்பதம்பணிபத்தன்
மாம்பழக்கவிச்சிங்கமாகுநாவல
னிவன்கவித்திறத்தையெவரேயிசைப்பார்
புவிதனிற்கற்றோர்போற்றருந்தக்கோர்
சுவைமலியவற்றைத்தொகுப்பிற்றிரட்டித்
தருகெனமுத்தமிழ்த்தண்கடலாழியைப்
பருகுகொண்மூவெனப்பாரினில்வந்தோன்
கற்றவர்போற்றுங்கற்பசம்போல்வான்
சிற்பரன்கழலிற்சிந்தைநிறுத்துவோன்
கொடியிடைநல்லார்குறிப்பிடுமழகன்
சீர்பெறும்பழநிச்சாமிச்செல்வ
னோர்பெறுமச்சிட்டேற்றிப்
பாரெலாம்புகழைப்பரப்பிவிட்டானே.

---

சோழவந்தானூர் வித்துவான் ஸ்ரீமத்
அ. சண்முகம்பிள்ளையவர்களியற்றியவை.

பாசடைக் கமலத் தன்னம் பயில்பொழிற் பழனம் பல்ல
தேசுடை மதியந் தாங்கு செங்கதிர்க் கூட்டங் காட்டும்
ஆசறு பழநி யிற்பொன் னசலமேல் விளக்க மென்னக்
காசினி யுரைப்பத் தோன்றுங் கருத்தினன் றிருத்த மிக்கான். (1)

பன்னருஞ் சீர்த்தி வாய்மாம் பழக்கவிச் சிங்க மென்றே
என்னருஞ் சொல்லுந் தொல்லோ னியற்றிய கவிய னேத்தும்
இந்நிலைத் திறவா வண்ண மியல்புறத் தொகுத்தச் சேற்றி
மன்னுல குவப்பத் தந்தான் மணிவழங் கெழிலி மான. (2)

அன்னவன் யாவ னென்னி லக்கவிச் சிங்கந் தோன்றும்
நன்னய மரபின் வந்த நாவலன் பாவ லன்சீர்
பன்னுறு மதியி னுைத்த பண்பின னண்பின் மிக்கான்
இன்னலில் பழநிச் சாமி யென்னுநன் னுமைத் தோனே. (3)

சிறப்புப்பாயிரம் முற்றிற்று.

---

மார்க்கயன்கோட்டை ஸ்ரீமத் கனம் மஹா-ா-ா-ஸ்ரீ
சி. சுப்பிரமண்ய ஆசாரியாரவர்கள் குமாரரும், இந்நூல் தொகுத்தாரின்
மருகரும், மாணுக்கருமாகிய

மகா-ள-ா-ஸ்ரீ

# M. S. சுந்தரமாசாரியவர்களியற்றிய

## சிறப்புப்பாயிரம்.

---

எழுசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்.

பொன்னுலா வியநான் மறையும்வின் ணிறையும் பூமல ருறையும்புத் தேளுந்
துன்னுபே ரன்பிற் றொடர்ந்தினி திறைஞ்சுசு சோதிவா னவனருட் டுணைச்சீர்
மன்னுசெந் தமிழின் மணங்கமழ் சைவ மங்கலப் பாண்டிநன் ஞட்டிற்
பன்னலங் களினுஞ் சிறந்தரு ளோங்கும் பதிதிருப் பழநியம் பதியே. (க)

இன்னமா நகரில் விச்சுவப் பிரமத் தினியமா மரபினி னுதித்துப்
பன்னுமுத் தமிழின் பயனெலாந் தெளிமாம் பழக்கவிச் சிங்க நாவலவர் [குத்து
சொன்னநூ றனிப்பாத் தொகையெலா மொருங்கு துருவியாங் கவற்றினைத் தொ
வன்னமா ரச்சிற் பதித்தினி தளித்த வள்ளலா ரியல்வழுத் துவனுல். (உ)

புங்கமா ளிகையின் மிசையிசை மடவார் பூங்குழற் கூட்டகிற் புகைகள்
துங்கவா னகத்திற் சூழ்வன காணுந் தோகைமா மயிலினஞ் சூற்கொண்
மங்குலா மெனவுண் மகிழ்ந்தெழி லுயர்ந்த வான்சிறை விரித்துநின் றாடும்
பொங்கமார் சோலை மார்க்கயன் கோட்டை புரிதவத் தானுறை புநிதர். (3)

இடையகன் றிலகங் கடல்வளை யுலக மிசைந்தமெய் யறிவினர் திலகம்
கடைதவிர் வேதங் கழறுநன் னீதங் கருணையன் பருட்பிர சாதம்
உடையருண் முந்தை யுருவினர் சிந்தை யுணர்தவ ரெனதனை தந்தை
அடைதிரு நேயர் நடையுறு தூய ரரியசெம் பொருட்கனி வாயர். (4)

என்றுமே வுலகத் தின்பமோ டமர ரிறைஞ்சிடு மில்லறத் தொழுகித்
துன்றுவாழ் வதனிற் றுலங்குயிர் பலவாத் தோற்றுவ வுருவினி லெனினும்
ஒன்றதாம் பிரமத் துறைமனத் துறவா னுலகிய லறமுறை புணர்த்தி
நின்றமா தவரிந் நிருபரென் றடியார் நித்தனுந் துதிக்குமெய்ஞ் ஞானி. (5)

சீருறு கவிஞர் செய்தவப் பயனே திகழ்கலை மடநதையாா தமகரு
நேருற வாக்கு நிதியமோ நீதி நெறியுநால் வேதநன் னிலையு
மோருரு வெடுத்திங் குதித்ததோ வெனவிவ் வுலகெலாந் தொழுதினி துவக்கும்
பேருற வணிந்த பெருந்தகை ஸ்ரீமான் பிச்சையாண் டீஸ்வரப் பெரியோர். (6)

இந்தவே தியர்தந் திருவருள் பெறுபூந் திரர்கிரந் தரவர சரதர்
சொந்தமா துலரென் சிரமுறை மலர்த்தாட் சுப்பிரமண்யதே சிகர்பின்
வந்தமே தகையர் வடிகொளு மமுத வாக்கின ரிருங்கலை வாணர்
சந்தமார் புயத்தர் தருபுகழ்ப் பழனிச் சாமியாங் குருவரோ தயனார். (7)

மூடனா மென்னைச் சூழ்மயக் ககற்றி மொழியுநல் லறிவுநற் செயலு
நீடநா டொறுஞ்சற் போதனை புரிந்து நிகரிலாக் கலைபல நிகழ்த்திச்
சீடனாக் கொண்டு திருத்தியாண் டருளுஞ் செல்வவாழ் வினரிவர் செயலைப்
பாடநாப் பதிற்றுப் பத்துறுங் கோடி படைத்தில னேமலர்ப் பதியே. (8)

## கலி நிலைத்துறை.

"நின்னையாட் கொண்டு நிறைபல நலமெலா நீட்டுந்
தன்னை யேயிணை யாகிய சற்குரு சரணப்
பொன்னை நாடுதற் குகந்துநீ முந்தையிற் புரிந்த
தென்ன மாதவ மியம்புதி வாழிநெஞ் சகமே" (9)

உ

கடவுள் துணை

# விநாயகமூர்த்திபதிகம்.

## ஸ்ரீ மகாகணபதி துதி.

### பன்னிருசீர்க்கழி நெடிலடியாசிரிய விருத்தம்.

சீர்கொண்ட கிரணசந் திரசடா மகுடமுந் திரியம்ப கம்பொருமுந
திடகரட கடவிகட ஐயகும்ப கெம்பீர திவ்யகுஞ் சரவதனமுந
தார்கொண்ட பரிமள சதுர்ப்புய விலாசமுந தரளவெக் ஞோபவீத
தடமார்ப் லம்போ தரப்ரவா கமுமுசிந தவளாம்ப ரானந்தமுங்
கூர்கொண்ட பாசாங் குசாஸ்தமுங் கிண்கிணி குலுங்குபத முங்கண்டியான்
குமபிட் டிறைஞ்சவருள் கூர்ந்துதவ வேண்டுநய குணசகல பரிபூரண
வார்கொண்ட களபதன வல்லபை மனோகரா வளமுறுந் துறைகடோறு
மருவுபிர ணவவேத சொருபசம ரசநீத வரதசிவ கணநாதனே.

## பதிகம்.

### நேரிசை வெண்பா.

சிற்றுணர்வாற் குற்றமென்ன செய்துளே னேனுமவை
முற்றுமினி நீபொறுதமென் முன்னிறபாய்—சுற்றுயாநேகார்
புந்திதனிற் றோன்றிய பொழியுங் கருணைமதத
தந்திமுகப் பிள்ளாய் சரண் (1)

சரணமலர் வாழ்த்தித் தமிழ்சொலப்பெற் றூர்கரு
மரணபவ மாற்று மருந்தே—கிரணவரைக
கொப்போதுந் தும்பிமுகத் தோங்கார தட்பொருளே
யெப்போதுங் காப்பா யெனை. (2)

எனைத்துந் திருவருளா லின்றளிக்குந தேவே
நினைதகன் பொடுதுதித்து நின்றோர்—வினைத்துன்ப
மாற்றுங் கயமுகத்து வள்ளால் விரைந்தெனையீ
டேற்றுஞ் சமைய மிது. (3)

சமையந் தொறுநிறைந்த தற்பரமே யன்பர்க்
கமையுந் தனித்தெள் ளமுதே—புமைதந்த
கண்மணியே யானைமுகக் கற்பகமே பேரின்ப
விண்மணியே யாள்வாய் விரைந்து. (4)

விரைததும்பு ஞானமத வேழமுகத் தெந்தா
யுரைகடந்து நின்ற வொளியே—வரைவிளங்கப்
பாரதத்தை முன்னெழுதும் பாசாங் குசதரவென்
கோரதத்தை மாற்றியருள் கூர். (5)

கூரியவேற் கண்ணார் கொடியமய லைத்தவிர்த்துச்
சீரியபே ரின்பத் திறனருளிப்—பாரிலெனை
நீயடிமை கொண்டு நிதங்காத் திடல்வேண்டுந்
தூயமத வேழமுகத் தோய். (6)

தோயுங் களப சுகந்தமட வார்விரகப்
பேயுங் கவலைப் பிணியுமினி—யோயும்
படிபுரிந்து வேழமுகப் பண்ணவனே யென்னை
யடிமைகொண்டு நீயாண் டருள். (7)

அருளா யுருவா யருவாய்ப்பே ரின்பத்
தெருளாய் முதியமறை தேடும்—பொருளாய
தந்திமுகத் தோனே தமியேன் குறித்தவரம்
வந்தினிது தந்துதவு வாய். (8)

வாயா லுனைத்தர்தமை வாழ்த்திவருந் தாமலெனை
நீயா தரித்து நிதங்காப்பாய்—வீயாத
தொண்டரித யாம்புயமாந் தூயமணிக் கோயில்குடி
கொண்டகண நாதவருள் கூர்ந்து. (9)

கூர்ந்தமதி தந்தடிமை கொண்டெனையாள் வேதமின்னுஞ்
சார்ந்தறிய மாட்டாத் தனிக்களிறே—தேர்ந்து
நடைசிறந்த நின்சீர் நவிலுந் திறமை
யுடையதன்றே யென்சிற் றுணர்வு. (10)

விநாயகமூர்த்திபதிகம்.

முற்றிற்று.

———



உ

வாணிதுணை.

# ஸ்ரீஸரஸ்வதிஅம்மன் பஞ்சரத்னம்.

## ஆசிரியவிருத்தம்.

சீர்கொண்ட செம்பொற் சிலம்பிசை ததும்புனது சீததள வனச பாத
தெரிசன மெனக்கரு தினங்கொடுத் தெண்ணியவை சித்தியாம் படிமுடித்துக்
கார்கொண்ட கனபருவ காலமுகில் போலமுதிர் கவிதைமழை தடைபடாமற்
கனிவினொடு பொழியவென் வாக்கினிற் குடிவந்து கருணைநீ புரிதல்வேண்டும்
பார்கொண்ட ஜீவபரி பாலன குணாலய பராகரா னந்த வடிவே
பலதேவ கன்னிகா படிகரத் னாபரண பரிமள விநோத வமுதே
நார்கொண்ட வடியர்மன நடனமயிலே பிரம னாவிற் றிருந்த குயிலே
நாதஷட் பதவேணி வேதபுத் தகபாணி ஞானமுத் தமிழ்வாணியே. (1)

அன்னைநின் கருணைகடாக்ஷமெனி யற்கோ ரணுத்துணை கிடைத்திருந்தும்
அதுகொண் டுனைப்பாடி யானந்த மடையாம லந்தோ வயர்ந்து வீணே
சன்னையொன் றறியாத சர்வசங் கடமேலாய சண்டாளரைத் துதித்துச்
சரசமது ரபதபந் தங்களை யிறைத்துக தறித்திரத் தூழல்வ தழகோ
என்னையிங் கொருபொடி யிடர்க்கடல் புகுத்திடா தேற்றி யருளல் வேண்டும
இனிநீ பராமுகஞ் செய்வதுந் தகாதுபுத் திலவெனக் குன்னையன்றி
நன்னயந் தருவள நளினமண் டபகனக நவரத்ன மயபூஷணி
நாதஷட் பதவேணி வேதபுத் தகபாணி ஞானமுத் தமிழ்வாணியே. (2)

காளிதா சன்பாண கவிபீம கவிதண்டி கட்டுரைப் பட்டிமர்த்தி
கம்பனுயர் புகழேந்தி காளமே கஞ்சொற் கனிந்தவொட் டக்கூத்தனென்
றுளிநே ராகுமிவ ரனைவருமுனைப் போற்றி யல்லவோ மகிமை பெற்றார்
அப்படித் தமியேனை யுநதொண்டு கொண்டுகாத் தருளவித் சமயமுமே
வானியோ டிசசிதற வாளுறை புகக்கெண்டை வானீரு டாவிப்ப
மான்பிணை வனத்தோறு மறையப் பரந்துசெவ் வரிபடரு நயனகருணை
நாளிலோர் நாளுமற வாதுதொழு வாரிதய நளினமே வியவன்னமே
நாதஷட் பதவேணி வேதபுத் தகபாணி ஞானமுத் தமிழ்வாணியே. (3)

சம்பந்த ரப்பர்சுந் தரரருண கிரியார் தழைக்குநக் கீரதேவர்
சரதமா ணிக்கவா சகர்சிவப் பிரகாசர் சார்ந்தசிவ ஞானமூர்த்தி
கும்பந்த மிக்கமுச் சங்கநன் னுவலர் குலாவுபொய் யாமொழிமுதற்
கோதிலா வாணர்க ளலோருநின் னருள்சிறிது கூடியன் றேவுயர்ந்தார்
வெம்பந்த பவரகித வீடென்ற னுலலது வேறொன்றி னுலெய்துமோ
மெய்யான தெய்வநீ யாதலா லெனையிந்த வேளையீ டேற்றல் வேண்டும்
நம்பந்த முனிவர்மன தீபமே யெவ்வுலகு நல்குபே ரின்பவாழ்வே
நாதஷட் பதவேணி வேதபுத் தகபாணி ஞானமுத் தமிழ்வாணியே. (4)

அகவிரு ளறப்பெற் றரும்பொரு ளனைத்தையு மறிந்துநன் றிதுதீதிதென்
றநுதின மதித்துநித் யாநித்ய சாதன மடுத்துவீ டடைவதற்குத்
திகழுனது கட்கருணை சிறிதேனு மின்றியெத் தேவரா லுங்கூடுமோ
திறமாக வென்வாக்கினிற் குடியிருந்து பலசித்தியுந் தந்துகாப்பாய்
சுகவிமல சிற்பரஞ் சோதியே பேரின்ப சுத்தசை தன்ய வாழ்வே
சுமுக சந்த் ரோதய சுலக்ஷண சுமங்கள சுசீலசுந் தர சொரூப
நகபருவ கற்பூர குங்கும படீரநன் னயபயோ தரரத்னமே
நாதஷட் பதவேணி வேதபுத் தகபாணி ஞானமுத் தமிழ்வாணியே. (5)

ஸரஸ்வதி அம்மன் பஞ்சரத்னம்.

முற்றிற்று.



உ

ஓம் சரஹணபவாய நம:

# சந்தப்புகழ்.

## திருப்பரங்கிரி.

### குறிப்பு.

தனதன தனதன தனத்த னந்தன
தனதன தனதன தனத்த னந்தன
தனதன தனதன தனத்த னந்தன — தனதான.

### ஆசிரியவண்ணச் சந்த விருத்தம்.

கதிர்பர வியமணி யுரத்தி லம்புய
மதுமலர் வனிதையை யிருத்து பைம்புயல்
கடவுளர் குலமுயர் தரக்க டைந்திடு பொழுதூடே

கடலெழு மமுதினு மினித்த செந்தமிழ்
முனிகொள வருமறை விரித்த நின்கழல்
கருதிய மனதினில் வருத்த மென்பது வரலாமோ

அதிர்பரி புரநிரை தரித்த கிண்கிணி
கலகல கலெனமு னெதிர்த்த வஞ்சக
வசுரர்கள் சிதறிட நடத்த லங்க்ருத மயின்மீதே

யருகினில் விரைவுட னடுத்து வெம்பவ
விருண்முழு மையுமொரு கணத்த கன்றிட
வனவர தமுமதி திருத்தி நின்றினி யெனையாள்வாய்

முதிர்பல வளமலி தினைப்பு னந்தனின்
மொழிநிகர் கிளிகடி குறக் கருங்குயின்
முலையிணை முகடுழு தலிற் குழைந்தொளிர் புயலோலா

முகைகளை யெளிதினி லவிழ்த்து வண்டின
முறைமுறை விளரிகள் படிக்க வெண்டிசை
முருகுல வியநறு மலர்க்க டம்பணி நெடுமார்பா

சதிர்பெரு கியகொடு முடிக்ர வுஞ்சம
துடைபட மகபதி வினைக்க டுஞ்சிறை
தனில்வில கிடவிடு முனைப் பெருந்திறல் வடிவேலா

சருவிய வறுபகை களைக் களைந்ததி
சயரக சியநிலை தனைத்தெ ரிந்தமர்
தவவிர தியர்புகழ் திருப்ப ரங்கிரி முருகோனே.

# ஸ்ரீ திருச்செந்தூர்.



## குறிப்பு.

தனன தனத்த தனத்தந் தானன
தனன தனத்த தனத்தந் தானன
தனன தனத்த தனத்தந் தானன—தனதானா.

தருமகுணத்தை விடுக்கும் பாதக
வுருவு படைத்து மிடிப்புன் பேய்தொடர்
தரலினு லுத்தர் கலைக்கொண் டாடியு மவர்பாலே

தமிழை யிறைத்து மலுக்குந் தீநர
கதனி லிறக்கி யழுத்தும் பேதையர்
தமது வலைக்கு ளிளைத்தும் பாழினி லலைவேனோ

மருளை யொழித்து வருத்தந் தீரிது
தருணா மசட்டை செயிற்பின் பார்கதி
வருமமெ தற்கு நினைக்கின் றாயது சரியாமோ

மயிலை நடத்தி வரற்குந் தாரம
தலநி னியற்கை தடுக்கின் றாரொரு
வருமில் சமஸ்த வகைக்குங் காரண நிதிநீயே

அருகு குதித்து விழக்குன் றேறிய
வருணை கிரிக்கு மிகுத்தந் தாய்வர
மகவல் படித்து வழுத்துங் கீரன திடர்தாழா

தகல விரக்க முதித்தங் கோடினை
திரிபு வனத்து முனக்குண் டோநிக
ரதனை யெடுத்து விரிக்கும் பேரறி வினனேனே.

பருவ தளத்தை யவிழ்த்தன் பாலளி
சுருதி யிணக்க மதிற்குன் றாதிசை
பலவு மிழற்று மதுப்பங் கேருக மலருமேடை

பரவி யுடுக்க ளனைத்தண் சூல்வளை
தரள வினத்தை யுயிர்க்குஞ் சீர்திகழ்
பழன முடுத்த திருச்செந் தூருறை முருகோனே. (2).

# ஸ்ரீ திருவாவினன்குடி.

## குறிப்பு.

தானன தனதன தான தந்தன
தானன தனதன தான தந்தன
தானன தனதன தான தந்தன—தனதானா.

ஆணவ முதலிய பாழ் மலங்களி
னுலவ னியினிடை நீது நன்றறி
யாதறு தினமெளி யேன் வருந்துவ தழகாமோ

ஆதர வினையல தேது வஞ்சக
நீநினை குவது நியாய மன்றெனை
யாளுதி சமையமி தாதி சங்கர குருநாதா

பாணமு மமுதமு மால முங்கரு
நீலமு நளினமு நாண வென்றரி
பாய்விழி வனசர மாது தன்கர மலராலே

பாகினு மினிமைய தாக முன்பொரு
நாளுத வியதினை மாறு கர்ந்திடு
பாவன பரமசு காசுமங்கள குணசீலா

வாணகை நிறைதரு சீத சந்திர
மாமுக விமையகு மாரி பொன்புனை
மார்பினு நலமடி மீதி னுந்தவழ் சிறுபாலா

மாசறு சரவண வாவி யின்புடை
மானென வுலவிய மூவி ரண்டனை
மாரிள முலைபொழி பான்ம ணங்கமழ் கனிவாயா

சேணக ரெழுதரு நீழ லிந்திர
னாரர சுரிமைகெ டாது றும்படி
தீயுமிழ் வடிமுனை வேல்வ ளங்கொளு மயில்வீரா

சீதர னயனிமை யோர் புயங்கசு
லாதிப ரிருடிகள் யாவ ரும்பணி
சீர்பர வியதிரு வாவி னன்குடி முருகோனே. (3)

# திருவேரகம்.

## குறிப்பு.

தானத்தன தானன தானன
தானத்தன தானன தானன
தானத்தன தானன தானன—தனதான

ஏதித்தனை வாதெளி யேன்முறை
காதிற்புக ஷேயிலை யோபிற
ரேசிப்பல கூறிடு மாறெனை விடலாமோ

ஏழைக்குரு காதது பாதக
மேதூர்க்கலி காலசு பாவமி
தேனுத்தம தேவதை காரண மெனசாமீ

யாதித்தனி நாயக நீசெயல்
சோதிக்கவொ ணாதினி மேலென
தாபத்தையெ லாமுட னேயெழு பரியூர்தே

ராதித்தன்மு னேபனி போலய
லோடப்பணி நீடிய தீவினை
யாசைக்குள்வி ழாமல்வி வேகம தருள்வாயே

போதித்தசி வாகம நூல்வழி
சாதித்தத போதனர் மானத
பூசைக்குரி யாய்பரி பூரண சுகுணாளா

பூவிற்பொலி நாதனை வேலைவி
சாரித்தனை யான்மரு ளாமிருள்
போகச்சிறை யூடுந டாவிய புகழ்மேலோய்

சோதித்திரி சூலக பாலவி
பூதித்தட மார்பக ஞானசொ
ரூபப்பெரு மான்மகிழ் தேசிக னெனவேநேர்

சோணைப்புய லான்மயின் மாதரு
நாணப்புது நாடக மேபயில்
சோலைத்திரு வேரக மேவிய முருகோனே(4)

# ஸ்ரீ குன்றுதோறாடல்.

:o:

## குழிப்பு.

தந்ததா னாதனன தானதன தானதன
தந்ததா னாதனன தானதன தானதன
தந்ததா னாதனன தானதன தானதன — தனதானா

முந்துகா மாதிமுழு மோசவிப ரீதவலை
வந்துமேன் மேலுலவு பாசவுவ ராழிதனின்
முங்கியே மீளவழி யேதுமுண ராநிலை தளர்வேனோ

முன்பினா லோசனைசெ யாமலுட னேயுனது
செம்பொனே போலுமிரு பாதமல ராகியதொர்
மொய்ம்புகூர் தோணிதரு வாய்பருவ காலமிது சலியாதே

சந்துதா ளாயுலைய வீசியிகல் பாய்தவள
தந்திபூர் வோனதுத போபலகு மாரிபுணர்
கந்தநா தாதடைப டாதபல பூதகண தளவீரா

கண்களீ ராறுடைய காரணகு காவுசித
கங்கைபா லாகடின சூரகுல கோபஜெய
கங்கணா தேவகவி வாணர்கள்ப ராவுகன கொலுராயா

நந்துநீ ருடுகதிர் தாவமுதிர் சூல்வயிறு
நொந்துமா றுதலறி யீனுமணி வானுடிவு
நந்தவே சூழ்சரவ ணோதயவ னேகபிர பலதூயா

நம்பினோர் மானததி யான்வடி வாயுறையு
மெம்பிரா னேயுலக ஜீவபரி பாலனந
யந்தகோ லாகலச டானனப டீரபரி மளதேகா

கொந்துவார் தேனிடைவி டாமலய லேயொழுகு
பைங்குரா நீழலினு மேவி மகிழ் வாய்வளர்கு
ளந்தைவே லாபழைய வேதமுடி மீதுநட மிடுவாழ்வே

கொண்டறும் சோலைசெறி சாரல்களெ லாமருவி
வண்டறு மாலையென வேயசைய மேன்மைதிகழ்
குன்றுதோ றாடியவு லாசகுணா பரண முருகோனே (5)

# பழமுதிர்சோலை.

---:o:---

## குறிப்பு.

தனதனதான தனத்தன தானன
தனதனதான தனத்தன தானன
தனதனதான தனத்தன தானன—தனதான

வழிவழிமூட ரெனத்திரி வோர்களு
முனதொருநாம நினைக்கினு மோதினு
மதியினராகி யுயர்ச்சியை மேவுவ தியல்போநான்

வரவரவாடி மலைத்திட நீவிடு
வதுசரியான தலச்சிறி தாயினு
மனதிளகாம லிருக்கிற காரண மெதினுலோ

விழியிணையாறு படைத்தனை யேயென
துடலில்வியாதி தனைத்தெரி யாதுள
விவரமியாது தமிழ்த்துதி காதினு ழைபாதோ

விவிதகிலேச மிணிச்சகி யேனிது
தருணமயூர வயப்பரி மீதினில்
விரைவுடனேறி யடுத்தெனை யாளுதி முனியாதே

யழிவறுஞான விளக்கொளி யேயறி
வரியவிநோத மகத்வவ கோசர
வருவுருவாய முதற்பொரு ளேபிர ணவவாழ்வே

யடியர்தியான தவப்பய னேயுமை
யவள்கைகுலாவு சருக்கரை யேதனி
யமிர்தசொரூப ரசக்கனி யேவிளை தருதேனே

பழிதொடராத குணக்கட லேரக
சியசிவயோக முயற்சியி னுலெழு
பரமசுகாநு பவத்தெளி வேயிமை யவர்கோவே

பகலிரவார்வ மிகுத்தக லாதர
மகளிர்கள்பாடி நடித்திட வேவளர்
பழமுதிர்சோலை மலைக்கரு ணைக்கர முருகோனே. (6)

---

# ஸ்ரீ சிவகிரி.

## குறிப்பு.

*தத்தத்தன தத்தத் தனதன*
*தத்தத்தன தத்தத் தனதன*
*தத்தத்தன தத்தத் தனதன—தனதானா*

இட்டப்படி கட்டித் தழுவித
ழிற்பற்பதி வட்டத் தனநெரு
டிக்கைத்தொழின் மெத்தச் சொருசயல் விலகாதே

யெத்திக்கினு நிற்கொப் பிலையினி
வெட்கத்தைவி டுத்துச் சுகியென
வெத்திப்பல சொத்துக் களிலேயு மடியோடே

தட்டத்தகு கெட்டித் தெரிவைய
ரொட்டுக்குள கப்பட் டியல்வழி
தப்பிப்பிர மித்துப் பகலிர வுழலாமே

சற்பத்தரி னத்துப் பழகியு
னைப்புத்தியி ருத்தித் தொழுவினை
தத்துத்தவிர் வித்துத் திருவருள் புரிவாயே

மட்டற்றம தத்துக் கயமுக
துட்டப்பகை வற்செற் றிமையவர்
வர்க்கத்தையி ரக்ஷித் திடவரு மொருகூரா

மத்தத்தையெ ருக்கைச் சிறுபிறை
யைக்கொக்கிற கைப்பச் சறுகினை
வைத்திட்டமு டித்தற் பரனது சுகுமாரா

கட்டச்சக விச்சைத் தொடர்பற
நிட்டைத்தல மெட்டித் தவநடை
கற்றுத்தெளி சித்தர்க் கினிதெதி ருபகாரா

கற்பத்துநெ ருக்கத் தினுநிலை
பெற்றுப்பொலி வுற்றுத் தழைதரு
கற்றைக்கிர ணப்பொற் சிவகிரி முருகோனே. (7)

கந்தப்புகழ் முற்றிற்று.



உ

ஸ்ரீ தண்டபாணி துணை.

# பழநிப் பதிகம்.

———:o:———

## ஆசிரியவிருத்தம்.

மணிகொண்ட கனகதட மகுடபந் தியுமெழில் வயங்குஷண் முககமலமும்
வளர்கருணை பொழிவிழியு மிளநகையு முதுமறையின் மதுவொழுகு குமுதவாயுந்
திணிகொண்ட பனிரண்டு தோளுமென் றாளுஞ் சிலம்பொலி யலம்புதாளுந்
திரள்புனித கரமுமக லுரமுமிடு கவசமுஞ் சேவற் பெருந்துவசமுங்
கணிகொண்ட வயிலுநட மயிலுமணி வெயிலுமிரு கன்னியர்க டின்னுமொயிலுங்
கண்டுமன மண்டுதுயர் விண்டுனது தொண்டுநான் கனிவினொடு பணியவருள்வாய்
பணிகொண்ட கண்டகர் பயங்கொண்ட வண்டரைப் பரிவுகொண் டாண்டதேவே
பழகுமங் களகீத முழவுகண் டுயிலாத பழநியம் பதிநாதனே. (1)

அருமைபெறு கருமமுத லாயபயிர் காயவநி யாயநெடு மாயமொடுவந்
தடர்காம வெங்கோடை சுடவாடி நொந்தேனை யம்போரு கம்போலுநின்
றிருவடி நிழற்கீ ழிருத்திக் கருத்தைத் திருத்தித் தழைத்தவருளே
செய்யவிது நலசமய மையமதி தவழிமய சிமயமினி தீன்றெடுத்த
தருணகய பரமசுந் தரிகுமா ராவீர சமரமர கதமயூரா
சலனபவ மலரகித தாரக சொரூபா சதானந்த சுகுணதீபா
பருவமழை மருவநிமிர் பருமணிக் கனகப் பசுங்கதி ரரங்கமெங்கும்
பழகுமங் களகீத முழவுகண் டுயிலாத பழநியம் பதிநாதனே. (2)

வஞ்சமத மானகன குஞ்சரம கோரசின வரிவேங்கை விரிதீங்கையே
வலிதுபுரி யுங்காம மலையரவ கங்கார வண்டரர கண்டரவங்
குஞ்சரிய மோகமெனு மஞ்சனவ ராகந் துவேடப்ர சண்டமேதி
தொடரிடம் பக்காடி நடனசங் கற்பகுண துட்டமட் டிக்குரங்கு
சஞ்சலவு லோபசர பஞ்சமர்வி டாதுகுடி தங்குபுா சாடவிக்குட்
சற்றுமணு காமலுனை முற்றுமினி தாகநினை தன்மைதமி யேற்குதவுவாய்
பஞ்சமுக வரனுமுதிர் கஞ்சமொளிர் பரனுமெதிர் பரவவரு குரவவெங்கும்
பழகுமங் களகீத முழவுகண் டுயிலாத பழநியம் பதிநாதனே. (3)

இவைதரும மிவைபாவ மென்வுலக நடைநூலி னியல்சிறி தறிந்திருந்து
மெண்ணாத லைந்துவீண் புண்ணாவ தன்றியிங் கென்மாய வன்மனப்பேய்
நவைதவிரு மோனமுழு ஞானவரு ளானதொரு நாளேனு நாடவிலையே
நாணிதற் கென்செய்கு வேனினிச் சென்றுய்யு நல்லவழி சொல்லவருவாய்
கவளமத களிறெலாந் திவளருவி நிறைகுலாங் கணிதரள மணிநிலவினுற்
காமனயி ராவதம தாமெனவு லாவுமுது கானல்வரை யேனல்காக்கும்
பவளவிதழ் வநிதைபுணர் பரிமளப டீரபுய பாரகெம் பீரவரதா
பழகுமங் களகீத முழவுகண் டுயிலாத பழநியம் பதிநாதனே. (4)

வாடிமுனி வருமஞ்ச லூடிவெகு விதவஞ்ச மாயைபுரி கிரவுஞ்சமால்
வரைதனினு நிலைமைபெறு திரைதனினு மெனதுசிறு மனவல்ல லெனவல்லதோ
நாடியொரு கோடிமுறை நான்சொற்று மேன்சற்று நவியுமி தகற்றனிலைநீ
நம்பினே னைக்கயவர் கும்பினூ டிட்டிடுத னன்மையோ தன்மையோக
வீடினிது கூடிட விரும்புன தரும்புனித மெய்யடிய ரொடுசேர்த்துவாய்
வேதமுடி வேபஞ்ச பூதவடி வேகஞ்ச மென்கைகுவி யக்குழைந்து
பாடியனு தினமன்பு நீடிநினை பவர்முன்பு பரிவினெதிர் துரியவாழ்வே
பழகுமங் களகீத முழவுகண் டுயிலாத பழநியம் பதிநாதனே. (5)

தடமடுவி னிடையீண்டி மடவினரு ரெறிதூண்டி றனிலுளதோர் சுவைவேண்டியே
தாவுகிளி கெடலோர்ந்து மாவுணவி தெனநேர்ந்து தானுமழி மீனுணர்வுபோற்
றிடமகுட முடிபெற்ற வடலரசர் முதலுற்ற திருவினரு நிலைமையற்ற
சிற்றின்ப விடமுண்டு பற்றின்றி மருள்கொண்டு செத்திங்கு மடிதல்கண்டும்
நடனமன மதைநாடி விடலரிய சதகோடி நவைமூடி நெடிதுவாடி
நையுதே வீம்புபல செய்யுதே நாண்கவல னன்றேவு னடிமையன்றோ
படலவிரு ளுடலமொடு படருநம னடருமுன் பாதுகாத் தருளவருவாய்
பழகுமங் களகீத முழவுகண் டுயிலாத பழநியம் பதிநாதனே. (6)

மாசைவளர் வித்துநுரை யோசையொடு மொய்த்ததிரை வாரிபுனை பாரிடமெலாம்
வாவிவான் றிசைபிற வுலாவிமீண் டசைவுற மனப்பெண் டணைச்சுழற்று
மாசைவிவ காரப்ப சாசையதி தூரத் தகற்றவொரு வகையில்லையோ
வையகோ வகனெடிய வெய்யகோ வினையடிய னுற்றறிது தேற்றவருவாய்
கேசவனு மயனுமணி வாசவனு மினிதுபணி கிரணசர ணாரவிந்த
கேயூர புயபார மாயூர ஜயவீர கிருபைப்ர பலவுதார
பாசபவ மோசனகு கேசவுப தேசவுற் பனவரத வனவரதமும்
பழகுமங் களகீத முழவுகண் டுயிலாத பழநியம் பதிநாதனே. (7)

தடைபடா துளங்கியதி யிடைவிடா தியல்புவிதி தவறிடா தழகொழுகுமுத்
தமிழ்மாலை யிமிழ்வேலை தந்தபத முந்தமுத சாரமென வினிதியற்றி
நடைதவா விபுதர்மலை விடைபவா னுலகைநிலை நாட்டுனது தோட்டிரட்கே
நனிபுனைந் துணைநின்று தணிநினைந் தெனையின்று காணுணர வருள்புரிகுவாய்
விடையகா மிகள்வஞ்ச முடையகா ரிருணெஞ்ச மிசையென்று மிசைகின்றிலா
விமலபரி புரசரண கமலகுரு பரவிரண வெங்கிரிமு னங்கிரியவேற்
படைநடா வியசேந்த மிடைசடா தரசாந்த பத்தர்புகழ் முத்தவெங்கும்
பழகுமங் களகீத முழவுகண் டுயிலாத பழநியம் பதிநாதனே. (8)

சரணமென வணுகுமெனை மரணபவ துரிதவினை தனிலினி யழுத்திடினுனைச்
சற்றுமக லாதுபழி சுற்றுமிக லேதுமொழி தளிநறவ நளினமெனுமுன்
கிரணபத சேவையருள் கரணவிப ரீதவிருள் கெழுமாத முழுமாதவக்
கிழவருள மிசையிலகு குழகவதிர் தலினுலகு கிழியவறி வழியமுனியா [சூழ்
முரணமர் தொடங்கவுணர் திரண்டு நடுங்கவிணர் மொய்த்தவளை மைத்தொடையல்
முடிவரர் சுவர்க்கநிலை குடிவர வெடுத்தவிலை முனைவேல வனைகோலவா
பரணநெடு மார்பநய பிரணவசொ ரூபசெய பரமவுயர் கிரமவகையிற்
பழகுமங் களகீத முழவுகண் டுயிலாத பழநியம் பதிநாதனே. (9)

இதுவரையு முயர்போத மதுசிறிது முதியாத வேழையேன் பிழைமதியா
லெப்பவ மிழைத்துறினு மப்பவ மனைத்துமினு மிரவிமுன் விரவிமம்போற் [றங்
கதுமென விடைந்தொழிய முதுவர்தொழு நின்செழிய காட்சிதந் தென்னைமுற்
காப்பதுன் பரமைய நீப்பரும் புனல்வெய்ய கார்ப்பெருந் தொகுதி பெய்ய
மதரவமு தொழுகுகலை விதுவுலவு சிகரமலை மையிலொரு கையிலேந்தி
மன்றநிறை பசுவுய்ய நின்றவிறை மகிழ்துய்ய மருகதிரு முருகசெய்ய
பதுமவுரை பொருளென்று சதுமுகனை மெலவன்று பணிகொண்ட பகவதகவிற்
பழகுமங் களகீத முழவுகண் டுயிலாத பழநியம் பதிநாதனே. (10)

பழநிப்பதிகம்.

முற்றிற்று.





உ

முருகன் றுணை.

# குமரகுருபதிகம்.

## இரட்டையாசிரிய விருத்தம்,

பூங்கதிர் விரிக்குமதி தாங்குசிக ரப்பெரிய பொன்மலையி லிம்மெனவிழும்
புனனதி கறுத்தநிற வினமணி கொழித்தசெயல் போற்கவுண் மதத்தருவியின்
பாங்கர்வரி வண்டின்கு ழாங்கள்சுதி கொண்டிசை பகர்ந்துபுர ளும்புகர்முகப்
பஞ்சகர குலநளின செஞ்சரண மவுனகண பதிசகோ தரவேலவா
மாங்குயிலை வென்ற மொழி யோங்குகுன கும்பமுலை மாழையொண் கட்பவளவாய்
மஞ்சரி நெடுங்குழற் குஞ்சரி மகிழ்ந்துநித மருவுமங் களநாயகா
தேங்கமழ் தருங் கங்கை வேணியற் கினியபொருள் செப்புமெய்ஞ் ஞானவடிவே
செயமிகுத் துலவுதிரு மயில்வயப் பரியில்வரு சிவகிரிக் குமரகுருவே. (1)

பற்பல கதிர்த்திர ளெனப்பரு மணிச்சுடர் பரப்புமகு டத் தினழகும்
பத்தர்மகி ழக்கருணை வைத்தினிது பார்க்கின்ற பத்மநய னத்தினழகும்
உற்பன மறைப்பொருளை நற்றமிழ் முனிக்குமு ணுணர்த்துசெவ் வாயினழகும்
ஒழுகமிர்த நயகிரண முழுமதியு மனநாணு மோராறு வதனவழகும்
பொற்பருவ தத்தினைநி கர்த்துவளர் பன்னிரு புயத்தினழ குந்துலங்கிப்
பொங்குவெண் ணீற்றினழ குங்கண்டு தமியேன் புகழ்ந்துதொழ வரமுதவுவாய்
சிற்பரச தானந்த நிட்களநி ராலம்ப திவ்யசுக பரிபூரணா
செயமிகுத் துலவுதிரு மயில்வயப் பரியில்வரு சிவகிரிக் குமரகுருவே. (2)

வாசமலர் வகைசூடி நேசமுட னிசைபாடி வளர்கொங்கை யதனைமூடி
வஞ்சனைந யம்பேசி விஞ்சுகள பம்பூசி வளையணி கரங்கள்வீசி
யாசைமுக மதுகோட்டி மோசவரி விழிகாட்டி யற்பவின் பத்தையூட்டி
யடைவாக சுககந்த பொடிதூவி வெகுசொந்த மப்பொழுது செய்யுமந்த
வேசையர்த மயல்போக்கி மாசுடைய பிணிநீக்கி மேவுநின் கருணைதேக்கி
மெய்யறிவு தந்தென்னை யாளுதற் கிதுநல்ல வேளையுனை யேநம்பினேன்
றேசுதிகழ் சரவணத டாகத்து தித்தருள்வி சித்ரப்ர ணவசொரூபா
செயமிகுத் துலவுதிரு மயில்வயப் பரியில்வரு சிவகிரிக் குமரகுருவே. (3)

நெடியசக் கரவரையு மிடியவெற் புகள்பலவு நெரியநித் திலவரிசைநீர்
நிறைதிரைக் கடல்சிதற முறைவிடுத் திரவிமதி நிலைவுமற் றுளமருளவே
படிபொறுத் திடுமரவு விடமுயிர்த் துளறியுடல் பதைபதைத் துழலமரநீள்
பறவையொத் திடவலய முறுதிசைக் கடகரிகள் பரதவித் தலறிவிழவே
வுடுவுமிற் றுதிரமகி முடியர்விக் கினமொழிய வுயர்முகிற் படலமதெலா
முடைபடக் கனபரத நடனமிட் டிகலிவிரை வொடுசமர்க் களமதனிலே
சிடுசிடுத் திடுமவுணர் படைதிடுக் கிடவுபய சிறையடித் தினியபுகழ்சேர்
செயமிகுத் துலவுதிரு மயில்வயப் பரியில்வரு சிவகிரிக் குமரகுருவே. (4)

கறுத்திடு விடத்தொடு மழற்சிகை பரப்பிய கடைக்கன லுதித்ததெனவே
கனப்பொரு களத்திடை யுழக்கிமூடு கிப்பரர் கனைச்சதுர் மருப்புகளினால்
வெறுத்தவர் திடுக்கிட வுரத்திடு பதத்தினின் மிதித்துடல் குழைத்துநனிபோர்
விளைத்தடரு முக்ரத வளக்கட களிற்றிறை விடுத்திடு புகப்புயமெலா
மிறுத்ததொ றுவக்குல நிரைத்திரள் பயப்பட விடித்துவருடித்தினுமநா
ளிடக்கொடு முடிப்பரு வதத்தினை மலர்க்கையி லெடுத்தவல வர்க்குமருகா
சிறுத்திடு மனத்துய ரகற்றிநய சற்குண திடத்தினை யெனக்குதவுவாய்.
செயமிகுத் துலவுதிரு மயில்வயப் பரியில்வரு சிவகிரிக் குமரகுருவே. (5)

பரவுமிசை வரிவண்டு விரைகமழு மதுவுண்டு பயிலுமென் மலர்கொண்டுநின்
பங்கய பதங்களி லணிந்தினிய செந்தமிழ் பகர்ந்துனை வலம்புரிந்து
சரவணப வாபரா பரவடிவ மேசரா சரமான கருணாகரா
சதுர்வேத பூரணா முதுஞான காரணா சமரகே தனவாரணா
அரகரகு காநீதி வரதன்மரு காசோதி யாதியே யெனவோதியே
யநுதினமு மெனதுதரு மனசையொரு வழிநிறுவி யடியேன் றுதிப்பதற்குத்
தெருளது கொடுத்துவெம் பருவரல் கெடுத்துளந் தேற்றிவினை மாற்றியாள்வாய்
செயமிகுத் துலவுதிரு மயில்வயப் பரியில்வரு சிவகிரிக் குமரகுருவே. (6)

மாருத பேராசை வேரோடி நீள்பாச வனமதின் முளைத்தெழுந்து
வளர்பெண்டு பிள்ளைக ளெனுங்கவர் விரித்தறிவு வண்டழைக ளைச்சொரிந்து
வேறான சுற்றமாம் பறவைக் குழாங்கட்கு மேவுமிட மாகிநின்று
வெய்யகா மாதிமலர் விரவியுறு பாவநறை வீசிமத மாங்கனிபழுத்
தாருத கவலைப்ர சண்டவெங் காற்றினா லலையுமிவ் வாழ்வாமர
மதுகூற்றெ னுந்தச்ச னார்கைப்ப டாமுனுன தடியிணை கொடுத்தென்னையாள்
சேருடு குங்குமக் களபமணி பூண்முலைத் தெய்வகுஞ் சரிமணாளா
செயமிகுத் துலவுதிரு மயில்வயப் பரியில்வரு சிவகிரிக் குமரகுருவே. (7)

அறனது புரிந்தென்ன மறைமொழி தெரிந்தென்ன வணிபுகழ் விரிந்தென்னநூ
ருகமங் கற்றென்ன யோகமும் பெற்றென்ன வரியபிணி யற்றென்னசீ
ருறுதவ முடித்தென்ன முறைபல படித்தென்ன வுனதருளை யடையாதவர்க்
குறுதியிலை யிம்மையினு மறுமையினு மன்னுபல வொன்றுமிலை யாதலாலென்
வறுமைகுற் றந்தீர்த்து நிறையருட் கண்பார்த்து மனசைத்தி ருத்திநல்ல
வழிகாட்டி யென்னைநீ யாளுதற் கிதுசமய மவுனசர வண பவகுகா
திறலவுணர் படையன்று முறியமுனி வொடுசென்று செருவினின் முடுக்கிவென்று
செயமிகுத் துலவுதிரு மயில்வயப் பரியில்வரு சிவகிரிக் குமர குருவே. (8)

என்னென்ன விதமாக முன்னின்று சொல்லிமுறை யிட்டபோ தினுமேழைமே
லெள்ளளவு கிருபையு மிலாததே துன்மன மிரும்போ திரண்டகல்லோ
அன்னையே சிறுமதலை தன்முகம் பாராம லகலத் துரத்திவிட்டா
லாதரிப் பவர்களெவர் பூதலத் தினிலினிய வமுதகவி மாலைசூட்டி
உன்னையே தொழுமடிமை தன்னைநீ நழுவவிடி லுன்னையல் லாமல்வேறே
ருதவியுண் டோபல வுணர்த்தலென் னேயெனை யுவந்தாள்வ துனதுகடனாற்
றென்னர்கோன் கன்மச்சு ரங்கூனிரண்டையுந் தீர்த்தருள்செய் கார்த்திகேயா
செயமிகுத் துலவுதிரு மயில்வயப் பரியில்வரு சிவகிரிக் குமரகுருவே. (9)

ஆரணனு மாகிநெடு நாரணனு மாகியுய ரமரர்புக ழுரனுமாகி
யாதியாய் நீதியாய்ப் பாதியா யொன்று யனாதிப்ப ரஞ்சோதியாய்த்
தாரணிச லங்கனல கோரவளி விண்ணெனச் சாற்றுமைம் பூதங்களாய்ச்
சத்தியாய்ச் சித்தியாய் நித்தியா னந்தவெளி தானாகி மோனமாகிக்
காரணக் கருவாகி யருவாகி யுருவாய்க் கனிந்தபே ரருளுமாகிக்
கதியாகி விதியாகி மதியாகி யெங்குங் கலந்தவே தாந்தவாழ்வே
சீரணி யுலாசபரி பூரணம னோகரா சிறியேனை யடிமை கொள்வாய்
செயமிகுத் துலவுதிரு மயில்வயப் பரியில்வரு சிவகிரிக் குமரகுருவே (10)

சாதிபல பேதமுறை யாகிவெகு தூரமுஞ் சமீபமா யணுவிலணுவாய்த்
தற்பரமு மாகிவள ருற்பனமு மாகியறு சமயங்க ளுக்குமெட்டா
நாதமய மாகியழி யாதபே ரின்பசுக ஞானப்ர காசமாகி
நாலான வேதத்தின் மேலான பொருளாகி நட்பினொடு பகையுமாகி
மாதவமு மாகிமனு நீதபல வாகிமும் மலபாச விருளகற்ற
வருமணிவி ளக்காகி விரிகிரண மதியிரவி வடிவாகி நின்றமுதலே
சீதமல ரனையநின் பாதநித மறவாத சிறியேனை யடிமைகொள்வாய்
செயமிகுத் துலவுதிரு மயில்வயப் பரியில்வரு சிவகிரிக் குமரகுருவே. (11)

குமரகுரு பதிகம் முற்றிற்று.



உ

குருபரன்றுணை

# சிவகிரிப் பதிகம்.

———:o:———

## பதினான்குசீர்க் கழிநெடிலடி யாசிரியவிருத்தம்.



சுடர்மணி யடுத்த கடல்புடை யுடுத்த தொல்புவி தனில்யமன் விடுத்த
தூதையே வன்னக் கோதைமா ரென்னத் துணிந்துமற் றவர்வளர் சொன்னக்
குடமுலை யிடையிற் படரிரு துடையிற் கொழுநறு மலர்செறி சடையிற்
குலவிய மணத்திற் கலவிசெய் குணத்திற் குலுங்குபு புலம்புகங் கணத்திற்
றிடநறை மொழியிற் றடவரி விழியிற் றீக்கடி தடவிழு குழியிற்
சிந்தையைப் போக்கி நிந்தையைத் தேக்கித் தியங்குறு தியக்கெலா நீக்கி
யடல்கெழு பத்தி யுடனுயர் சித்தி யளித்தெனை யாண்டருண் முத்தி
யருவிகள் பலசூழ் தருசிவ கிரிவாழ் ஐயனே தெய்வநா யகனே (1)

தனைநிகர் பாவி வினையொடு மேவித் தலைத்தலை குரங்கெனத் தாவித்
தவநிலை துறந்து பவநடைசிறந்து சாதன நான்கையு மறந்து
மனைமுத லாய புனைதனி லோய வாஞ்சைவைத் துழலு மென்மாய
மனத்தைநீ திருத்திக் கனத்ததூய் விருத்தி வாய்ப்பநல் லினத்திடை யிருத்தி
யுனைநிதம் போற்று நினைவுநன் காற்று முணர்வு மெற் கருள்கதி யேற்று
முயர்குண நிதியே யயர்வறு துதியே யுறுசெழுங் கருணைவாரிதியே
யணையுமை பாலா முனைவடிவேலா வடியவர் தமக்கனு கூலா
வருவிகள் பல்சூழ் தருசிவ கிரிவாழ் ஐயனே தெய்வநா யகனே. (2)

மூடரை வணங்கிக் கேடரை யிணங்கி மூதுணர் வினரொடு பிணங்கி
முயனெறி தாழ்ந்து மயனெறி வீழ்ந்து முடிவறு பவக்கட லாழ்ந்து
வாடலை விடுத்து நீடல ரெடுத்து மணமெழ மாலிகை தொடுத்து
வசையினின் பாத மிசைகயங் காத வகையணிந் துருகிமெய்ப் போத
வீடடை செல்வப் பீடருள் சொல்வ வேறினியாவுள வில்வ
வேணியர் மிகவே பேணிய மகவே வெம்பணி நெளி நெளிந் துகவே
யாடல்செய் பரியோய் பாடல்கொள் பெரியோ யாரண முந்தொடர் வரியோ
யருவிகள் பலசூழ் தருசிவ கிரிவாழ் ஐயனே தெய்வநா யகனே. (3)

கருங்கொடி பருந்து பருங்கழு கருந்து காரிய விருந்துதீப் பொருந்து
கடும்பவக் காடு கெடும் புழுக் கூடு கக்கிசப் பொக்கிச வீடு
சுருங்கலின்மோக நெருங்குமி ராகந் தொகுமிட மென்னுமித் தேகஞ்
சோருமுன் னின்னைச் சேர்நெறி தன்னைச் சொலிக் கொடுத் தாண்டரு ளென்னை
மருங்கொளிர் செய்ய வளைநிதக் கழுவி மலர்களை யெறிந்தினி தாய
மாதரை விரும்பி மதக்கர விலங்கை மருகுறத் தள்ளிவாளையும் பெற்
றருங்கலை யெடுத்தங் காரவாரங் கொண் டணைதலி னணையர வரிபோன்
றருவிகள் பலசூழ் தருசிவ கிரிவாழ் ஐயனே தெய்வநா யகனே. (4)

தருமறா லெல்லை மருவிடா தொல்லை தழைந்தெழு சினங்கெட வில்லை
தாமத மென்ற காமமு நின்ற தாபமுஞ் சமர்புரி கின்ற
விருவினை யறியேன் றிருவருள் குறியே னெங்ஙன முய்வனோ சிறியே
னிவைபுனக் கழகா நவைகளிற் பழகா வியற்கைதந் தென்னையாள் குழகா
வரவுமை தழுவி வளர்பல மதனை வருத்துபு தருக்குழை தாங்கி
வண்டலையேந்திக் தொண்டகங் கவர்ந்து வசம்பணி மாவிடை நடத்தி
யரவமேற் கொடுமுத் தாரமுங் காட்டி யடுத்திடு மலைவளைத் தரன்போன்
றருவிகள் பலசூழ் தருசிவ கிரிவாழ் ஐயனே தெய்வநா யகனே. (5)

பிரிவறுநேச மரிவையர் பாசம் பேசவொண் ணாததன் மோசம்
பிடித்திடில் யாரே படித்திடு நேரே பின்னடந் துய்வர்பேய்ப் போரே
பரிவென வொன்றோ பெரிதுள வன்றோ பாவியே னதிற்பட னன்றோ
பருவநா ளீது வருமமா காது பாதுகாத் திடத்தகை யேது
தெரியவே யிசைமா தினைமணத் தலினூற் செழிக்குமெண் கணிவருந் திறத்தாற்
றிரண்டவா ரணங்கள் செறிந்தொலிப் பதனாற் சென்றுகா வனத்திலே றுதலா
லரியதா மரைமே லாகவந்திடலா லகிலமு முதல்லா லயன்போன்
றருவிகள் பலசூழ் தருசிவ கிரிவாழ் ஐயனே தெய்வநா யகனே. (6)

தாங்கரும் பார மோங்ககங் காரஞ் சலமுதல் வினைசமு சாரத்
தருக்கினு ளந்தத் திருக்குநீள் பந்தத் தளைப்புகா துய்யநின் சந்தப்
பூங்கழ லருளொநீங்கலி றெருளே பூத்தவே தாந்தமெய்ப் பொருளோ
பூரணக் குருவே காரணக் கருவே புகலுரை கடந்தசித் துருவே
தேங்கரும் பெடுத்துத் திருந்தவண் டினமேற் செறித்துமென் பூவையு மேந்திக்
திகழ்கிளை நடத்தி மிகமதிக் கவிப்பிற் சென்றுலாய் தரக்கயல் காட்டி
யாங்ககன் றவரை யலைத்திடுந் திறத்தா லங்கச வேட்குமொப் பாகு
மருவிகள் பலசூழ் தருசிவ கிரிவாழ் ஐயனே தெய்வநா யகனே. (7)

வேர்பெரி தோடிச் சோர்வற நீடி விரிந்தமும் மலவிருண் மூடி
வீண்பகல் கழித்து மாண்பறி வழித்து மெலிவனே வினைமுழு தொழித்துப்
பார்புகழ் கனமுஞ் சீர்புனை மனமும் பத்திபு மளித்தனு தினமும்
பாதுகாப் பாயே சோதிவேற் சேயே பாவியேற் குறுதுணை நீயே
தேர்பரி யமரத் திரள்வலி யுடைத்தாய்ச் சினமரும் பச்சிலை தோன்றத்
திகிரிசெவ் வாளி சிறுவளை தடிகத் திகையெடுத் தெதிர்படு வலரை
யார்வம தொடுசென் றலைத்தலாற் செங்கோ லரசர்தம் படைக்குமொப் பாகு
மருவிகள் பலசூழ் தருசிவ கிரிவாழ் ஐயனே தெய்வநா யகனே. (8)

திக்கவ ரிடையே புக்கவர் நடையே சார்கிலா தனங்கவேள் படையே
தாக்கநொந் துருகி யேக்கமும் பெருகித் தழைபவக் கனலினுற் கருகிச்
சிக்கட ரீனத் துக்கமதான திரைப்படிந் துழல்வனே ஞானத்
திருவமு தூட்டிப் பொருள்வழி காட்டித் திருந்தவாண் டருள்புலை யோட்டி
யெக்கலை களும்பெற் றிறவினை யெறிந்தாந் கெதிர்மலங் காமையுந் தழுவி
யிலங்கிய தருக்காம் புலங்களை யடக்கி யிலைவிடுத் தனுதின முறைகொண்
டக்கரை மனத்தா டழுத்தலான் மவுனத் தருந்தவ முனிவரு மனைய
வருவிகள் பலசூழ் தருசிவ கிரிவாழ் ஐயனே தெய்வநா யகனே. (9)

மதிவலர் போலே முதிருரை யாலே மாத்திரம் பிதற்றிமேன் மேலே
வஞ்சக விதமு நெஞ்சக மதமு மன்னினே னலதுனை நிதமுந்
துதிபுரி கிலனே கதியெனு நிலனே தோய்வதெங் ஙனமினி நலனே
தொடர்துணி பேற்றி யிடர்பிணி மாற்றிச் சுகங்கொடுத் தருண்மலர் தூற்றி
விதிமுனி வரரு நிதிவளர் சுரரு மேதகு வித்தியா தரரு
மிகப்பணி பாதா மகத்துவ வேதா வெஞ்சிறை விடுத்தமெய்ப் போதா
வதிர்திரை செழிக்கும் பொதியிருள் கழிக்கு மணிநவ மணிநிரை கொழிக்கு
மருவிகள் பலசூழ் தருசிவ கிரிவாழ் ஐயனே தெய்வநா யகனே. (10)

சிவகிரிப்பதிகம்

முற்றிற்று.





உ

கந்தநாதன்றுணை.

# திருச்செந்திற் பதிகம்.

வாங்குமிடை யேங்கு மென நூங்குபுனை கோங்குமுகை மலர வாட்டி
யாங்குவிம்மி வீங்குமுலை தாங்குபவர் நீங்குமய லினைத்து மின்னே
நீங்குமொரு பாங்குதனை யீங்குதவு தூங்குமிசை ஞிமிறாண் டார்க்குந்
தேங்குலவு பூங்குவளை தேங்குவய லோங்குதிருச் செந்தி லானே. (1)

வேற்றுமையி னூற்றுறைகள் சாற்றுதுணி வாற்றுணைநின்மெய்த்தாட் கேதொண்
டாற்றுபவ ரேற்றுவரு கூற்றுவலி மாற்றுவர்தெள் ளமுதத் தாமரை
யூற்றுகதிர் தூற்றுசிறு கீற்றுமதி தோற்றுசடை யுடையோர் பாலா
தேற்றுபொரு ளேற்றுவினை பாற்றுதவர் போற்றுதிருச் செந்தி லானே. (2)

மூந்துசிமிழ் பந்துகிரி பிந்துறமு னிந்துவளர் முலையார் பாற்பட்
டந்துகளி னந்துமெலி வொருந்துளல மந்துசலித் தலையாவண்ணந்
தந்துதுய ரந்துடைமலிந் துசெறி கொந்துவிரி தண்கா வெங்குஞ்
சிந்துகதி ருந்துகலை யிந்துமுகில் வந்துதவழ் செந்திலானே. (3)

ஈறுபடு காறுமொரு சோறுமுண வேறுயிர்கட் கீயசர் யாற்போய்
வீறுபல நூறுதுதி கூறுபுநா டோறுமியான் மெலிகு வேனோ
வூறுகலி மாறுவகை பேறுதவு நாறுபொழி லொளிர் வண்டார்ப்பத்
தேறுமலர் தூறுமது வாறுவய லேற்றிருச் செந்தி லானே. (4)

பாந்தநெறி வீந்தமன மாந்தரென லாந்தடியர் யாற்சென் றேற்பப்
போந்தகலி நீந்தவர மீந்தருள்செய் கூந்தன்முகில் பொருவும் வள்ளி
காந்தவயி லேந்தமரர் வேந்தவசு ராந்தகமை கனிவி னூர்ந்த
சேந்தகுண சாந்தமுதிர் பூந்தமிழ்கு லாந்தகைகொள் செந்தி லானே. (5)

சூலமணி காலனெறி கோலவலை யோலமுதிர் தூய வேலை
யாலநறு நீலமலர் சேலமுது போலவிழி யமைந்த மாதர்
மாலகல நூலறிவு சாலவருண் மூலமறை வழுத்து ஞான
சீலவனு கூலவுமை பாலவடி வேலதிருச் செந்திலானே. (6)

பையமத னெய்யவிரு சையமுலை நொய்யவிடை பவளச் செவ்வாய்த்
தையலர்கள் குய்யமதின் மையலொடு நையவினித் தருமோ நாயேன
பொய்யகல வையமிசை யுய்யவருள் செய்யமயிற் புரவி வேற்கைச்
செய்யமுரு கையவளர் மெய்யர்பணி துய்யதிருச் செந்தி லானே. (7)

கன்றல்புரி கின்றவினை வன்றளைகள் குன்றவெழு கதிரோற்கண்ட
தூன்றலென வின்றகல வென்றனுள நின்றறிவு துலக்கி யாள்வாய்
மன்றவள நன்றமர ரொன்றவிடை பின்றரிய வயவர்சூழச்
சென்றமரி லன்றவுணர் பொன்றநணி வென்றதிருச் செந்திலானே. (8)

ஆன்றுமலை போன்றுசிவை யூன்றுபெரு மூன்றுமயக் கான காட்டைச்
சூன்றுபொருள் சான்றுதமி யேன்றறவு தான்றுணியச் சொலியாண் மேன்மை
யேன்றுநறை கான்றுமுகில் கீன்றுகதி ரோன்றரகத் தெல்லை தாவித்
தேன்றுளிக ளூன்றுபய னீன்றுபொழி றோன்றுதிருச் செந்தி லானே. (9)

மேக்குமறை கோக்குமணி நாக்குரிசி லாக்குமல வீடாங்கூடு
மூக்குமுனை லாக்குறைவு நீக்குபுமெய் வாக்குதவி முற்றுங் காப்பா
யூக்குமலி தூக்குபல பாக்குணம தாக்குயில வொகர மாடத்
தேக்குநறை போக்குநறு மாக்குவளை நோக்குதிருச் செந்தி லானே. (10)

---

வாழி.

## ஏகபாதக்கட்டளைக் கலித்துறை.

மங்கலந் தானவ ரஞ்சித மானவ மன்னனந்தா
மங்கலந் தானவ ரஞ்சித மானவ மன்னனந்தா
மங்கலந் தானவ ரஞ்சித மானவ மன்னனந்தா
மங்கலந் தானவ ரஞ்சித மானவன் வாழியவே.

திருச்செந்திற்பதிகம்,

முற்றிற்று.



உ

வடிவேலன் துணை.

# பழநி நான்மணிமாலை.

கட்டளைக்கலித்துறை.

தபரஞ்சிலாக்ய விபுதர்பரவுந் தனிமுதலே
சுபரஞ்சிதம்பெறு மெய்ப்பொருளே யுயர்சுத்தமதா
னபரஞ்சிதம்புக ழன்பர்க்குதவு நயவருள்சே
ரபரஞ்சிவேழமுகனே நின்பாத மடைக்கலமே. (1)

இதுவுமது.

நீதிரிபும்பெறு பாவமுந்தொல்லைச் சிறுமையுமிப்
போதிரியும்படி நாளுங்கருணை புரிந்தருள்வ
மாதிரியம்பகன் வண்டினஞ்சூழ மலர்நிறைபூம்
பாதிரிவேழமுகவன் செந்தாமரைப் பாதங்களே. (2)

இதுவுமது.

வீசலைவேலை புடைசூழ்புவிதனில் வேளினது
பூசலைநீக்கு மறிந்தறியாமன்முற் போதுசெய்த
மாசலைவான துயர்தீர்க்குமொற்றை மருப்பருட்கட்
கோசலைவேழ முகவன்பொற்றாள்சிரங் கொண்டவர்க்கே. (3)

காப்பு—வெண்பா.

மணிமாலைக் கும்பதன வள்ளியன்பன் றன்னான்
மணிமாலைக் கின்பமிக வாழ்த்திப்—பணிவோர
கம்பகர வாரணமேற் காமுற் றிலங்குசெம்பொற்
கம்பகர வாரணமே காப்பு.

நூல்—வெண்பா.

நாதா வலங்கார நாயகா வின்னுமென்மேல்
வாதா வலங்கார வாணகையம்—போதார்
குழனிமலை தந்த குமரா வயல்சூழ்
பழனிமலை யாய்கடைக்கண் பார். (1)

### கலித்துறை.

பாரப்பருவ முலையார்மயலைப் பகைத்துநின்றாள்
சேரப்பருவ ரலைநீத்தெனக்கருள் செய்விடையை
பூரப்பருவ ரலையுண்டவற்குமொன் றோதியலங்
காரப்பருவ தமதிற்குலாவிய காவலனே. (2)

### விருத்தம்.

வலனேபுரிந்து மருக்குலவுமலர்கடவி விடையமதிற்
புலனேகாம ணிறுவிநின்றாள்போற்றித் தமியேன்பணிந்துநல்ல
பலனேபெறுதற் கருட்கடைக்கண்பார்த்துக் கவலைதீர்த்தாள்வாய்
கலனேர்குடிகொண் முலைக்குறத்திகணவா வடிவேற்கரத்தானே. (3)

### அகவல்.

தானேவலைப்படு மானேபோலக்
காருறளகத் தேனூறிளஞ்சொல்
விடந்திகழ்கருங்கண் மடந்தையர் கலவி
தனைமிகவிரும்பி யுனைநிதமறந்து
மதிதடுமாறி நிதிபலதேட
வொல்லெனவோடிவெம் புல்லரைப்பாடியு
மிழிவொடுதிரியுந் தொழில்பழகாம
லமிழ்தினுமதுரத் தமிழெனுமலர்கொண்
டுன்பதாம்புயத்தை யன்பினாற்போற்றிப்
புகழக்கருணை புரிவாய்
பகர்தற்கரிய பழமறைப்பொருளே. (4)

### வெண்பா.

பொருளிலங்கும் பத்தனத்தார் புன்மயனீக் கும்பத்
தருளிலங்கும் பத்தனத்தார் தம்மா—மருகனன்பாற்
பாடுபவர்க் கஞ்செல்வம் பாலிப்பா னைப்பணிவோர்
வாடுபவர்க் கஞ்செல் வரோ. (5)

### கலித்துறை.

செல்வரத்தானை மயிலாடுமாமலைத் தேவைமலர்ச்
செல்வரத்தானை யவுணர்படையைச் செறுத்துவென்ற
செல்வரத்தானை முருகனைப்போற்றல் செய்யார்நரகிற்
செல்வரத்தானை குவர்கெடுவாரித் திறநிசமே. (6)

### விருத்தம்.

மேகமெனுங்குழல் சிவிவகிர்ந்ததில் வேர்புனையிங்கித மானார்மா
மோகநெடுங்கட லூடுனதன்பனு மூழ்கிமனஞ்செயல் சோர்வேனோ
தேகபவந்தவிர் யோகர்வணங்கிய சேவடிதந்தெனை யாளாயோ
மாகநிறைந்தவி லேகரருந்துயர் மாறவிளங்கிய கோமானே. (7)

### அகவல்.

மானேர் வரிவிழி மடமங் கையர்தம்
ஊனே குடிகொண் டுறுகடி தடமெனுங்
கொடும்பவம் விளையுந் தடம்பனை யதனுள்
உலப்பரு விதிவலிக் கலப்பையின் வசமாய்த்
தாமத குணந்தரு காமமாங் கயிற்றிற்
கட்டுண் டடர்மட முட்பெருங் கோலால்
இடிபாட் டுழுபக டெனமதி தளர்ந்து
காறடு மாறிக் கதியினை யிழந்து
மிடையுமுற் பவச்சேற் றிடைகிடந் துழன்று
வீணே திரிந்தருள் பேறு தவர்காண்
மறைகளின் முடிமீ துறைபரஞ் சோதி
குரவணி திகழ்புய சரவண பவனிரு
பாதபங் கயத்தை யேதினந் துதித்து
வந்தனை புரிந்து மகிழ்மின்
சிந்தையி னினைந்தவை சித்தித் திடவே. (8)

### வெண்பா.

திடத்தருண மீதுவருந் தேவா வருள்செய்
திடத்தருண மீதுவருந் தேலென்—றிடர்ப்பிணிதீர்
வாமா விளங்குமரா மாலைபுரள் பொற்புயச்செல்
வாமா விளங்குமரா வா. (9)

### கலித்துறை.

வானத்தமர கனம்பணைசூழ்ந்த வையாபுரியாய்
வானத்தமர ரரசேநினைத்த வாமருகே
வானத்தமர முகின்மேனியான்மரு காமலர்போல்
வானத்தமர கதவல்லிபெற்றகண் மாமணியே. (10)

### விருத்தம்.

மணிமகுட வண்டர்சிவ தவமதுபு ரிந்தமுனி வரர்மவுனர் வந்து முறையே
பணியுமுரு கன்றனது திருவடியை யன்புகொடு பலதரநி னைந்து புகழ்வோ
ரணியுலகி லின்பமுற வெகுபொழுதி ருந்துதெளி வறிவினொடு பின்பு நமனார்
கணிதர்தமை வென்றினிய கருணைபெரு கும்பரம கதியினல னும்பெறுவ ரே. ()

### அகவல்.

பெறுபே றறிவெனு முறுபா கெறிந்து
பொங்குப தேசமா மங்குசந் துறந்து
கழிபெருங் காமங் கடுஞ்சின மயலெனும்
இழிவுடை மும்மதம் பொழிதர வுலக
பாசமா கியமுக படாத்தினி லமைந்து
தொடர்ந்திடு மெழுபவ விடங்கணி தாங்கி
மைதோய்ந் தடுதொழின் மறலிபோற் கறுத்து
நெய்தோய் வேலென நீண்டிரு குழையொடு
பொருதுமென் குமிழின் புறமறிந் தொதுங்கி
முழுக்கொலை களவு பழுத்தொளிர் தடங்கண்
மங்கைமார் புளகிதக் கொங்கைமால் வரையைக்
கண்டே நுகர்பொரு ளுண்டென விரும்பிச்
சார்பினிற் சென்றித ழூறலை யருந்தி
நயங்கெடு மல்குற் பயம்பினில் வீழ்ந்து
புத்தியு மருண்டு தத்தளித் துழன்று
தூணோர் கரதல மாணார் களிறென
வீணே கலங்கு மெய்ம்மதி யிலர்காண்
மிகத்தவ மியற்றிய வகத்திய முனிக்கொரு
பொருளினை யோதிய திருவருள் வாரிதி
வானவர் புகழத் தானவர் படைகளை
வென்றுமீண் டுளமகிழ்ந் தன்றுகோ பதிக்குத்
தணிவறு சுடரெறி மணிமுடி சூட்டிய
முருகன் சிவசண் முகசர வணபவன்
சங்கின முயிர்த்த தரளக் குப்பையைப்
பவளவாய்ச் செங்காற் பசியபொற் சூட்டு
நன்னிறத் தூவி யன்னமுங் குருகுந்

தஞ்சினை யாமென நெஞ்சினு ணினைந்து
வந்தடை கிடக்குஞ் சுந்தரச் செழுநீர்க்
கழனிகள் சூழ்ந்த பழனியங் கிரிவாழ்
போத சொரூப புனிதன் றனதிரு
பாதபங் கயத்தைப் பணிவீ ராயின்
அகில தலத்தினி லரும்பிணி யின்றிச்
சகல வெறுக்கையுந் தாம்பெற் றமர்ந்து
பின்பு சுவர்க்கப் பெருநக ரெய்தி
யங்குள போக மெலாமனு பவித்து
மாலோன் பிரமனும் வாழ்த்த
மேலாம் பதத்தினில் வீற்றிருப் பீரே. (12)

## வெண்பா.

பீரமரு மானலத்த பெட்புமுலை யம்பிகைசிங்
காரமரு மானலத்த கம்பொருதன்—சீரடியை
வந்தித்த வந்தவிர்வான் வாழ்த்துநர் மனத்துறப
யந்தித்த வந்தவிர்வா னால். (13)

## கலித்துறை.

ஆலத் திருக்கும ராவல்கு லுங்கொடி தானவிந்த்ர
சாலத் திருக்கும ராகமுஞ் சேர்பெண்க டம்மைவிட்டுச்
சீலத் திருக்கும ராமுரு காநெறி செப்புமறை
மூலத் திருக்கும ராவணி யாவென முன்னுநெஞ்சே. (14)

## விருத்தம்.

சேவினை வெறுத்து வேவினைச் செறுத்துச் செறிவிடத் தினுங்கறு கறுத்துச்
செவ்வரி பரந்து வெவ்வினை சுரந்து சித்தர்த மனத்தையுங் கரந்து
கோலமை தீட்டிக் காலனை வாட்டிக் குலவிய மதர்விழி காட்டிக்
கொண்டையு முடித்துச் செண்டது பிடித்துக் குயில்பொரு மினியசொற் படித்து
மாலைகள் வேய்ந்து மேலெழில் வாய்ந்து வரும்பட வார்தமைத் தோய்ந்து
மறந்தரு தீது பிறந்தலை யாது மகிழ்வுற வருள்செயப் போது
காலைக டோறுஞ் சோலையி லூறுங் கவ்வையாற் பயிர்வளர் மீறுங்
கழனிகள் சூழும் பழனியில் வாழுங் கர்த்தனே நித்யகா ரணனே. (15)

### அகவல்.

நேமிகள் புடைசூழ் பூமியின் மீதே
யன்னைதன் வயிற்றிற் றுன்னிய கருவாய்ப்
பகருமுந் நூறு பகல்சென் றதற்பின்
பிறந்துட னவ்வழி சிறந்திடு முறவோ
ரனையோ ரெடுத்துச் சேயெய்வாய் புகட்டி
மாதிடம் பெறவே சோதிடம் வினவி
மனமது மகிழத் தனவமிர் தருந்தித்
தவழ்ந்து நடந்து தான்விளை யாடி
யற்புத மழலைச் சொற்பல பயின்று
சிறுரொடு கூடி நறுமலர் சூடிக்
கலனுடை யணிந்து கலைசில தெரிந்து
வாலிப வயதாய் மதன்கணை தொடரக்
காமங் கனிந்து கலவியை நினைந்து
கொலைகுடி யிருந்த விலைமடந் தையர்த
மனைதொறும் புகுந்தவர் மயலிடை வீழ்ந்து
பொருள்புய வலிகன மருமைத னிளமையும்
வறிதே யிழந்து மதியினை மறந்து
சின்னாட் சன்னைகள் செய்தலைந் துழன்று
மூப்பினி லுயர்ந்து முக்கால் படைத்து
நரைத்துட றளர்ந்து நடுக்கமுற் றுல்கி
யிருமல் விளைப்புப் பொருமலா லுலைந்து
தாழ்வாய் வளைந்து போழ்வா யாகிப்
பொருந்திய வினையால் வருந்திடு மிந்தப்
பொய்யுடை வாழ்வை மெய்யென விரும்பி
யுனதடி யேனு முளமெலி யாம
லின்பநல் லறிவை யெனக்கருள் புரிந்தே
யனுதின மெனைநீ யாள்வாய்
மனுமுறை வழாத மௌனசற் குருவே. (16)

### வெண்பா.

வேலா வலையமன மின்னார்மா றீர்த்தருள்கூர்
வேலா வலையமன மின்னுசெங்கை—மாலும்
விழுத்தவரும் வள்ளிதலை மென்மலர்வந் தோனும்
வழுத்தவரும் வள்ளிதலை வா. (17)

### கலித்துறை.

தலைவ னமலை புதல்வன் பவளத் தடஞ்சடையின்
றலைவ னமலை யரற்குட் பொருள்சொலுஞ் சற்குருநி
தலைவ னமலை முலைவள்ளி யன்பன்பொற் றுண்மிசைக்கா
தலைவ னமலை வதுதீர வைத்துத் தவஞ்செய்நெஞ்சே. (18)

### விருத்தம்.

சேத னப்பொருட் டேட மறந்துநெஞ்
சேத னப்பொருட் டேசெலி னென்வரு
மாத ரச்சம வேலனை வாழ்த்தியா
மாத ரச்சம வாவைவிட் டுய்யவே. (19)

### அகவல்.

வேரிசூழ் பங்கய மென்முக மலர்ந்து
காரிதழ்க் குவளையங் கண்ணிணை விழித்து
நயமிகு நறவ வெயர்வது சொரிந்தங்
கெழுந்துள வள்ளைக் கொழுஞ்செவி குலுக்கி
யமுதமீ தூறிய குமுதவாய் பொருந்தித்
தண்ணுறு தரள வெண்ணகை திருந்திப்
புனனறுங் குமிழிக் கனதனம் படைத்து
வம்தடர் சைவலக் கொந்தள மலைய
நந்தெனுந் தூய கந்தர மார்பம
மற்றொரு பூங்கொடிச் சிற்றிடை யொசிமச்
சிறந்திடு சிறையனம் பறந்திரி தருமொலி
சிலம்பென விளங்க நலம்பெறு கணவர்தந்
தடம்புய மருவிய மடந்தையர் நிகர்க்கும்
வாவிசேர் சிவகிரி மேவிவாழ் குருபர
நாதவி னோதமெய்ப் போதசொ ரூபம

றுன்னுமிவ் வுலகினின் மன்னுபல் லுயிர்க்குங்
கடாக்ஷமுற் றுதவும் சடாக்ஷரப் பொருளே
தொடர்பவ துன்பக் கடலிடை வீழ்ந்து
கரைகா ணாமற் கலங்கி வருந்துமிந்
நாயேன் றனக்கு நல்வழி காட்டித்
தாழ்மனந் தேற்றி யூழ்வினை மாற்றி
நிதமுனைப் போற்றி நினைய
மதிகொடுத் தருள்வாய் வள்ளிமோ கனனே. (20)

வெண்பா.

மோகமட மாணார் முதுமயல்விட் டுய்யநெஞ்சே
மாகமட மாணார் மருகனிகழ்—வாகியமுப்
பாத கமலம் பவமிகந்தோர் பாலுறைவேள்
பாத கமலம் பணி. (21)

கலித்துறை.

கமலத் தனத்தன கந்தீர்த்த நாதன் கடற்றுயின்ற
வமலத் தனத்தன மென்கந் தரவள்ளி யன்பனன்பர்
விமலத் தனத்தன லார்புன் மயலில் விழார்வினைதங்
குமலத் தனத்தன ராலைசெல் லார்கதி கூடுவரே. (22)

விருத்தம்.

வரத்தானைப் புயல்வணன்செல் வரத்தானை மிகுந்தபுகழ் வளர்வே லானை
தரத்தானைக் குகனைமெய்ச்சுந் தரத்தானைக் கமலமெனத் தயங்கீ ராறு
கரத்தானைப் பிறைதவழ்சே கரத்தானைக் கிளையானைக் கருணை சேர்நேத்
திரத்தானைச் சடாக்ஷரமந் திரத்தானைப் பணிந்துவினை தீர்ப்பாய் நெஞ்சே. (23)

அகவல்.

சேணுறு பொரியரைத் தேமாங் கனியும்
பெட்புடை வருக்கையின் முட்புறக் கனியு
நிரம்பிய விரிதலை யரம்பைமென் கனியுந்
தாமே பழுத்துத் ததும்பிப் பொழிதரு
மம்மிது வேதன் மும்மத மாக
விரும்பிசை மிடற்றுச் சுரும்பின மணிகொடு
படர்ந்துள தோற்ற மிடங்கனி யாகச்

சோகவெம் மிடியெனும் பாகனை யெறிந்து
செழுங்கதிர்க் கற்றையஞ் சீகர மலைத்து
விடாப்பெரு நிறைமுக படாத்தினி லமைந்து
பூமக டன்களி றுமென விளங்கும்
வயல்சூழ் பழனி மலையில்வீற் றிருக்கு
மருமறைப் பொருளே யடியர் கண்மணியே
யின்பமே விளைந்த வினியசெங் கரும்பே
மலைத்தவின் னவர்வினை தொலைத்தநன் மருந்தே
துதிப்பவர் மனத்தினு ளுதிக்குமெய்ச் சுடரே
மருவுகுஞ் சரிக்கு வாய்த்ததெள் ளமுதே
தினமு முனது திருவருள் புரிந்து
தமியேன் கவலை தணிப்பாய்
கமழ்பூங் கடம்பணி கனகதிண் புயனே. (24)

வெண்பா.

புயலனைய மேனிப் புனிதன் படைக்குஞ்
செயலனைய மேனித் தியர்க்குந்—துயர்தவிர்த்த
தேவா சுகந்தந் திடம்புனைமார் பாமயின்மீ
தேவா சுகந்தந் திட. (25)

கலித்துறை.

திடத்தா னவரச லத்தையும் வாட்டிவெண் சீற்றமதோற்
கடத்தா னவரச னுக்கருள் செய்த கனகொடிக்குக்
குடத்தா னவரச வேழமென் சொல்வள்ளி கோனருடம்
மிடத்தா னவரச னிக்குரற் கூற்றையு மெத்துவரே. (26)

விருத்தம்.

துவரனைய விதழமிர்த வசனவனி தையர்சிறிய சுகசலதி யிடைவி டுவையோ
பவமருவு கயவர்மிசை தினமுமது ரிதமொழுகு பலகவிதை சொலவி டுவையோ
தவமுனிவர் பரவியநின் மலரடியை யடிமைமதி தனினிறுவ வருள்பு ரிவையோ
உவமையறு முனதுதிரு வுளமகிமை யெவரறிவ ருலகுபுகழ் பரம குருவே. (27)

அகவல்.

குருமணி கொழித்து வருமணிநெடுந்திரை
மொய்த்தபாற் கடலிடை மெய்த்துயில் கூர்ந்த
மான்மக பதிதிரு நான்முகன் முதலா
மெண்ணரு மிமையவ ருண்ணிறை மகிழ்வொடு

பாவி நெருங்கிப் பணியுந் தோறும்
வயங்கிய பைம்பொன் மகுடந் தோய்ந்துந்
தண்டைகிண் கிணிசிறு சதங்கைநூ புரங்கள்
சிலம்புற வணிந்தும் புலன்களோந் துயர்ந்த
நேசர்மென் மலராற் பூசனை புரிந்துஞ்
சிவந்தநின் பாத திவ்யதா மரையை
மனத்தி னுளிருத்தி வாழ்த்த
வெனக்கருள் புரிவா யின்பரா யகனே. (28)

### வெண்பா.

நேமிகுந்த மாதிகொண்டு நேரெதிர்ந்த சூரைவென்று
தேமிகுந்த மாலையும்பர் சீர்புரந்த—சாமியெங்கள்
செந்தில்வந்தி டுங்குகன்செ ழும்பதங்க ணம்புகின்ற
புந்தியன்பர் தம்பவங்கள் போம். (29)

### கலித்துறை.

பவங்கண நோயு மனுகாது வஞ்சம் படர்ந்தமது
பவங்கண லார்கொடும் பாசஞ்செல் லாதுபைந் தேன்கணிரம்
பவங்கண மார்செய் விளையும் பழனிப் பரனருளின்
பவங்கண னீன்ற குகன்றாண் மனத்துள்வைப் பாரகத்தே. (30)

### விருத்தம்.

கத்துதிரை நத்துதவு முத்துகள்கொ ழித்தலைக டற்புவித னிற்கருதி நா
ணித்தியமு னைத்துதிசெ யச்செயவொ ரற்பமுநி னைத்தனையி லைத்தரும மா
அத்தர்மகிழ் வுற்றினிய புத்திரர்வ ருத்தமத கற்றுதல்வ முக்கமல வோ
எத்தனைவி தத்தினினு ரைப்பினும்வெ றுப்பிநெடி ருப்பதென்ம லைக்குமர னே

### அகவல்.

மலைக்கு மனத்தையோர் நிலைக்கு ணிறுத்திக்
களபசந் தனமணி புளகமந் தரமுலைக்
கயல்விழி மடவார் மயலினை யொருவிப்
புவிபொருள் வெறுத்துப் பொய்கொலை யிகழ்ந்தே
யுலர்தரு சருகொடு பலகனி நுகர்ந்தைம்
புலன்களை முனிந்துயர் நலம்பெறு தவஞ்செயு

மிருடிகள் பரவுங் கருணையங் கடலே
யன்பரை வளர்க்கு மின்பமா முதலே
யெங்கணு நிறைந்த துங்கபூ ரணனே
அருண கிரிக்குமுன் பரகதி கொடுத்தா
யப்பரா நெடுஞ்சடை முப்புராந் தகற்கு
மகத்துவ மிகுத்த வகத்திய முனிக்குங்
கருதரு முண்மைப் பொருளினை மொழிந்தாய்
திடத்தமிழ் வலவற் கிடர்த்துயர் தீர்த்தாய்
வரிச்சிறை யறுகா லரிக்குல மமர்ந்து
கடிகமழ் பொன்னிறப் பொடியிடை தோய்ந்தங்
கிளமுகை யவிழ்த்து விளரிகள் படித்துத்
துளிமது வருந்திக் களிசிறந் துறங்கு
மெழிலார் கற்பகப் பொழில்சூ ழுலகின்
மேவிய சுரர்க்குத் தீவினை தவிர்த்தாய்
நிதநித முனது பதமலர் பணியு
மடிமையை யாள்வ தரிதோ
வடிவுறு மான்மகண் மருவுகா தலனே. (32)

வெண்பா.

தலமந் தரந்திகைக்குந் தானயமுற் றோங்க
வலமந் தரந்திகைக்கும் வண்டோட்—கொலையவுணர்
மெத்த மலைத்தே வெருவவென் றோய் மாதவர்பூ
சித்த மலைத்தே சிகா. (33)

கலித்துறை.

காதலங் கார முலைமறைத் தேவிழி காட்டிவருந்
தீதலங் கார நகையார் வலையினுட் சிக்குவரோ
போதலங் கார மறையோனைக் குட்டிய பொற்கரத்தான்
மாதலங் காரகல் வானெங்க ணுந்திகழ் வானன்பரே. (34)

விருத்தம்.

வானம திப்பிறை வார்பவ ளச்சடை மாவிம லற்குமுனுண்
ஞானமொ ழித்திற னோதிய சற்குரு நாதவி னைத்தொடர்பா
லீனர்த மைப்புக ழாமனு னைத்தொழு வேழைம னத்துயர்தீ
தானதொ ழித்துவி வேகமெ னக்கரு ளாதிம றைப்பொருளே. (35)

## அகவல்.

பொருளிதென் றறியாப் புன்மையேன் மனத்து
ளிருளினை யகற்றி யின்பமெய்ஞ் ஞானத்
திருவிளக் கேற்றித் தினமுமஃ திலங்கநின்
னருளெனு நெய்வார்த் தவ்வுழி வந்து
குடியிருந் தென்னை யடிமைகொண் டாள்வா
யக்கரி யம்புலி யறுகு மணிந்து
மன்னிய கனமறை மானொரு புறந்தழீஇச்
சிகிகலை யேந்திச் சிவன்றனைப் போன்றும்
வளையுந் திகிரியு மருவுத லானு
நெடுந்தவர் கண்டக நெருங்குத லானும்
வனங்கொள லானு மாலென நின்று
மெண்கணி யங்குற விருங்கலை யினங்கை
வாழ வாரணம் வளரப் பாரித்
தன்ன முயர்த்தோன் றன்னை நிகர்த்துங்
கோகில மொலிப்பக் கொழும்பலந் தாங்கி
மகிழ்வேய்ந் ததனன் மதனனை நேர்ந்துந்
தகுகுரு காடத் தகரமா மேற்கொண்
டரத்தண்ட முந்தொட் டென்றனைப் போன்று
மிலகிய பழனி மலைதனி லுறையு
நித்தியா நந்த நிமலசொ ரூபா
வுத்தியா னத்தோ டுறழ்கொந் தளகத்
திறல்வடி வேற்கட் குறமகள் புளகக்
களபமென் முலைதோய் கனக தடம்புய
துங்க மனோகர மங்கள லோலா
சிறைவரிச் சுரும்பர் நிறைமது வருந்திப்
பராகம் பூசி யிராகம் பாடிக்
கணங்கொடு பயில்பைங் கடம்பின்
மணங்கமழ் தொடைபுரண் மார்பசுந் தரனே. (36)

## வெண்பா.

தரங்கவலை மாறவரந் தந்துலங்கு வானோர்
தரங்கவலை மாறவரந் தந்து—புரந்தவுணர்
கன்று மறவா கவந்தொலைத்தோன் றன்னைநெஞ்சே
யென்று மறவா திரு. (37)

## கலித்துறை.

இருதனந் தந்தமி ஞர்சிமிழ் கண்கணை யின்பநடை
மிருதனந் தந்தமி சைந்தமுத் தம்பொரு வேசையர்பால்
வருதனந் தந்தமி கைப்பிணி தேடு மயலகற்றிக்
கருதனந் தந்தமிழ் கற்பித் தருள்சுரர் காவலனே. (38)

## விருத்தம்.

காவலருமலர்மதுவுண்டளிகள்பாடக்களித்துமயினடிக்கவன்னங்கருதிநோக்கு
மாவளஞ்சூழ்பழனிமலைமுருகாசற்றுமனமிரங்காவகையேதுவாதோசூதோ (டோ
பாவிவழுத்துதல்செவிகேளாதோவொன்றும்பகராயோவுனக்குமெற்கும்பகைமுன்னுண்
நீவருதற்கிதுமதொலையோதருமந்தானோநீள்கருணைமதுரிதமேநிறைந்ததேனே. ()

## அகவல்.

தேனின முரன்று செழுமது வருந்துங்
கானமர் சினைமலர்க் கத்திகை மிலைந்து
தழையகிற் புகையுந் தகரமு மளைந்து
புழுகுமான் மதமும் பொலிவுற நீவிக்
கொண்டலுந் தெண்டிரை கொழித்ததெள் ளறலும்
விண்டொடு பொழிலும் வெள்கநெய்த் தொழுகி
நிறையிருள் வளர்ந்த நீள்கருங் குழலுங்
கறையிகந் தவிர்பிறை சிறைகிடந் தனைய
திருநுத லுந்திண் சிலையென வளைந்த
புருவமு மறலி போற்கொலை பயின்று
திறத்தவேற் படையினை வெறுத்துமை தோய்ந்திரு
புறத்தினுந் தாவிப் பொருவரி விழியுங்
குமிழமென் மலரெனக் குலவிய மூக்கு
மமர்செயு மதன்ற னழகுநோக் குதற்குத்
தொகுத்தநான் மறையோன் றொல்லைநா ளதனில்
வகுத்ததர்ப் பணமென வயங்குகபோலமும்
வள்ளைவார் செவியும் வனமுருக் கிதழுங்
கள்ளவி ழாம்பற் கவினுறு வாயுந்
தண்ணில வெரிக்குந் தரளவெண் ணகையும்
பண்ணினு மதுரப் பசுங்கிளி மொழியும்

விழுமிய கிரண முழுமதி முகமும்
வழுவகல் வளைபோல் வாய்ந்தகந் தரமுங்
கரும்பெனத் திரண்ட கனதடம் புயமுந்
திருந்துமம் புயத்தைச் சேற்றிடை வீழ்த்திக்
கடகமுஞ் சரியுங் கனககங் கணமுஞ்
சுடர்மணி பதித்த தொடியுமீ தணிந்த
கரமும் பவளக் கடிகையிற் சிறந்த
விரலுஞ் சிகர மேருவைச் சினந்தெண்
பொருப்பினோ டெதிர்ந்து புகர்முக வேழ
மருப்பினைக் கடிந்து வாகைகொண் டமிர்த
குடத்தினைப் பழித்துக் குவிந்தடி பரந்து
புடைத்திறு மாந்து பூரித் தெழுந்தங்
கிடங்கொடு ததும்பி யிணங்கிய சுணங்கு
படர்ந்துமா தவத்தினர் பலரு மயங்க
முனைகறு கறுத்து முதிர்ந்தசெஞ் சாந்து
பனிநீர் களபம் படீரந் திமிர்ந்து
வாரணி யணிந்து மகரயா ழணைத்த
பூரண மோகப் புளகித முலையு
மெறும்பின தொழுக்கென விசைந்தவு ரோமமு
நறும்புனற் சுழிநிகர் நலங்கொ ளுந்தியு
மிளைஞர்தம் மனஞ்சென் றேறுதற் கமைத்த
வளமிகு படியென மருவிய மடிப்பு
மாவிளந் தளிரினு மழகிய வுதரமு
நூலினு மெலிந்து நுடங்குசிற் றிடையும்
புடைவை தாங்கிப் புடையுகன் றரவின்
படநிகர்த் திறைகள் பயில்கடி தடமும்
நயந்தவ ரம்பையை நகைத்துயர் தொடையும்
வியன்றினை வராலெனு மென்கணைக் காலு
மணிச்ச மலரை யனுக்கிய சோகந்
தனைக்கடு கடுத்துமாந் தளிரினை வாட்டிச்
செய்யபஞ் சூட்டிச் சில்லரிச் சிலம்புந்
துய்யகிண் கிணியுந் தொனித்தபொற் பதமு
மூன்னுநன் னுடையு மின்னலி னியலும்

துன்னிய வஞ்சத் தொழிலு மாயமும்
பெற்று விளங்கிய பெண்களை விரும்பிப்
பற்றிய மயலாற் பரிதபித் துழன்றுங்
காலைக டோறுங் கனல்வளைந் தெரியும்
பாலையே போன்ற லீலையில் வீழ்ந்துஞ்
சீலரை யிகழ்ந்துந் தீயரைப் புகழ்ந்துஞ்
சாலவருந்திக் தளர்ந்தலை யாம
லுன்றனைக் கருதி யுவந்துபே ரின்பத்
தென்றமிழ் பாடிநின் சேவடி பரவி
வந்தனை புரிய மதியெனக் கருளிச்
சிந்தைவெங் கவலை தீர்த்தெனை யாள்வாய்
பழனு புரிவாழ் பரமசொ ரூபா
குழகா புனிதா குமரச டாட்சர
முதல்வா சிவசண் முகசர வணபவ
சதுரா மறைமுடி தனிலுறை குருபர
தெய்வகுஞ் சரிபுணர் திவ்யவி னோதா
சைவமென் பெயருடைச் சமயவா னந்த
மோனகெம் பீர முழு மெய்ஞ்
ஞானதண் டாயுத நாதா விரைந்தே. (40)

## வாழி விருத்தம்.

முருகன்வாழி நிமலவேத முதல்வன்வாழி மோனமே
கருதும்யோகர் மனசின்மேவு கமலபாதன் வாழிசீர்
தருகலாய மயிலும்வாழி சமரவேலும் வாழிமான்
மருகன்வாழி பழனிஞான வரதன்வாழி வாழியே.

## வேறு.

அருணவொண்சடை முடியில்வெம்பணி யவிர்செழும்பிறை சூடுமோர்
பரமர்தஞ்செவி தனிலரும்பொருள் பகருமிங்கிதன் வாழிநீள்
கருணைதங்கிய நயனபங்கய கனகதிண்புயன் வாழிவான்
மருவுமங்கையர் தொழவருங்குற வனிதைகுஞ்சரி வாழியே.

பழனிநான்மணி மாலை முற்றிற்று.



உ

குமரன்றுணை.

# திருப்பழனி வெண்பா.

## காப்பு—வெண்பா.

திருமேவும் பைந்துளபத் தேனலங்கன் மார்பன்
மருகோன் பழனிவெண்பா மாலைக்—கொருமாரன்
கைக்குஞ் சரமுகத்தான் கட்டழலுய்த் தானருள்செங்
கைக்குஞ் சரமுகத்தான் காப்பு.

## நூல்.

மின்னார்வெண் மாமதியும் வெங்கதிரோ னுந்தொழுது
பன்னாளு மேத்தும் பழனியே—யொன்னார்
மனந்தடுமா றக்கரத்தார் வைவேலாற் பண்டு
சினந்தடுமா றக்கரத்தார் சேர்பு. (1)

அம்முகில்விண் மானைகையொத் தாழியுண்டன் னாள்குழல்போற்
பம்மிமழை பெய்யும் பழனியே—யெம்மைநிலை
நாட்டுங் கருத்துடையார் நாடோறும் வஞ்சர்தமை
வாட்டுங் கருத்துடையார் வாழ்வு. (2)

மாலருவி வீழ்வதுபூ மாதெவ் வுயிர்க்குமுலைப்
பாலருள்வ தொக்கும் பழனியே—கோலவரிப்
புள்ளமருந் தாமமலர் பொற்புயத்தார் முற்பவத்தைத்
தள்ளமருந் தாமமலர் சார்பு. (3)

வாய்ந்தமலை வெள்ளநல்லோர் வண்புகழ்போ லோங்கியெங்கும்
பாய்ந்து நிரம்பும் பழனியே—யாய்ந்துதொழா
வஞ்சத் திருக்குமத்தர் வன்பிணிதீ ராரடியார்
நெஞ்சத் திருக்குமத்தர் சேர்வு. (4)

வார்தடத்தா றுந்தியபன் மாமணிவான் விற்கெதிர்விற்
பார்பிடித்த தொக்கும் பழனியே—போர்வினைக்குஞ்
செங்கட் குறவர் திருக்குலமா னம்பரன்பர்
தங்கட் குறவர் தலம். (5)

தத்துபுன லார்ப்புமள்ளர் தாமுழுமார்ப் புந்திசையோர்
பத்துநிறைந் தோங்கும் பழனியே—முத்தருளாந்
தங்கவரு மாதரத்தார் தானவர்த மாவிழுழு
துங்கவரு மாதரத்தார் தோய்வு. (6)

கூடிவய றோறுமணி கொண்டிறைப்ப தென்னமள்ளர்
பாடிவிரை தூற்றும் பழனியே—தேடிமிக
வீறு னனத்தார் விபுதர்கம லத்தர்புக
ழாறு னனத்தா ரகம். (7)

வண்ணநெடுஞ் சோலைமலர் வாய்விண் டமிழ்ந்தசெந்தேன்
பண்ணைதொறும் பாயும் பழனியே—விண்ணவர்சூ
ழாறுபடை வீட்டினு ரன்றவுணர் கொண்டவஞ்ச
மாறுபடை வீட்டினார் வாழ்வு. (8)

மெள்ளக் கடைசியர்கான் மென்களங்கண் டாமைமந்து
பள்ளத் தொளிக்கும் பழனியே—புள்ளத்தின்
மோனங் குறையார் முனேவருவார் பாவிகள்பாற்
றூனங் குறையார் தலம். (9)

மாவயனீர் தோய்கடைசி மார்நிழலை மள்ளர்புனற்
பாவையரென் றேத்தும் பழனியே—பூவயன்மால்
யோக முனிவோ ருளமகிழத் தானவர்து
ளாக முனிவோ ரகம். (10)

கொங்கவிழ்பூம் பண்ணைநல்லோர் கொண்டநிறை செல்வமெனப்
பைங்கதிர்பெற் றோங்கும் பழனியே—பொங்குமொளி
தங்கா னனங்களைந்தார் தந்தகந்த ரன்பர்பந்த
வெங்கா னனங்களைந்தார் வீடு. (11)

மீக்கநெற்கொய் தேதொழுவர் வேய்ந்துளபோர் பல்கிரிபோற்
பக்கமெலாந் தோன்றும் பழனியே—தக்கபொரு
ளொன்றதுகண் டங்கறுத்தார்க் கோதினர்வெஞ் சூர்மரமாய்
நின்றதுகண் டங்கறுத்தார் நேர்வு. (12)

சீரெருமை யேற்றுற் றெளிக்குநெற்போர் கார்தவழ்பொற்
பாரவரை நேரும் பழனியே—வீர
மடுத்து வருமயிலா ரன்றுகிர வுஞ்ச
நடுத்து வருமயிலார் நாடு. (13)

சொற்பழுது தீர்த்திரப்போர் துன்பறத்தந் தஞ்சகட்டாற்
பற்பலர்வீட் டுய்க்கும் பழனியே—பொற்பதுமக்
கைக்கும் பதனத்தார் காதலில்வீ ழாமலெனை
வைக்கும் பதனத்தார் வாழ்வு. (14)

செங்கயல்வாட் கண்ணார் திருமணிமா டங்கடொறும்
பங்கயமான் மேவும் பழனியே—துங்கவுல
கெல்லா மதிக்குமர னீன்றசுதன் வஞ்சகர்பாற்
செல்லா மதிக்குமரன் சேர்பு. (15)

திங்கட் பிறைபொழின்மேற் சேர்தொறுங்கொக் கென்றுகெண்டை
பங்கத் தொளிக்கும் பழனியே—தங்கத்த
மைக்குஞ் சரிகொழுநன் மாமணிமின் னுந்தொடிசூழ்
கைக்குஞ் சரிகொழுநன் காப்பு. (16)

ஆடலனங் காண வலர்தேன் பொழியவண்டு
பாடமயி லாடும் பழனியே—நாடரிய
வேதங் கடந்தார் விரிகடலுண் டோற்கினிய
போதங் கடந்தார் புரம். (17)

வீறியபூ கக்கனிகள் வீழப் புனல்வாளை
பாறிமுகில்கீறும் பழனியே—பேறினிய
பத்திவரத் தேரகத்தார் பைந்தமிழ்வல் லோர்பரவுஞ்
சித்திவரத் தேரகத்தார் சேர்பு. (18)

தண்பதும முத்தந் தனைக்கருவென் றேதிமங்கள்
பண்பினொடு காக்கும் பழனியே—வண்பிறைமுக
டூரத் துதித்துவந்தார் சிந்தைதனில் வாழ்பரமன்
றூரத் துதித்துவந்தார் சார்பு. (19)

கோட்டகமாந் தாய்முகிழ்மென் கொங்கை முகமலர்ந்து
பாட்டளிகட் கூட்டும் பழனியே—பூட்டுகணை
வட்டவிர தத்திருந்தார் வாடமுனிந் தாரடியா
ரிட்டவிர தத்திருந்தா ரில். (20)

வில்லெடுத்த வேளை விளிப்பதுபோற் சூதமெல்லாம்
பல்லவக்கை காட்டும் பழனியே—செல்வமுற்று
வாழும் பரங்கிரியான் மண்ணளந்தோ னும்பணிந்து
சூழும் பரங்கிரியான் றேய்வு. (21)

சேணகழிற் கெண்டைபுவி சீறிவிண்ணின் மேல்விடுத்த
பாணமெனத் தாவும் பழனியே—பூணுவளை
யாரத் தமைவா னளகவள்ளி கும்பதன
பாரத் தமைவான் பதி. (22)

காந்துகதி ரைத்திருமால் கைத்திகிரி யென்றிடங்கர்
பாந்துபரி கஞ்சூழ் பழனியே—யேந்துமுலைக்
கோட்டமர மானார் குழாம்பணிவள் ளிக்காக
நீட்டமர மானார் நிறைவு. (23)

இச்சைமட வார்குழற்கூட் டின்புகைகா ரென்றுகுன்றிற்
பச்சைமயி லாடும் பழனியே—வச்சிரற்கு
விண்ணளித்தா ரம்புயத்தார் வேதன் சிறைதவிர்த்தார்
பண்ணளித்தா ரம்புயத்தார் பற்று. (24)

வான்மணிமா டங்களிற்கார் மால்பாற் கடலமர்ந்த
பான்மையென மேவும் பழனியே—மேன்மைதரு
போதமுடி வானோர் புனிதருங்கா ணத்துரியா
தீதமுடி வானோர் செறிவு. (25)

வேறு.

வெய்யவனாற் காய்ந்துநொந்த வெப்பகற்றல் போற்கொடிகள்
பையமதி தோயும் பழனியே—பொய்யறவர்ச்
சித்தஞ் சலிப்பார் திருக்கறுப்பார் வஞ்சரெனிற்
சித்தஞ் சலிப்பார் செறிவு. (26)

வார்த்துணைமென் கொங்கைநல்லார் வாள்சிலைகொண் மாமுகத்தைப்
பார்த்துமதி யஞ்சும் பழனியே—கூர்த்தகழை
வாய்த்தகர வாகனத்தான் வண்மறைகூ றும்பவள
வாய்த்தகர வாகனத்தான் வாழ்வு. (27)

பூமணமு மின்னார் புழுகுமண மும்புலவோர்
பாமணமும் வீசும் பழனியே—நேமமொடு
வாரமிசை யும்பெருமான் மானுநிறத் தோன்பரவ
வாரமிசை யும்பெருமான் வாழ்வு. (28)

பூங்குயில்கேட் பச்சுகமும் பூவையுமா றங்கமுறை
பாங்குபெற வோதும் பழனியே—யோங்குங்
கனகமயக் கோட்டுவார் கற்பகநா டாடுங்
கனகமயக் கோட்டுவார் காப்பு. (29)

ஏடலர்ந்த பூந்தா ரிறைமறுகெ லாங்கயங்கள்
பாடலங்க ளார்க்கும் பழனியே—நீடுமின்ப
வான்மலைமா தங்கத்தான் வண்கனிக்காப் பூவலஞ்செய்
வான்மலைமா தங்கத்தான் வாழ்வு. (30)

வெவ்வடிவாய் வேல்வேந்தர் வீதிதொறு மாமுரசம்
பவ்வமென வார்க்கும் பழனியே—செவ்வியசீ
ருள்ள முருகா னுறுதியிலா தார்க்கருள்சே
ருள்ள முருகா னுறைவு. (31)

வேணிமுனி வோருமயன் மீறமட வாரினிய
பாணிபல பாடும் பழனியே—சேணிமிர்பூஞ்
செய்யவிளங் கற்பகத்தான் றேவர்புடை சூழ்ந்துதுதி
செய்யவிளங் கற்பகத்தான் சேர்பு. (32)

ஆசையொடு கேட்பினுங்கண் டாலுந் துதித்திடினும்
பாசவினை தீர்க்கும் பழனியே—நேசருளத்
தென்று மொழியா ரிகழ்படிறர்க் குட்பொருளீ
தென்று மொழியா ரிருப்பு. (33)

வஞ்சநெடும் பாவ மயக்கையெல்லாந் தீயினிட்ட
பஞ்செனவே செய்யும் பழனியே—குஞ்சரமோர்
வேலைமுன மேவினர் மெய்யுறழ்முன் னீர்சுவற
வேலைமுன மேவினர் வீடு. (34)

புத்தியில ராயிருந்த போதினுங்கண் டாலுடனே
பத்தியையுண் டாக்கும் பழனியே—முத்திதருந்
தாரகவி நாயகனார் தந்துணைவர் மெய்யருள்வித்
தாரகவி நாயகனார் சார்பு. (35)

ஆர்வமிகுத் தேபரவு மன்பர்கட்கு மெய்ஞ்ஞானப்
பார்வைகொடுத் தாளும் பழனியே—போர்வடிவேற்
கையான் மலைவில்லான் காதலனென் மீதுமனங்
கையான் மலைவில்லான் காப்பு. (36)

வண்டுறைபூ மாதுநில மங்கைகதிர் வான்பசுவும்
பண்டுதொழு தேத்தும் பழனியே—தண்டணிசெங்
கைக்குரவ னம்பரமன் கண்ணிமனு ளன்சிகழி
கைக்குரவ னம்பரமன் காப்பு. (37)

ஏமமலர் கொண்டுபிர மேந்திரனார் முன்முறைதப்
பாமலினி தேத்தும் பழனியே—நேமமறை
யோதி தருமகத்தா னும்பணிவே ளன்பருக்கே.
யோதி தருமகத்தா னூர். (38)

நித்தியநா தன்றன் னினைவுநிறை வேறவிருப்
பத்தொடுபூ சிக்கும் பழனியே—சித்தமது
வந்துபொருந் தண்டத்தார் மாற்றலர்வென் னிட்டொழிய
வந்துபொருந் தண்டத்தார் வாழ்வு. (39)

சுத்தமதி யாளனெனுஞ் சொன்னகுத்தன் றீமைதணப்
பத்தனினின் றேத்தும் பழனியே—நித்தநெறி
யொன்றுதரு மங்கலையா ருள்ளுவப்ப ஞானநிலை
யொன்றுதரு மங்கலையா ரூர். (40)

மாதவத்தான் மிக்கவஞ்சி மன்னவற்கு முன்புதிறம்
பாதமுத்தி நல்கும் பழனியே—போத
வராக வரையான் மறந்தாரைப் பின்செல்
வராக வரையான் மனை. (41)

வந்தித்தோ ரின்பநிலை வாழ்வுபெற வாயிலேந்தும்
பந்தித்தோர் போற்றும் பழனியே—சந்தத்
தருக்கா னகமலையான் றன்குருமெய்ஞ் ஞானத்
தருக்கா னகமலையான் சார்பு. (42)

ஆதரவி தாமென் றடைபவர்க்குச் சிந்தைகுழம்
பாதவகை தந்தாள் பழனியே—வேதநய
சாரமறை வாக்கினன் றண்டமிழ்வேந் தற்குமுன்வி
சாரமறை வாக்கினன் சார்பு. (43)

சீராய வேள்வி செயுமிடனெ லாம்வேத
பாரா யணர்சூழ் பழனியே—பேராசை
இந்திப்ப வந்தடுப்பார் தேவாதி தேவனைக்
இந்திப்ப வந்தடுப்பார் சேர்வு. (44)

காதலலை நீந்திக் கதிகரஞ் சேர்வதற்கோர்
பாதையென வோங்கும் பழனியே—மோதுதிறன்
மாசுந் தரமாட்டார் மைந்தரடி யார்க்கொருமும்
மாசுந் தரமாட்டார் வாழ்வு. (45)

மோசவினை வெம்பகையை மோதிவெல்லு ஞானிகட்கோர்
பாசறைய தாகும் பழனியே—பூசித்
தவர்முன் வரமறையான் சந்ததமு நன்மா
தவர்முன் வரமறையான் சார்பு. (46)

மைந்தரக லந்தொறும்பொன் மங்கையுற விந்தைகளூ
பந்திமிர்ந்தோண் மேவும் பழனியே—சிந்தைநெறி
யன்புங் கவர்கோமா னன்னவர்மா றீர்ந்தோர்நே
யன்புங் கவர்கோமா னூர்வு. (47)

அஞ்சரசக் கிள்ளையுமா ருயபருந் துங்களித்தோர்
பஞ்சரத்துண் மேவும் பழனியே—கஞ்சன்
மதமிறவப் போதவித்தான் மாமருக வேடா
மதமிறவப் போதவித்தான் வாழ்வு. (48)

உம்பருறை யும்பதியு மொப்பலவெ னப்பலசு
டம்பரவ வாழும் பழனியே—செம்பதுமக்
கந்தவிரும் போதகத்தான் காதலுறு மைத்துனன்சேர்
கந்தவிரும் போதகத்தான் காப்பு. (49)

நீர்மலிமுத் தங்கொழிக்கு நீடுகட லாடையுனை
பார்மகள்கண் போலும் பழனியே—யோர்மும்
மலக வனத்தலைவன் மாலினர்கா ணவா
மலக வனத்தலைவன் வாழ்வு. (50)

வேறு.

செஞ்சுடர்மா டக்கொடியுந் தேறுமன்பர் சிந்தையுமின்
பஞ்சிகமேற் றன்னும் பழனியே—விஞ்சுகன
லொத்த குணக்கடலா ரொல்குதிறல் வாகுமுன்னு
நித்த குணக்கடலார் சேர்பு. (51)

சந்தந் திமிர்முலையார் தாமுந் துறவோரும்
புந்தந் கெடுக்கும் பழனியே—சுந்தரஞ்சேர்
ஞானத் தவசத்தான் மெய்ப்புதல்வி சேய்விமல
ஞானத் தவசத்தா னூடு. (52)

வெற்பஞ்ச விம்முகொங்கை வேசையரும் பண்டிதரும்
பற்பஞ் சமைக்கும் பழனியே—முற்போ
துறுதிவரம் பற்றா ருளத்தணுகார் தோற்ற
மிறுதிவரம் பற்றா ரிருப்பு. (53)

சேலடித்த செய்யுட் டிரிபகடும் பம்பரமும்
பாலரத்த மேயும் பழனியே—வாலிதுப்பைக்
கைத்துப் படைத்தார் கனிந்துதந்தோ னைச்சிறையில்
வைத்துப் படைத்தார் மனை. (54)

நேயர் தமைப்பிரிந்த நேரிழையா ருங்குழலும்
பாயல் வெறுக்கும் பழனியே—தூயவருட்
போதவா னந்தத்தான் பூவயன்மா றேடியறி
யாதவா னந்தத்தா னூர்வு. (55)

முத்தாரக் கொங்கையரு முல்லைநில மாக்களுமின்
பத்தாவைப் போற்றும் பழனியே—கொத்தார்
செழுந்தும் பயந்தாரார் தேசிகர்நா யேற்குள்
ளெழுந்தும் பயந்தாரா ரார்வு. (56)

கானம் பயிலளிசூழ் கான்மலரி னுந்தடத்தும்
பானந் திமிரும் பழனியே—தானொன்
பதுமா தனத்தார் பரிவுமுறார் நெஞ்சாம்
பதுமா தனத்தார் பதி. (57)

காவகமுந் தூயபஞ்ச காவியங்க ளானவுந்தேம்
பாவலர்வா சிக்கும் பழனியே—யாவல்
வடிவாகு மாகடம்பர் வாழ்த்துட் கொளார்தேன்
வடிவாகு மாகடம்பர் வாழ்வு. (58)

வாணிதத்தை யொத்தமொழி மாதரும்யாழ் வல்லவரும்
பாணிதத்தைக் காட்டும் பழனியே—தாணினைத்தோர்
தீங்கங் கடத்தழைத்தார் சிந்துரம்வள் ளிக்காக
வோங்கங் கடத்தழைத்தா ரூர். (59)

தேனுலவு பூங்குழலார் சிந்துரமுங் கன்றினமும்
பானுகர நேரும் பழனியே—வானவர்கோன்
கத்தந் தரங்கத்தான் கைதொழுதேத் துஞ்சதுர்வே
தத்தந் தரங்கத்தான் சார்பு. (60)

வெல்கியபூ வாவியினும் வீறுபுல வோர்மனத்தும்
பல்கலையோ சிக்கும் பழனியே—செல்வநிறை
வஞ்சிநக ரத்திருப்பார் வைப்பதும மன்னவன்செய்
யுஞ்சிநக ரத்திருப்பா ரூர். (61)

மானை நிகர்த்தவிழி மங்கையர்சொற் குஞ்செவிக்கும்
பான லமைக்கும் பழனியே—கானமலர்
தானனக ரத்தான் றவத்தினுயர் வோர்பணிநா
ரூனனக ரத்தா னகம். (62)

தண்ணக்கட் பேதையர்சொற் சாரமும்பூ கப்பொழிலும்
பண்ணைக் கடிக்கும் பழனியே—விண்ணிற்போங்
கோட்ட விரும்பிறைவன் கோட்டுமுகத் தாருகனை
வாட்ட விரும்பிறைவன் வாழ்வு. (63)

போயவன சத்திரமும் போர்விளையாட் டாடவரும்
பாயசமு மூட்டும் பழனியே—தூயர்புக
ழுட்டதிரு மங்கலத்தா ரம்புயப்பொற் பாதமிசை
யிட்டதிரு மங்கலத்தா ரில். (64)

கோடடுத்த பூம்பொழிலுங் கூறுநல்லோர் நெஞ்சகமும்
பாடலக்க ணுறும் பழனியே—நீடுவச்ர
வாட்கோ கனகத்தான் மார்பிடந்தோ ளும்பரவுந்
தாட்கோ கனகத்தான் சார்பு. (65)

வாசங் கமழ்கமல வாவியுமின் னூர்புயமும்
பாசம் பிணையும் பழனியே—நேசந்
தரும்போத வாரியனார் தங்குமளி தன்னால்
விரும்போத வாரியனார் வீடு. (66)

மேவும் பெரியர் வினையகத்து நாவகத்தும்
பாவந் தவிரும் பழனியே—யாவுந்
தருமஞ் சனத்தார் தவமுனிவோ ராட்டுந்
திருமஞ் சனத்தார் செறிவு. (67)

கோதையர்பூந் தாள்களினுங் கும்பமுலை மீதுமரும்
பாதசர மாட்டும் பழனியே—போதகவி
சேடவெழு மாதவத்தார் தேடமலர் பாவனிரு
ளோடவெழு மாதவத்தா ரூர். (68)

காலந் தெரிபவருங் காளையரு மந்தநத்தார்
பாலன் பொருவும் பழனியே—ஞாலந்
துதித்த வரத்தர் துணிந்தெனையா ளச்சம்
மதித்த வரத்தர் மனை. (69)

முல்லைக்கோ தண்டவல்லோர் மொய்ம்பினுங்கோ வீதியினும்
பல்லக்கூ டாடும் பழனியே—மல்லற்கோட்
டோதியற மோதினு ரோங்கு மருணகிரிக்
காதியற மோதினு ரார்வு. (70)

கூருந் தவத்தினருங் கோவு மதிக்கவலைப்
பாரங் கடக்கும் பழனியே—வீரந்
தருவான்முத் தாரத்தான் றன்றுணைவன் மார்பி
னருவான்முத் தாரத்தா னூடு. (71)

வீறரசர் வேல்களினு மேவுநெற்போர் கீழலினும்
பாற லமரும் பழனியே—கூறுபொருண்
மாதர வாவான் மயங்காமை தந்தெனக்கோ
ராதர வாவா னகம். (72)

தோடவிழ்மென் பூவளிக்குந் தோகையர்நிர்த் தத்தினுக்கும்
பாடலியங் கூட்டும் பழனியே—கேடறுசீர்
மண்டு கலந்தருகன் மாமுலைமான் மாதையந்நாட்
கண்டு கலந்தருகன் காப்பு. (73)

அஞ்சொன் மடந்தையரும் யாசகரு மேற்றகதம்
பஞ்சந் தணியும் பழனியே—செஞ்சுடர்வே
லீங்காதா ரத்தமைந்தார் நேடரிய மூவிரண்டா
யோங்காதா ரத்தமைந்தா ரூர். (74)

ஆர்த்தடர்க்கு மல்லருங்கற் றுய்ந்தபொறை யாளர்களும்
பார்த்திபத்தை நேரும் பழனியே—சேர்த்துரத்தி
லப்போது மாதரித்தா ராதிவிண்ணோ ரியாவரையு
மெப்போது மாதரித்தா ரில். (75)

வேறு.

மங்களமா தங்கியண்ணல் வாழ்ந்திசைமே லோர்குழுமிப்
பைங்கயிலை போலும் பழனியே—யெங்கு மொன்றாய்
நின்றவிரு தாரத்தார் நேயத் தொடுமருவா
நின்றவிரு தாரத்தார் நேர்வு. (76)

மாலைசெறிந் தத்தியர வந்திகழ்ந்தா ரங்கொடிகா
பாலிமுடி போலும் பழனியே—தாலமிசைச்
சோலை மயக்கார் தொழுங்குழலார் பாலைமைழ
யேலை மயக்கா ரிருப்பு. (77)

வண்ணவயன் மொய்கதிர்கள் வாழ்ந்தமுத வேரிகொண்டு
பண்ணவர்கா டொக்கும் பழனியே—நண்ணுசிவ
யோகவரு வித்தகத்த ரோங்குகங்கை நக்கீரற்
காகவரு வித்தகத்த ரார்வு. (78)

விஞ்சுபுல வோர்குழுமி வேண்டுமிடந் தந்துயர்ந்து
பஞ்சதரு நேரும் பழனியே—மஞ்சு
விரவுமணி யாண்டலையான் வீசுகடன் ஞாலம்
பரவுமணி யாண்டலையான் பற்று. (79)

மேலுயர்வின் மஞ்சுதழாய் மென்றேறைகை வாழ்ந்தருட்கோ
பாலனுரம் போலும் பழனியே—நீலநிறத்
தானவரை யேற்றார் தவமறந்து ளார்தமைமெய்ஞ்
ஞானவரை யேற்றார் நகர். (80)

மங்கா வனம்பொருந்தி மாவா ரணம்பயின்று
பங்கே ருகனும் பழனியே—கொங்கார்பூஞ்
செச்சையணி ராகத்தார் சிந்துரமா னைத்தழுவு
நிச்சையணி ராகத்தார் நேர்வு. (81)

மாசார்ந்த கோடவிர்ந்து வல்லவைமே வுந்திறத்தாற்
பாசாங் குசனும் பழனியே—தேசார்
தருங்கஞ் சமுகத்தார் தார்மகுட வானோர்
நெருங்கஞ் சமுகத்தார் நேர்வு. (82)

உற்றவிர தம்பலநின் றேயாப் பொறிகடந்து
பற்றணுகார் போலும் பழனியே—முற்றியசீ
ரோங்குமா றங்கத்தா ரோர்பதினெட் டாயகொடுந்
தீங்குமா றங்கத்தார் சேர்பு. (83)

துன்றுகங்கை மாவருக்கந் தூயதண்ணங் கொண்டரனோர்
பன்றிவரை சாரும் பழனியே—வெ:ன்றிநடந்
தானமருந் தோகையினார் தாமவள்ளி தன்னதர
பானமருந் தோகையினார் பற்று. (84)

சீர்ப்பெருமான் மெய்தழுவிச் சேண்பொலிந்து கோங்கவனம்
பார்ப்பதிபோ லோங்கும் பழனியே—சீர்ப்புவன
வஞ்சமென்ப தஞ்சிவந்தார் வைகலும்பூ சிப்பதனாற்
கஞ்சமென்ப தஞ்சிவந்தார் காப்பு. (85)

சாந்தமணி யுங்கொடுபூத் தாங்குதலால் வில்வவனம்
பாந்தளிறை போலும் பழனியே—காந்தி
திகழுங் கனவேலான் சிந்தைதனிற் சற்று
மிகழுங் கனவேலா னில். (86)

ஆண்டுசெங்கோன் மேய்மதுரை யார்ந்து மகிழ்வனம்
பாண்டியனை நேரும் பழனியே—வேண்டி
வழுத்தவிருந் தாரணிபார் மாதவர்பொன் னுடர்
வழுத்தவிருந் தாரணியார் வாழ்வு. (87)

அம்பரவ மொய்பலநந் தாமைபெற்று நெல்லிவனம்
பம்புகடல் போலும் பழனியே—வெம்பொறியோ
ரஞ்சங் களிப்பா ரடியேன்புன் சொற்கவிக்கு
நெஞ்சங் களிப்பார் நிறைவு. (88)

செய்யவளை மேவியலை சேர்ந்தாற் றுஞ்சயனப்
பையரவன் போலும் பழனியே—தையலர்கண்
மைவசம யங்காப்பான் மைப்பொருளன் பர்க்கருள்வான்
சைவசம யங்காப்பான் சார்பு. (89)

ஆரமணி கொண்டிசைசேர்ந் தங்கலைசூழ்ந் தேதடங்கள்
பாரதிபோல் வாழும் பழனியே—சீருலவு
கந்த மலையான் கருதுமென் றன் றீவினையைச்
சிந்த மலையான் செறிவு. (90)

மாற்ககமாய் வெள்ளையல வன்கமலை தோன்றிமடுப்
பாற்கடலு மொக்கும் பழனியே—மேற்ககனந்
துன்றும் பலங்குன்றூர் சோதிமெய்ஞ்ஞா னத்தலைவ
ரென்றும் பலங்குன்றூ றில். (91)

இன்பமல ரம்புகழை யேந்திவண்டு கொண்டுகந்தார்ப்
பன்பொருவுஞ் செய்சூழ் பழனியே—யன்பர்
வயமா றிரண்டார் வரைகளைவென் றோங்கும்
புயமா றிரண்டார் புரம். (92)

போர்த்தலையில் வண்டேந்திப் போந்ததிரு மாலடுத்துப்
பார்த்தனிகர் காச்சூழ் பழனியே—யார்த்த
திடவந் தமருகனார் செல்வரரி நேசித்
திடவந் தமருகனார் சேர்பு. (93)

நன்னிலைபெற் றம்புயனு நண்ணிமணிக் கோபுரங்கள்
பன்னுமறை போலும் பழனியே—கன்னியுமை
வண்டடைய னத்தான் மருகன் கருணைகுதி
கொண்டடைய னத்தான் குடி. (94)

கந்தரமா கம்புலிபூங் கான்மருவி மாளிகையின்
பந்திவரை போலும் பழனியே—சந்ததமங்
காவின் மனங்குழைவார் காதினர்பொய் யாமொழியார்
பாவின் மனங்குழைவார் பற்று. (95)

மாகோ டடுத்தலைந்து மால்பதமேல் வாழ்ந்துதுசம்
பாகீரதிநேர் பழனியே—மேகாதி
யாயவரும் பாவநத்தா ரன்றாநற்கீ ரன்கவலை
யோயவரும் பாவநத்தா ரூர். (96)

பூணுவளை கோடிலங்கிப் பொன்னகில்சேர்ந் தாவணமால்
பாணியென வாழும் பழனியே—நீணிலவு
வாய்க்கு மதிபன் மழைதவழ்காக் குன்றமலை
வாய்க்கு மதிபன் மனை. (97)

மேற்கலையுட் டோய்ந்துவந்து வெவ்வாள்கைக் கொண்டுமன்னர்
பாற்கரனை நேரும் பழனியே—சேற்கருங்கண்
முத்த மணிவார் முலைவள்ளி நாயகர்வே
லத்த மணிவா ரகம். (98)

மன்னிசைமான் மேன்மைதங்கி மாலையுக வித்தமிழ்விற்
பன்னர்மதி போலும் பழனியே—சொன்னவொரு
மூத்தா கமவித்தார் மோனந் திகழ்பேரின்
பத்தா கமவித்தார் பற்று. (99)

மத்தமல ரும்பணியு மாமதியுங் கொண்டுசிவ
பத்தரரற் கொக்கும் பழனியே—வித்தநெறி
யோது மறவா னுலகிலெலை யாளுவதெப்
போது மறவான் புரம். (100)

:0:

கொற்ற வடிவேற் குமரன் பழனிவெண்பா
வுற்ற விருபத்தைந் தோர்திறமேன்—மற்றிருபத்
தைந்தோர் திறமிருபத் தைந்தோர் திறமிருபத்
தைந்தோர் திறமா மரோ. (101)

வாழிபுவி வாழிசுரர் வாழிகடல் வாழிமுகில்
வாழிமறை வாழியறம் வாழிதவம்—வாழிதிரு
வாழிநிதி வாழிகதி வாழிபதி வாழிமதி
வாழிமலை மேவுபெரு மான். (102)

தெய்வ நலம்வாழி திருநீறு வாழியருட்
சைவ சமயநெறி தான்வாழி—கைவடிவேல்
வாழிதூவி நீடுதோகை வாழிமேவு வேழமாது
வாழிவாழி தூயகான மான். (103)

திருப்பழனி வெண்பா முற்றிற்று.





உ

ஸ்ரீ தண்டபாணி துணை.

# பழனிவெண்பாவந்தாதி.

———:0:———

காப்பு.

நேரிசைவெண்பா.

———

மதிமென்பூ நந்தனமேல் வந்தூர் பழனிப்
பதிவெண்பா வந்தாதி பாடத்—துதிபுரிவாங்
காமக்கோட் டத்தி கலசமுலைப் பாலருந்துந்
தாமக்கோட் டத்தி துணை.

நூல்.

கார்தாங்கு பூமரங்கள் காமரங்கள் பாடிவரு
சீர்தாங்கு வண்டுவெப்பத் தேன்பிலிற்றி—நேர்தாங்கு
வண்மைப் பழனிமயில் வாகனா நீயெனையா
ளுண்மைத் துணையாக வுற்று. (1)

உற்றார்பெற் றார்பிறரா லுண்டோ வுறுதிமிகக்
கற்றார்மற் றாருங் கனிந்தேத்தும்—பொற்றார்
வடிவேற் குகாபழனி வள்ளால் கனக
ணடியேற்கு நின்னருளே யாம். (2

ஆமைப் புறவடியா ராசைக் கடலழுந்துந்
தீமைப் புலையேனைத் தேற்றாயோ—மாமைக்
கழனிக் குகாமுக் கனிகடந்த தேன்பாய்
பழனிக் குகாகடைக்கண் பார்த்து. (3

பார்த்துயரு மேலைப் பசும்பொற் பதித்துயரும்
தீர்த்துயரு நின்னைத் தியானித்தும்—போர்த்து
முனைமலையி னென்னும் வயற்பழனிக் கந்தா
இனைமுநிலை நிற்கவருள் செய். (4

செய்ய வுனது திருவடிபோற் றித்தமியே
னுய்ய விரைவி னுளந்தெளிப்பாய் — துய்யவடி
வேலா பழனி விமலா வுமையீன்ற
பாலா தநிமிறுவப் பா. (5)

பாவலர்சூழ் தென்பழனிப் பண்ணவா விண்ணவர்கைப்
பூவலர்சூழ் நின்னருமைப் பொன்னடியை — மேவலர்தாங்
காம முதலாய கடலைப் படிக்கடந்து
மாமவுன வாழ்வுபெறு வார். (6)

வார்கமுகின் மாகமுகின் மன்னுபழ னிக்குமரா
தீர்கவலை மோகவலை சின்னவெனக் — கார்கதிமற்
றன்னையல தென்னைசொல வுள்ளதுநீ தள்ளவொண்ணு
தென்னைவகை தன்னையறி யேன். (7)

ஏனையா வன்ம மிரக்கமிலை யாவிணி
ணானையா தென்னையுன்னை நண்ணுவிப்பாய் — வானை
யடரும் பொழிற்பழனி யாண்டவா வீண்டெவ்
விடருந் தவிர்த்தருளி யே. (8)

ஏதுமறி யாதுழலு மேழைநா னென்னினுமென்
மீதுதய வேபுரிய வேளையிது — நீதுணையென்
றுற்றேன் பழனி யுடையா யயிற்படையாய்
மற்றேன் பராமுகஞ்சும் மா. (9)

மாதாபி தாகுருதெய் வங்களெலா மிங்கெனக்கு
நீதா னென்னைவிலக்க னீதியன்று — லாதாரம்
வேறுணர்கி லேன்பழனி வித்தகா வெவ்வினையை
நீறுசெயல் வேண்டுமின்றே நேர்ந்து. (10)

நேர்ந்துனது நாம நிகழ்த்துமெளி யேன்பவநோய்
தீர்ந்துவிட நீகருணை செய்குவாய் — சோர்ந்து
பராமுகமா யுற்றாற் பலர்க்கும் பழனிக்
குராவடிவே லாபழிப்பா கும். (11)

கும்பிட் டிறைஞ்சாக் கொடியேன் குணமிலிநான்
வம்பிட்ட கொங்கைமின்னார் மாலுழந்து — வெம்பிப்புண்
ணானே னெனினு மறிவுதிருத் திப்பழனிக்
கோனே யெனையடிமை கொள். (12)

கொள்ளித் துளையெறும்பாய்க் கோரநோய்க் கஞ்சுமெனைத்
தள்ளிற் பழிபுனைத்தான் சாராதோ—வள்ளிக்கு
நண்பா தமிழ்ப்பழனி நாதா வுனக்கபயங்
கண்பார் கருணை கனிந்து. (13)

கனிந்தகனி யின்பொறையாற் கற்புடைமா ணாரிற்
குனிந்தவனி நோக்குகருங் கொம்பர்—முனிந்தகிலாச்
சிந்தமுது வுண்டு தெவிட்டியிசைக் கும்பழனிக்
கந்ததமி யேனைமுற் றுங்கா. (14)

காவிசூழ் வாவிக் கழனிப் பழனிவள்ளால்
பாவிநா னென்னினுங்கண் பார்த்தருளித்—தீவினையை
மாற்றுவது நின்கடமை வஞ்சிப்பா யாகிலெனைத்
தேற்றுபவர் நீயலதார் செப்பு. (15)

செப்புக் களிம்புவல்லோர் தீர்ப்பதுபோ லென்னிதயத்
துப்புக் களைந்துனையே தோத்திரிக்கு—மப்புத்தி
தந்துகதி காட்டச் சமயமிது மாமயிலில்
வந்துபழ னிக்குகனே வா. (16)

வாவா வினித்தா மதியேல் வயற்பழனித்
தேவாதி தேவ சிகாமணியே—நீவாது
பண்ணு வதுமுறையோ பாவ முனைக்கிலையோ
நண்ணு முனதடிமை நான். (17)

நான்முகனு மான்முதல நல்லோர்மற் றெல்லோருங்
கான்மருவு தேன்மலர்தூய்க் கைகுவிக்க—மேன்மைதரு
தென்பழனி யின்பச் செழுஞ்சுடரே நீயெனையா
டுன்பமணு காமலெப்போ தும். (18)

தும்பிமுரல் சோலைபுடை சூழ்பழனி வாழ்பரம
வெம்பிணியி லென்னை விடலாமோ—நம்பி
யுனக்கபய மென்றாலு மோகோ விரங்கா
யுனக்கபட மென்னசொல்லு வாய். (19)

வாய்துதிக்கச் சென்னி வணங்கக் கரங்கடொழத்
தூய்துபெற் றுச்சித்தமுனைச் சூழ்ந்துருகப்—பாய்திரைப்பொற்
கஞ்சமடுத் தென்பழனிக் கார்த்திகே யாநியமித்
தஞ்சலெனத் தேற்றியெனை யாள். (20)

ஆளிமுக னாதி யவுணரையெல் லாமடர்த்த
மீளியெனு நீயெனது வெவ்வினையைத்—தூளிசெய
மாட்டாயோ வஞ்சனையேன் வாழ்பழனி வேண்முருகா
காட்டாயோ நல்ல கதி. (21)

கதிநீ யலாதிலைசிங் காரப் பழனிப்
பதிஞான பண்டிதவிப் பாவச்—சதிநோயை
நீப்ப தரிதோ நினைவின் படிக்கென்னைக்
காப்ப துனது கடன். (22)

கடனே படாது கலிநோய் தொடாது
திடனே விடாதெனைநீ தேற்றி—யுடனேயாட்
கொண்டா லதனாற் குறைவுனக்குண் டோபழனித்
தண்டாயு தாகுகநா தா. (23)

தாமதியே லென்னாற் சகிக்கமுடி யாதுதுயர்
நீமதியே னென்னினுநான் றேறியுய்ய—நீமதியே
நட்டமுனக் கென்னதனி நற்பழனி யப்பாநின்
னிட்டமனைத் தும்பிறிதொன் றில். (24)

இல்லாமை யில்லாமை யெவ்வளவும் வெவ்வினைநோய்
புல்லாமை யுள்ளம் புலராமை—நல்லாமை
மல்குபுனல் சூழ்பழனி வாசமுரு கேசவரு
ணல்குசலி யேலெனையிந் நாள். (25)

நாளின் பகையிலக்கி னப்பகைரா சிப்பகைபல்
கோளின் பகையெக் கொடும்பகையும்—வாளின்கட்
குஞ்சரிபங் காபழனிக் கொற்றவா தீர்த்தென்னு
நெஞ்சகநின் றேயருள்வாய் நீ. (26)

நீயே கலியுகத்தி னிச்சயதெய் வம்புவிக்கோர்
தாயே யெனவந் தனையன்றோ—நோயேகச்
செய்யா யெனினுனினுந் தென்பழனி மேவியவென்
னய்யா வருளினர்மற் றார். (27)

ஆராரோ முன்னின் னருளடைந்துய்ந் தாரெனவிப்
பாராரோ துஞ்சொற் பழுதேயோ—நேராக
வென்னமுறை யிட்டு மிரக்கமிலை யேபழனி
மன்னவிது தன்மமன்றுள் வந்து. (28)

வந்துலவு பஞ்சாய் மனதுசுழ லாதுறுதி
தந்துபிணி தீர்த்தானின் றுய்தந்தை—நொந்து
கெடுப்பாரோ தென்பழனித் தெய்வமே வைது
தடுப்பாரோ காதலிமார் தாம். (29)

தாம்பார் வலைவீழ் தனிமான்போன் மாலுழந்து
சோம்பா தறிவு நுலக்கியே—பூம்பாத
சேனைதரல் வேண்டுந் திருப்பழனிச் செல்வநின்றால்
யாக்கைமுடி யாதனவை யா. (30)

யாழுந் தலைவணங்க யாணர்வண்டு பாடுபொழில்
சூழுந் தமிழ்ப்பழனித் தோன்றலென்—றாழ்வினைநோய்
தீரே கருத்தைத் திருத்தே யருட்கண்ணாற்
பாரே யுனக்கென்கோ பம். (31)

பம்புபுனல் வாவிப் பழனிப் பிரானேயென்
வெம்புபிணி நீதவிர்க்கா விட்டாலிவ்—வம்புவிதா
னேதுசொல்லா துன்னையுதி லென்னநமக் கென்னிலொரு
போதுமெய்யா மோநின் புகழ். (32)

புகழத் தெரியாத புன்மையனென் றென்னை
யிகழத் தகாதுநின்பா லென்றும்—திகழ்பத்தி
நாட்டவமைத் துப்பழனி நாயகா நீயிதய
வாட்டமொழித் தாள்சலியா மல். (33)

மல்லார் புயப்பழனி மாமுருகா நெஞ்சமென்ன
கல்லா சிறிதுங் கரையாதா—பொல்லாத
வேளைபல பாவநின்றால் வெல்லமுடி யாதனவா
தாளைநினை வேனையின்னே தாங்கு. (34)

தாங்கச் சிறியிலையா சார்தற்கிது தொலையா
தீங்கச்ச முந்தீர்த் திடன்மலையா—பூங்கச்சிட்
டோங்குதனப் பொன்மா துலாவுபழ னிப்பதியா
யீங்குவரத் தாமதிப்ப தென். (35)

என்று வினிச்சகிப்ப தெப்படியப் பாவருத்த
முன்னால் விலக்குவதற் கொண்ணாதோ—பொன்னாடு
காத்தாயே தென்பழனிக் கந்தா வடியரிடர்
நீத்தாயே நெஞ்சகத்தி னின்று. (36)

நின்றுணையுண் டாகிலெந்த நீசரும்வெம் பாசவினை
வென்றுசுகம் பெற்று விளங்குவரா—லென்றுயரம்
பற்பலவு மற்பகலாப் பார்த்துமிரங் காததென்ன
பொற்பழனி யற்புதவிப் போது. (37)

போதுபல தூவியுனைப் பூசித் திறைஞ்சுகிலேன்
சாதுவென நீதி தழுவுகிலேன்—சூதுபல
கற்றேன் பழனிக் கடம்பநின்பேர் பன்னவுன்னப்
பெற்றேன் பொறுப்பாய் பிழை. (38)

பிழைத்தோ மவுணப் பிணிதவிர்ந்தோ மெல்லாந்
தழைத்தோ மெனவிபுதர் தாழ—மழைத்தொனியிற்
போற்றவடி வேலெடுத்த பொற்பழனி யப்பவென்புண்
ணாற்றவிது வேபருவ மால். (39)

ஆல்வளர்சுஞ் ஞான வரசின்ற பூங்குருந்தே
மேல்வளர்செந் நெற்பழனி மெய்ப்பொருளே—மால்வளர்புன்
னெஞ்சேன் வருத்தத்தை நீக்கிச் சுகந்தேக்கி
யஞ்சே லெனக்காத் தருள். (40)

அருள்சிறிது நீபுரிவா யாகிற் கொடிய
மருள்சிறிது மென்பால் வருமோ—தெருள்செறியு
மன்பர்புகழ் தென்பழனி யாறுமுக தேவவிரைந்
தென்பழைய வல்வினைதீ ரின்று. (41)

இன்றுதியொன் றுந்தெரியா தென்றுமுனி யேலெனைநீ
யன்றுதிரண் டென்புமுரு வானதன்றே—நின்றுபெருந்
தெய்வமதித் தாற்பழனிச் செல்வாமுற் றுநீவுண்டா
மெய்வழிபெற் றுய்வகையை விள். (42)

விள்ளும் புதியமலர் மென்மணம்போல் விண்புவிமற்
றுள்ளும் புறமுநிறைந் தோங்குநின்பாற்—கொள்ளும்
விருப்பமக லாதருளி மெய்யுறுதி தந்து
திருப்பழனி வேலவினை தீர். (43)

தீர்த்தமனந் தம்படிந்தென் றெய்வம் பலதொழுதென்
பார்த்ததலம் தோறும் பயின்றுறைந்தென்—கார்த்திகைமுன்
னோந்தியமைந் தாபழனி யெந்தா யுனதருளாற்
சார்ந்தியமைந் தாசையறு தார். (44)

தார்புனைதோ ளுங்கமலத் தாளுந் தனிவேலு
மார்புறைநா லுஞ்சே வலுமயிலு—நேர்பொலியக்
காட்சிகொடுத் தென்னைமுற்றுங் காப்பாற்றல் வேண்டுமினி
யாட்சியுடைத் தென்பழனி யாய் (45)

ஆயுங் கலைகற் றருந்தவஞ்செய் தாலுமுனைத்
தோயுங் கனிவெளிதிற் றோன்றுமோ—தாயும்
பிதாவுமென நீயருளிப் பேணினல்லாற் செம்பொற்
பதாபழனி வேலா பணி. (46)

பணியெனக்கு நின்னைப் பணிவதுவே யாகத்
துணிவுமுற்று நல்கித் தொடர்ந்த—பிணிநொடிக்குண்
மாற்றிப் பழனி வரதா வருள்சேர்வீ
டேற்றிப் புரப்பா யெனை. (47)

எனைத்துமுன தின்னருளா லிங்கியங்கு மென்று
னுனைத்தவிர வேறுபொரு ளுண்டோ—வனைத்துமொரு
நீயே யெனையன் னியனாச்செ யேல்கவுரி
சேயே பழனியர சே. (48)

சேவியே னின்னைவலஞ் செய்யேனை யோகொடிய
பாவியே னானெப் படியுய்வேன்—மேவியெனை
யாளாயோ தென்பழனி யப்பாவிண் ணப்பமொன்றுங்
கேளாயோ வுள்ளங் கிளர்ந்து. (49)

கிளர்ந்துவட மேருவையுங் கீழடக்கி மேன்மேல்
வளர்ந்துகடல் சீறி வரினுந்—தளர்ந்துவிடாச்
சித்தருங்கா ணாதவுனைத் தென்பழனி யப்பாநா
னெத்தரங்கா ணப்பெறுவே னிங்கு. (50)

இங்குமுளா யங்குமுளா யெங்குமுளா யென்பதனாற்
பொங்குபுரா ணாகமங்கள் போதுமோ—மங்குதறீர்
வேதமுமெய்ப் பாமேநின் மேன்மைபக ரப்பழனி
நீதவுனக் கேது நிகர். (51)

நிகர்விகளாய் நீதிநெறி நின்றுதுதி யென்றும்
பகர்பெரியோ ருள்ளுறைபொற் பாதப்—புகர்மதமால்
யானைதுணை வாபழனி யவ்வனவே லாதமிய
னேனையினி நீவஞ்சி யேல். (52)

ஏலா தனவுநமக் கேதுமென வெண்ணிநைய
மாலா யுழன்று வருந்துமக்கோ—மேலாங்
கதிசே ருவதினியெக் காலம் பழனிப்
பதியாய் பரிபாலிப் பாய். (53)

பாயும் புலனைப் பலவழிசெல் லாதடக்கி
வாயுந் தனுவு மனமுமொத்து—நோயுந்
துயருமகன் றுன்னைத் தொழப்பழனிக் கந்தா
தயவுபுரிந் தாளெனைநித் தம். (54)

தம்பழியிர்க் கெல்லா நின் றாலது வேறில்லை
யிம்பரெனைக் காக்கவுனக் கென்னதடை—யம்பழனிக்
காங்கேயா வள்ளி கணவா வினிச்சிறிதுந்
தீங்கேயா வண்ணந் திருத்து. (55)

திருத்துவசத் தோகைச் செழும்பழனி யாயென்
கருத்துவசத் தோகைக் கனிவைப்—பொருந்து
மயக்க வலையும் வருத்தும் பலகா
மியக்க வலையும் விட. (56)

விடத்தாலோ தொல்லை வினையாலோ வீண்சங்
கடத்தாலோ மாதர் கலவி—நடத்தாலோ
வேதினா லோவிளைந்த விந்நோயாற் றென்பழனி
யாதிபா தீர்த்தரு ளுண் டாக்கு. (57)

ஆக்குலமும் பொன்னாட் டவர்குலமு மன்பர்களின்
மாக்குலமுங் காக்குநெடு மான்மருகா—தாக்குலமு
மன்னபுயத் தென்பழனி யப்பா வடியேன்மே
லென்னவெறுப் பின்னமுநீ டேற்று. (58)

ஏற்றநடை யாள ரெனினும் பிணிப்பட்டா
லாற்றுவது சால வரிதன்றோ—போற்றுவது
மோராய்நா னென்னசெய்வே னோகோ பழனியப்பா
தாராயோ தேகசுகத் தை. (59)

தையலா ரும்பிறருந் தாமொவ்வோர் தன்மையெண்ண
மையலா ரும்பிணிக்குள் வாடுவனோ—மொய்யலர்சூழ்
நந்தவனத் தென்பழனி நாயகா நீயெனையா
ளிந்தவனத் தந்தவிர்த்தே யீண்டு. (60)

ஈண்டுகட வுட்புலவோ ரின்கவிக ளொத்தனையோ
பூண்டுவளர் கின்றநின்மேற் புன்மையினேன்—வேண்டுவன
பாடினுமின் பாமா பழனிக் குகாநீயே
வாடினவென் பாற்கருணை வை. (61)

வைவார் தமையுயர்த்தி வாழ்த்துநரை வாட்டுவது
சைவா கமதெய்வ சம்மதமோ—கைவேழ
மூர்பழனி வேண்முருகா வுண்மையறி யேனருளித்
தீர்பழைய வெவ்வினையாந் தீங்கு. (62)

தீங்குதலை வள்ளிபுணர் தென்பழனிக் கந்தாநா
னேங்குதலை நீசிறிது மெண்ணிலையே—யோங்குதலை
மீது விதியெழுத்தை வெல்வதரி தென்னினுனக்
கேது மகிமை யியம்பு. (63)

இயம்புயலி ஞங்காங் கிசைக்கும் பழனிச்
சுயம்புமுரு காகிடங்கிற் சோர்ந்து—கயம்புகல்போற்
பந்தபா சத்திடைவீழ் பாவியேனைப் புரப்ப
தெந்தநா ளந்தோ வினி. (64)

இனிக்கவுப சார மியம்பியுடம் பெல்லாம்
பனிக்கமுழு நாவும் பதறத்—துனிக்கயவர்
தம்பா லலைந்து சலித்தே னருள்பழனி
யம்பார் கடம்பா வளம். (65)

வளர்கின் றதுகவலை வாட்டுகின்ற தாசை
தளர்கின் றதுமனது சால—வளர்கின்ற
வண்டுவாஞ் செச்சையணி மார்பபழ னிக்குகநின்
றொண்டனான் கண்டு திடஞ்சொல். (66)

சொல்லும் பசுங்கரும்புஞ் சூழ்பழனி யாய்முறையிட்
டல்லும் பகலு மலருவனே—கல்லு
மிரும்புமுரு குந்தயவே னில்லையுனக் கென்மேல்
விரும்புவன தந்தாள் விரைந்து. (67)

விரைமலர்தூ விக்கனியை மென்றளிர்க்கைக் கொண்டு
வரைவில்கணீர் பொங்க வணங்கி—நிரைநிரையே
பூசையன்பர் போதும் பொழிற்பழனிப் புங்கவவென்
னாசையின்று தீர்த்தருள்செல் வம். (68)

வம்புலவு நின்மலர்த்தாள் வாழ்த்துநர்க்கெல் லாம்பழனி
யம்புனித பண்டிதனீ யன்றியுண்டோ—நம்பும்
வகைமருந்தே னுங்கனவில் வந்தா கினுஞ்சொன்
மிகையுறுந்தீ நோய்தொலைய வே. (69)

வேற்று மருந்தேன் விபூதியொன்றே போதாதோ
தேற்று னருண்மாத் திரமிருந்தாற்—காற்றுலவு
பஞ்சாமே நோயனைத்தும் பார்த்துப் பழனிவள்ளா
லஞ்சாமே யாள்வ தறன். (70)

அறக்கொடிதே செய்வ தழகா வுனக்குக்
குறக்கொடிசே ரும்பழனிக் கோவே—மறக்குடிலத்
துன்பமெல்லா மின்னே தொலைத்துத் தொழுதுய்ய
நின்பதமே நல்கியென்முன் னில். (71)

நில்லா தனபலவு நிற்பனவென் றேமயங்கிக்
கல்லா தவரிற் கடைப்பட்ட—பொல்லாத
வென்னையுநீ காப்பாயோ வெப்படியோ பொற்பழனி
மின்னுயில்லே வாவுணரேன் மெய். (72)

மெய்யோ மழைமின் விபவம் புனற்குமிழி
யய்யோ நினைவ தனேகவிதம்—பொய்யோதி
வீணாள் கழித்தேன் வினைதீர்த் தருள்பழனி
வாணா குறித்த வரம். (73)

வரம்பிலடங் காதுபொல்லா மாயா விகாரந்
திரம்பிறிதொன் றின்றித் திகைத்தே—னிரம்புசெழுஞ்
செச்சைப் புயபழனித் தேவே யெனைத்திருத்தி
யிச்சைப் படிக்குவர மீ. (74)

ஈயுமெறும் பும்புள் ளினமுநரி யும்பலபேய்
நாயுமருந் தூனுடம்பை நானென்றே—யோயுங்
கருத்தினே னைப்பழனிக் கற்பகமே முற்றுந்
திருத்தினால் வாழ்வுறுநின் சீர். (75)

சீர்தளைகுன் றுங்கவிபோற் றென்பழனி யப்பாநான்
பார்தனினிந் திக்கப் படுவேனோ—நேர்தழுவுந்
தன்மையில்வைத் தின்மைபிணி சஞ்சலமெ லாம்விலக்கி
நன்மைவினைத் துன்மைநிலை நாட்டு. (76)

நாட்டுள்ள செல்வர் நகைக்க நகைப்படுசொற்
கேட்டுள்ள மொல்கிக் கெடாமலுனை—வேட்டுள்ளா
மூதறிவு நீதருவாய் மும்மைத் தமிழ்ப்பழனி
நீதருக நாதவினை நீத்து. (77)

நீத்தமெனை யும்பொன் னிரைகொழிக்குந் தென்பழனி
யாத்தவிட முண்டுபுவி யண்டமெலாங்—காத்தசிவ
சம்புசுத னீகொடுமை சாதிக்க லாகாது
நம்புமெனை யாள்வாய் நயந்து. (78)

நயந்துயர்தோன் முதமன ஞானிகரு மெய்தி
வியந்துபரா வும்பழனி வேந்தே—பயந்துசதா
வாடுவனோ நோயான் மருந்துமருந் தென்றுசும்மா
தேடுவனோ தேற்றுதிவந் தே. (79)

தேவரிடர் தீரன் சிறைநீக் கினையொருபெண்
கூவவெதிர் வந்தனைசெங் கோல்வழுதி—தாவசுர
முன்பகலச் செய்தாய் முதல்வபழ னிக்குகவென்
றுன்பமிதைத் தீர்ப்பதரி தோ. (80)

தோற்றி யருணகிரி துன்பந் தனைத்துடைத்தாய்
தேற்றி யயனைச் சிறைவிடுத்தாய்—யேற்றிமுனம்
பொய்யா மொழிப்புலவன் போற்றவந்தாய் தென்பழனி
யையாவென் பாலே னடம். (81)

அடங்கவில்லை யாங்கார மாறவில்லை கோப
மடங்கவில்லை மாச்சரிய வன்மை—தொடங்கவில்லை
சித்தந் தவம்பழனிச் செல்வனின் னாலுய்வ
தெத்தந் திரங்கொண் டிருந்து. (82)

இருந்துறவோ பூணவறி வில்லைநல்லோர் பாலுந்
திருந்துறவோ கோசிறிதுஞ் செய்யேன்—வருந்துறவோ
வீணே பிறப்பித்தாய் மெய்ப்பழனி யப்பவென்னைப்
பேணே தணியே பிணி. (83)

பிணியவிழ்செந் தாமரையும் பிந்துனது பாதப்
பணிதழுவும் பத்தி பழுத்துத்—துணியுமனந்
தந்தா தரிஞான தண்டாயு தாபழனிக்
கந்தா கருணா கரா. (84)

கராமடுவிற் பற்றக் கலங்கும் கயம்போல்
விராவுதுயர்க் குள்ளாய் மெலிந்தேன்—குராவடிவே
லப்பா பழனிக் கதிபா கரையேற்றித்
தப்பா தருளுனது தாள். (85)

தாளா மதங்கந் தழங்குபழ னிக்கருணை
யாளா மதங்கொண் டலைந்தேனை—நீளா
வருத்துவது நீதியன்று வாழ்த்தன் பினரு
டிருத்துவது தானே யிதம். (96)

இதனு விதுவினையு மென்றறியே னுக்குன்
பதசேவை நல்கப் படாதோ—முதலாளா
நீயென்ன செய்தாலு நின்பெருமை தென்பழனித்
தாயன்ன ஞானோ தயா. (87)

தயாநிதிநீ யென்பதுதான் சத்தியமே யானால்
வியாதியினு லென்னைமெலி விக்கை—நியாயமதோ
சொல்லாய் விரைவிற் சுகந்தரவேண் டும்பழனி
வல்லாய் தகாதுவன்கண் மை. (88)

மையற்குள் வீழாது வன்பிணிதோன் றுதுமருண்
டையக் கனவி லழுந்தாது—நையச்ச
மில்லா துணைமறவா தெங்கள்பழ னிக்குகபோய்க்
கல்லா துறவருளுக் கம். (89)

கம்பித்த பாவிமனங் காட்சிபொருந் தித்திருந்த
வெம்பித்த மேமுதனேய் விட்டேக—நம்பித்து
பத்தர்புகழ் தென்பழனிப் பாலதண்ட பாணியெனு
முத்தவருள் செய்தளரா முன். (90)

முன்னே மகிமைபல மூடருங்கா ணச்செலுத்திப்
பின்னே திருவுளமேன் பேதித்தாய்—நின்னேர்மை
யாரறிவர் தென்பழனி யாறுமுக தேசிகவென்
கோரவினை தீரவருள் கூர். (91)

கூரியவே லாபழனிக் கோலா கலசீலா
வாரியபா லாமெய்க் கனுகூலா—காரியநா
னென்றுமறி யேன்வழுக்க ளுள்ளனவெல் லாந்திருத்தி
நன்றுதுதி யென்றுறுதி நல்கு. (92)

நல்குரவும் வல்வினையு நைபவருள் செய்யளிகள்
புல்குரவும் வெட்சியும்பைம் பூங்கடம்பு—மல்குரவுந்
தாங்கா பழனிச் சுகாதெய்வ யானைவள்ளி
பங்கா வளர்சிற் பரா. (93)

பராபரமா யல்லாய்ப் பகலாய்ப் புவன
சராசரமாய் மேலாய்த் தனியாய்—நிராமயமா
யுற்றுநீ யொன்று முணரார்போன் றுய்பழனிக்
கொற்றவா நிற்கிதொழுங் கோ. (94)

கோபமுண்டா ளோர்பாற் குணமுண் டெனுமுலக
நீபரிந்தே யாளா நிலைமையென்ன—தாபமொன்றோ
வெத்தனையென் றேதுவன்யா னெங்குமிலங் கும்பழனி
வித்தகநின் பார்வையைஎன் மேல். (95)

மேலறியேன் கீழறியேன் மெய்யறியேன் பொய்யறியேன்
மாலறியேன் போத வழியறியே—னாலறியே
னுன்னை யறிவதெவ்வா றேங்குபழ னிக்குகவென்
முன்னை வினையை முனி. (96)

முனிவரத வாவை முடிக்கும் பழனித்
தனிவரத வாவை தயவு—கனிவரத
னத்தங் கமய நகைபுனைநின் றாளிலென்னுள்
ளொத்தங் கமய வுடன். (97)

உடலி னுள நோயுமுள்ளத் துட்சஞ் சலமுங்
கடலிலெழு செங்கதிரைக் கண்ட—மிடவிருள்போ
லின்னேவிட் டேகவரு ளிங்குபசா ரம்பழனி
மன்னே நிற்கென்ன மொழிவல். (98)

வல்லே யருள்சுரந்து வந்துவகை யேதேனுஞ்
சொல்லே சொலியுட் டுயர்தணியே—நில்லேயென்
சித்தமிசைத் தென்பழனித் தேவசே னைபதியா
முத்தமநிற் கென்னகுறை யும். (99)

உம்பரிடர் தீர்த்தனையென் றுண்மையா கத்தெரிந்தா
லிம்பருய ரும்பழனி யெம்மானே—நம்பவருஞ்
சீருலவா நின்றபிற தெய்வந் தொழுதுவணங்
காருனையே சேர்வர்மயங் கார். (100)

வாழி

மின்பரவு கார்வாழி விண்வாழி மண்வாழி
யன்பர்குலம் வாழி யருள்வாழி—தென்பழனி
வாழிதமிழ் வாழிகுகன் வாழிபன்னி மார்வாழி
வாழியயில் வாழி மயில்.

பழனி வெண்பா வந்தாதி முற்றிற்று.

ஸ்ரீதண்டபாணிதுணை.

# பழனிபுரி மாலை.

## காப்பு.

### கட்டளைக்கலித்துறை.

கடலுண்ட கார்திரு மால்வடத் தேறுயில் காட்சியின்மீ
தடர்கின்ற வார்பொழில் சூழ்பழ னிபுரி யாண்டவற்குத்
தொடரன்பி னோர்தமிழ் மாலை புனையத் துணைவருவ
திடரும்ப சோபித வைங்கரக் குஞ்சரச் செஞ்சரணே.

## நூல்.

கிரிபோலும் வாகுமுன் னிலுங்கை வேலுங் கிரீடமும்பொற்
புரிநூலு மார்பமுஞ் சண்முக மும்புனை பூங்கடம்பும்
பரிமாம யூரமுஞ் சேவலுந் தோன்றவென் பாலணுகி
யரிதான சேவைதந் தாள்பழ னிபுரி யாண்டவனே. (1)

பரிபுர மோலிடு நின்னிரு சீதள பாதமலர்த்
தெரிசன மேழை யடியேன் பெறவருள் செய்வதென்றோ
விரிதிரை வாரியி னூடே யனந்தன் மிசைத்துயில்கூ
ரரிமரு காமுரு காபழ னிபுரி யாண்டவனே. (2)

எப்பா விகளுனைப் பாடினும் பாட்டுக் கிரங்கியவர்
தப்பா னவைபொறுத் தாள்வதன் றோமுறை சஞ்சலத்துள்
வெப்பா ரனற்புழு வொப்பாக நீயெனை விட்டுளதே
னப்பா மனவெறுப் பாபழ னிபுரி யாண்டவனே. (3)

சாலோக வின்ப முதற்பத நான்குந் தரற்குரிய
நீலோக பண்டித னென்றனிற் கென்பிணி நீக்கரிதோ
மாலோ னயன்புகழ் வேலோய் தரள மணிவளைகா
லாலோல மென்புனல் சூழ்பழ னிபுரியா ண்டவனே. (4)

ஈராறு கண்பெற் றிருந்து மவற்றொன் றிலேனுமெனைப்
பாராம லேனிந்த வன்கண்மை சாதிப் பதுபடித்தாய்
நேராகு மோவிது தீனத யாநிதி நீயெனப்பின்
னாராகி னுஞ்சொல்ல வோபழ னாபுரி யாண்டவனே. (5)

பாவக் கலியுக காலத் தினும்பற் பலமகிமை
மேவக் கருணைமிகு தெய்வ நீயன்றி வேறுளதோ
காவச் சமுமுட் கவலையுந் தீர்த்தெனைக் கானவள்ளி
யாவற் கிசைதுணை வாபழ னாபுரி யாண்டவனே. (6)

எத்தனை விந்தைக ளோவடி யார்பொருட் டேவிளைத்து
முத்தல முந்தொழ நின்றோய்க்கென் னெண்ண முடிப்பரிதோ
சித்த மிரங்கி யருள்செஞ் சடைக்குள்வெண் டிங்கள்புனை
யத்தர் தரும்புதல் வாபழ னாபுரி யாண்டவனே. (7)

இன்னம் பராமுக மாயிருந் தாலதி லெய்துகின்ற
சின்னம் பலவு நினக்கே யெனக்கல்ல தீயகொழிப்பாய்
பொன்னம் புயந்தனி னுஞ்சத் திரத்தினும் பொங்கியபா
லன்னம் புகழ்விளைக் கும்பழ னாபுரி யாண்டவனே. (8)

காரண காரிய மாகியெங் கெங்குங் கலந்தபரி
பூரண நீயெற் கயலான தென்ன புதுமையதோ
சீரண வாவெளி யேன்புன் மனத்தைத் தெளிந்தருள்வா
யாரண வோசைமிகும்பழ னாபுரி யாண்டவனே. (9)

சற்று கிலுமித் தமியே னுனது தயவுவரப்
பெற்று லவைபின் பெறுதன வெண்ணம் பிறழ்வதுண்டோ
முற்று முலையுமை பாலா தவத்தின் முயன்றுவினை
யற்றார் பெருந்துணை யாம்பழ னாபுரி யாண்டவனே. (10)

உன்னை யலான்மற் றொருபெருந் தெய்வ முணர்ந்திலன்யா
னென்னை விடேலுனக் காளாக்கிக் கொள்வதி லென்னதடை
முன்னை விரோத முளதோ பொறைநின் முறைசிறியேற்
கன்னை பிதாகுரு நீபழ னாபுரி யாண்டவனே. (11)

தினைத்துணை யேனுநின் சித்தமென் பக்கந் திரும்பிவிட்டால்
வினைத்துயர் தீர்வ தரிதோ பனிவெவ் வெயிலினுண்டோ
நினைத்த வரந்தமி யேற்கருள் செய்துமுன் னின்றிரட்சி
யனைத்துல கும்பணி யும்பழ னாபுரி யாண்டவனே. (12)

சென்னந் தொறுந்தெரிந் துந்தெரி யாமலுஞ் செய்துவந்த
மனவஞ் சனைமுதற் பாவ மனேக வகையெனினுங்
கனலொன் றியபஞ் செனவவை தீர்த்தெனைக் காத்தருள்வா
யனாரஞ் சிதன்பர வும்பழ னுபுரி யாண்டவனே. (13)

கொடியேன் விவேகிகள் கூட்டம் புகேனன்பு கூர்ந்துருகிப்
படியேன் வணக்கமொன் றில்லேன்புல் லேன்பெண்கள் பாலுழன்ற
மடியேன் முழுவஞ் சகனா னெனினும் வழிவழிநின்
னடியே னெனைக்கை விடேல்பழ னுபுரி யாண்டவனே. (14)

போற்றுகி லேன்பத்தி பூணுகி லேனின் புகழ்பலகாற்
சாற்றுகி லேனெழுத் தாறுந் தெரிந்துச் சரித்துவினை
மாற்றுகி லேன்புன் மயக்கால் விளைந்த மனக்கவலை
யாற்றுகி லேனென்னை யாள்பழ னுபுரி யாண்டவனே. (15)

எஞ்சலொன் றின்றி யெழுந்தவெங் காற்றி னிடையிலவம்
பஞ்சலைந் தென்னப் பகலு மிரவும்பல விடய
சஞ்சலஞ் சூழ்ந்தத் தவித்தேனை நீயித் தநிதிருத்தி
யஞ் [illegible] தரிப் பாய்பழ னுபுரி யாண்டவனே. (16)

நாட்டென [illegible] ட்கொள நல்லறி வின்றி நடைபிசகி
வாட்டெ [illegible] ண்டகண் ணார்வலைப் பட்டு மனத்துனது
தாட்டுணை வுந்தெரி யாதுழல் வேனைத் தருணமிதி
லாட்கொள வேண்டுமை யாபழ னுபுரி யாண்டவனே. (17)

எல்லாச் சுருதியு நின்னியல் பன்னி யிளைக்குமெனிற்
கல்லாச் சிறிய ரினுஞ்சிறி யேனென்ன கண்டுரைப்பேன்
பொல்லாத் துதியையுங் கொள்வா யெனக்குப் புவியினுனை
யல்லாற் புகலிலை காண்பழ னுபுரி யாண்டவனே. (18)

ஈன்றவ ளூமைக் குழந்தை குழறினு மின்புறுதல்
போன்றடி யேன்வெற் றுரைக்குங் கருணை புரிந்தருள்வாய்
தேன்றரு சோலைத் தமிழ்ப்பொதி யாசலச் செல்வன்முத
லான்றவர் சேவிக்க வாழ்பழ னுபுரி யாண்டவனே. (19)

பேராசை யென்னும் பிசாசு பிடித்துப் பிறப்பிறப்பொன்
றோராம லுன்னடி யேன்பே துறவ துனக்கழகோ
சீராக வென்னைத் திருத்திக் கருணை செயவருவா
யாராத வின்னமு தேபழ னுபுரி யாண்டவனே. (20)

துயில்வது முண்பதும் வீணாள் செலப்புன் றொழில்வழியிற்
பயில்வது மன்றிமற் றொன்றறி யேனென் பயந்தவிர்ப்பாய்
வெயில்விரி யும்பொற் கிரீடவிண் ணோர்சிறை மீட்டவெற்றி
யயில்வளர் செங்கைக் குகாபழ னாபுரி யாண்டவனே. (21)

தினந்தொறு நானிப் படித்துன்ப சாகரத் தேதிளைத்து
மனந்தடு மாறிற் கரைகாண்ப தெவ்வகை வாழ்த்துமென்மே
வினந்தய வேன்வர வில்லை யுனக்கிங் கெனைப்புரப்பா
யனந்த வினோதத் தமிழ்ப்பழ னாபுரி யாண்டவனே. (22)

உன்தரு ளாலடி யேற்கமை கல்வி யுணர்ச்சியனு
தினமுயர் வாயபி விர்த்தி பெறும்படி செய்யிகமேல்
கனவிதை தாவினர் கட்கது காத்தல் கடமைகண்டா
யனக தயாநிதி யேபழ னாபுரி யாண்டவனே. (23)

கல்லையுந் தாழ்த்திய வன்னெஞ்ச வஞ்சக் கசடரிடம்
பல்லையும் பாட்டையுங் காட்டும் படிதொடர் பாழ்மிடியுந்
தொல்லையுந் தீர்த்தருள் வானோர் பயத்தையுஞ் சூரினமா
மல்லையும் போக்கி யுளாய்பழ னாபுரி யாண்டவனே. (24)

வெவ்விய பாதக னானென் னினுநினை வேண்டுகின்றே
னெவ்விய னீசெய் யினுநின் பெருமை யெனக்கதிலென்
செவ்விய மாதவர் சிந்தையி னன்றிச் சிறியதொழி
லவ்வியர் பாலணு காய்பழ னாபுரி யாண்டவனே. (25)

கையா லுனைத்தொழச் சென்னியி னாலுன் கழல்வணங்க
மெய்யா யடிக்கடி வாக்காற் றுதிக்க விதித்துமன
னையா வியற்கையு நல்கினி யென்னை நழுவவிடே
லையா வுனக்கப யம்பழ னாபுரி யாண்டவனே. (26)

தொடைக்கல மங்கைய ராசையைப் போலுட் டுளைக்கவல்ல
படைக்கல மொன்று மிலைப்பினுந் துன்பங்கள் பற்பலவுந்
திடைக்கல கம்புரி கின்றன நானெளி யேனினிநின்
னடைக்கல மஞ்ச விடேல்பழ னாபுரி யாண்டவனே. (27)

கவிராஜ னென்றொரு பேரிட்டிந் நாள்வரைக் கண்ணியமாய்ப்
புவிராஜ ருஞ்சொல நீவாழ்வித் தாயது போலமுற்றுந்
தவிராம லென்றனைக் காப்பதுன் பாரந் தகார்மனத்து
அவிராத செஞ்சுட ரேபழ னாபுரி யாண்டவனே. (28)

வன்றுய ரக்கடல் வாய்த்தரும் பாவென் மனமலைந்து
கன்றுமி தற்கினி யென்னசெய் வேனெனைக் காத்தருள்வா
யின்றுமு னக்கப யங்கால னாலெளி யேன்கலங்கு
மன்றுமு னக்கப யம்பழ னாபுரி யாண்டவனே. (29)

ஓதா ரனந்தரன் னோரெண் ணமுமுடித் துள்ளிருந்தாய்
காதார வென்புன் கவியையுங் கேட்டுக் கடைக்கணிநின்
பாதார விந்த மலதெளி யேனையொப் பார்க்கினிவே
றாதார மொன்றுள தோபழ னாபுரி யாண்டவனே. (30)

பொருணாடி நல்ல புவிநாடி மாதர்புன் போகமெனு
மருணாடி யல்ல லுழந்தேனிக் கால வரையினிநான்
றெருணாடி யையநின் சேவடி நாடிச் சிவகிரிசூழ்ந்
தருணாடி யுய்வதென் றோபழ னாபுரி யாண்டவனே. (31)

தஞ்சம் பிறிதிலை நாயேற்கு நின்மலர்த் தாளையன்றி
வஞ்சம் புரிவது நீதிகொன் மாயை வசத்தலைந்து
நெஞ்சம் பகலு மிரவுநொந் தேனெனை நீபுரப்பா
யஞ்சம் பயில்வயல் சூழ்பழ னாபுரி யாண்டவனே. (32)

கெஞ்சா தவரையுங் கெஞ்சி யனேக கிலேசமுற்று
நெஞ்சா னதுநொந் திடவச மோநம்பி னேனினிநான்
பஞ்சா னனசொற் பனவேழும் போற்கடன் பாட்டையுன்னி
யஞ்சா தெனைப்புரப் பாய்பழ னாபுரி யாண்டவனே. (33)

மடிமைசண் டாள ருறவு வியாதி மனக்கவலை
மிடிமைவெம் பாவ வினைதொட ராமல் விலக்கிமுற்றுங்
குடிமைகுன் றாவருட் செல்வமெய்க் கல்வி கொடுத்தெனைநீ
யடிமைகொண் டாதரிப் பாய்பழ னாபுரி யாண்டவனே. (34)

வாயிற் பிறர்மதிக் கப்பேசு வேன்சில வார்த்தையவை
யோயிற் பழைய படியே மயங்குமென் னுள்ளமந்தோ
தாயிற் கருணை சுரந்தெனை யாதரி தாமதிப்பா
யாயிற் கவலை பொறேன்பழ னாபுரி யாண்டவனே. (35)

இகபர மென்பதுஞ் சீவேசுர ஜகத் தென்பதும்வாய்ப்
புகல வருஞ்சுகம் போலைய மின்றிப் பொருளுணரேன்
சகல விதங்களுங் காட்டி யெனக்குநின் றாளருள்வா
யகணி தடம்புறஞ் சூழ்பழ னாபுரி யாண்டவனே. (36)

தத்துவ முற்றும்வி சாரிக்கி லேன்சமர்த் தாற்சிலரை
யெத்துவ தற்கு நினைத்தேபண் ணுள்கழித் தேனிதையப்
பித்துவி கற்பமி திற்றீரு மோதவப் பேறருள்செய்
யத்துவி தப்பொரு ளேபழ னாபுரி யாண்டவனே. (37)

பேசுவ தொன்று நடப்பதொன் றாகமுன் பின்மறந்து
மாசு ளழுந்திய நாயேற்கு முய்யும் வகைபுகல்வாய்
பூசுசு கந்த மொடுந்தமி ழேந்திப் பொதியமலை
யாசக மெங்கு முலாம்பழ னாபுரி யாண்டவனே. (38)

பூதர மோகுட மோவென விம்மிப் புடைத்தமுலை
மாதர வாவின் மயங்கா திருக்க மனவுறுதி
நீதர வேளை யிதேவெறுத் தாலினி நின்னையன்றி
யாதர வார்சொலய் யாபழ னாபுரி யாண்டவனே. (39)

சாதி சனஞ்சமு சாரமெல் லாம்பணந் தான்மிகுந்த
போதிசை யுங்கை மெலிந்தா லுண்டோவெ றும்பொய்யுறவு;
நீதின முந்துணை யென்றடைந் தேனன் னிலையில்வைப்பா
யாதி யிளங்கும ராபழ னாபுரி யாண்டவனே. (40)

மதமோக டம்ப வகையால் விளைவை மறந்துபல
விதகா ரியங்க டொடங்கி வறிதின் மெலிகுவனோ
பதசேவை தந்து பரிபாலிப் பாயெனைப் பல்புகழ்சே
ரதளாடை யன்குழந் தாய்பழ னாபுரி யாண்டவனே. (41)

சொல்லற் கமைகுவ தல்லபொல் லாமனத் தொல்லையதை
வெல்லற் குபாயமொன் றுங்கண்டி லேனித்த வேளையிலுன்
மல்லற் பதும மலர்த்தாள் வழுத்த வரங்கொடுத்தென்
னல்லற் பிணிதவிர்ப் பாய்பழ னாபுரி யாண்டவனே. (42)

ஒருமட மான்முரு காமுரு காவென் றுரைக்கமுன்னோர்
வருகரு ணைநிதி யாகிய நீயெனை வாட்டுவதேன்
றருமமி தோபரி பாலிப்ப துன்கடன் சங்கடந்தீர்த்
தருகினி லேயிருப் பாய்பழ னாபுரி யாண்டவனே. (43)

உருளவெற் பேறு மருணகிரிக் கெதிரோடிவந்து
தெருளமுற் போதுப தேசித்த நீயித் தினத்தெளியே
னிருளகற் றுதிரங் காதிருக் கின்றதென் னென்னையுங்காத்
தருளவுற் றற்குறை யோபழ னாபுரி யாண்டவனே. (44)

விசைய கிரித்துரை நாளி லனேக விசேடமிங்காட்
டிசைய நடத்தினை நீயென் பதுநிச மேற்சகல
வசையு மொதுக்கி யெனைக்காப்ப தென்ன மலைகொ லுனக்
கசைவின் மனத்தர் தொழும்பழ னாபுரி யாண்டவனே. (45)

மலையாள முற்படு நாட்டிடை மூடர் மனத்துமெய்த்திக்
தொலையாத வற்புத மாங்காங் கியற்றத் தொடுத்தனைநன்
னிலைநீ யெனக்களித் தாலெவர் வைது நினைத்தடுப்ப
ரலையா தினிப்புரப் பாய்பழ னாபுரி யாண்டவனே. (46)

இன்பதுன் பங்க ளிருவினை யால்வரு மென்னின்மற்றோர்
வன்பெருந் தெய்வ மகிமையென் னேயுள்ள வாறுணர்த்தி
நின்பதந் தந்தெனை யீடேற்றல் வேண்டுநன் னேரமிதா
லன்பர்தஞ் சிந்தை யுளாய்பழ னாபுரி யாண்டவனே. (47)

பத்திசெ யுஞ்சனர்க் கெல்லாஞ்சித் திக்குமப் பத்திசெயார்க்
கெத்திசை யுஞ்சுக மில்லையென் பார்பத்தி யேபெரிதோ
நித்திய நின்செய லேபெரி தோவைய நீதெளிப்பா
யத்திமு கன்றுணை வாபழ னாபுரி யாண்டவனே. (48)

சிலர்தமி ழின்படி முன்கேடு செல்வஞ்சித் தித்தனவாம்
பலர்தமி ழும்பின் பலித்தில வேயென்ன பாவமந்தோ
மலர்முக நின்க ணருள்சற் றுண்டேலெந்த வண்மையுமுண்
டலர்பொழில் விண்டட வும்பழ னாபுரி யாண்டவனே. (49)

வேதா விதித்த விதிப்படி யேயெவ் விதங்களுமிப்
போதா மெனிற்சிறை புக்கவன் றோன்கைப் புணர்ப்பதனை
நீதான் விலக்கரி தன்றே யெனது நிலைமைதெரி
யாதா வுனக்கிதென் றோபழ னாபுரி யாண்டவனே. (50)

சிரிப்பார் புறத்துநிந் திப்பார் சலிப்பிற் றிரும்பிமுகஞ்
சுரிப்பார் குறிப்பறி யாரன்றித் தேறுதல் சொல்லியுப
சரிப்பா ரிலைத்தமி யேனென்செய் வேனெனைத் தாங்குதொல்லை
யரிப்பார் பொறுப்புரை யோபழ னாபுரி யாண்டவனே. (51)

முன்னமு [illegible] சென்மமுண் டென்று முதுபுலவோர்
சொன் [illegible] தாகநம் பாமற் சுழன்றிளைத்தே
னென்ன [illegible] டைத் தவிர்த்தரு ளின்பநிறை
யன்னவ வி [illegible] னாபுரி யாண்டவனே. (52)

தொலைபா வருத்தமிங் கார்சகிப் பார்தினந் தோறுமனஞ்
சிலையா விரக்க மிலையா வுனக்கருள் செய்வதொரு
மலையா வெறுப்பென் சொலையாகண் பாரெனை மாநதிபொன்
னலையா விறைத்தொதுக் கும்பழ நிபுரி யாண்டவனே. (53)

நோயொரு பக்கந் துயரொரு பக்க நுழைந்தகலிப்
பேயொரு பக்க மலைக்கநொந் தேனெனைப் பேணுகண்டாய்
நீயொரு பக்கம் வெறுத்தாலென் செய்வது நேயவள்ளி
யாயொரு பக்கமன் னும்பழ நிபுரி யாண்டவனே. (54)

கற்றன கேட்டன வெல்லாஞ்சந் தேகக் கீடற்சுழிபி
லுற்றன வேற்றமி யேனெங் ஙனமுனை யுன்னியுய்வேன்
குற்றமு மேக்கமு நீக்கிமெய்ஞ் ஞானங் கொடுத்தருள்செய்
யற்றமி தாற்கும ராபழ நிபுரி யாண்டவனே. (55)

தமராதி மற்றெவ ருஞ்சலிப் பெய்தத் தரித்திரமாங்
கமரார் சுரத்துழல் வேற்குன் கருணைக் கடலருள்வாய்
குமரா குரத்திம ணாளாகந் தாமெய்க் குகாகுழகா
வமரா வதித்தலை வாபழ நிபுரி யாண்டவனே. (56)

முருகா வெவர்க்கு முதல்வா சிவசண் முகாதிருமான்
மருகா தமிழ்ப்புல வாவென்று நானுனை வாழ்த்தமனை
முருகா திருப்பது நீதிகொ லோவென்ன யோசனைகா
ணருகா வருட்கட லேபழ நிபுரி யாண்டவனே. (57)

ஒன்றோ வருத்தமென் செய்வே னெனையிவ னோர்கசட
னென்றோ வெறுத்தனை நானேழை யேமற் றிதுவுனக்கு
நன்றோ வடைக்கல முற்றவர் தம்மை நலிவதிகழ்
வன்றோ விரக்கமின் றோபழ நிபுரி யாண்டவனே. (58)

பெருமித மார்பன் னிருகட் கருணைப் பெருக்கிலெனக்
கொருதுளி யேனுங் கிடைக்கச்செய் தாற்குறை வோவுனக்குப்
பருவமி லானென் றெனைநீ வெறுக்கப் படாதுகண்டா
யருவுரு வாயெங்கு மாம்பழ நிபுரி யாண்டவனே. (59)

வாக்கிற் குடிகொண் டிருந்து கவிதை மழைமதுரந்
தேக்கிப் புகழுந் திருவு முயர்த்திச் சிறுமைபிணி
நீக்கித் துதியையு நீமகிழ்ந் தேற்றெனை நின்னடிமை
யாக்கிக் கருணைசெய் வாய்பழ நிபுரி யாண்டவனே. (60)

செவிபணி ரண்டிருக் கின்றவுனக்கெச் செவியினுமென்
கவிசிறி தும்புகத் தானில்லை போவிக் கபடமென்றோ
குவிமன மின்றியெய்த் தேன்வினை தீர்தருக் கொம்பரெங்கு
மவிழ்மலர் வண்டிசைக் கும்பழ னாபுரி யாண்டவனே. (61)

பவவுரு வாகப் படைத்திடைக் கொஞ்சம் படிப்புநல்கிக்
கவலைபு காமற் சிலநாள் கடத்திப்பின் காதலுய்த்து
விவரபி லேனைத் தவிக்க விட்டாயிவ் விதத்திலுன்னை
யவனியெ லாமெச்சு மோபழ னாபுரி யாண்டவனே. (62)

இரவல னுள தொல்லைய னேகமிங் கீயவல்ல
புரவல ரார்பிணி சோம்பிடை யூறுபின் போவதெங்ஙன்
வரவறி யாதயர் கின்றேன் மயக்கத்தை மாற்றுகண்டா
யரகர வேண்முரு காபழ னாபுரி யாண்டவனே. (63)

நீயறி யாதன வில்லையென் னெண்ணநின் னெஞ்சறியுந்
தாயனை யாய்சிறு சேயனை யேனைத் தளரவிடேல்
வாயத னாலுற வாழ்த்தியர்ச் சித்து வணங்குமன்ப
ராயசு சீலர் தொழும்பழ னாபுரி யாண்டவனே. (64)

வெறுமைப் பயமும் வியாதிப் பயமும் விலக்கிலையேன்
மறுமைப் பயனருள் வாயென நம்பவு மார்க்கமுண்டோ
சிறுமைப் படமுடி யாதென் கலக்கத்தைத் தீருவமை
யறுமைப் பரியு முளாய்பழ னாபுரி யாண்டவனே. (65)

இவ்வழி நல்வழி யென்றோர்கி லேனுய்ந் திடுவதற்கோர்
செவ்வழி யொல்லை தெரிவிப்ப துன்கடன் சின்னவென்னை
வெவ்வழி செல்ல விடேலடி யார்க்கு வினைகடக்கு
மவ்வழி நல்கிறை வாபழ னாபுரி யாண்டவனே. (66)

பலபல யோசனை செய்து வெறும்புண் படுவதன்றி
நலனிது தீதிது வென்றுது ணிந்துமெய்ஞ் ஞானநெறி
செலவறி யாதென துள்ளமந் தோவெகு சீக்கிரத்திவ்
வலமர றீர்விம லாபழ னாபுரி யாண்டவனே. (67)

தூக்கமும் பந்த நெடுமூச் சடிக்கடி தோன்றநல்ல
வூக்கமும் பண்பு மொடுங்கப் பொலிவுக வற்றமன
வேகமுந் துன்ப மெவையுந் தணித்தெனக் கின்னமும்பே
ராக்கமுந் தந்தருள் வாய்பழ னாபுரி யாண்டவனே. (68)

வாய்புல ராது மனஞ்சலி யாதுடல் வாடிமிக
நோய்புகு தாதுபன் னூன்மற வாது நொடிக்குளெண்ணப்
பேய்புற மோட முடுக்கி யெனக்குநற் பேர்தருவா
யாய்புல வோர்துதிக் கும்பழ னுபுரி யாண்டவனே. (69)

முந்தினர் பாவமென் வெவ்வினை தெய்வ முனிவுநல்லோர்
தந்திடு சாப முதற்றீங் கெவையிருந் தாலுமவை
சிந்திவி சாரமெ லாந்தீர்த்தல் வேண்டுந் திகழ்பொழின்மே
லந்திநி லாவுல வும்பழ னுபுரி யாண்டவனே. (70)

பிறந்தவி ராசிப் பிழைநவக் கோளின் பிசகுறினும்
பறந்தவை யோடப் பணிப்பதற் கென்னநின் பால்வலிமை
சிறந்தில தோவெப் படியேனு மென்குறை தீர்த்தருள்வா
யறந்திரி யாவற் புதாபழ னுபுரி யாண்டவனே. (71)

பொறிதள ராமற் புலனலை யாமற் புகல்கரண
நெறிபிச காமற் கபமே லிடாமலந் நேரநின்றாட்
குறிதவ ராமற் றெளிந்துய்ய வென்னைக்கைக் கொண்டருள்வா
யறிவுடை யோர்மொய்த் துலாம்பழ னுபுரி யாண்டவனே. (72)

இவனனை யார்நமை யேத்தினென் னேத்தில ரென்னினென்னென்
றுவமையி லாதுள நீநினைத் தாலுல குய்வதுண்டோ
கவலையு றுவகை காப்பா யெனைத்தகு காலமிதா
லவவழி யூடு விடேல்பழ னுபுரி யாண்டவனே. (73)

சூலை கிரந்தி மகோதரங் குன்மஞ் சுரங்குளிர்கா
மாலை பவுந்திரங் குட்ட முதற்பிணி மற்றவுநின்
காலை நினைத்தவர் பாற்சார்வ வோவென் கசடொழிப்பா
யாலை மருங்குய ரும்பழ னுபுரி யாண்டவனே. (74)

கூறிய கூறிய கூறினு மேற்றுக் கொடுசிறியேன்
றேறிய நீயருள் செய்திடல் வேண்டுந் தியங்கவிடேல்
வீறிய வாறிரு தோண்முதல் வாமயல் வென்றமுனி
வாறிய போதர் தொழும்பழ னுபுரி யாண்டவனே. (75)

எழுத்தொடு சொற்பொருள் யாப்பலங் காரமென் றிங்குயர்ந்தோர்
வழுத்து மிலக்கண மென்புன் கவியில் வழுவினுநீ
முழுத்தய வுற்றினி தாக்கொளல் வேண்டு முனிவருள்ளத்
தழுத்து மலர்ச்சர ணுபழ னுபுரி யாண்டவனே. (76)

இழிவான குற்ற மெலாங்குண மாகக்கொண் டென்னைநல்ல
வழிநீ புகுத்திடி னல்லான்மற் றெந்த வகையினுய்வேன்
விழியால் விருப்பொடு பார்த்திடர் தீர்த்திடல் வேண்டுமென்று
மழியாத மெய்ப்பொரு ளேபழ னிபுரி யாண்டவனே. (77)

நாடுங் குறுமுனி கீரன்பொய் யாமொழி நாவலவ
னீடுங் கருணை யருணை கிரிமுத னின்றநல்லோர்
பாடுங் கவிவல னீயென் னினுமென்புன் பாடலுங்கொ
ளாடுங் களிமயி லூர்பழ னிபுரி யாண்டவனே. (78)

வையந் தனிற்கிர வுஞ்ச மெனும்பெரு வஞ்சநெடுஞ்
சையந் தனைத்துக ளாக்கியத் தாருகற் றுக்கிமிக
நையந் தரத்தரை முற்காத்த நிற்கிந்த நாளிலென்னு
ளையந் தவிர்ப்பரி தோபழ னிபுரி யாண்டவனே. (79)

மோனந்த வாமுனி வோரையும் பேதிக்கு மோகமெனு
றூனந்த வாதையெவ் வாறு கடந்துனை நாடியுய்வேன்
றேனந்த வாசனை வீசுநின் பூவடிச் சேவையரு
ளானந்த வாரிதி யேபழ னிபுரி யாண்டவனே. (80)

உபராக மப்பொரு ளொன்றறி யேன்வினை யூடலைக்க
வயராகு தொட்ட கலாநிதி யென்ன மதிமழுங்கித்
துயராழி யிற்சுழல் கின்றேன் கருணை சுரந்துமுன்னின்
றயரா தெனைப்புரப் பாய்பழ னிபுரி யாண்டவனே. (81)

தாழாது னுத்தரைப் பாடிக்கொண் டாடித் தரித்திரத்துள்
வீழாது துட்டர்சொற் கேளாது மற்றொரு வெவ்வினையுஞ்
சூழாது பத்தியிற் சோராது சென்மத் துயர்க்கடலு
ளாழா தெனைப்புரப் பாய்பழ னிபுரி யாண்டவனே. (82)

பணிகின்றி லேன்றுதித் தர்ச்சித் துனைச்சிவ பத்திவழி
துணிகின்றி லேன்புலைக் காமாதி மூன்றுந் துறந்துபவந்
தணிகின்றி லேன்றமிழ்த் தார்மற வாதுநின் றுண்மிசைநா
னணிகின்றி லேன்பொறுப் பாய்பழ னிபுரி யாண்டவனே. (83)

நனவி னிகழ்ந்தன வல்லா விகற்ப நடைபலவுங்
கனவி னெழுந்து மயக்கின வேயிக் கலக்கமுள்ள
மனசு திருந்துவ தென்றோ விரைந்து வரந்தருவா
யனவ ரதந்துதி சேர்பழ னிபுரி யாண்டவனே. (84)

ஓடின நாள்பல வோட்டைப் பழங்குடத் துட்புனலாய்க்
கூடின மேனரை கூற்றி னுதையக் குறியெனப்பின்
னீடின வாசை கிலேசங் கரணமு நெஞ்சமுங்கூத்
தாடின நீயெனை யாள்பழ னாபுரி யாண்டவனே. (85)

தேகமுந் தேகியும் வெவ்வேறென் பாரொன்றுந் தேறுகிலேன்
மோகமுஞ் சோகமுந் தீர்த்தென தெண்ணத்தை முற்றுவிப்பாய்
மேகமும் பூகமும் போலுங் குழற்பொன் மிடற்றுவள்ளி
யாகமும் பாகமுஞ் சேர்பழ னாபுரி யாண்டவனே. (86)

கலைபல சொற்பல வெண்ணம் பலமயக் கம்பலவின்
புலைபல விச்சை முயற்சி பலமனப் புண்பலவென்
னிலைபல வெப்படி நான்றேர்ந்துய் வேனரு ணீயிலங்க
ளலைபல வொத்திசைக் கும்பழ னாபுரி யாண்டவனே. (87)

மாயா விகற்ப மிதுசச் சிதானந்த வாழ்விதென்று
நீயா தரிக்குமிந் நாயேற் குணர்த்திட நேர்வருவா
யோயா மனப்பெரும் பேய்பிடித் தாட்ட வுயர்விழிவொன்
றுயா தினைத்துநொந் தேன்பழ னாபுரி யாண்டவனே. (88)

ஊனறி வின்றி யியற்றினை பாவங்க ளென்றெனைநீ
தானலி கின்ற திருவே லுனது தயைக்கழகோ
நானது கண்டு நடந்தினி யுய்வதெந் நாளிமையோ
ரானவர் வந்து தொழும்பழ னாபுரி யாண்டவனே. (89)

சோபத்தை யும்பவத் துன்பத்தை யுங்கெட்ட துட்டமனத்
தாபத்தை யும்பகைக் காலப் பிசுகையுஞ் சண்டன்மன்
கோபத்தை யும்பிணிக் கோரத் தையுமென் குறையையுமெவ்
வாபத்தை யுந்தவிர்ப் பாய்பழ னாபுரி யாண்டவனே. (90)

மத்தத்தை வென்றிருக் கின்றவர் போற்றுன் மலர்ப்பதத்தென்
சித்தத்தை யன்பிற் செலுத்தும் படிக்குத் திருத்தியினி
யெத்தத்தை யுந்தவிர்த் தீடேற்றல் வேண்டு மிசைகுயிலோ
டத்தத்தை யும்படிக் கும்பழ னாபுரி யாண்டவனே. (91)

சராசர சீவ தயாநிதி நீயிச் சமையமென்முன்
வராவிடில் யானினி யாரை நினைத்து வரம்பெறுவேன்
சூராவடி வேல குழந்தைக் குமர குருமணிச்சூட்
டராவணை மால்பர வும்பழ னாபுரி யாண்டவனே. (92)

இருவினை யின்பயன் பின்று மெனவு மிலையுடனே
வருமென வும்பொய் வழக்கீ தெனவும் வகுக்குமுலை
கொருவித மன்றெது வுண்மை யதனை யுணர்த்தியெற்கு
னருண பதந்தரு வாய்பழ நிபுரி யாண்டவனே. (93).

முனந்தவ சிலர் மொழிதீர்த்த யாத்திரை மூர்த்திதரி
சனந்தல வாச மிவைமேவ றனுட்டிக்கச் சத்தியுண்டோ
தினந்தமி யேனுனை யேநம்பி னேன்வினை தீர்புகழ்தற்
கனந்தனு மேயயங் குடம்பழ நிபுரி யாண்டவனே. (94).

பெருவெளி யோரணு வாக வனுவும் பெருவெளியாய்
மருவ வனேக விநோத மெவ்வாறு வழங்கிவரக்
கருதினு நீசெய லாமென் கவலை களைந்திடவே
தருமை கொலோபுக லாய்பழ நிபுரி யாண்டவனே. (95).

பூவாழ் சுபாவ நரேசருங் குற்றம் பொறுத்தருளி
மேவா வனேகர் களைந்தெண் டியாமல் விலக்குகின்றார்
தேவாதி தேவ சிகாமணி நீயடஞ் செய்வதென்சொ
லாவா விநோதரு மம்பழ நிபுரி யாண்டவனே. (96).

நீதித் துறையறி யேனெனி னுஞ்சில நின்பெயரை
யோதித் துதிபுரி கின்றேன் வருத்த மொழித்தருள்வாய்
சோதித் திடநினை யாதே பொறுத்துளந் தூய்மதியோ
டார்தித்த னும்வலஞ் சூழ்பழ நிபுரி யாண்டவனே. (97).

பார்க்கு மளியிசை பாடிய பூங்கற் பகவிமையோ
ரூர்க்கு முரக ருலகினுக் கும்பண் டுளநடுக்கந்
தீர்க்கு முயர்வுடை நீதமி யேனவஞ் சிக்கினின்
யார்க்கு முறையிடு வேன்பழ நிபுரி யாண்டவனே. (98).

வணங்குவ துங்கை குவிப்பதும் வாழ்த்து வதுந்தொழும்புக்
கிணங்குவ துந்தெரி கில்லாத பாவியென் றென்னைவெறு
துணங்குத வின்றியின் றுய்யும் படிக்கருள் கோங்குகங்கை
யணங்கு முவந்தமைந் தாபழ நிபுரி யாண்டவனே. (99).

பாடிய பண்பெப் படியிருந் தாலுமென் பாமலர்த்தார்
சூடி வரம்பற் பலவுந்தந் துள்ளத் துயர்தவிர்ப்பாய்
வாடி மயங்கச் செயேல்வரை தோறு மகிழ்ந்துவிளை
யாடி வருஞ்சிற் பராபழ நிபுரி யாண்டவனே. (100).

## வாழி.

கார்வாழி வாழி சராசரம் வாழி கருதுபொருள்
சீர்வாழி வாழிசை வந்தமிழ் வாழி செழுங்கடப்பந்
தார்வாழி வாழி மயில்வாழி வேல்புடை தங்குநங்கை
மார்வாழி வாழி பழநி புரிக்குகன் வாழியவே.

பழநிபுரிமாலை முற்றிற்று.



உ

கடவுள் துணை.

# குமரனந்தாதி.

## காப்பு.

### கட்டளைக் கலித்துறை.

பூமேவு கற்பகப் பொன்னகர் முன்னொர் புலவனுக்கு
மாமேவு மன்பின் வழங்கிய பேரருள் வள்ளலென
நாமேவு வேற்கைக் குமரனந் தாதிக்கு நற்பழனிப்
பாமேவு சீர்திகழ் பட்டத்தி யானை பதந்துணையே.

குமரனந் தாதி னனினந் தொடுத்துயி லம்பழனிக்
குமரனந் தாதி சொலத்துணை யாமயன் கோபதிவாழ்த்
துமரனந் தாதி பணிவர்கொண் டாடவத் தோன்முகற்காய்
சமரனந் தாதி லகுமைங் கரத்தன்பொற் றுளிணையே.

## அன்பர் துதி.

பொருந்திரை வேலை யருந்திய செல்வனைப் போற்றியின்பந்
திருந்து மருண கிரிநாதன் பொற்பதஞ் சிந்தையில்வைத்
தருந்திறல் சேர்திருத் தொண்டர்க ளைப்பணிந் தன்பினர்பால்
வருந்தனி மோனக் குமரனந் தாதி வழுத்துவனே.

## நூல்.

புவனங் கடந்த பரம்பொரு ளேயொளிர் பொற்புடைத்துங்
கவனங் கடந்த னடைத்தன நேர்சசி கண்களிகூர்
தவனங் கடந்த விசமுன் னருள்வர தாமலப்பா
வவனங் கடந்த கந்தா நம்பினே னின்மலர்ப்பதமே. (1)

பதங்கா தலங்குற வஞ்சி யவர்தம் பாற்சொலிச்சந்
ததங்கா தலங்குற வாக்குமம் மாதரைச் சார்ந்துடலம்
வதங்கா தலங்குற நற்போதந் தந்தெனை மாசடரா
விதங்கா தலங்குற னயனந் தோன்றெழு மெய்ப்பொருளே. (2)

மெய்யந் தரங்க முதல்வனைத் தானவர் வீறயிருட்
குய்யந் தரங்க வருநெடு வேலனைக் கூறுதுதி
செய்யந் தரங்க மெறிகடன் ஞாலத்துட் செல்வமெல்லாம்
பொய்யந் தரங்க வனமுனக் கேனதிற் புண்ணமே. (3)

புன்னாக மஞ்சு பொறுக்கும் பழனிப் பொருப்பினுறை
மன்னாக மஞ்சு குணமா தவத்தர் வழுத்துமுமை
துன்னாக மஞ்சு முகமுடை யானருண் டோன்றல்விடப்
பன்னாக மஞ்சு மயில்வா கனன்பதம் பற்றுநெஞ்சே. (4)

பற்ற கரத்தரங் கெட்டுவெஞ் சூரன் படப்பொருவே
லுற்ற கரத்தரங் கோர்நா ரதன்மகத் தூடெழுந்த
மற்ற கரத்தரங் கஞ்சமென் றூனை மதித்துருகா
வெற்ற கரத்தரங் கக்கட னோர்பவம் விட்டிலரே. (5)

விட்டிலங் காவ தறியாமை யாற்சுடர் மேல்வீழல்போற்
கட்டிலங் காவ னிதிவா ணுதலிற் கனதிலகப்
பொட்டிலங் காவ லரிவையர் மையலிற் போவதென்னே
மட்டிலங் காவ துடையான் மருகனை வாழ்த்து நெஞ்சே. (6)

வாழ்வித் தனந்த வறுவதன் றென்று மயங்கிநெறி
தாழ்வித் தனந்த வினைசெய லுற்பவத் தைத்தருமோர்
பாழ்வித் தனந்த கவாநடை யார்சம பாசநெஞ்சே
சூழ்வித் தனந்த மலைக்குமா ரேசன் றுணைச் சரணே. (7)

சரங்கா விதந்தர மெஞ்ச வயங்குகட் டையலர்பா
லிரங்கா விதந்தர வந்தருள் வாய்பொன் னெழினலமு
திரங்கா விதந்தர வஞ்ச நடிக்குஞ் சிகாவளமா
துரங்கா விதந்தர ணிக்குள் வள் ளிக்குறத் தோய்பவனே. (8)

தோய வலைக்கு வலயத்து ளென்னைத் துலங்குமெழி
லாய வலைக்கு மிழிமைப் பொருமுலை யார்தமது
மாய வலைக்கு வசப்படுத் தேலமர் வாளவுண
ரோய வலைக்கு மயிற்குமா ராவரு ளுண்மதியே. (9)

மதியா தவனற் சினமூடர் கட்கு வரந்தரச்சம்
மதியா தவனற் குழற்குஞ் சரிமண வாளனவிர்
பதியா தவனற் சுரர்பணி வேளருள் வாழ்வுறத்தா
மதியா தவனற் புதமலர்த் தாளை வழுத்துநெஞ்சே. (10)

வழுத்த விரும்பழு வாரணத் துச்சியில் வாழ்முருகன்
கொழுத்த விரும்பழ னம்புடை சூழ்ந்து குறைவிலின்பம்
பழுத்த விரும்பழ நிக்கும ரேசன் பதத்தினையுள்
ளழுத்த விரும்பழ னீள்வினைப் பாச மறற்கு நெஞ்சே. (11)

அறந்த வளமலை யாற்சூரைத் தோயங் கவன்சடைமேற்
சிறந்த வளமலை யன்பாமைந் தாவினை செய்யமதித்
தறந்த வளமலை கொங்கையர் மைய றவிர்த்தருள்சீர்
பிறந்த வளமலை வின்மா பழநிப் பிரபலனே. (12)

பிரமனந்தத்த மிசையேந்து மாயன் பிறங்குவெண்மா
திரமனந்தத்த வசித்தர் புகழ்மந் திராவெனகங்
கரமனந்தத்த துறுநருள் செய்பொற் கமலதிரந்
தரமனந்தத்த மதுப்பெய் பழனித் தயாபரனே. (13)

பரவற்கரிய பதந்தரு ஞானம் பயிற்றுமலர்
விரவற்கரிய குழலார் மயல்வெவ் வினைதவிர்க்குங்
கரவற்கரிய திகர்தொழுந் தூயன் கனவமளி
யரவற்கரிய தளித்தான் மகன்சர ணம்புயமே. (14)

புயங்கந்தனக்கு நிகரான வல்குலும் பூவுலக
மயங்கந்தனக்கு வடுமுடை யாரின்ப வாழ்வுநற்செய்
வியங்கந்தனக்கு வியநிலை யோநெஞ்ச மேயிதநித்
தியங்கந்தனக்கு மரனரு ளாகிய செல்வமெய்யே. (15)

செல்லங்கவனத் தொடையான் மருகன் செகமெனுமிவ்
வில்லங்கவனத் தமதகன் றூர்க்கருண் மெய்க்குமரன்
புல்லங்கவனத் துகைப்பான்மைந் தன்பதம் போற்றுநெஞ்சே
சொல்லங்கவனத் திருப்புகழ் வைவச் சுதனஞ்சவே. (16)

அஞ்சரிதான புலன்மற் றதனைவென் றங்கமெவை
யுஞ்சரிதான வனிவாழ்வு பொய்யென் றுணர்ந்துதெய்வ
குஞ்சரிதான வனவள்ளி கோனன்பு கொண்டவர்பாற்
சஞ்சரிதான தவமிது முத்தி தருநெஞ்சமே. (17)

தருமங்களங்கலங் காரம் பெறத்திருத் தார்பிறர்மேல்
வருமங்களங்கலங் குங்கொலை காமம் வளர்த்துவர்செந்
திருமங்களங்கலந் தோங்கும் பழநிச்செவ் வேளையுன்னார்
கருமங்களங்கலந் தீர்வதெவ் வாறு கனநிலத்தே. (18)

கனகமலைக்குங் கவின்றரு பூண்முலை காதடர்கண்
பனகமலைக்குங் கடிதடங் கொண்டவர் பற்றுமிகுந்
தெனகமலைக்குந் துயர்தீ ரரிக்கு மிலங்குமயி
லனகம லைக்குந் திருமரு காநின் னடைக்கலமே. (19)

கலங்கா மனத்தின மன்னைப் படாதெனைக் காவுனடைக்
கலங்கா மனத்தின தென்ற லுலாவக் கடிகமழ்ந்த
கலங்கா மனத்தின மின்புற வந்தகந் தாகதிபு
கலங்கா மனத்தின மூர்பழ னைபுரிக் காவலனே. (20)

காவம்பரத்தை யளாவுஞ்செந் தூர்க்கதிர் வேற்குமர
மேவம்பரத்தை யனைய கவலை மிடிகொடிய
பாவம்பரத்தை யராசை கிரகப் பகைதவிர்த்துத்
தாவம்பரத்தை யுணருமெய்ப் போதஞ் சதானந்தமே. (21)

நந்தாமலக விடம்புகழ் சைவத்தை நாட்டியவேற்
கந்தாமலக முடையா ருளத்தனு காக்குமரா
முந்தாமலக வனத்தர சேநின் முதிரருளின்
பந்தாமலக வனத்தால் வருமுற் பவமறவே. (22)

பவளம்பரவ வருமிதழ் வேல்விழிப் பார்மகளிர்
யவளம்பரவ மருய்ய வந்தமெய் யாவினைதீர்
திவிளம்பரவ மருத வயல்புடை சேர்ந்துலங்
குவளம்பரவ வளரும் பழனிக் குமரய்யனே. (23)

ஐவரையங்க சனைநெடுங் கூற்றை யடக்கிமுழு
மைவரையங்க ணியரைவெல் வீரன்று வள்ளியஞ்சக்
கைவரையங்க மதமா வழைத்தருள் காரணன்மெய்ச்
சைவரையங்க முதமேற்று வான்பெயர் சாற்றுமினே. (24)

மின்னலங்கார தனிலெழல் போதுமிம் மேதினியிற்
பொன்னலங்கார மனைமுதல் வாழ்வதிற் போயுழன்று
பின்னலங்கார மிருகோப மேவும்பித் தீர்குமரன்
றன்னலங்கார மலர்த்தாளெஞ் ஞான்றுந் தலைக்கொண்மினே. (25)

கொண்டலைவாவி வெருட்டிக் கமுகின் குலையுதிர்த்துத்
தண்டலைவாவி தனில்வாளை மேவுந் தமிழ்ப்பழனி
வண்டலைவாவி கடமிடி தீர்திதி மைந்தர்வலி
கண்டலைவாவி பொருந்திமை யோரைமுன் காத்தவனே. (26)

தவந்தானமல வினைகொண்டு காலந் தனைக்கழித்த
லவந்தானமல ரளிநாடல் போ லும்பர் யாருமதிப்
பவந்தானமல னெனுங்கும ரேசன் பழனியென்று
மூவந்தானமல மொழிப்பானைத் தேடி யுருகுநெஞ்சே. (27)

உருவாரமர மனையா ரருமை யுளத்துணரார்
தருவாரமர மகன்றுரைப் பாடித் தயங்குவனே
மருவாரமர வணிந்தசெவ் வேணி வரன்புதல்வா
திருவாரமர தளாதிப னேமற் செயலருளே. (28)

செயமந்தராசல வண்டோட் குகனைத் தினமறந்தம்
புயமந்தராசல னங்குழ லொப்பவர் புன்னலகம்
பியமந்தராசல நீங்கா வவர்திருப் பெற்றியெல்லா
நியமந்தராசல மேலாங் குமிழி நிலைத்தென்பமே. (29)

பவராகவத்திரி பாசொழி யானும்பர் பற்றலரென்
பவராகவத்திரி யத்தடிந் தானுற் பவந்தவிரின்
பவராகவத்திரி யாதி முனிவர் பணிகுகன்சு
புவராகவத்திரி யானுண் டெமக்கோர் பயமில்லையே. (30)

பயம்புவைப்பாரத் திகள்போன் மயலுட் படேல்சிரத்துந்
தியம்புவைப்பாரத் திருநுத லுட்டத் தினிலுதித்த
சுயம்புவைப்பாரத் தனையுந்தந் தானைத் தொழுதுதமி
ழியம்புவைப்பாரத் தினிவேன் மயிலையு மெண்ணுநெஞ்சே. (31)

நெஞ்சகத்தானந்த நீடிமுள்ளான்கரி நீள்வதன
வஞ்சகத்தானந்த வான்புகத் தாக்கு மயிற்குமரன்
விஞ்சகத்தானந்த மெய்யடி யாரை விடானைமறந்
தஞ்சகத்தானந்த னந்தவர்க் கீந்துமென் னுவதுவே. (32)

ஆவலரும்பணி மென்னகை மங்கைய ராடவந்து
மேவலரும்பணி செல்வரும் பொன்றினர் வீணதன்றே
நீவலரும்பணி லஞ்சூழ் வயற்பழ நிக்குமரன்
பூவலரும்பணி மார்பன் கழற்கன்பு பூண்மனமே. (33)

பூண்டவிராதவ மாமுலை மங்கையர் போகமென
மூண்டவிராதவ வன்ப ரிதய முளரிவிள்ள
வாண்டவிராதவ னுங்கும ரேசனை யன்பினொடு
வேண்டவிராதவ மாசெனி தாமுயர் மெய்க்கதியே. (34)

கதித்தவரும்பரல் வெங்கான் புகுதக்கை கேசிசொற்சம்
மதித்தவரும்பர கோர மறலி மயக்கிகந்த
விதித்தவரும்பர வுங்கும ராவன்பர் மெய்ப்பிணிதீ
துதித்தவரும்பர நாதாமெய்ஞ் ஞான சுகமருளே. (35)

சுகந்தங்கமழ முகையவிழ் கற்பகத் தாயகிழ
லகந்தங்கமழ களிற்றிந் திரனைத் தாயதிபா
தகந்தங்கமழ வியமாதர்க் காகநெஞ் சத்தெணிப்பொய்
புகந்தங்கமழ லுறுதெனை யாண்டரு ளுந்தமனே. (36)

மனத்திருக்கானவை வாராகன் முத்தி வழிவருஞ்சந்
தனத்திருக்கானவை நீகமெய்ஞ் ஞானத் தமிழ்முனிசெஞ்
சொனத்திருக்கானவை தீரும் படிபுகழ் தூயவன்பொய்
யினத்திருக்கானவை வாஞேர் தலைவனை யெண்ணுமினே. (37)

மின்னுகரிக லருந்தவத் தோரு மிகமயங்கப்
பன்னுகரிக வளமுதற் கீதம் பயிலு நல்லா
ரின்னுகரிக மயக்குங்கண் வேர்சகத் தீர்மலர்த்தார்
மன்னுகரிக பரந்தரு வேலர் வரம்பெறினே. (38)

வரம்பினத்தோடு மதுரா புரியில் வழுதியர்கோன்
சுரம்பினத்தோடு தவிர்த்தமெய் யாதொண்டர் தூய்மனத்த
தரம்பினத்தோடு பின்மன்று ளாடிய சம்புமைந்தா
நிரம்பினத்தோடு விரிகடம் பாசரா ணின்பதமே. (39)

பதனம்பதனந் தளரிடை யென்னப் பணைத்தொளிர்கும்
பதனம்பதனந் துறுமதுச் சொற்பர னைப்பொருச
பதனம்பதனந் தரமாங்க ளுள்ளவர் பற்றுறவேள்
பதனம்பதனந் தருஞான மோன பலனெஞ்சமே. (40)

பலவாமகத்துவந் தோங்கு மய்க்கவை பாரவினை
கலவாமகத்துவந் தங்குமெய்ஞ் ஞானக் கதியருள்சொற்
புலவாமகத்துவந் தெல்லாம் பெறுமப் புனிதர்புகழ்
வலவாமகத்துவந் தன்ன நடைத்தகர் வாகனனே. (41)

வாகாதுவருமங் கொவ்வாத மேனி வரன்றருமைந்
தாகாதுவருமங் காக்குழை யாயினந் தாமதமேன்
ஆகாதுவருமங் கேகயமீதுவந் தாரருள்செய்
தேகாதுவருமங் குற்குழ லாரன்பு தீர்த்தென்றுமே. (42)

தீர்த்தமனந்தர மானத லம்பல சென்றிடினுங்
கூர்த்தமனந்தர முண்டாகு மோகதி கூடவென்றாற்
கார்த்தமனந்தர தத்துதிப் பானெனக் காய்ந்தமனைப்
பார்த்தமனந்தர ரேத்துங் குமரனைப் பாடுமினே. (43)

பாடலங்காத வழிமணங் காட்டும் பழநிமுத
னீடலங்காத னெறிமறை யெங்கு நிறைகுகனைக்
கேடலங்காத மனத்துட்கொண் டார்பவக் கேதமிப்பார்
மூடலங்காத வினைக்கண்ட தென்ன முடிவுறுமே (44)

முடிக்குமராம மலர்க்குழல் வேழ முதல்வியென்ப
வடிக்குமராம னுலகும் பணிவள்ளி யென்னுமிரு
குடிக்குமராம துவையுண்டு வண்டினங் கூடியிசை
படிக்குமராம லணிபுய னேநின் பதமருளே. (45)

பதக்கமலங்க வளர்மார்ப னேதண் பணைதொறுமுச்
சிதக்கமலங்க டமைமேய்ந்து காவியைச் சேவினம்வாய்
குதக்கமலங்க துறங்கும் பழனிக் குருபரநீ
துதக்கமலங்க வலைதவிர்த் தாண்மெய்த் துணிவுதந்தே. (46)

தந்திக்குமார முடியிமை யோர்க்குமச் சந்தணித்தோ
னுந்திக்குமார னுறுசிறை நீத்த வுனக்கரிதோ
முந்திக்குமார னமர்கடந் தோங்கு முனிவருளஞ்
சிந்திக்குமார முதமே யெனக்கருள் செய்வதுவே. (47)

செய்யவடங்கவி மார்[illegible]யனிந் திரனுவப்ப
வெய்யவடங்கவி புன்மனத் தானவர் வீடவன்ப
ருய்யவடங்கவி ரூபஞ் சரவணத் தூடுதித்த
துய்யவடங்கவி னார்முலை மாதர் துறவருளே. (48)

துறக்கவரம்பயர் போகநன் றென்னினுந் தூயருள
பிறக்கவரம்பயர் கட்பார்மின் னார்பற் றெனினுமதை
மறக்கவரம்பய னாக வெனக்கருள் வார்செழுங்கன்
னறக்கவரம்பயல் சூழ்பழ னாபுரி நாயகனே. (49)

குனவஞ்சனஞ்சின மன்னவொன் னார்புறங் கண்டவெங்க
குனவஞ்சனஞ்சின மில்வாழ்வும் பெற்றவர் காலமுமோர்
குனவஞ்சனஞ்சின முற்றகண் ணார்சுகங் காட்டிமின்வா
குனவஞ்சனஞ்சின மைக்கும ராநின் கழலருளே. (50)

கழங்காடியன்ன நடையாரைக் கூடிவெங் கள்ளருந்தி
வழங்காடியன்ன குருவைநிந் தித்துயிர் மாய்த்தொழியார்
பழங்காடியன்ன மெனினுமுண் டின்னருள் பற்றுவரி
மிழங்காடியன்ன வநிகர்செந் திற்குக வேடொண்டரே. (51)

வேடுவரிக்கலை நேர்மனத் தோடெறி வெவ்வலைக்குள்
வாடுவரிக்கலை தப்புவ தென்ன மதிக்குநல்லோர்
நீடுவரிக்கலை மண்டலத் தாசை நெருக்ககன்று
கூடுவரிக்கலை செய்சூழ் பழநிக் குருவருளே. (52)

குருவருணத்துவர் மெல்லிதழ் வள்ளி கொழுநனங்கை
மருவருணத்துவ கைக்கோ மகன்சுதை வானவர்கந்
தருவருணத்துவ ளக்கட லேக்கடைந் தோன்மருகன்
றிருவருணத்துவர் பேர்கூ றினும்பவத் தீதஞ்சமே. (53)

அஞ்சுவர்க்கத்தலை நெஞ்சைத் திருத்தி யணிமகரந்
துஞ்சுவர்க்கத்தலை யாழி யணையமெய்த் தூயவனுக்
குஞ்சுவர்க்கத்தலை வற்குமெட் டாத குமரனன்பு
விஞ்சுவர்க்கத்தலை மோனமுண் டாமெனும் வேதங்களே. (54)

தங்கச்சிலம்பகங் காநதி மைந்த தனத்திடைதோ
யுங்கச்சிலம்பகங் காட்டுமின் னாரைவென் றோர்மதியு
மங்கச்சிலம்பகங் காரித்தெய் வோன்குடை மைதவழுத்
துங்கச்சிலம்பகங் காமுற்று ளோய்தள்ளொண் ணாவ்யவமே. (55)

பவர்க்கஞ்சமர விழிமாதர் பற்றறும் பற்பலபே
தவர்க்கஞ்சமர சமதாமெய்ஞ் ஞானத் தவம்பலிக்குந்
துவர்க்கஞ்சமர மதுசூழ் பழநிச் சுகபரனரு
ளவர்க்கஞ்சமர ரிடர்தீர்த்த வேள்பத நம்புவர்க்கே. (56)

நம்புங்கவரிய மாதிகண் டோர்பணி நாதர்மல
ரம்புங்கவரிய வேண்மைத் துனரொன்ன லார்பலமும்
வம்புங்கவரிய நீள்வேலர் தாளை வழுத்தினும்பால்
வெம்புங்கவரிய மன்புகு மோசொலும் வீணர்களே. (57)

களவரவிந்த மதியர் சினத்திற் கடியவிட
முளவரவிந்த னமுமணை யார்நட் பொழித்துனது
தளவரவிந்த பதம்பெற நேமமுந் தந்தருள்வாய்
மௌவரவிந்த வகந்தணித் தோன்பணி வேலவனே. (58)

வேலாவலய மடைத்தோன் சுரர்மக வேந்துமறை
நூலாவலய னுவப்பப் பொருப்பற நூறியவேற்
கோலாவலய ரவருங் கொடுங்கதிர்க் கோனுமிணை
சாலாவலய மணிபுய னேமுத்தி தந்தருளே. (59)

தந்தத்தத்திக்கு வருதுணை வாவரந் தந்தருள்வீ
தந்தத்தத்திக்கு மதன னடத்துந் தனிரதநீ
தந்தத்தத்திக்குத் தொறுமணஞ் சூழ்செந்தி லாய்தமிழோர்
தந்தத்தத்திக்கு மடமை தவிர்க்குந் தவக்கொழுந்தே. (60)

தவளவிலங்க றனையன் றெடுத்த நரனுமிடை
துவளவிலங்க முலைப்பூ மகணலந் துய்ப்பவெண்ணி
யவளவிலங்க மழிந்தான்புன் காமநன் றன்றுதொண்ட
கவளவிலங்க ளுறைவேலற் போற்றுமின் காதல்கொண்டே. (61)

காதகப்பாவரைத் தேடிப் புகழ்ந்துபற் காட்டிமுறை
யேதகப்பாவரைக் காசுக்கும் பாடிப்புண் ணெய்துவனோ
மூதகப்பாவரைக் கொக்குஞ்செந் தூர்ச்சண் முகாவெவர்க்கு,
மாதகப்பாவரைக் குங்கலி தீர்த்தருண் மாசின்மையே. (62)

மாசினமாவரு துன்பத்து ளென்னை மயக்கலுனக்
கேசினமாவரு ளாற்புரந் தோணிகர் கேழ்முகிலை
மூசினமாவரு டேகரத் தோய்முறை யோவிதுநீ
பேசினமாவரு மஞ்சிறி யேன்செய்த பேதமென்னே. (63)

பேதாமனங்கன தம்பட ராதெனைப் பேணமுடி
யாதாமனங்கன கக்கிரி நேர்புயத் தார்ந்தநிம்ப
மாதாமனங்கன னோய்தீர நீறு வழங்குகுரு
நாதாமனங்கன கல்லோ வின்றோநன் னடுநிலையே. (64)

நடுக்கந்தரத்தம மாமெனச் சூழ்ந்து நலிந்தபவங்
கடுக்கந்தரத்தம னத்துண் மயலுங் கடிதகல
முடுக்கந்தரத்தம ரேசன் றொழப்புவி முற்றுமுன்கார்
வடுக்கந்தரத்தமர் வான்சொற் படிவலம் வந்தவனே. (65)

வந்தித்தியங்கு மவர்க்கெளி யாய்மெய் மறந்தறிவன்
புந்தித்தியங்கு நயங்காட்டப் பாடுமப் பூவையர்பாற்
சிந்தித்தியங்கு மதத்தோ ரிடத்துஞ் செலாமலென்சித்
தந்தித்தியங்கு முழுதும் புகழ்பதந் தந்தருளே. (66)

தந்தாவளக்கரும் பூதர வாய்தனிற் சார்ந்தநன்னீர்ச்
செந்தாவளக்கருட் பென்னமின் ஞர்வசஞ் சேர்தனன்ஞே
நந்தாவளக்கரும் போதாந மோக நவைதவிர்ப்பாய்
கந்தாவளக்கரும் பூரண ஞானக் கதிக்கொழுந்தே. (67)

கொழுங்கோகனக முகவேளன் ருயர் குடியிடைத்த
வழுங்கோகனக குபேரனென் றேகுங்கு மச்சுமைகொண்
டெழுங்கோகனக சடரைப் புகழ்ந்துபொய் யீங்குரைப்ப
தொழுங்கோகனக வலேநீர்க்கு மையலை யுன்றுநெஞ்சே. (68)

உன்னங்கிரியை வழுத்தார் கிளேபெண் டொடுதநயர்
சொன்னங்கிரியை பெறினுமுண் டோகதி சூதயர்ந்து
முன்னங்கிரியை வருக்கருள் செய்த முதன்மருகா
மின்னங்கிரியை யடர்த்தசெவ் வேற்படை வித்தகனே. (69)

வித்தம்புயங்க மணிதண்டி கைகரி வெம்பரிபல்
வித்தம்புயங்க மிளிர்கண்மி ஞர்முதன் மெய்த்திருமே
வித்தம்புயங்க டளும்பநின் ருலுமுள் வேட்கைதுன்ப
வித்தம்புயங்க ணிகர்குகன் ருளில் விவேகிகட்கே. (70)

கட்கம்பணிய மிளிர்ந்துசெவ் வேலைக் கடிந்துதெவ்வ
ருட்கம்பணிய முதுசிந்த வீறி யுயர்நமற்குள்
வெட்கம்பணிய விழிமாத ராசை மிகாதெனேயாள்
புட்கம்பணிய வயல்சூழ் பழனிப் புரவலனே. (71)

வலஞ்செய்யவஞ்சக மில்லார்புண் காய்மருந் தேமலர்மெய்
யிலஞ்செய்யவஞ்சக மோடெதிர்ப் போனெவென் றேய்தவர்விண்
டலஞ்செய்யவஞ்சக மேத்துங்கு காகதி தந்தருணித்
திலஞ்செய்யவஞ்சக திச்சங்கு குஞ்செந்திற் சேவகனே. (72)

சேவற்கனத்து வசமுரு கோனருட் சீர்மறந்து
மேவற்கனத்து நடையார் பதத்தினும் வீழ்ந்துகணேப்
பூவற்கனத்து வரிக்குத்தென் றற்குப் பொருங்குயிற்கு
மாவற்கனத்து முழுமூடர்க் கென்று வருங்கதியே. (73)

வருந்தும்புலவருந் தேகம்பொய் யேயது வான்கழுகும்
பருந்தும்புலவருந் துந்தகைத் தென்ற பரிசுணர்ந்தே
யிருந்தும்புலவருந் தீதகற் ருமதி யிர்மறையுந்
திருந்தும்புலவருந் தேடுங் குகன்புகழ் செப்புமினே. (74)

செப்பந்தவிரக வான்க டமதுபுன் சிந்தைவிட்டுத்
தப்பந்தவிரக ஞங்குக னன்பர் தமக்கிருத
னப்பந்தவிரக லக்கோதை மார்தந் நளினவலை
யப்பந்தவிரக நோய்தணிக் கின்ற வருமருந்தே. (75)

அரும்பரஞ்சோதிக் குமதனன் செங்கை யயிலெனடுங்கட்
சுரும்பரஞ்சோதிக் கவின்மாதர் பாசச் சுருக்ககல்பண்
பரும்பரஞ்சோதிக் கவிசொல் பவரும் பணிபழனி
வரும்பரஞ்சோதிக் கடியார்க்கிங் கேது மறுசென்மமே. (76)

மறுத்தவிராகம ஞேகர யாவு மதித்துவரை
யறுத்தவிராகம னத்தவர் தேடமு தாயகுக
சிறுத்தவிராகம லர்ப்பத நாதவென் றீமைமுற்றும்
பொறுத்தவிராகம மெய்ப்பொரு டந்து புரந்தருளே. (77)

புரவலருந்தவ வேத்துநக் கீரன் புலம்பொழிய
விரவலருந்தவ ருங்கதி ரோன்பொரு வேல்விடுந்தற்
பரவலருந்தவ ருக்குமெட் டாத பரமவென்மேற்
கரவலருந்தவ னங்கணு ருவகை காவென்றுமே. (78)

காவிரிவானதி ரும்பல நாகக் கவின்சுனைகோ
தாவிரிவானதி தோய்வார் குமரன் சரண்கருதார்
நோவிரிவானதி கத்தா றெழுத்தையு நோக்கலரந்
தோவிரிவானதி கைப்பென்ற கல்வரிச் சோம்பர்களே. (79)

களங்கக்கரவரி நேரல்குன் மாதர்சங் கத்துமுறை
களங்கக்கரவரி யுந்தெரி யாத கவடமனக்
களங்கக்கரவரி னத்தும்பு காதெனைக் காத்தருடு
களங்கக்கரவரி மாவுரி யான்பெற்ற கண்மணியே. (80)

கண்ணியரும்பின கொண்டு குமரன் கழலிணையை
நண்ணியரும்பின் மெய்ப்புள கத்தொடு நாளுமர்ச்சித்
தெண்ணியரும்பின மாமயல் போக்கி யிராரெனிலெத்
திண்ணியரும்பின மன்பதி காண்பது திண்ணமன்றே. (81)

அன்றலங்கோதை நெடுங்கடற் சூரை யடர்த்துயர்வேந்
தன்றலங்கோதை யுருத வகைவைத் தனைமயின்மேற்
சென்றலங்கோதை யொருத்திக் கொழித்தனை தேன்கதம்ப
மன்றலங்கோதை முருகா வெனக்கொர் வரமருளே. (82)

அருளமருந்து திகள்பல செய்துகொண் டாடியபத்
தருளமருந்து களைநீங்க வூடெழுந் தற்பரதெய்
வருளமருந்து கதிர்வே லவபுன் மதித்தமியேன்
றெருளமருந்து தரநீய லான்மற்றோர் தேவில்லையே. (83)

தேவாங்குகனகத் தாங்கை குரங்கிக் தியமுடும்பி
னாவாங்குகனகத் திட்டரைத் தூட்டி நயந்துயிரை
யேவாங்குகனகத் தாமயின் னார்பற் றிகந்தமரர்
கோவாங்குகனகத் தன்புசெய் வீர்கதி கூடுதற்கே. (84)

கூடங்கடக்குஞ் சரதவி னோதக் குமரனைப்போ
ராடங்கடக்குஞ் சரமுகத் தாருக னாற்றல்விண்ணோர்
பாடங்கடக்குஞ் சரவண வேளைப் பணியதிவி
சேடங்கடக்குஞ் சரசமின் னாரன்பு தீருநெஞ்சே. (85)

நிரம்பயிலு மதிதந்து பாவமுந் தீவினையுங்
கூரம்பயிலு மயங்கவஞ் சங்குடி கொண்டவிழி
யாரம்பயிலு மணுகாம லென்றனை யாண்டருள்வாய்
வாரம்பயிலு முகிறவழ் சோலை மலைக்கந்தனே. (86)

கந்தனந்தாமஞ் சரிமென் கதம்பக் கனகபுயா
நந்தனந்தாமஞ் செறிவா விகள்பழ னங்கடொறும்
வந்தனந்தாமஞ் சுகச்செந்தி லாய்நின் வரமெனவோ
ஆந்தனந்தாமஞ் சளகமின் னார்மருட் கூடொழித்தே. (87)

சூதங்கமுகப் புயறோய் மதுரையிற் சூழுமணர்
நீதங்கமுகப் புறுகழு வேற்றுந் திருக்குமரன்
மாதங்கமுகப் புனிதற் கிளைய வரன்பழனிக்
கோதங்கமுகப் பணிமார்ப வேளெங் குலதெய்வமே. (88)

குலவம்பரவை பருகிய வேற்கைக் குகாதிகட்பொற்
கலவம்பரவை நெடுங்குலி சன்மரு காகணல்குல்
வலவம்பரவை நிகர்மட மாதர் வசத்தழுந்தும்
பலவம்பரவை புகாதாண் டருள்செய் பரகதியே. (89)

பரந்தகரந்தம முண்ணச்செல் வானெனப் பாய்மதத்தா
பரந்தகரந்தம யூரத்து லாவும் புகவசரும்
பரந்தகரந்தம தோதியிற் கொண்டபொற் பாவையராற்
பரந்தகரந்தம தற்குழ னின்னருட் பார்வைசெய்யே. (90)

பாரம்பரிய மிருபந்த பாசப் பயிரொழப்புந்
தாரம்பரிய தனையதிற் சிக்கித் தளர்ந்துமதன்
கூரம்பரிய மயங்காமன் ஞானங் கொடுத்துமயிற்
சீரம்பரிய தனில்வந்து காத்தருள் சிற்பரனே. (91)

சிற்பங்கணிதங் கரண மிலக்கணந் தேர்ந்திடினுங்
கற்பங்கணிதங் களித்துண் ணினுநற் கதிவருமோ
வெற்பங்கணிதங் குறைந்துள் தாருகன் மெய்கலங்க
முற்பங்கணிதங் கியகதிர் வேலனை முன்னுமினே. (92)

முன்னாட்டமணிய வெற்பசைத் தாயுடன் முற்றுநிறை
நன்னாட்டமணிய னுடளித் தாய்குறு நாதனெங்குஞ்
சொன்னாட்டமணிய கல்விதந் தாயெத் தொழிலுமுள்ளா
யுன்னாட்டமணிய ராரறி வார்மறை யுட்பொருளே. (93)

பொருகந்தருவ விரதவெய் யோனைப் பொருந்திநிற்கு
முருகந்தருவ ரிசைசூழ் பழனியின் மோனர்விண்ணோர்
வருகந்தருவ ரெவருந் தொழுவள ருங்குமரா
மிருகந்தருவ னிதைதலை வாவின்ப வீடருளே. (94)

வீடம்பரந்தரு வேந்தனெஞ் சுந்திரு வெண்கொடிமேன்
மாடம்பரந்தரு விண்ணினு மேவி வளர்ந்தபுக
ழாடம்பரந்தரு ணம்பெறி னும்பய னன்றதிவி
சேடம்பரந்தரு நாதாநின் பார்வை செலாவிடினே. (95)

விடியாக்கருவரி யன்ன பவம்பல மேவிடினு
முடியாக்கருவரி னுந்தீர்ந்து பேரின்ப முற்றுமிரு
குடியாக்கருவரி ஞாலத் தமரர் கொடும்பகையைப்
பொடியாக்கருவரி வேலவர் நாமம் புகன்றிடினே. (96)

புகரும்பனக ருரித்தெரித் தாற்குப் புனிதநெறி
பகரும்பனக மகலாத மோனப் பரமனமு
துகரும்பனக விதுலர் சகாயன் சுருதிதெளிந்
தகரும்பனகர் தொழுங்கும ரன்பதஞ் சார்ந்தனமே. (97)

தனனத்தனந்தன மென்றே நடிக்குந் தனிமயில்வா
கனனத்தனந்தன வேந்தன்பொ [illegible] ஞானக் கலசமுனி
வனனத்தனந்தன தன்பணி செந்தில் வளர்குகன்மெய்
யினனத்தனந்தன வைப்பவந் தீர்க்கு மிறைநெஞ்சமே. (98)

சமையஞ்சமய மிதுவெண் ணியவரந் தந்தருள்வா
யிமையஞ்சமய னெறியிற் புகாம லிருந்துதிருத்
திமையஞ்சமய மிகுகூந்த லாரைச் செயித்தவர்பூ
வமையஞ்சமைய றுறுஞ்சூழ்வை காபுரி யற்புதனே. (99)

புதருமலையுந் தவஞ்செய்துற் றேருமப் பொன்னகர்வீ
புதருமலையுந் துயர்காய் குமாறப் புகழ்நர்விரும்
புதருமலையுந் தியாகத்த ராயெதிர் புல்லலர்வீம்
புதருமலையுந் திவளங்கொண் டாள்வர் புவனங்களே. (100)

———:o:———

## நூன் முற்றும்.

மந்தரவாகுவி நெஞ்சத்து ளுத மறைப்பொருளே
மந்தரவாகுவி தந்தூர் பவன்றுணை வள்ளறெரு
மந்தரவாகுவி யன்சேட னஞ்ச மயிலில்வரு
மந்தரவாகுவி ஞேதவ ரோதயன் வாழியவே. (1)

கங்கை தருந்திரு மைந்தன் குமரக் கடவுடணிச்
செங்கை யிலங்கிய வேல்வாழி வாழிநற் சேவலெழில்
பொங்கிய தோகை மயில்வாழி யெங்கும் புகழ்ந்ததந்தி
மங்கையு மின்ப மிகுங்குற நங்கையும் வாழியவே. (2)

குமரனந்தாதி முற்றிற்று.





உ

குமரகுருநாதன் றுணை.

# சிவகிரி யமக வந்தாதி.

---:o:---

## விநாயகர் துதி.

### கட்டளைக்கலித்துறை.

கனகமருவி கொழிக்குஞ் சிவகிரிக் காரணன்மேற்
கனகமருவி னமுதினந் தாதிசொல் கைக்கிபமு
கனகமருவி புதரிடர் தீர்த்த கஜுதிபன்கோ
கனகமருவி கசிதமென் பூவடி காப்பென்றுமே.

## நூல்.

திருமாதரங்க னவரதம் போற்றுமை செல்வசெங்க
திருமாதரங்க வடவையும் போன்றெதிர் சென்றுநடுத்
திருமாதரங்க வுணர்த்தேய்த்த வேற்கைச் சிவாசலமு
திருமாதரங்க வலைதீர்த் தெனக்கருள் சீர்வரமே. (1)

வரவஞ்சினவ சுரரை வென்மாயன் மருகபவ
வரவஞ்சினவ மலர்சூழ் சிவகிரி வாணபரு
வரவஞ்சினவ மரம்பா னுருக்க மகளிர்பண்பி
வரவஞ்சினவ மதிநல்குன் பாத மலர்தஞ்சமே. (2)

மலரும்பராக வனசமின் னார்மன்ன வண்மைபரு
மலரும்பராக முதிர்தமிழ் செல்வம் வரவருள்வி
மலரும்பராக நெகிழ்ந்தேத்தச் சென்றுமுன் மாத்தடிந்த
மலரும்பராக கனந்தோய் சிவகிரி வந்தவனே. (3)

வந்தனந்தங்க வலையறச் செய்கிலர் மாய்த்தனர்த
வந்தனந்தங்க வணிநிதம் பந்தரு மாதர்பற்று
வந்தனந்தங்க வடமீட்டு வாருய் வகையெவன்கொல்
வந்தனந்தங்க வயல்சூழ் சிவகிரி வாழ்பவனே. (4)

பவளங்களிக்க னயசெவ் விதழ்மொழிப் பார்ப்பதியென்
பவளங்களிக்க வருசேய் சிவகிரிப் பண்ணவன்றாய்ப்
பவளங்களிக்க விளவனிக் காக்கும் பரன்பதவின்
பவளங்களிக்க வலைவேலை நீந்துநர் பற்றுவரே. (5)

வரைவருந்தாம தமதிற் சுழன்று வளர்கிளைச்செல்
வரைவருந்தாம மகளிரை நம்பிய மன்விடுப்ப
வரைவருந்தாம திரநேர் வளைக்க மயங்கியிறா
வரைவருந்தாம லெனையாள் சிவகிரி வானவனே. (6)

வானத்தருமை மதிதோய் சிவகிரி மன்னைநன்கும்
வானத்தருமை முகில்வா கனரு மறையவரும்
வானத்தருமை புறவின் முனிவரும் வாழ்த்துகனல்
வானத்தருமை மகிழ்பால காவென் மருடவிர்த்தே. (7)

மருமஞ்சரிய தணிந்துன் பதங்கள் வணங்கினெக்கா
மருமஞ்சரிய திருங்கைபின் ஞர்விளை மாய்ப்பர்விண்ணா
மருமஞ்சரிய மதிதோய் சிவகிரி வாசவெஞ்சூர்
மருமஞ்சரிய வயில்விடு ஞானதி வாகரனே. (8)

வாகமலாதன மாதி தருஞ்சிவ மால்வரைத்தே
வாகமலாதன குங்கதிர் நேர்கெடன் மானநிரு
வாகமலாதன வாமிடர் நீயுறின் மாறுமன்றே
வாகமலாதன னேத்தவின் னேமயில் வாகனத்தே. (9)

கனத்துப்புடைத்த வளமென் பிறையெயில் காட்டுறுதற்
கனத்துப்புடைத்த முலைப்பே தையர்மயல் கைப்பதுபு
கனத்துப்புடைத்த ரணிக்குளை யன்றிக் கதியெவன்க
கனத்துப்புடைத்த வனன்றேய் சிவகிரிக் கற்பகமே. (10)

கற்பவந்தத்து மொளிர்தென் சிவகிரிக் கர்த்தனைச்சங்
கற்பவந்தத்து னெறியிற் புகாமற் கருதிமறு
கற்பவந்தத்து விடக்கற்ப தேபெருங் கற்புமற்றைக்
கற்பவந்தத்து மனமேயிவ் வுண்மையைக் கண்டுகொள்ளே. (11)

கண்டகருவரி பொன்றிட வென்ற கடம்பசொற்கற்
கண்டகருவரி மென்குழற் குஞ்சரி கண்களிகூர்
கண்டகருவரி னந்தீர் சிவாசல காவெயென்றாழ்
கண்டகருவரி போலென் மயக்கறக் கைத்தருளே. (12)

கைக்கும்பரமன முங்கற்ப மாங்கணங் கண்டகர்தோள்
கைக்கும்பரமன வெங்கணை யால்விழக் காய்ந்தவன்வாழ்
கைக்கும்பரமன னேத்துஞ் சிவாசலன் கான்மயிலு
கைக்கும்பரமன தன்பான் மயங்குமிக் காரிகைக்கே. (13)

காரியங்கண்ட மனத்தார் தொழப்புனங் காத்தசுகக்
காரியங்கண்ட னயதினை மாவிழை காந்தமழைக்
காரியங்கண்ட மடர்தென் சிவாசல கந்தரத்திற்
காரியங்கண்ட வமைத்தோன் சுதநின் கருணைசெய்யே. (14)

கருவந்தவாமந் தரவான் குழலியர் கைப்படும்பு
கருவந்தவாமந் தரகம் புகாதெனைக் காத்தருளா
கருவந்தவாமந் தரநீள் சிவகிரிக் கந்தமுந்தக்
கருவந்தவாமந் தரவுடற் சூர்வலி காய்ந்தவனே. (15)

தவனந்தரவரு வேசைய ரானந் தவர்களனந்
தவனந்தரவரு பாயத்தி டேனுஞ் சரணெனைச்சந்
தவனந்தரவரு கோங்குஞ் சிவாசலத் தாய்தமிழ்மா
தவனந்தரவரு ளும்பர்கொண் டாடிய தற்பரனே. (16)

பரமருந்தாமனத் தேவருங் கண்டகப் பாதகவம்
பரமருந்தாவனத் தோருங்கொண் டாடிறை பாடுசுரும்
பரமருந்தாமனத் தன்பூஞ் சிவாசலன் பற்றருள்சிற்
பரமருந்தாமனத் தத்துயர்க் கேத்தவன் பாதநெஞ்சே. (17)

பாதவமாகம ணிச்சூழ் சிவகிரிப் பைந்தொடைமார்
பாதவமாகம நீதியி லென்னைப் பரிந்துதிருப்
பாதவமாகம ணிட்டா னுனக்குப் பழிவருமப்
பாதவமாகம ஞானமி தென்று பணித்தருளே. (18)

பணியங்கமைய வணிந்தோன் சுதவம் பரமகவான்
பணியங்கமைய னயன்சூழ் சிவாசல பைந்தனிரும்
பணியங்கமைய லரிவயர் பற்றிற் படாதவகை
பணியங்கமைய திமதிதந் தாளுநன் பதஞ்சரணே. (19)

சரதவிராம தகய மதனத ஞதிபத
சரதவிராம வெனலோ பரைப்பழிச் சாதினிவஞ்
சரதவிராம திபுகாச் சிவகிரித் தண்கடம்பின்
சரதவிராம னுனைப்பாடச் செய்தருட் சார்புநல்கே. (20)

சாரங்கவிய ருமையறி யாமந் தரைப்பவமே
சாரங்கவிய லுலுத்தரைக் கெஞ்சித் தமிழ்ச்சொலிவி
சாரங்கவிய மயங்காமற் காவெனைச் சந்ததம்பூஞ்
சாரங்கவிய னிசைசூழ் சிவகிரிச் சண்முகனே. (21)

முகந்தவனங்க சடுபோக் கிப்பெய்பு முகிறவழ்க
முகந்தவனங்க விவயற் சிவகிரி முத்தயவிம்
முகந்தவனங்க சரந்தடுத் தாளெனை முற்றுமிங்குன்
முகந்தவனங்க ளறத்தெரி சிக்கு முறைமைதந்தே. (22)

தந்தேயமர நுடங்கிடை மாதர் தனயரனந்
தந்தேயமர செவைபெறி னுங்கதி சார்வர்கொல்வி
தந்தேயமர ரினஞ்சூழ் சிவாசலன் றாள்பவதொந்
தந்தேயமர பிணிற்பணி யாதபொய்த் தாமதரே. (23)

தாமங்கலந்தக ருங்குழற் குஞ்சரி தன்பதிச
தாமங்கலந்தக வோங்குஞ் சிவாசலன் றாணிணைவோர்
தாமங்கலந்தக னூர்புக லின்மறந் தார்கடல்வாய்த்
தாமங்கலந்தக ருற்றென வீழ்வர்புன் சஞ்சலத்தே. (24)

சலனமனந்தவ றாது கறங்கத் தவித்துநின்றீர்
சலனமனந்தவ லன்கொள லாமென் றுஞ் சற்றுமின்றஞ்
சலனமனந்தவ ஞதியர் போற்றத் தழைத்தசிவா
சலனமனந்தவ ரோதய வேலன் றனைநம்புமே. (25)

தனையமராவதி யன்பினெண் ணார்க்ககல் சம்புதந்த
தனையமராவதி ரந்தோய் சிவாசலத் தாயெனக்கந்
தனையமராவதி காத்தோனை வாழ்த்தச் சலிப்பெனவித்
தனையமராவதி னிப்புரி யேல்வஞ் சகநெஞ்சமே. (26)

சகவனத்தத்தி லிடேலெனை யன்றொர்பத் தன்பயம்பி
சகவனத்தத்தி னிறக்கூற்றட் டோற்கருள் சத்தியவா
சகவனத்தத்தி லகநுதல் வள்ளி தழுவுமுல்லா
சகவனத்தத்தி நடாத்துஞ் சிவகிரித் தாயகனே. (27)

தாயம்பரவின ஞரியர் போகமஞ் சார்க்கிரங்கா
தாயம்பரவின சூடுஞ் சடிலர்மைந் தாசனைநீர்
தாயம்பரவின மாவுண் சிவகிரிச் சண்முகத்தெந்
தாயம்பரவின தண்டாயு தாநல்குன் றன்பதமே. (28)

பதங்கமலங்கலை கண்முலை பங்கெனும் பாவையர்சீர்
பதங்கமலங்கலை யேகொள் விளக்குறும் பண்பெனவேட்
பதங்கமலங்கலை யுந்தீர்த் தெனக்கருள் பாலிகடம்
பதங்கமலங்கலை நீர்சூழ் சிவகிரிப் பாவலனே. (29)

பாவக்கருமங்கு மைத்தே வரமுட் பரமவின்பம்
பாவக்கருமங்கு னேர்பயிர் போற்பத்தி பல்கநல்கப்
பாவக்கருமங்கு முத்தரு நூற்றுப்பத் தாங்தொகைதப்
பாவக்கருமங்கு வாழ்த்துஞ் சிவகிரிப் பார்த்திபனே. (30)

பனகமடங்க வருமயி லாய்மஞ்சி பங்களெனப்
பனகமடங்க லதிர்சிவ வெற்பவின் பக்கடற்ற
பனகமடங்க ணிகர்புலத் தோர்தொழும் பாதவிங்கென்
பனகமடங்க சடுநீத் தருள்செய் பரசுகமே. (31)

சுகந்தவரும்பழ கார்தன வள்ளி சுகம்பெறக்கொஞ்
சுகந்தவரும்பழ முண்டுபைங் காவிற் சுருதிகளஞ்
சுகந்தவரும்பழ கப்பன் சிவகிரித் துங்கநன்னெஞ்
சுகந்தவரும்பழ வல்வினை தீர்த்தரு டேய்மதியே. (32)

மதிக்குமலைக்கு மதற்கு முடைந்திந்த மாதுணையே
மதிக்குமலைக்கு வளைக்கட் சகிகளை வய்யவுஞ்சம்
மதிக்குமலைக்கு மருவாய் சிவகிரி வாழ்மலர்த்தா
மதிக்குமலைக்கு வலையமும் போற்று மனோகரனே. (33)

கரவிலகாதவ நீதியிற் சென்றுல கம்பிழைப
கரவிலகாதவ கங்கரத் தான்மயங் காதுகுறை
கரவிலகாதவ னேர்வேற் சிவாசல கண்டகர்க்காய்
கரவிலகாதவ நாயேனை யூழ்வினைக் கட்டறுத்தே. (34)

கட்டத்தியான மருஞ்செய் புகத்தழை காத்தொறும்ப
கட்டத்தியான துறங்குஞ் சிவகிரிக் கட்குகவிண்
கட்டத்தியான கனையாறு ஞானக் கனிவருள்பு
கட்டத்தியான முதற்சித்தி கூடக் கடைக்கணித்தே. (35)

கலிக்குமரவம கோத தியமுதுங் கைத்தசொன்முக்
கணிக்குமரவம குஞ்சடை யாற்குங் கவின்புதல்வ
கணிக்குமரவம ரஞ்சூழ் சிவகிரிக் கான்மலர்ப்பூங்
கணிக்குமரவம ரேசமுன் னின்றெனைக் காவென்றுமே. (36)

என்றேகமல மயக்கைக் கடிந்தரு ளெய்திடுநாள்
என்றேகமல கலாநெஞ்சன் னாதென்செய் வேன்பிணியால்
என்றேகமல மராமுன் சிவவெற் பிடத்தினொளிர்
என்றேகமல பதந்தொழ வென்னை யிணக்குவையே. (37)

வையத்திரவிய னேத்திர மாதர் வசத்தழுந்தி
வையத்திரவிய நெஞ்சரைக் கெஞ்சி வணங்கிநல்லோர்
வையத்திரவிய மால்கொண்டெய் யாதென் வயிற்கருணை
வையத்திரவிய ளாவுஞ் சிவகிரி வல்லவனே. (38)

வனப்பாவலருள நாட்டுமின் னார்புன் மயக்கெனைப்பா
வனப்பாவலருள வந்தாள் குசபல வாவிமல்க
வனப்பாவலருள தேன்பாய் சிவாசல வாட்டலென்சொல்
வனப்பாவலருள வர்க்கினி யாதமெய்ம் மாதவமே. (39)

மாதவியாம லகஞ்சூழ் சிவாசல வாழிமய
மாதவியாம துரத்தன முண்ட வரவருள்விம்
மாதவியாமன் மனாந்தேற்றி முத்தி வழிதனைச்சும்
மாதவியாம லுணர்பண் பெனக்கு வருவிப்பையே. (40)

வருந்தாரமய்ய னிதிசூத ராதி வலைச்சுழன்று
வருந்தாரமய்ய மனத்தாய்விண் மீனொடு வார்கழைக்க
வருந்தாரமய்ய மறமின் சிவாசல வண்மணநி
வருந்தாரமய்ய தொழித்தே யருள்செய் வளரின்பமே. (41)

வளமைவனப்பு மதிதுதி பங்கய மங்கையென்ப
வளமைவனப்பு ளிவர்மா தருள்கதி வந்துறுங்க
வளமைவனப்பு கரிபமு கன்றுணை வள்ளறன்று
வளமைவனப்பு ளிதச்சிவ வெற்பை வலஞ்செயினே. (42)

வலவம்பரம னயகட் குறத்தி மணாளசெஞ்சே
வலவம்பரம வெனச்சிவ வெற்பனை வாழ்த்தியெண்ணு
வலவம்பரம ணலுமமை யாப்பவ மாற்றுதிநீ
வலவம்பரம களிர்காதல் கொண்டு மலைக்குநெஞ்சே. (43)

மலைவருமங்க நிலையன் றிதுநல் வழியுணரா
மலைவருமங்க விழாமுனெஞ் சேபணி மன்னுசிவ
மலைவருமங்க வனமயில் வீரனை மாற்றுமைக்கும்
மலைவருமங்க டொடுத்தவி னென்பெறு வான்பலனே. (44)

பலவிடையப்பரி பாய்தலி னல்வரு பாதகம்பற்
பலவிடையப்பரி வூடழூந் தாதுகண் பார்த்தெனையாள்
பலவிடையப்பரி பாடுஞ் சிவகிரிப் பண்டிதவம்
பலவிடையப்பரி யங்கூகட் டோன்று பரம்பொருளே. (45)

பரம்பரவச்சிர ஞாலத் தெனக்குன் பணியருள்பம்
பரம்பரவச்சிர கந்தாழ் முலைக்குறப் பாவைபுணர்
பரம்பரவச்சிர தத்தெதிர் சூர்வென்ற பாவனவும்
பரம்பரவச்சிர ரெண்சிவ வெற்பவின் பந்தகவே. (46)

தகரவரும்பல ராரக் குழலியர் தந்திறத்தாழ்ந்
தகரவரும்பல மூடருங் காணத் தகாயயில்வைத்
தகரவரும்பல வத்தாய் சிவாசல சண்டன்வினை
தகரவரும்பல தாபமுந் தீர்த்தருள் சத்துவமே. (47)

துவருமுருக்க மலருநை வாய்ச்சியர் தொந்தமெம்மு
துவருமுருக்க லரிதே லெனக்குத் துறவதெப்போ
துவருமுருக்க முனக்கிலை யாவருள் சூதமஞ்சத்
துவருமுருக்க வனவேற் சிவாசல சுந்தரனே. (48)

தரமனமான வரைப்போய்க்கெஞ் சாதமெய்த் தன்மைமுதிர்
தரமனமான துணையேகொண் டாடத் தயைசெய்திரந்
தரமனமான நடக்குஞ் சசிபதி தாழ்சிவபூ
தரமனமான தனையேந்து வோர்நந் தனவிரைந்தே. (49)

தனவிலையங்கனை மார்தோட் படிந்தணி தார்துகில்சந்
தனவிலையங்கனை யார்க்கேசம் பாதித் தவிற்பிணிழிந்
தனவிலையங்கனை யாமுனப் புன்மைநச் சாதிதுமு
தனவிலையங்கனை நெஞ்சே சிவாசலத் தான்புகழே. 50)

தானந்தவமரு மைப்பெருங் கல்வித் தரம்பலநி
தானந்தவமரு வப்பெறி னுஞ்சகத் தீர்தழலாய்த்
தானந்தவமரு ணோர்வேற் சிவாசலன் றன்னைமறந்
தானந்தவமரு டீர்ப்பரி தாலிது சத்தியமே. (51)

தியங்காமலையம் பிறைக்கிளை யாமலென் சிந்தைதிருத்
தியங்காமலையம் பொலிதமிழ் யாவுந்தந் தேமிகந்தித்
தியங்காமலையம் பிரிதவர் போற்றுஞ் சிவகிரிச்சோ
தியங்காமலையம் பகவேற் கரிபுத் திரிபங்கனே. (52)

திரியம்பகவ ரதன்கனிக் காகத் திரண்மகரந்
திரியம்பகவ வனிமொடு முன்வலஞ் செய்தசிவாத்
திரியம்பகவ னடிபோற்று மன்பினெஞ் சேமிகமு
திரியம்பகவ வினமுதற் பாவவன் சீர்புகன்றே. (53)

புகலப்புவன முடித்தேவு மெய்க்கும் புலைநெஞ்சையன்
புகலப்புவன வரிபோற் செலேலெனப் போற்றினும்பாய்
புகலப்புவன முலையாரிற் போமெற்குன் பொன்னடியே
புகலப்புவன சவயற் சிவாசல போதநல்கே. (54)

போதகவேத மொழித்தோன் மருகன் புகழ்வனசப்
போதகவேத னிறைஞ்சுஞ் சிவாசலன் பூங்கழற்கட்
போதகவேத மிழைப்பாடென் றூற்புறம் போவதுபண்
போதகவேத தனிற்பெறு வாய்புன் புலன்கொணெஞ்சே. (55)

புலவாமலின தரந்தா விரகம் பொறுப்பதன்றூற்
புலவாமலின மெனவென் றயற்பெண்பின் போந்துழலும்
புலவாமலின ரிடத்தும் புகாதெற் புரந்தருண்மெய்ப்
புலவாமலின திகள்சூழ் சிவகிரிப் புங்கவனே. (56)

கவடம்புலிய னயதியர் நட்புவெங் காமமனே
கவடம்புலிய களவுள னேனுங் கழித்தெனையாள்
கவடம்புலிய புயபார் களங்கெனக் கான்றருப்பூங்
கவடம்புலிய துரைக்குஞ் சிவகிரிக் கந்தப்பனே. (57)

கந்தங்கவரு மளித்துள வோரற்றங் கண்டுறச்சிங்
கந்தங்கவரு விகலதிர் சார்பெங்கும் காத்தலிற்சூற்
கந்தங்கவரு சிவாசல நல்குன் கழல்களன்பு
கந்தங்கவரு வினைதீர்ந் திடத்தொழுங் காதலெற்கே. (58)

காதமருங்குல வன்பரு மேங்கமங் காமுனையைக்
காதமருங்குல மாமணித் தோட்டுருக் கண்டிடத்த
காதமருங்குல ரம்பைய ரான்மைபங் காமணமோர்
காதமருங்குல வுஞ்சிவ வெற்ப கலாநிதியே. (59)

கலாபத்தருண மயிலூர் சிவாசலன் கானனெஞ்சி
கலாபத்தருண ருதற்கே யெளியகண் டார்ப்பரசு
கலாபத்தருண தியினைகத் துய்க்குமெக் காலுமயங்
கலாபத்தருண னெதிரிருவென்னைக் கழிதலித்தே. (60)

வித்தையிலக்கண நேர்வாரைப் பாடி விழாமலின்ப
வித்தையிலக்கண வாத புகழ்சிவ வெற்பனைச்சே
வித்தையிலக்கண மெய்ப்பாச் சொலுஞ்செவ் வியர்க்கறும
வித்தையிலக்கண மைந்தாலுங் கூற்றை விலக்குவரே. (61)

குவலயமாவன டாத்தத் தொழுஞ்சிவ குன்றவயங்
குவலயமாவன சூழ்திண் புயவிங் குமனமுனக்
குவலயமாவன கக்குண நீவஞ்சங் கூரினென்செய்
குவலயமாவன சம்போனின் றணல் குவையெனக்கே. (62)

குவையாகவந்த விராகத் திடிற்பழி கூறுமுனைக்
குவையாகவந்த மலர்போனின் றளிணிற் கூயெனையங்
குவையாகவந்த நறுந்தார்ச் சிவாசல கூர்திறல்வா
குவையாகவந்த னிலடரும் பற்செறுங் கோளரியே. (63)

அரிதப்பரிய லரிதொழும் பாதனன் றும்பயிரை
யரிதப்பரிய லறுநெஞ் சுறுன்பண் டறுமடந்தை
யரிதப்பரிய முலைபுண் சிவாசல னன்பர்க்கல்லால்
அரிதப்பரிய லுளபவந் தீர்ந்தரு ளாடுதலே. (64)

ஆடகவற்ப மகற்றிநின் பாத மருளியெனை
யாடகவற்ப ரிறைஞ்சுஞ் சிவகிரி யாய்சமர்பா
யாடகவற்ப சியமயி லூர்கும ரய்யமணி
யாடகவற்ப னிருபுய ஞான சுகாரம்பனே. (65)

ஆரஞ்சலிக்கு நகைபுமை பாலன லர்ப்பகழி
யாரஞ்சலிக்கு வனைத்தெய் பவற்குடை யாதமதி
யாரஞ்சலிக்கு மொருசிவ வெற்ப னலதுபின்னை
யாரஞ்சலிக்கு மிசைத்தீர்த்துற் றூர்க்குற வாவர்களே. (66)

ஆவலிதாங்கு தவாது கதிபொரு ளாதிநிலை
யாவலிதாங்கு மயக்கத றலுன் னரியதன்மை
யாவலிதாங்கு படைபோற் கெடாம லடைதிகனி
யாவலிதாங்கு விவயற் சிவவெற் பரசைநெஞ்சே. (67)

அரவமளிக்கு லமதெழுப் புங்குழ லக்கணிகை
யரவமளிக்கு நெறியிற் செலாதெனை யாண்டருள்செய்
யரவமளிக்கு முறுங்கா ருலாவுசி வாசலத்தோ
யரவமளிக்கு ரியன்மா மருகவந் தஞ்சமிலன்றே. (68)

அஞ்சவித்தார மலரோனைப் பார்த்தன் றவன்கலங்கி
யஞ்சவித்தார கமுதற் பொருளென் னறைகவென்றோ
யஞ்சவித்தார கலாவேற் சிவாசல வாய்ந்துநகை
யஞ்சவித்தார தகநேய யானின் னடைக்கலமே. (69)

கலவியவாவி மடவாரெங் கென்று கரைந்துபல்ப
கலவியவாவி மனஞ்சுழ லாதெனைக் காவினைய
கலவியவாவி புகர்போற் றியவலங் காரவெண்மங்
கலவியவாவி திகழ்சிவ வெற்பிற் கடம்பவின்றே. (70)

கடமைவிலங்க தெனப்பயின் றேகொளுங் கள்ளவண்டர்
கடமைவிலங்க வழக்கரைக் கெஞ்சிப்பற் காட்டியசங்
கடமைவிலங்க வருள்புரிந் தென்றனைக் காப்பதுநின்
கடமைவிலங்க லெலாந்தாழ் சிவகிரிக் காவலனே. (71)

காவதங்காத னறைபாய் களபக் கவின்புயக்கு
காவதங்காத வுணர்செல வென்றதுங் காசிவப்பக்
காவதங்காத வனைத்தோய் சிவாசல காணுமெனைக்
காவதங்காத மலர்ப்பதந் தந்து களிகூரந்தே. (72)

சுரதந்திரிய னயமென் மொழிவிலைத் தோகையர்தஞ்
சுரதந்திரிய மயத்துமெண் ணுமதி தொண்மதன்மெச்
சுரதந்திரிய மலர்காச் சிவகிரித் தூயகவிச்
சுரதந்திரிய வினைநீத்தல் வேண்டுந் துரிதத்தினே. (73)

தத்தினகரவ ருமனத் தேனைச் சகவினைப்பந்
தத்தினகரவ நண்பிற்றள் ளாதுன் சரணருள்போ
தத்தினகரவ கன்சிவ வெற்ப தனிக்கனகத்
தத்தினகரவ ரேத்த வருமுத் தமமுதலே. (74)

தமனியமஞ்சங் தனிற்றுயில் வீர்தனுச் சாம்பொருள்பந்
தமனியமஞ்சங் தகனோர்முன் சேர்த்துஞ்சித் தந்தனைக்கோ
தமனியமஞ்சங் ததந்தவி ராமுத் தமிழ்முனிவாழ்த்
தமனியமஞ்சங் தமால்சூழ் சிவாசலன் றுள்வசத்தே. (75)

வசந்தனமர தியற்றலிற் சோர்ந்ததம் மாதியற்க
வசந்தனமர கதச்சிமிழ் போன்று வளர்ந்துவிம்மு
வசந்தனமர வடுந்தோகை வந்தும் வராததென்செல்
வசந்தனமர மலிசிவ வெற்பருள் வாரிதியே. (76)

வாரியங்கஞ்சன மிந்திர ஞாதியர் வாழவெம்பேய்
வாரியங்கஞ்சன மார்த்தாடக் கண்டகர் மாயவம்பு
வாரியங்கஞ்சன வென்னவெய் தோன்சிவ மாமலைசூழ்
வாரியங்கஞ்சன மாலும் புகழுபி மானத்தரே. (77)

மானத்திலக மிலாதயற் றெய்வதம் வாழ்த்துநர்காண்
மானத்திலக தெனத்திகழ் கந்தர வாரணிகோ
மானத்திலக நுதலுமை சேய்சிவ மால்வரைவி
மானத்திலக மலையடி சேர்மின் வரானமனே. (78)

மனத்தானகில மயல்போக்கி முத்தி வழங்குதெய்வ
மனத்தானகில மெலாம்படைத் தான்றொழ வாழ்குகன்சீர்
மனத்தானகில விருஞ்சிவ வெற்பன் வரிசிலைக்கா
மனத்தானகில முகிழ்வள்ளி தோய்தட மார்பத்தனே. (79)

மாரனவரத மார்தரு நீழல் வலாரிமுனி
மாரனவரத னேத்தா றெழுத்தை மதித்துடல்விம்
மாரனவரத மெண்ணிற் சிவகிரி வாழுமைகு
மாரனவரத கஞ்சார்ந்தெவ் வாறு வரந்தருமே. (80)

தருமந்திகைக்கு மனமின்றிக் கொண்ட தவர்க்குணவு
தருமந்திகைக்கு ளமைத்துக் கொணர்தடஞ் சார்தொறும்பாய்
தருமந்திகைக்கு மணிசூழ் சிவாசலன் றுணிற்பித்
தருமந்திகைக்குரியர்போற்ற வாழ்வர் தளர்வகன்றே. (81)

தளவந்தரிக்கு மடந்தையர் மால்வருத் தத்தளர்ந்து
தளவந்தரிக்கு நெலாவேற்குன் பாதந் தருதிசுர
தளவந்தரிக்கு மயற்குந் துயர்தவிர்த் தாய்முகிற்குந்
தளவந்தரிக்கு மதலாய் சிவகிரி தங்கத்தனே. (82)

தங்கவலாரி னியமுலை யாரைத் தழீஇமதிவ
தங்கவலாரி கழுத்தவங் கொன்றுபந் தத்திடைநித்
தங்கவலாரி தயம்வாழ் சிவாசல தானவெண்மா
தங்கவலாரி மருகவின் றுட்கொளென் றன்னைவந்தே. (83)

வந்தேகவிந்த வழிச்சுழல் பஞ்சின் மறுகுமென்பா
வந்தேகவிந்த வருத்தமுந் தீரெதிர் வந்துநெஞ்சு
வந்தேகவிந்த வரிசூழ் சிவாசல வன்மைபரு
வந்தேகவிந்த மடார்த்தோற்கன் றென்றருள் வாய்மையனே. (84)

வாயவணங்கு மதியெற் கருளியென் வன்பவம
வாயவணங்கு மனத்தை நினது வசந்திருப்பு
வாயவணங்கு சகரற்குப் பின்னர் வரும்பவள
வாயவணங்கு வியுஞ்சிவ வெற்பொளிர் மாமணியே. (85)

மாமனம்போருக டதறற் கின்ன வழிமயல்கம்
மாமனம்போருக வில்விடி தென்றருள் வாதெனசும்
மாமனம்போருக மஞ்செனத் தானவர் மாயவெய்த
மாமனம்போருக னேத்து சிவாத்திரி வாழப்பனே. (86)

அப்பங்கரும்பு நுகர்யானை சோதர வண்டர்விழி
யப்பங்கரும்பு ணகன்றய்ய வந்தசி வாத்திரியாய்
அப்பங்கரும்பு ளிமிர்கொன்றை வேணி யணிகடவுள்
அப்பங்கரும்பு முலையாள் சுதவென்னை யாள்பரிந்தே. (87)

பரியங்கவரி கவிகைமற் றின்ன படைத்துலகும்
பரியங்கவரி தெனுஞ்சீர் பெறினும் பணவரவப்
பரியங்கவரி பணிசிவ வெற்பனைப் பாடிலரேற்
பரியங்கவரி பவத்திய ராயினைப் பாருண்மையே. (88)

பாரப்பனல னிலம்விண் கலங்கும் பகலுறவென்
பாரப்பனல றனைப்பிறர் பாலிப் பரோபவமாம்
பாரப்பனல மனனேநம் பேறனை பையவெண்ணிப்
பாரப்பனல மலிசிவ வெற்பிருப் பானருளே. (89)

பானந்தியக்க மணிநகை யார்வலைப் பட்டுமது
பானந்தியக்க முறக்கொள் பவனெனி னும்பவந்தீர்ப்
பானந்தியக்க ரிறைஞ்சுஞ் சிவாசலன் பாதநினைப்
பானந்தியக்க வினும்பகல் பார்புகழ் பாத்திரனே. (90)

திரணங்கடிய பவந்தீர்ப்ப தென்ன திரணத்திலோர்
திரணங்கடிய னயநெஞ்ச மேயிந் திரனுடைமு
திரணங்கடிய ரிடர்சூர னுக்கஞ் சியசுரர்புந்
திரணங்கடிய வெழுந்த சிவாசலற் சேவிக்கினே. (91)

விக்கினரம்பை வரம்பு திறம்ப மிடைந்தமன
விக்கினரம்பை விழிக்காட்ட வீழுமுன் வீடருள்கூ
விக்கினரம்பை புகக்கூறு தீஞ்சொன் மினார்படிவா
விக்கினரம்பை மதுப்பாய் சிவகிரி வித்தகனே. (92)

வித்தகவளக்கரிய மதனை வெல்லுந்தெருட்சி
வித்தகவளக்கரிய வயற்குள் விதைத்தருள்கோ
வித்தகவளக்கரிய துரித்தவன் மெய்ச்சுதமே
வித்தகவளக்கரிய பொழிற்சிவ வேதண்டனே. (93)

தண்டவிரும்பு வனமாய வாழ்வைச் சதமெனுமுத்
தண்டவிரும்பு மனங்குழைத் தாளென் றனைக்கதலித்
தண்டவிரும்பு னிதவாம வள்ளி தலைவகர
தண்டவிரும்பு தமிழ்ச்சிவ வெற்ப சமயமிதே. (94)

சமையமனந்த நினைந்தேத் துனைவந்து சார்ந்துவினை
சமையமனந்த வுரங்கடந் தோர்க்கன்பு தான்செயவுஞ்
சமையமனந்த விரநோக்கெற் குன்பத மேயினித்தஞ்
சமையமனந்த னவனச் சிவகிரித் தாரகமே. (95)

தாரகலவித மான சிவாசல தாக்கமர்நேர்ந்
தாரகலவித னந்தொண்டர் தீரத் தயங்கயில்வித்
தாரகலவித ரும்புய வுன்வசந் தான்செய்பர
தாரகலவித னிற்செலு மேழைநெஞ் சந்தனையே. (96)

சந்தவமுத கவிவலர் போற்றுகந் தன்கதிநே
சந்தவமுத வமலன் சிவகிரி தான்புகில்வ
சந்தவமுத லவனுந்தன் செய்கை சகலமுங்க
சந்தவமுத றிடஞான யோகங்கள் சாதிக்குமே. (97)

திக்கினமனவ கக்குரங் கேநித் தியமுவந்து
திக்கினமனவ ரேத்துஞ் சிவாசலற் சிந்தித்துமுத்
திக்கினமனவ வாவுற்றி லாய்புன் செயல்கொடுவா
திக்கினமனவ திக்கென்செய் வாயத் திறம்புகலே. (98)

கலைநந்தனவன சாசனன் போற்றயிற் கையசுமங்
கலைநந்தனவன கச்சிவ வெற்பவெற் காப்பதுண்டேற்
கலைநந்தனவன மாங்குயிற் றீஞ்சொற் கதிர்மணிமே
கலைநந்தனவன மென்கள மாதர்கட் காமத்தையே. (99)

காமனம்பத்தி களைவென் றரிபடர் கட்சிதோய்
காமனம்பத்தி யொடுசூழ் சிவகிரிக் கானவள்பங்
காமனம்பத்தி னியதிக்கும் போற்றுன் கழலிணைநீங்
காமனம்பத்தி னமுஞ்சேர்த் தருண்மெய்க் கதித்திருவே. (100)

## வாழி.

படியேழு மேழும் பணிதென் சிவகிரிப் பண்ணவன்பூங்
கொடிபோலு நுண்ணிடைக் குஞ்சரி கானக் குறக்குலப்பைந்
தொடிமா திவர்புடை துன்னவெந் நாளுந் துலங்குகதிர்
வடிவேலுந் தோகை மயிலுங்கொண் டென்னெஞ்சுள் வாழியவே. (1)

வாழி தடங்கடல் வாழி செழும்புயல் வாழிசுரர்
வாழி நெடும்புவி வாழி யருந்தவர் வாழிசைவம்
வாழி யறம்பொருள் வாழி சுகங்கதி வாழியன்பர்
வாழிசெங் கோன்முறை வைவேற் சிவாசலன் வாழியவே. (2)

சிவகிரியமகவந்தாதி முற்றிற்று.





உ

முருகன்றுணை.

# பழனிக்கோயில் விண்ணப்பம்.

### விநாயகர் துதி - வஞ்சித்துறை.

திருவுயர் புகழ்கதி தருவன முதுசீர்
மருவிய கரிமுக னிருபத மலரே.

இதுவுமது.

### நேரிசைவெண்பா.

ஸந்த வுலகு மிடர்தீர்ந் தினிதுய்ய
வந்த குகனை வழுத்துகின்ற—செந்தமிழா
மிக்கபழ னிக்கோயில் விண்ணப்பத் திற்கருட்கட்
கைக்கயமு கச்சோதி காப்பு.

### முருகர்துதி.

### நேரிசைவெண்பா.

பரிசுத்த சித்தமுழுப் பத்தியொடு நானின்
கிரிசுற்றி முற்றக் கிருபை—புரிமிக்க
காரணா தென்பழனிக் கார்த்திகே யாவகண்ட
பூரணா நீயே புகல்.

### கலிவிருத்தம்.

சோதி ஞான சொரூப சுசீலநின்
மீதி லுளம் விரைந்து செழுந்தமி
ழோதி நானினி துய்யும் படிக்கரு
ளாதி தேவதண் டாயுத பாணியே. (1)

முதிய தீவினை முற்றும கற்றியென்
மதியி னூடு வயங்கி வரந்தரத்
ததியி தேதைந் தமிழ்ப்பழ னுபுரிக்
கதிப னனதண் டாயுத பாணியே. (2)

கமல பாதங் கருத்தி லிருத்தியென்
றமல பாவ முடித்தருள் செய்குவாய்
விமல னர்கொள மெய்ப்பெரு ளைப்பக
ரமல ஞானதண் டாயுத பாணியே. (3)

கோர நோயுமெக் குற்றமுந் தீர்ப்பதுன்
பார மேழை பயந்திட நீவிடேல்
சேரர் கோன்செய் சிவாசலக் கோயில்வா
ழார மார்பதண் டாயுத பாணியே. (4)

உன்னை யேகதி யென்றுளத் துன்னினே
னென்னை யினொரு மேச விடேலினி
முன்னை யூழ்வினை முற்றுந் தவிர்த்தரு
ளன்னை போலுந்தண் டாயுத பாணியே. (5)

இருள்வி ளைந்தவிவ் வேழை மனத்திடைத்
தெருள்வி ளங்கிடச் செய்து செகப்பெரு
மருள்வி தம்பிணி மாற்றிநின் றென்னையாண்
டருள்வி ளைந்துதண் டாயுத பாணியே. (6)

தருண மீது சலிக்கத் தகாதினிக்
கருணை யாலெனைக் காப்பது நின்கடன்
வருண னாதியர் வந்து பணிந்துசூ
ழருண தேகதண் டாயுத பாணியே. (7)

வண்மை தங்குநின் மால்வரை சூழ்வரு
வுண்மை யன்புமவ் வூக்கமும் யாக்கையிற்
றிண்மை யுந்தரல் வேண்டுந் தினமுமெற்
கண்மை நின்றுதண் டாயுத பாணியே. (8)

பத்த னேவிவன் பாதக னேயெனச்
சித்த நீசெயிற் றிக்கிலை யாற்பரி
சுத்த போதஞ் சுகங்கொடுத் தாளெனை
யத்த னனதண் டாயுத பாணியே. (9)

கோள்வி ரோதமுங் கூற்றின் விரோதமு
நாள்வி ரோதமுந் தீர்த்தரு ணல்குவாய்
கேள்வி யாலுணர்ந் தோர்தமைக் கிட்டநின்
றுள்வி னோததண் டாயுத பாணியே. (10)

ஆக செய்யுள் ௧௦.

---

## வேறு இதுவுமது.

சோதனை நீசெயத் தொடங்கி னற்பல
வாதனை யாலுழன் மனத்தி னேன்பொறேன்
வேதனை தீர்இனி விரைந்து வீணிலிச்
சாதனை யாகுமோ தண்ட பாணியே. (1)

அன்னியர் மதிக்கா னடிமை காட்டினே
னென்னினு மெனக்குநீ யிரங்கல் வேண்டுமாற்
றுன்னினர் வயிற்பிழை சூழ்கி லார்நலோர்
தன்னிகர் மகத்துவ தண்ட பாணியே. (2)

ஓர்வழிப் படவிலை யுள்ள மூழ்வினை
தீர்வதெப் படியெனத் திகைக்கின் றேனருட்
பார்வைவைத் தெனைப்பரி பாலிப் பாய்மலர்த்
தார்வரைப் புயசிவ தண்ட பாணியே. (3)

கலியுக மிதுவிவன் கசட னாதலின்
மலியருள் புரிவதென் னெனம தித்தியேன்
மெலிவினை விலக்குநர் வேறி யார்கராஞ்
சலியொடு சுரர்புகழ் தண்ட பாணியே. (4)

நன்னிலத் தெவர்க்குமெந் நயமு நல்குநீ
யென்னிடத் தருள்செயா திருப்ப தென்கொலோ
மின்னிழற் சிவகிரி மேற்குப் பார்த்துள
சன்னிதிப் பெரும்புகழ்த் தண்ட பாணியே. (5)

அன்பர்பண் பொருசிறி தாயி னுங்கொளா
வன்பனென் றெனையிது வரைவ ருத்தினு
மின்பமின் றெனக்கரு ளிந்தி ரற்கவன்
றன்பதங் கொடுத்துள தண்ட பாணியே. (6)

என்னைநீ யாட்கொளி னெவர்த டுப்பரிங்
குன்னையேன் யோசனை யுளமி ரங்குவாய்
மின்னைநேர் சடைப்பிரான் வியப்ப வோர்மொழி
தன்னையோ தியசிவ தண்ட பாணியே. (7)

உனதுள மிரங்கினெற் குவகை கைவரக்
கனபகல் செல்லுமோ கணத்தி னாகுமே
யனவர தமுமுனக் கபயம் யான்வரைந்
தனவுமை யருளிய தண்ட பாணியே. (8)

எத்தனை கெஞ்சினா னியம்பி னாலுநீ
யத்தனை யுங்கூறி யாதி ருந்தனை
சித்தம தென்கொலோ தெரிந்தி லேன்பிணித்
தத்தளை விலக்குவாய் தண்ட பாணியே. (9)

வந்தனை புரிந்திலேன் வாழ்த்து கின்றிலேன்
சிந்தனை பெரிதுளேன் றெளிப்ப துன்கடன்
சுந்தர பிரணவ சொரூப சோதியாய்ச்
சந்தத மொளிர்தரு தண்ட பாணியே. (10)

ஆகச்செய்யுள் ௨௰.

---

## அறுசீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்.

எங்கெங் கேயோ விருந்தனந்த ரெழிற்கா வடிக ளெடுத்துவர
வங்கங் கேபோய் மகிமைவிளைத் தருள்கின் றனையே யடியேற்குத்
தங்கம் போலே வயங்கியநின் சரணங் காட்டத் தடையென்ன
பங்கந் தீர்வா விதுசமையம் பழனிக் குமரப் பெருமானே. (1)

எண்ண முடியாக் காவடிக ளெய்து வனகா ணிக்கையுமவ்
வண்ண மபிடே கங்களையார் வகுக்கற் பாலார் மகிமைபல
நண்ண வளர்நின் சன்னிதிநா னாடி னேனென் னவைதவிர்ப்பாய்
பண்ண வரைமுன் காத்ததிருப் பழனிக் குமரப் பெருமானே. (2)

ஆர்க்குந் தெரிய வனேகர்குறை யகற்றா நின்றா யடியேனோய்
தீர்க்குந் திறமை யுனக்கிலையோ தியங்கக் கொடுமை செய்யிலிந்த
வூர்க்குந் திசைக ளெவற்றினுக்கு மோகோ பழிப்பா முவந்தெனைக்கண்
பார்க்குந் தருண மிதுவருள்கூர் பழனிக் குமரப் பெருமானே.

ஒருசொற் பொருளு முணரேனின் னுள்ள முவகை யுறவழுத்தி
யருமைத் தமிழைப் பாடவென்ன லாமோ வுளறி யதையேற்றுக்
கருமப் பிணியைத் தவிர்த்துமுற்றுங் காப்ப துனது கடமைகண்டாய்
பருவக் குறமின் மணவாளா பழனிக் குமரப் பெருமானே. (4)

தடிப்புந் திமிருஞ் சுரவையுங்காந் தலும்பீ னசமுந் தாகமுங்கால்
வெடிப்புந் தளர்வு மலபந்த வினையு மிவையால் வெருண்டமனத்
துடிப்புந் துயருந் தவிர்த்தெனையாள் சுருதி யிசையுஞ் சுவைத்தமிழின்
படிப்பும் பலசங் கமுமுழங்கும் பழனிக் குமரப் பெருமானே. (5)

தேச மனைத்து மதிசயிப்பத் தினமு மகிமை செலுத்திமுழு
நீசர் தமக்கு மின்பநல்கு நீதித் தெய்வ நீயென்றே
வாச மிகுத்த வுனதுபதம் வழுத்தா நின்றேன் மனமிரங்கிப்
பாச மயக்க மொழித்தெனையாள் பழனிக் குமரப் பெருமானே. (6)

மாவச் சிரபா ணிக்குமணி மகுடஞ் சூட்டி மனத்துவகை
மேவச் செயுநீ தமியேனை வெறுப்ப தழகோ விரைந்துமலர்
தூவப் பததா மரைவணங்கத் துதிக்கக் கருணை சுரந்தெனது
பாவப் பிணிதீ ரிதுசமையம் பழனிக் குமரப் பெருமானே. (7)

கிரம மறியே னொருசிறிதுங் கெஞ்சார் தமையுங் கெஞ்சிவெறுஞ்
சிரம முடையே னாகியந்தோ திகைத்தே னென்னைத் திருத்திநல்ல
வரம தருள்வாய் புறக்கணித்தால் வருத்தஞ் சகிக்க மாட்டேனென்
பரம குருவே வளமலிதென் பழனிக் குமரப் பெருமானே. (8)

வாயுந் தனுவு மனமுமொரு வழிநின் றிடநின் மகிமைதனை
யாயுந் திறமை வரவிலையே யையோ வென்ன செய்வேனென்
றாயும் பிதாவுஞ் சற்குருவுந் தமரு நீயென் றெனைக்காப்பாய்
பாயுந் திரைபொன் கொழிக்குநதிப் பழனிக் குமரப் பெருமானே. (9)

உனது திருநா மங்கள்சில வுரைப்பேன் வாயா லுருகுகிலேன்
மனம தனையோர் வழிநிறுத்த மாட்டே னெனெவ் வகையுய்வேன்
றினமு மெனைநீ திருத்தியிடர் தீர்த்துக் கருணை செயல்வேண்டும்
பனக ரிமையோர் பணிந்துதொழும் பழனிக் குமரப் பெருமானே. (10)

ஆகச்செய்யுள் ௩௰.

## கொச்சகக் கலிப்பா.

பத்தர்திருக் கூட்டம் பயின்றறியேன் பாடுவதாப்
பித்தர்தமிற் கத்துகின்றேன் பேயேன் பிழைபொறுப்பா
யத்தர்செவிக் குட்பொருளை யன்றோ தியகுமரா
சித்தர்துதிக் கும்பழனித் தேவசே னுபதியே. (1)

வீணாள் கழித்து விபரீத வெண்ணமனம்
பூணா தெனக்குனது பொற்பாத சேவையருள்
பாணா தரிக்கும் பமரம் பலபயிலச்
சேணார் பொழிற்பழனித் தேவசே னுபதியே. (2)

துட்டமன வாதனையோ சொல்லமுடி யாதுதுயர்
விட்டகல நீயருளி வெவ்வினையே னைப்புரப்பாய்
மட்டவிழு மென்மலர்தூய் வாழ்த்திவல மாகவந்து
சிட்டர்பர வும்பழனித் தேவசே னுபதியே. (3)

உள்ளுறுதி யெள்ளளவு முள்ளேனல் லேனெனினுந்
தள்ளுவது தன்மமன்று சாமீ யுனக்கபயம்
விள்ளுமலர் வாவிதொறு மிக்கசுவை முக்கனியின்
றெள்ளுநறை பாய்பழனித் தேவசே னுபதியே. (4)

ஆருனது மேன்மை யறிந்து புகழவல்லார்
பாருலகின் யான்புன் பவமெப் படிகடப்பேன்
ஓருணர்வு மின்றி யுழன்றே னெனைக்காப்பாய்
சீருலவு தென்பழனித் தேவசே னுபதியே. (5)

கெஞ்சுறுவோர் தம்மைக் கிலேசக் கடலழுத்தி
நெஞ்சுருகா துற்றிடுத னின்பெருந்தன் மைக்கழகோ
வஞ்சுதறீர் வஞ்சனையீ தாகா தடைக்கலநான்
செஞ்சுடர்வே லாபழனித் தேவசே னுபதியே. (6)

இன்னுனித் தெய்வநம்பி யேதேதோ பாடிவந்துந்
தன்னுகப் புன்னோய் தவிர்ந்திலனென் றுரேனுஞ்
சொன்னலைப் போதுனது தொன்மகிமை யென்னுருந்
தென்னார்நெற் சூழ்பழனித் தேவசே னுபதியே. ( )

பாதகமோ ரைந்தும் பயின்றிடினுந் தன்குழந்தை
மீதருளே யன்றி வெறுப்புவைப்ப ளோமிகத்தா
யாதலினு லென்குறைபெண் ணுமலெனை யாதரிப்பாய்
சீதளதா மாபழனித் தேவசே ஞபதியே (8)

கல்லா னையுமுன் கரும்புதின்னக் காட்சிதந்த
வல்லான் மகனீ மனம் வைத்தா லென்னுடைய
பொல்லா வினைமுழுதும் போகாதோ வோர்நொடிக்குட்
செல்லார் பொழிற்பழனித் தேவசே ஞபதியே. (9)

மாயா வினோத மலையுந் தகர்த்தனையென்
னேயா னதைவிலக்க நோன்மையிலை யோவுனக்கு
நீயா ளெனையிதுநன் னேரமுமை யின்றெடுத்த
சேயா கியபழனித் தேவசே ஞபதியே. (10)

ஆகச் செய்யுள் ௪௦.

---

## அறுசீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்.

இபமுகற் கிளையாய் போற்றி யினர்மால் கிளையாய் போற்றி
சுபகவிப் புலவா போற்றி சுருதிநூல் வலவா போற்றி
விபவசிற் சுகனே போற்றி விமலதே சிகனே போற்றி
தபவனப் பழனி மேவுஞ் சண்முகா போற்றி போற்றி. (1)

அருவுரு வாவாய் போற்றி யலைவுள மேவாய் போற்றி
குருவென வருவாய் போற்றி குணநலந் தருவாய் போற்றி
பெருவினை யறுப்பாய் போற்றி பிழையெலாம் பொறுப்பாய் போற்றி
தருவுயர் பழனி மேவுஞ் சண்முகா போற்றி போற்றி. (2)

கடவுளர் பதியே போற்றி கருணைவா ரிதியே போற்றி
திடமறை முடிவே போற்றி சின்மய வடிவே போற்றி
சுடருமிழ் மணியே போற்றி தொண்டர்கட் கணியே போற்றி
தடமலி பழனி மேவுஞ் சண்முகா போற்றி போற்றி. (3)

சீர்வளர் முருகா போற்றி சீதரன் மருகா போற்றி
கூர்வளர் வேலா போற்றி குமரிதன் பாலா போற்றி
பேர்வளர் வீரா போற்றி பிறங்குகெம் பிராபோற்றி
தார்வளர் பழனி மேவுஞ் சண்முகா போற்றி போற்றி. (4)

வரநதி புதல்வா போற்றி வானவர் முதல்வா போற்றி
குரவணி வாகா போற்றி குஞ்சரி பாகா போற்றி
யரன்மகிழ் குருவே போற்றி யருட்பெருந் தருவே போற்றி
தரமுயர் பழனி மேவுஞ் சண்முகா போற்றி போற்றி. (5)

உரைமன மொன்றாய் போற்றி யுயிர்தொறு நின்றாய் போற்றி
வரைபக வெறிந்தாய் போற்றி மறைமுழு தறிந்தாய் போற்றி
விரைமலர் நீபா போற்றி விண்ணவர் பூபா போற்றி
தரைபுகழ் பழனி மேவுஞ் சண்முகா போற்றி போற்றி. (6)

வினைதவிர் மருந்தே போற்றி மெய்யினர் விருந்தே போற்றி
நினைதரு தெருளே போற்றி நித்தியப் பொருளே போற்றி
வனைமல ரடியாய் போற்றி மாமணி முடியாய் போற்றி
தனைநிகர் பழனி மேவுஞ் சண்முகா போற்றி போற்றி. (7)

கலையொருங் குடையாய் போற்றி கடுங்குறட் படையாய் போற்றி
மலைவருங் குகனே போற்றி வள்ளிநா யகனே போற்றி
நிலைபெறுந் தனியே போற்றி நிறையருட் கனியே போற்றி
தலைமையம் பழனி மேவுஞ் சண்முகா போற்றி போற்றி.

திருப்பரங் கிரியாய் போற்றி செந்திலுக் குரியாய் போற்றி
யருட்குளாங் கடியாய் போற்றி யாவினன் குடியாய் போற்றி
இருக்குறுந் தேனே போற்றி யேரகத் தானே போற்றி
தருக்குதென் பழனி மேவுஞ் சண்முகா போற்றி போற்றி.

இமிழ்திரை முடித்தாய் போற்றி யெதிர்ந்தசூர் மடித்தாய்போற்றி
அமிழ்தினு மினியாய் போற்றி யன்பரை முனியாய் போற்றி
யுமிழ்தரு கிரணா போற்றி யுயர்குணா பரணா போற்றி
தமிழ்தழை பழனிமேவுஞ் சண்முகா போற்றி போற்றி. (10)

ஆகச் செய்யுள் 50.

---

சந்தக்கொச்சகக்கலிப்பா.

மடற்கமல மலர்த்தவிசில் வசித்ததிசை முகத்தினனு
மிடற்கருட னுயர்த்தவனு மிகுத்தவர வரப்பவுணர்
கடற்படையை முடித்தவயில் கதித்திலகு கரத்தவனை
அடற்பிணியை விலக்கியரு ளெனக்கூறு முனைக்குயவர். (1)

நிருத்தமிடு வெறிக்கவியை நிகர்த்தபலை யகத்திலுள
வருத்தமுறை செயற்கரிது வயற்பழனி மலைக்குளுறை
கருத்தவொரு கணத்துனது கழற்றுணைகள் வழுத்தியவெ
னுருத்தளர்வு தணித்திடுதி யுனக்கபய முனக்கபயம். (2)

மதித்தபடி நொடிப்பொழுதின் மனக்கவலை யொழித்ததிக
துதித்தமிழி னியற்கவிகள் சொலக்கனிவு கொடுத்தருள்செய்
குதித்தமரர் தொழப்புனித குணப்பரம னுதற்கணிடை
யுதித்தசிவ கிரிக்குமர வுனக்கபய முனக்கபயம். (3)

அளப்பரிய மகத்துவநி னடித்துணையை யடுத்தவர்கள்
சளப்படுவ திலைச்சகல சவுக்கியமு முறப்பெறுவர்
வளப்பவுல கினிற்பெரிய வழக்கமிது மலைக்குகவெ
னுளப்பயம தகற்றியரு ளுனக்கபய முனக்கபயம். (4)

அமைக்குமுன துளப்பெருமை யளப்பதெவர் தமக்குமரி
திமைக்குமுன மெனைத்தொழிலு மியற்றிடுவை நினைத்தெனது
சுமைக்கவலை தவிர்ப்பததி சுருக்கமதின் மயக்கமென
வமைக்கினிய திருப்புதல்வ வுனக்கபய முனக்கபயம். (5)

அவப்பொழுது கழித்துமன மலுத்திடுவ தறக்கொடுமை
தவப்புனிதர் தொழக்குலவு தனிச்சிகியி னுதித்தெனது
பவப்பிணிக டவிர்த்துபய பதப்பதும நினைக்கவரு
ளுவப்புடைய தமிழ்ப்புலவ வுனக்கபய முனக்கபயம். (6)

செழித்தகட லுடுத்தவிரி செகத்தின்மிசை சிலச்சிலர்கள்
பழித்துநகை செயக்குறைவு படுத்திடுவ தியற்கையல
விழித்துணையி னருட்கனிவு மிகுத்துவினை வினிற்பிணியை
யொழித்துதவு கிரிக்கதிப வுனக்கபய முனக்கபயம். (7)

இரக்கமுன துளத்தினிடை யிலைச்சிறிது மெனிற்பழுது
புரக்கவிது நலத்தததி புலைத்துயரை யொழித்தருள் செய்
கரக்கதைகொள் வரைத்தலைவ கடப்பநறு மலர்த்தெரிய
லுரக்களப புயத்தவினி யுனக்கபய முனக்கபயம் (8)

அரைக்கணமு மினிச்சிறிய னகக்கவலை சகிக்கரிது
தரைக்கணுயர் வுறக்கருணை தனைப்புரிதி தமிழ்ப்பொதிய
வரைக்கலச முனிக்குமுன மதித்தறிய மறைப்பொருளை
யுரைக்கவரு தனிக்குரவ வுனக்கபய முனக்கபயம். (9)

சடைக்கவிட லெனைச்சிறுமை தவிர்த்துனது மலர்க்கழலி
னிடைக்கவிதை களைப்புனைய வினைக்கிலசு கத்தையருள்
விடைக்கடவுள் விப்பமறை விரித்தகுக குவட்டினைமு
றுடைக்கவிரை படைப்பொருன வுனக்கபய முனக்கபயம் (10)

ஆக செய்யுள் 60.

---

## கட்டளைக்கலித்துறை.

மருளுந் துயர்மன மாயா விகாரத்தை மாற்றிநல்ல
தெருளுந் தயிரிய முஞ்சுக மும்பெருஞ் செல்வமுமெய்ப்
பொருளுந் தமிழ்மல ராலர்ச்சித் தேத்தும் புனிதர்தமக்
கருளுந் திருமுரு காவடி யேனின் னடைக்கலமே. (1)

நீளுங் கதிர்வடி வேலு மயிலுநன் னீபவரைத்
தோளுங் கமல முகமு மிரண்டுஞ் சுகந்தவெட்சித்
தாளுங் கவினு மிலங்கவந் தன்பர் தமைத்திருத்தி
யாளுங் குகவர தாவடி யேனின் னடைக்கலமே. (2)

சேண்டட வும்பழ னிக்கிரி மீதினிற் சேரலன்செய்
காண்டகு பைம்பொன் விமானத் துவகை கனிந்தவனை
வேண்ட விரைந்து வினைதீரு மேமுன் விதித்துயர்தீர்த்
தாண்டருள் வந்துகந் தாவடி யேனின் னடைக்கலமே. (3)

மெய்யான காரண தெய்வ முனையன்றி வேறுளதோ
பொய்யா பழைய கதைகளெல் லாமிப் புதுமையென்னே
ஐயா வகையெனை யாள்வாய் ததியிது நற்பழனி
யையா பவளமெய் யாவடி யேனின் னடைக்கலமே. (4)

செயத்தகு காரிய மொன்று மெனக்குத் தெரியவில்லை
மயக்க விகார மனஞ்சரி யாக வருவதென்றோ
கயற்கிணை யான கருங்கட் குறத்தி கணவவினி
யயர்க்குத னீதியன் றாலடி யேனின் னடைக்கலமே. (5)

ஈரம் பெருநெருப் புக்கில்லை யென்ப தியற்கை யென்றாற்
கோரம் பரவுமெக் குற்றமு நீயுட் கொளத்தகுமோ
தீரம் பலவுமிப் போதரு ளிப்பிணி தீர்கடம்பி
னாரம் புரள்புயத் தாயடி யேனின் னடைக்கலமே. (6)

ஒருவினை யேனு முனக்கெதி ரேகிற்கு மோபழைய
கருமம தேது கடைக்கணித் தாலென் கசடொழிப்பாய்
மருவிரி சோலை புடைசூழ் பழனி மலையின்மிசை
யருளுரு வாயமர் வோயடி யேனின் னடைக்கலமே. (7)

நீதரு கட்டளை யின்படி கன்ம நிகழுமன்றி
யேதத னுக்கொரு சத்தியுண் டென்ப திழிவுடைத்தாற்
பாதக முற்று மகலக்கண் ணாலெனைப் பார்த்தருளி
யாதரி மெய்க்குும ராவடி யேனின் னடைக்கலமே. (8)

தொழிலெங் கினுக்கு மதிகாரி நீயெனச் சொல்லுலகு
மொழியுங் குறிப்பின் முடியா தனவில்லை முற்றொடர்ந்த
பழியுந் தவிர்த்து வரந்தரல் வேண்டும் பழனிவெற்பி
லழிவின்றி நிற்பவ னேயடி யேனின் னடைக்கலமே. (9)

புகலுங் கவியிற் பிழையிருந் தாலும் பொறுத்திரவும்
பகலுங் கருணைத் துணையா யெனைப்பரி பாலியய்யா
விகலுந் திதிபுத் திரர்மீது வேலன் றிமையவர்புன்
னகலும் படிதொட்டி லாயடி யேனின் னடைக்கலமே. (10)

ஆக செய்யுள். 70.

---

## கலிவிருத்தம்.

உலவா வொருகூ றுடல்கூ றிடுவேல், வலவா திருமான் மருகா மறைநூற்
புலவா வுமையாள் புதல்வா பழனித், தலவா னவனே சரணஞ் சரணம். (1)

பமரா ரவபஞ் சதருக் குலநீ, டமரா வதிகா வலனு கவமைந்
தெமரா சனுமெஞ் சவுணர்ப் பொருவெஞ், சமரா குமரா சரணஞ் சரணம். (2)

அலைவா ரிதிசூ ழகிலத் தினில்வெம், புலைவா தனைநோய் புறமோ டிடநன்
னிலைவாழ் வருள்வாய் நிமலா பழனித், தலைவா முருகா சரணஞ் சரணம். (3)

கனிவா யுனதாள் கருதுந் தமியேன், றனிவே தனைதீர் சுருதித் தவமா
முனிவோ ரிமையோர் முறையிற் பரவுந், தனிவே லரசே சரணஞ் சரணம். (4)

வண்டா மரைவா னவன்மான் முதலோர், கொண்டா டுபுகும் பிடவின் புறுவாய்
விண்டாழ் பழனிக் கிரிமீ துறையுந், தண்டா யுதனே சரணஞ் சரணம். (5)

பணியத் தமிழ்பற் பலபா டியுனக், கணியத் தெரியா தவனே னெனினும்
பிணியைத் தவிர்பின் னிடலென் னபெருந், தணிகைக் கதிபா சரணஞ் சரணம்

அருவா யுருவா யறிவா யழியாத், திருவா யுருகிச் சிவனும் பரவுங்
குருவா யடியார் குறைதீர் கருணைத், தருவாய் வருவாய் சரணஞ் சரணம். (7)

அதிகூர் பழனிச் சுகவா ரிதியே, கதிவே றிலைநின் கழலல் லதுநீ
மதியா விடில்யார் வலர்நோய் களையக், கதியே னெனையாள் சரணஞ் சரணம் (8)

கவலைப் பிணியைக் கருதிக் கருதித், தவலாத் தகுமோ சுகநீ தருவாய்
பவமற் றுயர்வோர் பரவும் பழனித், தவமெய்ப் பொருளே சரணஞ் சரணம். (9)

நகுமூ விலைவே லவனல் கவருஞ், சுகுமா ரதுயர்க் கடலூ டடியேன்
வெகுகா லமதா கமெலிந் துழலத், தகுமோ வருள்வாய் சரணஞ் சரணம். (10)

ஆகச் செய்யுள் 80.

---

## கலி நிலைத்துறை.

மலநெ டுஞ்செக வனத்தினி னினைத்துள வழிபோ
யலம ருந்துரு மனக்குரங் கினைவச மாக்கிக்
கலக மொன்றுமில் லாதெனைக் காப்பதுன் கடனாற்
பலவ ளம்புனை பழனிவாழ் சரவண பவனே. (1)

அவமு யற்சியி லலைந்தலைந் தனுப்பதே யன்றி
விவர மற்பமு முணர்ந்திலே னென்பழ வினைதீர்
குவல யத்தெவர் குறிக்கினுந் திருவருள் கூர்ந்து
பவமொ ழித்தொளிர் பழனிவாழ் சரவண பவனே. (2)

இந்த மானுட வுடல்கிடைத் துளதரி திடையில்
வந்த தீவினை யன்றிநோ யுங்கொள வசமோ
சொந்த னீயுன தடிமைநா னருள்செய்பூஞ் சோலைப்
பந்தர் சூழ்தரு பழனிவாழ் சரவண பவனே. (3)

மனித யாக்கையுற் றுளபொழு தேயருள் வருவ
தினிது மேற்பிறப் பெதுகொலோ வறிகிலே னெனையாள்
கனிக டேய்க்கதிர்க் கடவுளு மிடைச்செலக் கனினும்
பனித வாப்பொழிற் பழனிவாழ் சரவண பவனே. (4)

என்னா வாகருத் திலையுனை யிடைவிடா தேத்தி
நன்னா வாடலப் பலதடை யுய்வதெந் நாளோ
வன்னா வாகனத் தோகைமேல் வந்தருள் வடிவேற்
பன்னா வாதமிழ்ப் பழனிவாழ் சரவண பவனே. (5)

கருவ மேழுத விழிந்தநிக் குணமெலாங் கலந்தோ
ருருவ மாகிய வெனக்குனை யலதுகிக் குளதோ
வெருவ நீயெனை விட்டிடேல் விரைந்துநோய் விலக்கப்
பருவ மீதருள் பழனிவாழ் சரவண பவனே. (6)

அதிக வாசையா கியபெரும் பேய்பிடித் தாட்ட
மதிபி லாதுநான் வருந்திவா டுவதுசம் மதமோ
முதிய பாவம்யா வையுந்தவிர்த் தாளெனை முழுதும்
பதித பாவனு பழனிவாழ் சரவண பவனே. (7)

சங்கை யென்பது தவிர்ந்திலே னுளத்திலென் றனக்குச்
செங்கை தங்கிய நெல்லி போ லெவற்றையுந் தெளிப்பா
யங்க யற்றொறு மன்னமென் பேடையோ டமர்பூம்
பங்கயந் திகழ் பழனிவாழ் சரவண பவனே. (8)

எந்தக் காரிய மும்பிற ராலலை தெளியேன்
சொந்தத் தேமுடி வணிலை சதாமனத் துயரே
யந்தப் பாடெவ ராற்றலாம் விரைந்ததற் றப்ப
பந்தத் தீவினை பழனிவாழ் சரவண பவனே. (9)

அயல வர்க்குப சரித்துவேண் டுவகொடுத் தமைந்தாற்
செயல்சி லச்சில நடத்தலா மில்லையேற் செல்லா
வியல்ப னைத்தையு முணருமே திருவுள மெளியேன்
பயமொ ழித்தருள் பழனிவாழ் சரவண பவனே. (10)

ஆகச் செய்யுள் 90:

---

## எழுசீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்.

மறிகடல் குடித்த வயவடி வேலு மயிலுஞ்செஞ் சேவலு மார்பும்
வெறிகமழ் கடம்பும் வீறுபன் னிருதோள் விளக்கமுஞ் சண்முக வியப்பு
மறிவொரு சிறிது மமைந்திலா வடியே னகத்துதித் திடவெளி யனவோ
செறியிரு ளகலச் சேவைதந் தெனையாள் சிவகிரிக் குமரதே சிகனே. (1)

வேதவண் டினம்பண் மிழற்றமுத் தமிழின் விரை கமழ்ந் தெழில்விளங் குனது
பாதபங் கயமிப் பாவியே னிதையப் பைந்தடத் தலர்ந்திடப் படாதோ
கோதறுங் கரும்பே கொழுஞ்சுவைக் கனியே குணநிதி யேயருட் குருந்தே
சீதவெண் கிரணத் திங்கடோய் குடுமிச் சிவகிரிக் குமரதே சிகனே. (2)

பற்பல சீருஞ் சொற்பன மேரும் பயன்மறப் புள்ளுற வோரும்
சற்பனை யுலக கற்பனை கலக சமுத்திர மதனில்யான் விலகப்
பொற்பணி யுந்து நற்பத மெனது புலனமைத் திரங்குவாய் மனசு
சிற்பர வடிவே தற்பத முடிவே சிவகிரிக் குமரதே சிகனே. (3)

அந்தியும் பகலு முந்தினின் றிகலு மறுபெரும் பகைகளென் றகலும்
புந்திநொந் தேனே வந்திதந் தானே புகலுனக் கடைக்கல நானே
மந்திரந் துதித்த விந்திரன் கதித்த வாழ்வுபெற் றிடும்படி யுதித்த
செந்திலம் பதியாய் தந்திர விதியாய் சிவகிரிக் குமரதே சிகனே. (4)

உருவமு நயமு மொழிந்தவ ளொருத்தி யொருசது ரனைவச மாக்கக்
கருதிய படிநின் கருத்தினைத் திருத்தக் கவியெனச் சிலசொலிக் கதறு
மருவினை யேனை யடிமைகொண் டெந்நா ளாள்வையோ வறிகிலே னருள்செய்
திருவுறை கமலச் செழுந்தடம் புடைசூழ் சிவகிரிக் குமரதே சிகனே. (5)

நரைதிரை முதிர்ந்து நடுங்கிய விருத்தை நடனகி தத்தையார் நயப்பார்
கரைதவிர் மோகக் கசடனே னுளறுங் கவிக்குன துளங்கனி வுறுமோ
தரைமிசை நானெனத் தனைபகற் கவன்று தளர்வலாண் டருளிது சமையந்
திரைபொரு நதிநித் திலமணி கொழிக்குஞ் சிவகிரிக் குமரதே சிகனே. (6)

என்னினை வுளஞ்சற் றிரங்கிலா யந்தோ வேழைநா னென்னசெய் குவனின்
சன்னிதி தனில்வந் தவரெவ ரெனினுந் தளர்ந்துபின் வருந்துறத் தகுமோ
கன்னியு மொருபாற் கவினவான் கடவுட் கங்கையுங் கடுக்கையும் பிறையுஞ்
சென்னியி லிலங்கத் திகழ்ந்தரன் போலுஞ் சிவகிரிக் குமரதே சிகனே. (7)

எவ்வயித் தியர்தம் மிடத்துநம் பிக்கை யின்றிநின் சன்னிதி யெய்திக்
கவ்வையத் தனையுங் கழறவோர் மருந்து கைவர நல்கியென் கருத்து
மவ்வயிற் றெளிவித் தனைகுறி மலரா லன்னதே யனுட்டிக்கின் றேன்யான்
செவ்வயிற் கருணை செய்குவாய் முழுதுஞ் சிவகிரிக் குமரதே சிகனே. (8)

மனமுழு லோப முனமெழு கோப மற்சரம் பற்பல தாப
நனவினு மூடக் கனவினுங் கூட நலிவன வவைபறந் தோட
வுனதிரு பாத நினைவருள் சீத வொளிநில வழகுகுன் றுத
தினகர னுலவுங் கனபொழில் குலவுஞ் சிவகிரிக் குமரதே சிகனே. (9)

மயலிலே வலுத்த பயல்களா முலுத்த வஞ்சரைக் கெஞ்சிவா யலுத்த
அயரெலா மொருவ நியமமே மருவத் தொல்வினை யோடியே வெருவத்
தயவுகூர் வாவே யுயர்வுளோர் கோவே சரததண் டாயுதத் தேவே
செயகுகா கந்தா சுகசந்தா நந்தா சிவகிரிக் குமரதே சிகனே. (10

ஆ செய்யுள் 100

---

## வஞ்சித்துறை.

உள்ளிமேனைநீ, தள்ளிடாமலாள், வெள்ளிமூரல்கூர், வள்ளிலோலனே. (1)
புத்திதேடிமோர், சித்திபிகுவாய், நித்தியாபரா, சத்திவேலனே. (2)
தொந்தமாயையால், வந்ததீதெலாம், இந்தவேளைதீர், கந்தநாதனே. (3)
கவடமாகுமோ, பவவியாதிபோ, யுவகைகூரகோர், சிவகிரீசனே. (4)
தொழமுயற்சியே, ஞழல்வகற்றுவாய், நிழல்வருக்கைசூழ், பழனியப்பனே. (5)
தொண்டருடுபோ, யண்டநீசெயா, கண்டலேசர்தாழ், தண்டபாணியே. (6)
சகையாளனீ, யாகையால்விடே, ஞைகைவாழ்வுதா, தோகைவீரனே. (7)
உய்வதோதியே, கைவிடாதுகா, தெய்வயானைசேர், மெய்விசாகனே. (8)
சகசமாகநான், மிகநினுதாள், புகழமேவியாள், குகசுவாமியே. (9)
தளர்விடும்பைதீர், கிளர்சுரும்புதா, துளர்செழுங்குரா, வளர்கடம்பனே. (10)

ஆ செய்யுள். 110.

---

## அறுசீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்.

பொழிதருகற் பகமலரும் புள்ளினமும் பந்தரிடு போர்ப்பூ மிக்குள்
விழிசுழல்பற் பலபேயும் விண்ணவரும் துதிக்கவொரு விளையாட் டெய்திப்
பழியுருவப் பிறையெயிற்றுப் படையவுண ருயிரையுண்டு பரவைமாந்தி [வாம்.
யெழில்கொள்கரத் துறங்குமொள்வேலெங்ளைதனைச்சிந்தையில்வைத்திடர்தீர்ந்துய்

ஆலெடுத்த மகவாய்க்குன் றன்றெடுத்த பெரியோனு மலரு ளானு
மாலெடுத்த மகவானு மறையாது தலையெடுக்க மறலி சாயக்
காலெடுத்த பரஞ்சுடருங் கரத்தெடுத்து முத்தமிடக் கனிவு கூர்ந்தோர்
வேலெடுத்த குமரனைமென் மேல்வாழ்த்திக் கொடியபழ வினைதீர்ந் துய்வாம். (2)

அண்டர்தள ராதிருக்க வயனுநெடு மாலுமடுத் தறியா நீல
கண்டர்மன தினுங்கவுரி கருத்தினும்பே ருவகையெழக் கலங்கா ஞானத்
தொண்டர்தவ வேள்வியிடந் தொறுநடக்கத் துன்பமெலாந் தொலைந்தே யோட
வண்டர்பயில் சரவணப்பூ மலர்தவழ்செல் வனைத்துதித்து மயக்கந் தீர்வாம். (3)

கனநரசிங் கத்தையொரு கணத்தில் வென்ற சரபமெனுங் கயிலை யாளி
மனமகிழும் படிகும்ப மதகரட யானையின்பின் வந்து தோன்றிப்
புனமுழுதுந் திரிந்துபெரும் புகழ்வேங்கை யாகிநின்று புவிவா னுய்ய
வினமுயருங் குறமானை யிணங்குமெங்கள் கோமானை யிறைஞ்சி வாழ்வாம். (4)

முளைமதியொத் திலங்கெயிற்று முகிற்குரற்கா ருடற்றனது முறையே தோன்றக்
கிளைதழுவிப் பத்திரமுன் கெழுமுபுமேற் பூமயங்கக் கிளர்காய்ப் பெய்தி
விளைபலமெய்ப் பொழுதுமரு விதமேந்திச் சாலமது மேவப் பெற்று
வளைகடலிற் பொலிந்தவெஞ்சூர் மாத்தடிந்த கடம்பரசை வழுத்தி வாழ்வாம். (5)

அடலவுணர் தடம்புயங்கண் ணுதியிடங் களினிடமு மங்க லார்தம்
முடலில்வல மும்பிலத்துள் ளூரககண பணுடைவியு முலகும் வெற்பும்
படபடென நெடிதாடப் பணியாடத் தனியாடும் பசுங்க லாபத்
திடமயிலில் விளையாடித் திரியுமிளங் குழந்தைதனைச் சிந்தை செய்வாம். (6)

பணிவரையி னுதித்துமுக்கட் பவளவரை தழுவுபுபற் பலபூ நல்கும்
புனிதமர கதவல்லி புகழிளம்பா லனைவிபுதர் புழுக்கந் தீர்த்த
தனிவிடலை யைப்புலவோர் தனைக்குறிஞ்சிக் கிழவனெனுந் தன்மைக் கேற்ப
வினிதுமகிழ் குறக்குமரிக் கெதிரடுத்த விருத்தனைநெஞ் சிருத்தி வாழ்வாம். (7)

தொடுத்தமய வலைகண்ணி தோண்மிசைக்கொண் டுரியபடை துவன்றித்தோன்ற
வெடுத்ததிக மாயவரை யிடத்தசுரப் பிறைநெடுங்கோட் டிகல்வே ழத்தைக்
கடுத்தமுதிர் பயிற்சியினக் கடுங்கொலைச்சிங் கத்தினையுங் கடந்து மேன்மே
லடுத்தபல மாவேட்டை யாடியவே டனைவணங்கி யரந்தை தீர்வாம். (8)

சிவகிரிக்கட் புவனமுய்யச் சேரர்பிரான் புரிதருபச் சிமத்து வார
நவமணிப்பொற் சினகரத்து ஞானகரு*ணைநிதியாய் நவைதீ ரன்பர்
தவவருச்சித் துபசரிக்குஞ் சமையங்க டொறும்பலசுந் தரசொ ரூப
முவகைமுற்றக் காட்டியிரு ளோட்டியொளிர் செழுஞ்சுடரை யுள்ளி வாழ்வாம். ()

அரியபழ மறைகளுங்கண் டறியாத தனதுதிரு வருளாற் றொண்டர்க்
குரியதெரி சனந்தரத்தண் டொருகையி லூன்றிமருங் கொருகை சேர்த்து
வரியளிகொள் பொழிற்பழனி மலைமிசைமேற் றிசைநோக்கி வயங்கா நிற்குந்
துரியமுடி வாகியசிற் சொரூபத்தைத் துதித்துவினைத் தொடர்பு தீர்வாம். (10)

ஆக செய்யுள். 120.

பழனிக்கோயில் விண்ணப்பம் முற்றிற்று.







கடவுள் துணை.

# தயாநிதிக் கண்ணிகள்.

## வெண்செந்துறை.

சீர்பூத்த நின்பாத சேவைதந்து தீவினைதீர்
வார்பூத்த கொங்கையுமை மைந்தா தயாநிதியே. (1)

இந்திரனைக் காத்தவுன்றா லென்னமுடி யாதிடர்தீர்
தந்திமுகத் தெந்தை சகோதர தயாநிதியே. (2)

மாமறைநா லுந்தொடர மாட்டா வுனையெளியேப்
பாமரனு மென்னும் பழனித் தயாநிதியே. (3)

கீர்த்தி விஜய கிரித்துரைகா லத்தினிற்செய்
பூர்த்தி மகிமையெல்லாம் பொய்யோ தயாநிதியே. (4)

இக்கலிகா லத்துமிங் கேயுனைப்போ லேதுதெய்வந்
துக்கமெலா நீக்குவெட்சி சூடுந் தயாநிதியே. (5)

சற்றுமறி வில்லாத சண்டாள னானெனினு
முற்றுமெனை யாள்வாய் முருகா தயாநிதியே. (6)

பத்திசிறி தேனுமில்லாப் பாவி னெனன்றாலுஞ்
சித்தியருளையா சிவாசல தயாநிதியே. (7)

என்னபிழை நான்செய் திருந்தாலு நீபொறுத்து
வன்னமயி லேறியென்முன் வாவா தயாநிதியே. (8)

வாராயோ மாமயிலில் வந்துகலி தீர்த்துவரந்
தாராயோ தென்பழனிச் சண்முக தயாநிதியே. (9)

மாயா விகார மயக்கையெலா மாற்றியெனை
நீயாள் பழனி நிமலா தயாநிதியே. (10)

உன்னையன்றி யுண்டோ உலகிலெனக் குற்றதுணை
யென்னைவஞ்சி யேல்பழனி யெந்தாய் தயாநிதியே. (11)

தீராத வெவ்வினையுந் தீர்க்குநீ யேழைமுகம்
பாராத தென்னதண்ட பாணித் தயாநிதியே. (12)

எப்பா வழுமகற்றி யீடேற்றல் வேண்டுமெனை
யப்பா சிவகிரித்தண் டாயுத தயாநிதியே. (13)

கூறுதான் கற்றனையோ சும்மா விருந்தனைநின்
காதுதான் கேளாதோ கந்தா தயாநிதியே. (14)

ஈராறு காதிருந்து மென்சொற்கே ளாததென்ன
பேராறு சூடிபெற்ற பிள்ளாய் தயாநிதியே. (15)

பன்னிரண்டு கண்ணிருந்தும் பாராத தென்னவென்னை
யுன்னிரண்டு தாளுநம்பி யுற்றேன் தயாநிதியே. (16)

நிமலா துணைக்கா ணிரம்பா நகைவழுண்டோ
பூமலர்தா மாமலைதை போக்குந் தயாநிதியே (17)

எல்லாம் வினைப்பயனே மெண்ணினுனக் கென்னபுகழ்
சொல்லாயுல் லாசவள்ளி தோயுந் தயாநிதியே (18)

ஆறுமு கத்தவதி யாயமுனங் காகாது
தேறார் கடம்புனை திண்புய தயாநிதியே. (19)

இப்படியே நீயிருந்தா லென்னசெய்வே னேருறுதி
செப்படியே னுக்குச் சிவாகுல தயாநிதியே. (20)

நீயிருக்க நின்போர் நினைந்திருக்க வென்னுடலி
னோயிருக்க லாமோ நுவல்குக தயாநிதியே. (21)

அட்டியென்ன வின்னுமெனை யாதரிப்ப தாலுனக்கு
நட்டியென்ன சொல்லுவள்ளி நாயக தயாநிதியே (22)

காலமெல்லாம் வீணே கழித்துமயங் காதுநல்ல
சீலமெலா நல்கிவினை தீர்க்குக தயாநிதியே. (23)

எத்தனைதுன் பங்களெளி யேனெப் படிச்சகிப்பே
னத்தனையுந் தீர்பழனி யப்பா தயாநிதியே. (24)

நானனந்த மார்க நவின்றுமிரங் காததென்ன
தீனபந்து நீயலவோ செந்தூர்த் தயாநிதியே. (25)

பாடவறி யேனெனினும் பற்றினே னின்னையென்னை
வாடவிட லாமோ வடிவேற் றயாநிதியே. (26)

கற்பனையோ பூர்வ கதைகளெல்லா மல்லதுநீ
சற்பனையோ செய்கின்றாய் சாமீ தயாநிதியே. (27)

பொய்த்தெய்வ பத்தருஞ்சீர் பூண்டனர்நா னம்பியநீ
மெய்த்தெய்வ மென்னசொல்வேன் வேலா தயாநிதியே. (28)

பானுமுன மேது பனிநீகண் பார்க்கினிடர்
தானுமுள தாமோ சடாக்ஷர தயாநிதியே. (29)

ஒன்றுந் தெரியா துழன்றேனைக் காப்பதுனக்
கென்றுங் கடமைசெவ்வே லேந்துந் தயாநிதியே. (30)

தயாநிதிக்கண்ணிகள் முற்றிற்று.





உ

முருகன் துணை.

# ஆனந்த கீதரசம்.

## ஞானரசத் தென்பாங்கு.

இராகம் - சாமா அல்லது எதுகுலகாம்போதி.

தந்தைதாய் பந்துஜனர் சற்குருநீ யேயெனது
சிந்தைநோய் தீர்த்தருள் செய் தென்பழனி வேலோனே.

## ஆனந்தசிந்து.

இராகம் செஞ்சுருட்டி அல்லது நாதநாமக்கிரியை ஆதிதாளம்.

பூரணா நந்தசிவ போதகுரு நாதா
புண்யகா ருண்ய சுப்ரமண்ய குண நீதா
வாரணனன் ஞாரணனும் வந்துதினமுந் துதிமனோநீதா
காரணவள்ளியைக் கண் டணைந்த சாமி நா
னம்பினனுன் றனை நா நா நன்னனா. (1)

பாவவினை தீர்த்துனது பாதந் தரல்வேண்டுந்
தேவர்முனி வோர்பரவுந் தென்பழனி வேலோனே.

தேசமெல் லாந்துதிக்குந் தென்பழனி வேலா
தேவதே வாமவுன சிற்சுக விசாலா
பாசபவமோசன சாம்ப்ராஜ்ய சுபமங்கள சபாலோலா
நேசமா யென்னைமுன் னின்று ரட்சி சாமி நா
னம்பினனுன் றனை நா நா நன்னனா. (2)

நின்பதமே தஞ்சமென நேர்ந்தே னிதுசமைய
மின்பமெலா நீயருள்வா யிங்கிதநண் டாயுதனே.

என்னைநீ யிப்படி யிடர்படுத்த லாமா
ஏழையைக் காவாதிருந்தால் விட்டுப்போமா

அன்னைபிதா பின்னைபல்லோ ரினியபய முனக்கையையா
வன்னயமாம் பழனிபுரி வாழ் சாமி நா
னம்பினனுன்றனை நா நா நன்னென. (3)

எல்லா முனதுசெய லென்றிருக்கின் றேனென்னையாள்
சல்லப வள்ளிமணாளா ஷண்முக தயாநிதியே.

பக்தர் பூசிக்கும்பத பங்கய கல்யாணி
பார்வதி யீன்றதிவ்ய பாலகண்ட பாணி
சித்தமகிழ்ந் தித்தருணந் த்யானிக்க படிக்குதவி செய்குவாய்
சுத்தசைதன்ய சொரூப குருசாமி நா
னம்பினனுன்றனை நா நா நன்னென. (4)

மாயா விகற்பஜக வாழ்வைமதி யாமலெனை
நீயா தரித்தருள்செய் நித்யசிவ சற்குருவே.

பஞ்சமா பாதகப் பசாசர் களைத்தேடிப்
பருவம் பார்த்தே புகுந்து பாடல்பலபாடி
நெஞ்சமெலாஞ் சஞ்சலமாய் நின்றுதிகைக் கின்றேனை நீயாள்வாய்
குஞ்சரிவள்ளி குலாவி மகிழ்சாமி நா
னம்பினனுன்றனை நா நா நன்னென. (5)

வீண்பொழுது போக்குவதே வேலையா னேனுனைநான்
காண்பொழுதென் றேவருள்வாய் கானவள்ளி நாயகனே.

தண்டைபொன் கிண்கிணி சதங்கைகள் குலுங்க
சமஸ்தபு ராதனவே தண்டமு மலுங்க
அண்டநவகண்ட மசைந்தாட வுலாவு மயிலாநீபா
தொண்டரெந்நாளுந் துதிக்குங் குகசாமி நா
னம்பினனுன்றனை நா நா நன்னென. (6)

உண்டுறங்கு கின்றதன்றி யொன்றுமறியே னெனையாள்
வண்டுறங்கு பூஞ்சோலை வையா புரிக்கரசே.

மாதர்மே லெப்பொழுது மாறுதில்லை யிச்சை
மனஞ்சுழன்றே யதின்மயங்கு தென்ன லச்சை
யாதரவாய் நீதமியே னல்லலைத் தணித்தருள லாகாதா
சாதனைசெய்வது தர்மமோ வென்சாமி நா
னம்பினனுன்றனை நா நா நன்னென. (7)

பாடேற்றி வாட்டுமின்னார் பாலேற்றி டாமலென்னை
யீடேற்றி யாள்வா யிமயவர்சே னாபதியே.

ஆசையா லெவரும் அநேகவித தொல்லை
யடைந்திட நெஞ்சிற் கருதெரிய வில்லை [தே
வேசையர்பார்க்காசையெலாம்வீணிலிறைத்துத்தாயர்க்குள்வீழ்வே
னாசையகற்றி மதியருளென் சாமி நா
னம்பினனுன்றனை நா நா நன்னான. (8)

எப்போதெப் போதுனை நா னெண்ணினுமென் னப்படி நீ
யப்போதப் போதுமுன்னின் றருள்வாய்த்தண் டாயுதனே.

என்னசொன் னாலுநெஞ் சிரக்கமே யிராதா
எளியவன் மீதிலுனக் கேனிக்கனை வாதா
சின்னமெலா நின்னதுவே சிற்பரதண்டாயுத சிவபோதா
வன்னமயிலேறி வந்தெனையாள் சாமி நா
னம்பினனுன்றனை நா நா நன்னான. (9)

வெய்யகலி நோய்கவலை வேரோடு தீரவருள்
செய்யவிது நல்லததி தென்பழனி நாயகனே.

பாவமுந் துன்பமும் பலபிணியு நீக்கிப்
பகையைநிர்த் தூளாக்கிப் பாக்கியத்தைத் தேக்கி
தீவரமே தாவிதுநன் னேரமுப காரா நிஜவீரா
தேவர் பரவுஞ் சிவகிரிவாழ் சாமி நா
னம்பினனுன்றனை நா நா நன்னான. (10)

பார்த்தவர்க ளென்னைநிந்தை பண்ணு வகைகவலை
தீர்த்தருளல் வேண்டுஞ் சிவகிரித்தண் டாயுதனே.

முன்பொரு கன்னி முருகாவென னேர்ந்தாய்
முறையிடுந் தேவர் முகங்கண் டருள் கூர்ந்தாய்
வன்பவமாந் துன்பமெலாமாற்றிநினைவோர்களின்மனஞ்சார்ந்தாய்
அன்பனை யாள்வ தரிதோகுக சாமி நா
னம்பினனுன்றனை நா நா நன்னான. (11)

பாவிநா னென்னினுநின் பாதந் தனைத்துதித்தால்
மேவிநீ யாள்வதன்றோ மேன்மைவடி வேலோனே.

தொந்தமாய் நின்று சுழற்றுதே விசாரம்
சொல்லமுடி யாதந்தத் தூர்க்குண வகோரம்
எந்தவித முந்தமியே னெண்ணநிறை வேற்றுதற்கிதுநேரம்
செந்தமிழ் மாம்பழந் தியாணிக்கு மென்சாமி நா
னம்பினனுன் றனை நா நா நன்னன. (12)

———o———

## காமரசத் தென்பாங்கு - சிங்காரச்சிந்து.

தண்டா யுதபாணி தன்பவனி வேடிக்கை
கண்டாசை கொண்டேன் கருத்திலிது நீங்காதே.

தண்டபாணிப்ரபு தடம்புய முந்நாலும்
தயாளமுஞ் சண்முகமும் தாவுபுரிநாலும்
வண்டடர்தார் கொண்டொளிர்பொன் மார்புஞ் செஞ்சேவலும் வடிவேலும்
கண்டவுடனே கனிந்தமோக தாகமென் - புத்திமயக்குது
நா நா நன்னன. (1)

சற்றுமினி மோகஞ் சகியா திதுசமைய
முற்றுமுனை யுற்றேன் முகம்பார் முருகோனே.

சற்றுமென் மோகஞ் சகிக்கமுடியாது
தருண மிப்போது தயவிலாத தேது
நற்றுணையாய் முற்றுமுனை நம்பினேன் வகைநீ நயந்தோது
மற்றுமுலைகள் வளருதேமுருகையா - முத்தமிட்டிட
நா நா நன்னன. (2)

மோடியினி யென்னமெத்த மோகமா னேன்மகிழ்ந்து
கூடிவிளை யாடியருள் கூர்பழனி வேலோனே.

முத்தையா மெத்தவுன்மேல் மோகமாயிரண்டு
முலைகளும் விம்முதென்ன மோடிததிகண்டு
சுத்தமதா மெத்தைதனிற் சொந்தமோடு கொஞ்சிச் சுகங்கொண்டு
வித்தையனேகம் விளைத்தருளென்சாமி - நானென்ன செய்குவேன்
நா நா நன்னன. (3)

பார்தன மீறமதன் பாணமெய்தா லென்னசெய்வேன்
சேரநல்ல நேரமிது தேவசே னாதிபனே.

சந்தனகும்ப தனந்திரண்டு மீறச்
சகித்திடா நெஞ்சந்தளர்ந்துதடு மாற
வந்தணமார் நிந்தனையாய் வையவுனை யெண்ணி யெண்ணி வா யூறக்
கந்த மதவேள் கணைபாயு தேசாமீ நீ - கொஞ்சியணைத்தருள்
நா நா நன்னானா. (4)

முன்னே யெனைவசஞ்செய் முத்தையனிப் போதொருத்தி
தன்னைய முற்றதெவர் தந்திரமோ செந்திருவே.

ஆதிநா ளென்னை யழைத்துவிசு வாசித்
தருமையாய்த் தானே யனேகநயம் பேசி
வாதிடுசூர் மோதியவேல் வல்லவனிப்போதொரு மக ராசி
மீதினிலாசை மிகுந்ததென்னமானே யார் - மித்திர மித்தொழில்
நா நா நன்னானா.

கந்தரங்க வுல்லாசங் கண்டேன் விளைகாணேன்
அந்தரங்க நீதெரிவித் தாலதிக புண்ணியமே.

கந்த நாதன்பவநி கண்குளிரக் கண்டேன்
கடகமுங் கங்கணமுங் கைவளையும் விண்டேன்
வந்தமதன் சொந்தமலர் வாரியெதிர் தூவிட மயல் கொண்டேன்
அந்தரங்கத்தை யறிவித்து வாபோடி - யென்சிந்தை மயங்குது
நா நா நன்னானா. (6)

வன்னமயில் வீரன் மருவியதை யென்னசொல்வேன்
சன்னதமெந் நாளுந் தலைசுழற்றி யாட்டுதடி.

வன்னமான் தோகை மயிலுலவுஞ் சோலை
மலைமுருகேசன் மகிழ்ந்துசெய்த லீலை
என்னசொல்வேன் மின்னரசே யெப்பொழுதினும் பார்த்திடா வேலை
சன்னதமென்னைத் தலைசுழற்றியாட்டியே - சொக்குது மெத்தவும்
நா நா நன்னானா. (7)

வள்ளிமணவாளன் வலிதிலென்னை முத்தமிட்டுத்
துள்ளியணை யின்பசுகஞ் சொல்ல முடியாதே.

வள்ளி மணாளன் வலிதிலிங்கே வந்தான்
மலரணை மீதில்விசு வாசமாயி ருந்தான்
வெள்ளிலைபாக் கள்ளிநல விந்தை விந்தையாக மிகத்தந்தான்
துள்ளியணைந்த சுகத்தையென்ன சொல்வேனென் - சித்தமுருக்குது
நா நா நன்னா. (8)

தூதுவிட்டு மெள்ளவரச் சொல்லியென்னை வேலர்மெத்தை
மீதுமுத்த மிட்டணைத்த வித்தைகள னேகமடி.

வேலவ னென்னை விரும்பித்தூது விட்டான்
விரைந்துசென் றேன்பசப்பி மெள்ளமுலை தொட்டான்
ஜாலமிகு லோலனெனுஞ் சாமிகனிவாய் முத்தமிட்டான்
கோலமா மஞ்சத்திற் கொஞ்சியதை யென்சொல்வே - னெத்தனை விந்தைகள்
நா நா நன்னா. (9)

என்றுந் துதிவேல ரென்னைமரு வுஞ்சமையத்
தொன்றுந் தெரியுதில்லை யுண்மையென்ன பெண்மயிலே.

பார்புகழ் செல்வப் பழனிமலை வாசன்
பசுந்தமிழ் மாம்பழம் பாடுமுரு கேசன்
தார்மலர்பொன் மார்பிலென்னைத் தானணைத்து முத்தந்தரு நேசன்
சேர்பொழுதொன் றுந் தெரியுதில்லையென்னடி - யற்புதமற்புதம்
நா நா நன்னா. (10)

ஆனந்தகீதரசம் முற்றிற்று.



உ

ஷண்முகநாதன் றுணை.

# துதிப்பாசுரத் தொகை.

## ஸ்ரீ தண்டாயுதப்பிரான் திருவுருவப்புகழ்.

கடியவிடக் கனிமதுவாற் கதித்ததினைப் புனமானைக் கவர்ந்து பாதை
முடியவிடச் சினக்குறவர்க் கொளித்தோடி வந்ததனான் முழந்தாள் சேர்ந்தோ
மடியவிடக் கயமகர மதனனைநோக் கியவரனார் மதலாய் நாளும்
நெடியவிடக் கரமதனை யிடைசேர்த்துக் கடியூன்றி நிற்கின் றாயே. (1)

### பரங்கிரிநாதன் துதி.

பெடைகாட்டு மொருசிறிய நடைகாட்டி மயல்பூட்டிப் பிளிர்காட்டுங்கட்
படைகாட்டு மாதர்பின்போய்ப் பயில்காட்டி யொயில்காட்டிப் பற்காட்டாமற்
றொடைகாட்டு நின்றுபதத் துணைகாட்டி யெனையாள்வாய் துலங்கும் பண்ணை
யிடைகாட்டுந் தரளமதி யெழில்காட்டும் பரங்கிரிவா ழெம்பிரானே. (2)

### இதுவுமது.

சேட்டுமதி வாட்டுநுத னீட்டுமிரு கோட்டுமுலைத் தெரிவை மாரை
வேட்டுமயல் பூட்டுமவர் கேட்டுவினை யாட்டுளியான் விழா மற்றென்
பாட்டுவகை கூட்டுபல தோட்டுமலர்த் தாட்டுணைநீ பாலித் தாள்வா
யீட்டுபவ மோட்டுகதி காட்டுதிருப் பரங்கிரிவா ழெம்பிரானே. (3)

### கலித்துறை.

கந்தா வரன்றிரு மைந்தாவென் றன்பிற் கருதுதொண்டர்
சிந்தா குலத்தைத் திருத்துங் குமரன் சிவகிரியிற்
கொந்தார் செழுங்கம லப்புதுப் பூமணங் கொண்டுலவு
மந்தா னிலம்பதி மார்பமர் மாதையும் வாட்டியதே. (4)

## சமஸ்தி வெண்பாக்கள்

### திருப்புகழ் முதலடி ஈற்று

வரமுதவிக் காக்கு மனமேவெண் சோதி
பரவியமுத் தைத்தரு பத்திக்—திருநகையத்
திக்கிறை சத்திச் சரவணமுத் திக்கொருவித்
துக்குருப ரன்னெனவோ து. (5)

### ஈற்று

கந்தரநீ லத்தரையக் கன்னிகைபாற் றா துவிட்ட
சுந்தரனே பத்தருக்குத் தொல்சான் றுன்—முந்த
அலைமேகர் சிவகிரியா யையாற்றிற் சேய்மு
தலையாலே தான்றருத லால். (6)

### 4. காசி

இக்கா சினிப்பா விலங்கா சினித்தேவர்
தொக்காசி கூறித் தொழக்கருணை—மிக்காளுங்
கந்தா முருகாசி காவளத்தின் மீதேறி
வந்தா தரித்துதவு வாய். (7)

### 6. காசி

துங்கா சிவந்த சுமுகா சிலோதிவள்ளி
பங்கா சிலிக்குதிரைப் பாகாசித்—தங்காசி
னிச்சைதணி லேங்கா தெனையாள்கு காசிறந்த
செச்சைவடி வேலா தினம். (8)

### 10. காசி

வாகாசி ராகாசி வாகாசி ஞாகாசித்
தாகாசி யோகாசி தாகாசி—யேய்காசி
வண்குழலி பாகாசி வந்தவுத்துங் காசிறிது
தண்கருணை கூர்சந் ததம். (9)

### 14. காசி (8. காசிவ 6. காசியென்று)

காசினிபுக் காசிவருங் காசிவணீக் காசிறியேற்
காசிதகே காசினைபா காசினனு—காசிலைபோற்
காசிவண்வா காசிவதுங் காசிவமோங் காசிவழாக்
காசிவர்தாழ் காசிவளா கா. (10)

## அகர வர்க்க அநாஸிக நிரோட்டகம்.

அலக கசட தடர ளகட
கலக சயச கதட—சலச
தரள சரத கரத ததல
கரள சரள கள. (11)

## 5. பொடி

கரும்பொடிமா வஞ்சவெறி கைப்பொடிசில் வெற்பர்
தருங்கொம் பொடிசைதெய்வத் தையல்—விருப்புறுய
வான்பொடியா நின்றகதிர் மானுமயி லோயெனையாள்
தேன்பொடியார் பூம்பதந்தந் தே. (12)

## கடைப்பூட்டு

சேயனைமுற் கங்கடிகு செங்கெனுலை சக்கரந்தண்
டாயபணி மாமணிநா லான்புளன்னம்—மாயைபொன்சொற்
பொற்றேரை போக்களிப்பு பூப்பரன்மால் வேதனுக்குக்
கற்றுழும் பூவே கறி. (13)

## சமஸ்தி

பற்பலநூல் கற்றலும் பாக்கியங்கள் பெற்றலுஞ்
சிற்பரன்மா நற்பதத்தைச் சேர்வரிதா—லற்பநெஞ்சே
பித்தற மேவிப் பிதற்றேல் பெருங்காதல்
வித்தறவீ டிம்பிறப்பு மேல். (14)

## சமஸ்தி

பத்திபுரி நெஞ்சே பகலிரவும் பேரின்ப
முத்திதரு மையலிடை மூழ்காதே—சத்தியினால்
வாளை யுருவழித்த வள்ளுகிர்க்கைச் சிங்கமுகக்
காளை யுருவழித்தோன் கண். (15)

## நிந்தாஸ்துதி

அப்பனும்பாம் பாட்டியன்னை யானவளு மறத்தியத்தை யவள்வண் ணாத்தி
செப்பரிய வலையனம்மான் மைத்துனன்மா தாரிதம்பி சின்ன னுடான்
தப்பிலியா கியதமையன் பலவேடன் மூத்தகுடி தனிக்கு சத்தி
யொப்பிளைய குடிகுறத்தி நீசெட்டி நாணிலையோ வுனக்கு வேளே. (16)

## மடக்கடிவிருத்தம்

தலையானை முகற்பெறுமைந் தலையானை யரைக்கிசையத் தரித்த நற்றேற்
கலையானை யமுதமதிக் கலையானைச் செஞ்சடைக்கா டலைக்குங் கங்கை
மலையானை யிறந்துபிறந் தலையானைக் கடற்பிறந்த வடுநஞ் சுண்ண
மலையானைக் கற்குடிமா மலையானை யனுதினமு மனத்துள் வைப்பாம். (17)

## சுகவனர் அழகுநாதர் துதி

நாகமலை யிடத்திருப்பார் மேன்மைக்கட் கங்கையுளார் நத்து மாயர்
மோகமலை யில்லாரக் கதையுடையார் கஞ்சனைமுன் முனிந்து வென்றார்
மாகமலை நாயகர்கோ பாலரின்ன காரணத்தால் வடிவ மொன்றே
யாகவரு சுகவனரை யழகுநாத ஜரைவணங்கி யருள்பெற் றுய்வாம். (18)

## இதுவுமது

அத்திமிசைப் பொருந்துதலை லரியகலை யெடுத்ததனு லமரர் போற்றும்
பத்தியினுற் பிறைகமுள்ள பண்பாற்று ரணிகொளலாற் பாவை யேற்குஞ்
சத்தியத னுற்பேதஞ் சற்றுமின்றி யொருவடிவந் தானே யான
சித்தசவுந் தரராஜர் சுகவனர்மற் றிவர்சரணஞ் சிந்தை சேர்ப்பாம். (19)

## இதுவுமது

தானவரை யடக்கியடுத் தார்பலியைத் தணித்துமுனே தனைவாய்க் கொண்டு
கானமதை விரும்பியுர கம்பொலிந்து மேன்மைபெறுங் கவினு லொன்றே
யானசுக வனநாத ரழகுநாரா யகரிவர்தாட் கன்பு செய்து
ஞானபர சுகமிகவு நணுகிவினைப் பவந்தவிர்த்தென் னாளும் வாழ்வாம். (20)



ஸ்ரீராமஜயம்

பாகல்மா நகரத்தி லெழுந்தருளியிருக்கும்

## சென்னராயப்பெருமாள்

# திருப்பதிகம்.

அறுசீர்க்கழி நெடிலடி விருத்தம்.

திருவளர் தடம்பொன் மார்புந் திரள்புய வரையுந் தெய்வ
மருவிரி துளவுங் காயா மலர்நிற வடிவு மாகக்
கருதிய வடியார் ஞானக் கண்ணெதிர் தோன்றி வேண்டிற்
றருள்புரி சென்ன ராய வண்ணலே போற்றி போற்றி. (1)

பொன்னியல் வனச வாவி புகுங்கவ ரிகள்கா ரென்ன
மின்னிய மயில்க ளாட வியந்துதேன் பொழியுஞ் சோலை
துன்னிய செழுந்தோ ளூரிற் சுரரெலாந் தொழுதி றைஞ்ச
மன்னிய சென்ன ராய வரதனே போற்றி போற்றி. (2)

பவளமென் கொடியோர் நீலப் பருவரை படர்ந்த தென்னத்
துவளிடை மலர்ம டந்தை சுடர்மணி மார்பிற் றோன்ற
வுவமையில் வளமை சூழ்தோ ளூர்தனில் வீற்றி ருக்குந்
தவர்பணி சென்ன ராய தயாநிதி போற்றி போற்றி. (4)

கடலிடத் துதிக்குந் தெய்வக் கதிரிளங் கிரண நீலத்
தடவரை தவழா நின்ற தன்மைபோற் பதும ராகச்
சுடர்தழைத் திலங்கு மார்பந் தோன்றவந் தெம்மை யாளுந்
திடவருட் சென்ன ராய தேவனே போற்றி போற்றி. (4)

ஒருகருங் கடலி னூடே யுலகெலாம் புகழா நின்ற
விருபெருஞ் சுடருந் தோன்றி யிலங்கிய வெழில்போற் செங்கைப்
பொருவருந் திகிரி சங்கம் பொலியவந் தெம்மை யாட்கொண்
டருள்செயுஞ் சென்ன ராய வமலனே போற்றி போற்றி. (5)

விண்ணகர்ப் பெருமை யிந்த மெய்த்தலத் தெழிற்கொப் பாமோ
கண்ணதிற் காண்டு மென்னக் கடும்புனல் வாளை தாவுந்
தெண்ணதித் தோளூர் தன்னிற் சிறந்துவீற் றிருக்குஞ் செல்வத்
தண்ணருட் சென்ன ராய சாமியே போற்றி போற்றி. (6)

மணிமுடி விபுதர் காண வரவுஞ்செல் லவுநேர் வைத்த
திணிமர வேணி யேபோற் சிறந்துநின் ணிமிருஞ் சோலை
யணிபுனை தோளூர் தன்னி லகிலமுந் திசையும் யாவும்
பணியவாழ் சென்ன ராயப் பரமனே போற்றி போற்றி. (7)

கருதிய வனைத்து நல்குங் கருணையங் கடலே போற்றி
சுருதியின் முடிவாய் நின்ற தொல்பரஞ் சுடரே போற்றி
யிருவினை போக்கி யெம்மை யீடேற்று மிறைவ போற்றி
திருவுயர் சென்ன ராய சீதரா போற்றி போற்றி. (8)

அடியவர்க் கமுதே போற்றி யானந்த மயமே போற்றி
நெடியமெய்ப் பொருளே போற்றி நிர்க்குண நிதியே போற்றி
முடிவிலாப் புகனே போற்றி முத்திக்கு வித்தே போற்றி
வடிவருட் சென்ன ராய வள்ளலே போற்றி போற்றி. (9)

பன்மலர்ப் பொழில்சூழ் பாகற் பதிரங்க சாமி யன்பன்
றன்மனப் படிமுன் னின்று சகலபாக் கியமு நல்கும்
பொன்மகட் கிசைந்த மார்ப புண்ணிய முதல்வ போற்றி
சின்மயச் சென்ன ராய தேவனே போற்றி போற்றி. (10)

சென்னராயப்பெருமாள் திருப்பதிகம்

முற்றிற்று.



உ

போதலூர் மடாலய

# ஸ்ரீ வீரப்ரம்ஹேந்த்ர குருமூர்த்திகளாகிய

# அரிஹராயாச்சார்ய சுவாமிகள்

## திருவருட்சமுகவிலாசத் துதித்தமிழ்.

---

### ஆசிரியவிருத்தம்.

திருமலர் மிசைப்பிரம தேவுரு வாய்ப்பல சிருட்டியை நடாத்து சமுகம்
சிதரா னந்தகோ விந்தனென நின்றவை திருந்தரட் சித்த சமுகம்
சிகரகயி லாசருத் திரனொரு பமதாய்ச் செகம்பலவு மாற்று சமுகம்
தெளிமஹேஸ் வரனெனுந் தெய்வமாய்த் தோன்றித் திரோபவ மியற்று சமுகம்
சிற்பர சதாசிவப் பொருளா யநுக்ரஹஞ் செய்யுஞ் சிலாக்ய சமுகம்
திரளண்ட கோடியேந் தியவிராட் டாகிச் சிறந்துநிற் கின்ற சமுகம்
திவ்யதே ஜோமய பரப்ரம்ஹ மாகியெத் திசையினு நிறைந்த சமுகம்
சித்தர்கின் னரருரகர் வித்யாத ராதிகண தேவர்கள் பராவு சமுகம்,

மருவுலவு வனதபோ தனர்திரு விகற்பமுனி வரர்வரம் வேண்டு சமுகம்
வரிசைமநு மயத்வஷ்ட சிற்பிவிஸ் வக்ஞரெனும் வர்க்கப்ர தான சமுகம்
மந்த்ரவே தாகம புராணஷட் சாஸ்த்ரவித மங்கள விலாச சமுகம்
மாகற்ப னுகாவ்ய நாடகா லங்கார மதுரப்ர சங்க சமுகம்
மகரசல நிதியமிர்த வசனசா மர்த்யகவி வர்ணர்கள் வழுத்து சமுகம்
வாணிசெந் திருவிஜய வனிதையென் னேரமு மகிழ்ந்துகுடி கொண்ட சமுகம்
மணிமுரசு பேரிகை தடாரிதுந் துபிதிமிலை வகைதொனிக் கின்ற சமுகம்
மத்தள மிடக்கைகைத் தாளமல கோசைகுழல் வழுவாம லிசைகொள் சமுகம்,

தருணமுணர் சின்னமெக் காளமொடு பூரிதுத் தாரிக ளியம்பு சமுகம்
தவளசங் கங்கொம்பு கர்ஞுக்கள் வாங்கா தனித்தனி சிலம்பு சமுகம்
சாரங்கி வீணைதம் புருபிட்டில் வேறுபல தகுவாத்ய கோஷ்ட சமுகம்
தரிகிடத திங்கணத் தோமெனு மடந்தையர் சதாநடன கீத சமுகம்
தடகரட குஞ்சர துரங்கவொட் டகசன சயின்யகெம் பீர சமுகம்
தண்டிகை சுருட்டிமச கிரிசிவிகை கொடிகள்வெண் சாமரைகள் பரவு சமுகம்
சரியலாச் சமயகண் டனவுஜித ஷண்மதஸ் தாபனாச் சார்ய சமுகம்
தரித்ர தோஷாந்த காரபட லத்தைத் தகர்க்குந் தயாள சமுகம்,

விருதுபுனை யணிமாதி யஷ்டசித் திகளும் விளைத்துத் தழைத்த சமுகம்
வேதாள பூதபஞ் சனதுஷ்ட நிக்ரஹ விபூதிப்ர சாத சமுகம்
விந்தைதரு மெந்த்ரதந் த்ரானுபவ பாண்டித்ய வித்யா விநோத சமுகம்
விபவசிவ யோகதிட மெய்ஞ்ஞான வுபதேச மேன்மைப்ர தாப சமுகம்
விரிபொழிற் போதலூர் வீரப்ரம் ஹேந்த்ரவடு வேஷவவ தார சமுகம்
விருமாத்ம ராமமய ஸ்ரீஜகத் குருவாய் விளங்குமுத் துங்க சமுகம்
விமலபஞ் சப்ரம்ஹ யாகமுத லுளசகல வேள்வியு நிரப்பு சமுகம்
வினைதீர்க்கு மரிஹரா யாச்சார்ய குருசாமி வீற்றிருந் தருள் சமுகமே.

---

ஸ்ரீமத் ஷட்சமய வுத்தாரண சர்வார்ய பரமஹம்ஸ ஸ்வரூபராகிய

திருநெல்லை

# ஸ்ரீமாந். பரசமய கோளரிநாத சுவாமிகள்

## திருவருட்சமுக விலாசத்துதித்தமிழ்.

---

ஆசிரியவிருத்தம்.

மங்கள மிகும்பரி மளங்குலவு பங்கய மடந்தைகுடி கொண்ட சமுகம்
மதுரநய வசனமதி வதனரம ணியதவள வனிதைநித மருவு சமுகம்
மகாவுததி யணையதிரு வளமைபெறு முபநிடத மறைகுமுறு கின்ற சமுகம்
வாய்த்தஷட் சாஸ்த்ரவஷ் டாதச புராணவொலி மாறாத புனித சமுகம்,
துங்கமணி சங்கமிரு தங்கமுர சங்கனக துந்துபி முழங்கு சமுகம்
துடிதிமிலை தவில்நாக சுரமுமுறை முறையெதிர் தொனிக்கின்ற திவ்ய சமுகம்
துத்தாரி பூரிசின் னங்கொம்பு காளங்கள் சுருதியி னியம்பு சமுகம்
சூழ்ந்தினிய கட்டியர் பராக்கெச் சரிக்கைகள் சொலித்துதிக் கின்ற சமுகம்,
செங்களப முலைநளின மங்கையர்கள் பரதவகை சேர்ந்துநட னஞ்செய் சமுகம்
தெள்வீணைச் சாரங்கி தம்புருவ னேகவாத் தியநாத கீத சமுகம்
சிற்றால வட்டஞ் சுருட்டிவெண் சாமரை சிறந்துமலி கின்ற சமுகம்
சித்திரப் பூச்சக் கரக்குடைகள் மசகிரிகள் செயடால்க ளோங்கு சமுகம்,
சங்கமிடு கின்றசுரர் தங்கட் கெலாமுரிமை தந்துநிலை நாட்டு சமுகம்
தளர்முல்லை யம்பொழில்கள் வளர்நெல்லை யம்பதி தழைத்திட வுதித்த சமுகம்
தமிழ்மாம் பழக்கவிச் சிங்கத்தை யீடேற்று தானவபி மான சமுகம்
சகலபோ கமுமுதவு சுகமகா சுகுணபர சமயகோ ளரி சமுகமே.

## மங்களம்

வரமுதவு சதுர் வேதர் மவுனபிர ணவபோதர்
சுரவிநுத மனு நீதர் சுகவிநோதர்
சரசமதி முககீதர் தவமதுர ரசகீதர்
பரசமய குருநாதர் பதமலர்கட்கு (ஜயமங்களம் சதா சுபமங்களம்)

திருவணிதை விளையாட திவ்யசரஸ் வதிகூட
வருபுலவர் துதிபாட மகிமை நீட
கருதியனை வருநாட கனககட் டியம்போட
விருதுபுனை பரசமய மெய்க்குருவிற்கு (ஜயமங்களம்)

மலர்மகுட கேயூர மகரகுண் டலஹார
திலகமுக புயபார திடமுநேர
நலசமுக வலங்கார நாகரிக ஜனர்சேர
கொலுவில்வரு பரசமய குருபரற்கு (ஜயமங்களம்)

கனமுரசு தவில்பேரி கனகதுந் துமிபூரி
அனகஜனர் துதிமுழங்க அருள்வழங்க
வனசமல ரணையமுக மண்டலகெம் பீரமிகத்
தினமுமகிழ் பரசமய தேசிகற்கு (ஜயமங்களம்)

மங்களம் முற்றிற்று.



# சுரஜதி.

இராகம் செஞ்சுருட்டி தாளம் ஆதி

மா கா ரீ சா நீ த பா, த ச ரி ரீ சா ரி க
மாயூரகோலாகலா, மருவுவாய்நீயெனை } மாயூரகோலாகலா

ம கா ம பா, ம பா த பா, ம நீ த பா, ம கா ரி க
மயா திபா, மணு ளமா, மகா குகா, மனோ ஹர } மாயூரகோலாகலா

மா க ரி ச க ரி, மா க ரி சா ரி க
மாமயல்விலகு, மாதவையேனினி } மாயூரகோலாகலா

மா ம க ம ரி க ச ரி க ரி க மா, த ப ம ப த ப ம க ம ப மா, ப த நி
மாவுலவுகுயிலிசையி னுடுமா, ருதரத மதில்வரு சிலைமா, ரனுமெ

த நீ த ப ம ப மா, த ப த ம ப மா, ப ம க ரி க
திரேவெகு விதமா, விடுகணை சுமா, விடுவ தல } மாயூரகோலாகலா

மா நி த ப ம க மா, த ப ம க க மா, ப ம க ரி க மா, க ரி
மாலிகையு நிலைமா, றுவது தருமா, விது தருமமா, வரு

ச ரி க, மா க ரி, மா ரி க, மா த ப, மா ப த, மாநித, த ப ம க
மயின, மாமன, மானமு, மாரமு, மாடையு, மாலையில், நழுவிட

மா க ரி க ச ரி க
மார்பிலடருமலை } மாயூரகோலாகலா

# இராகமாலிகை.

இராகம். பிலகரி. தாளம், ரூபகம்.

விரும்பிலஹரியானுள், உன் மீதிலிங்கொருமானுள்.

பா ம க ரி க, பா ம க ரீ க சா, பா த ச ரீ க ரி க, பா த ப ம க ரி க ரி
பூபர ஹித, பூவனசுகுணு, பாருலகேழுநிறை, பார்வதிதழுவுஜய

சநித, பாதசரிக, பமகசரிக, பாதநிதப, மகரிசரிக, பாதக
ரமண, பாளித நய, பருவகுளப, பாரகனக சயில கனப்ர, பாகர

நிதபதசா, பாதபமக, பாமகரிச, பாதசரிக, பாதசநித
புய தருண, பாவலர் புகழ், பாக நடன, பாத திடச, பாவு சிதக

பாதரிசநி, பாதகரிச, பாதசநித, பாமகபத } விரும்பி
பால கரக்ரு, பாமயசொரு, பாதநி யிது, பார்மனசினில்

---

## இராகம் வராளி தாளம், ரூபகம்.

திருந்திமையவ ராளிபோற்றும் திவ்ய சுகவனேசா

பாதபமதமாகரிச நிசா, கரிகம, பாதபாமகாரிகாம
பால்கனிவகைதேனமுதெனலா, மிவளுரை, பானலானபூவுலாசு

பாமகாரிசாரிசாநி, பாதநிச, காரிகாம, பாதநித
பார்வை தோடிபூரிகாபி, பாடியாடல், கூர்விநோத, பாவைசோர்தல்

பாதநிசா, பாதபமக, பாமகரிச, பாதசரிக, பாதசநித
பாதகமே, பாலையனேய, பால நிலவ, பாயமொடுகு, பார்செயவரு

பாதரிசநி, பாதகரிச, பாதசநித, பாமகபத } விரும்பி
பாவி மதன, பாணமழைகள், பாயவறிவு, பாதிமறுகி

---

## இராகம் பூர்விகல்யாணி. தாளம், ரூபகம்.

மருவத்தகுந்த மங்கைய பூர்வி கல்யாணி காணும்

பாமகரிகமாகரிசதசா, சரிரிககமம, பாதபபமமகரிகம
பாடலமலர் சூடுகுழலினுள், கனவினுமமளி, பாயல்கள்பலவுமொருவினள்

பாமககரிரிசரிசச, பாதசசரிரிககமம, பாதநிபதபசா
பாதுபுரிபவ ரெவர்புகல், பாரதமதுறவினரிகல், பாடதிகொடுமையே

பாதபமக, பாமகரிச, பாதசரிக, பாதசநித, பாதரிசநி
பாலநயன, பானுநிறசு, பாகடல்விட, பாரணதள, பாரிடசர

பாதகரிச, பாதசநித, பாமகபத } விரும்பி
பாமதவிட, பாருடனிரு, பாமிகவுனே

## இராகம் தன்யாசி தாளம், ரூபகம்

அருமைப்பெருந்தன்யாசி தானந்தநாயகா

பா க ம ப கா ரி ச நி சா, நி ச க ம ப க ம, பா த ப, ச நி த ப ம க ம
*பாடகம தாணியணிவாள், வினமதுர ரச, பாயச, வகையனமுசித*

பா த ப, நி ச க கா ம, பா த ப, நி ச க ரி ச நிச, பா த ப, ப ம க ரி ச
*பானமு, நிதமொனாது, பாணியில், வளைதொடிசரிகள், பாறிட, விடையிலுள*

பா த ப ம க, பா ம க ரி ச, பா த ச ரி க, பா த ச நி த, பா த ரி ச நி
*பாசிழைதுகில், பாலினில்விடு, பான்மைதவிரு, பாயவிதசு, பாவமொடுசு*

பா த க ரி ச, பா த ச நி த, பா ம க ப த
*பாசெனவணை, பாவுகுயில்சொல், பாணிலுருகி* } *விரும்பில ஹரியானான்.*

இராகமாலிகை முற்றிற்று.



உத்தமபாளையமென்னுந் திருநகரி லெழுந்தருளியிருக்கும்.

## முத்துக்கறுப்பண சுவாமி

# திருவோலக்கச்சிறப்பு.

---

இராகம் சௌராஷ்ட்ரம் தாளம்-ஆதி.

பல்லவி

பவனி வரும் வேடிக்கை பாரும்—நம்மைரக்ஷிக்கப்
பவனி வரும் வேடிக்கை பாரும்.

அநுபல்லவி

தவசிவ ஞானசுந் தரவபி ராமி
தனதருள் வளருமுத் தமபுரி நேமி
கவனக டினதுர கதபதி பூமி
கருதும கிமைமுத்துக் கறுப்பண— சாமி (பவனி)

சரணங்கள்

வேத முனிவர்கள் கொண் டாட — வானவர்நறுந்
சீத மலர்மழைகள் போட—மகாவகோர
பூத சயின்ய வகை கூட — மதுரிதசங்
கீத சுதிநாரதர் பாட — தித்தியிணங்கத்

தம்புரு வெங்குமு ழங்கமிர் தங்கமு மடிக்க—த்த்திமியென்று
வம்புரு வுந்தன சம்ப்ரம ரம்பையர் நடிக்க— வித்வஜனர்கள்
கும்புதி ரண்டுகு ழைந்தசெ ழுந்தமிழ் படிக்க—அஷ்டதிக்கிலும்
பம்புது ஜங்கள் பசந்துள வெண்குடை பிடிக்க—விசிறியால

வட்டமு நிறப்படு சுருட்டியும் பிடித்திடவுல் லாச — மசகரிகள்
சட்டவய ணப்படி தழைத்திடத் திருக்கவரி வீச —' இனிமையாகக்
கட்டளை நடத்துபல கட்டியர்க ளெச்சரிக்கை பேச— காணிக்கைவைத்து
சிட்டர்பரவப்புழுகுசட்டவுஜிதக்களப வாச — பூசனைசெய்து

மாலிகை துவளவ சீகர மோக
வடிவெழில் கண்டுமன் மதனும்பி னேக
மேலிரு நயனவு லாசவை போக
விகசித முகநய மிகவொயி லாக (பவனி)

நீலக் கொண்டைக்கட்டுரு மாலும் — நெற்றியிலிந்தர
ஜாலத் திலதமும்முந் நூலும் — அங்கிநிஜாருங்
கோலச் சல்லடமுமப் பாலும் — காங்குக்கச்சைபுரு
சீலக் கவசமுமேமன் மேலும் — ஜ்வலிககக்கையில

வெங்கணை யுஞ்சிலை யுங்கனல் சிந்தரி வாளும் — வீரபரதாப
கங்கண முமபுள கங்குடி கொண்டுயர் தோளும — நவமணிசேர்
அங்கத மும்பகை யஞ்சி யொதுங்கிட நீளும — வீசைமுறுக்குஞ்
செங்கம லங்களை வென்றுசி லம்பிடு தாளும் — குறுநகையும்

பத்தர்தெரி சிக்கநவ சித்தர்வர முத்தர்துதி பேண — விதயாதரர்கள்
சுத்தமன முற்றதொர் சுவைக்கனி வமைதத்தமரர் காண — பருவகால
சத்தமுகில் வர்க்கமு மடிக்கடி மலைத்துருவி நாண — சகலபேர்க்கும்
உத்தம கருத்தணிவ ஞெப்பில னெனக்கனிவு தோண — வனோகவித

தங்கவஸ்த்ராபர ணங்கள்கு லுங்க
சரசமடந்தையர் தமிழ்ப்ர சங்க
மங்கள சோபன வரிசைது லங்க
வறுமை கலங்கிட வளமைகள் பொங்க (பவனி)

தாளம் தவில்முரசு பூரி — நாகசின்னமெக
காளம் குழலநகார்மல் லாரி — சல்லேரிசகர
வாளம் கிடுகிடெனும் பேரி — தடாரிசந்த்ர
மேளம் கானதாரைதுந் தாரி — சாரங்கிவீணை

சுநதரி தண்டி குடஞ்சுர மண்டலி கண்டை — டங்காநவபத்
தந்தர துநதுபி பம்பை வலம்புரிக் கெண்டை — உறுமிபாடக்
கந்துடி யிங்கித கஞ்சரி கொம்புத வண்டை — முதல்வாத்யங்க
ளெந்தநெ டுங்கட லுந்திர ளும்படி யண்டை — தொறுமுழங்க

துஷ்டர்கச டச்சிறு தொழிற்பெரு மதத்தர்தடு மாற — பில்லிசூனியங்
கஷ்டவினை வைப்பொடு கடப்பினுட னெக்கரிசு நீற — நமபினபேர்க்கு
நஷ்டமக லத்தினம் நலப்புகழ் திருக்கருணை மீற — கவிமாம்பழம்
இஷ்டமன மெத்தவு மினிததகுறி வைபபுநிறை வேற — கடாக்ஷம்செய்து

மதியுத வுஞ்சுரபி நதிதிகழ் பூர்த்தி
வாய்க்காற் கரைதனில் மணியணி சேர்த்தி
கதிர்பொழி யாலயக் கடவுள்சற் கீர்த்தி
கதிக்க வுதித்த முத்துக் கறுப்பண மூர்த்தி. (பவனி)



சிவமயம்.

# சிங்கார ரச மஞ்சரி.

## பாயிரம்.

### விநாயகர் துதி.

விருத்தம்.

திருமேவும் புவியுவப்பத் திகழ்வடநூற் புலவர்முன்னந் தெரிவித் திட்ட
மருமலர்சிங் காரரச மஞ்சரியைச் செந்தமிழால் வகுத்தல் செய்யக்
குருவாய்வந் தன்பர்மனக் கோயில்குடி கொண்டருளிக் குறித்த வெல்லாம்
தருமோர்குஞ் சரவதனத் தலைவன்மலர்த் தாளிணைக டலைமேல் வைப்பாம்.

சுகவனேசுவரர் துதி.

கோலநெடு மாடமின்னார் குழற்கூட்டு மகிற்புகைகூற் கொண்மூ வென்ன
நீலமயில் வண்டிசைக்கு நெறிநடிக்கக் கனிமலர்தே னெகிழ்ந்து தூவச்
சாலநதி மணிகொழிக்கத் தருத்தலையாட் டிடக்குவளை தருக்கி நோக்குஞ்
சேலநகர் தழைத்தோங்கத் திகழ்சுகவ னேசர்பொற்றாள் சிந்தை சேர்ப்பாம். (௨)

கயிலாசநாதர் துதி.

நமதுதலத் தினுக்கிணைபொன் னகரோபார்த் திடல்வேண்டு நாமென் றெண்ணித்
தமதுசெருக் கானிமிர்ந்த தன்மையெனும் படிவிசும்பு தடவி நீண்டு
பமரமிசைத் திடவயங்கிப் பரிதியயர் வுயிர்ப்பதற்கோர் பந்த ராகிக்
கமழுமலர்ப் பொழிற்பழனிக் கயிலாச நாதர்பதங் கருத்துள் வைப்பாம். (௩)

சொர்ணாம்பிகைதுதி.

தனதியலை மயிலெனவெண் டலைப்புழைபெற் றரவொடுங்கச் சடைக்கட்டோடு
சினவுகிலை நுதலையஞ்சித் திங்கள்புக விழிக்கயல்மான் றிரும்பி நாண
வனசமலர் வயற்சேல மாநகரிற் சுகவனர்பான் மகிழ்வுற் றோங்குங்
கனவமுத கலசசுப கரதனசொர் ணாம்பிகைதாள் கருதி வாழ்வாம். (௪)

பெரியநாயகியம்மைதுதி.

ஒருமதனுக் கிருவரைநா மொளிர்கவரி யிரட்டியுமிவ் வூர்மின் னார்தம்
பருவமிடற் றழகிணையற் பழும்பெறுகி லேமினிப்பற் பலதே வர்க்கும்
அருமையினத் தொழில்புரிந்தா ஞலுமுயர் வாமெனவிண் ணடர்பூ கங்கண்
மருவுவயற் றிருப்பழனி வளர்பெரிய நாயகிதாள் வழுத்தல் செய்வாம். (௫)

சுப்பிரமணியர் துதி.

சூழுவிமதி தவழ்தொறுங்கூன் கோடுழலா விருலுடைந்து குழறிப் பாய்தேன்
மழலைவரி வண்டிசைக்கு மலர்ச்சுனைபுக் கடங்காமல் வழிந்து மேன்மேற்
கழனிசெல நகருமிளங் கயன்மகளிர் நயனவெழில் காட்டுஞ் செல்வப்
பழனிமலை வளர்வடிவேற் பண்ணவன்பொற் பதநளினம் பணிதல் செய்வாம். (௬)

சரசுவதிதுதி.

படிகமணி மாளிகையும் பழமறைப்புத் தகமுமின்சொற் பகர்நல் யாழும்
கொடியிடையு மமுதகும்பக் குவிமுலையு மிளநகையுங் குமுத வாயும்
நெடியவருள் விழியுமதி நிகர்முகமு நினையுமன்பர் நெஞ்சிற் றோன்றி
வடிபனுவ லுதவுதமிழ் வாணிபதம் பேணிநிதம் வரம்பெற் றுய்வாம். (௭)

நூற்பெயர்க்காரணம்.

மொழிபலவு மகரந்த முதிர்பொருடே னலங்கார முறைசூழ் வாசம்
கொழிகவிதை யிதழ்பகுதி குசுமமன்ன சிற்சிலவோர் குச்ச மாக
வழுவிலவை மூன்றுடைத்தா யறிஞர்மன வண்டுறத்தோன் றழகா வின்பம்
வழிதருசிங் காரரச மஞ்சரியென் றிந்நூலை வகுப்பர் மாதோ. (௮)

இந்நூலாகியமாலையையின்னாருக்கு
அணிவோமெனல்.

இனியநடை நாருளமைந் தெஞ்ஞான்று மலர்ந்துபுலர் வின்றி மேன்மேற்
கனியுகவி வயங்குமிச்சிங் காரரச மஞ்சரியைக் கலைஞர் வாழ்த்தத்
தனிவளமை பெறுசேலந் தனிற்சொர்ணம் பிகையையிடந் தழுவி யோங்கும்
புனிதசுக வனநாதர் பொன்னடியிற் புனைதுமுய்த்தற் பொருட்டு மாதோ. (௯)

அவையடக்கம்.

உதித்ததின முதற்சிறிது முணர்வின்றி வெறிமேற்கொண் டுழலு மூமன்
விதித்தபல கலையுமிக விரித்துரைசெய் திடப்புகுந்த விதமே யொக்கும்
கதித்தவட மொழிப்படிசிங் காரரச மஞ்சரியைக் கடல்சூழ் பாரிற்
றுதித்ததமிழ்வலர்க்கெதிர்யான்சொல்வலெனத்தொடங்கியதோர் துணிவுதானே.

பதிகம்.

தொகுத்தபல நாயகிக ளிலக்கணமுஞ் சகிகுணமுந் தூதிசபண்பும்
மிகுத்தவித நாயகர்பே தமுநரும சசிவர்களின் வேறு பாடும்
பகுத்துளசாத் துவிகமுஞ்சம் போகமொடு விப்பிரலம் பத்தின் கூற்றும்
வகுத்ததசா வத்தைதெரி சனமுமற்றை யவுமுணர்த்த வருமிந் நூலே. (௧௧)

பாயிரம் முற்றிற்று.

ஆகச்செய்யுள் ௧௧.

௳

சிவமயம்.

# சிங்கார ரச மஞ்சரி.

## நூல்.

### க-வது குச்சம்.

விருத்தம்.

சுருதிபுகழ் சேலமதிற் சுயம்புவடி வாமெழுந்த சுகவ னேசர்
திருவருள்கொ டினிதுமுடித் திடத்தொடங்கு மிந்நூலிற் றெரிவிக் கின்ற
பொருவரிய சிங்காரப் புதியசுவைக் கிருப்பிடமாய்ப் பொலியா நிற்போர்
அருமையுள நாயகிக ளாமவர்த மிலக்கணமுன் னறைந்தா மாலே (௧)

திரிவிதநாயகிகளின் பெயரும் சுவீயாநாயகியி னிலக்கணமும்.

ஆவல்கூர் சுவீயைபர கீயைசா மானியையென் றறிவிக் கின்ற
மூவரா நாயகிக ளவர்தமில்வேட் டவனிடத்தே முழுதுமனப்பா
யேவல்கோ ளுதவற்காற் றிடல்சீலம் பொறுமைவஞ்ச மின்மை யினை
மேவவாழ் கற்புடைய மெல்லியலே சுவீயைமற்றும் விரிப்பா மன்றே. (௨)

சுவீயாநாயகிக் கிலக்கியம்.

சகியை நோக்கி நாயகன் சொல்லியது.

கட்டளைக்கலித்துறை.

சீலம் பொறுமை புகழ்வாய்ந்து தீவினை தீர்ந்தெமர்முற்
காலம் புரிபுண் ணியமோ ருருக்கொண் டென் கற்பினளாய்
ஞாலந் தனில்வரப் பெற்றேன்மற் றோர்தமை நாடுவனோ
மாலன்பி னேத்துஞ் சுகவன நாதர் வரையணங்கே. (௩)

பரகீயை சாமானியைகளின் இலக்கணம்.

மணம்புரிந்து கொண்டவனை மறந்துபர புருடர்களை மனத்தே வேண்டி
இணங்குகின்ற குடிலநடை யேந்திழையே பரகீயை யிவள் போலாது
பணங்கவர்ந்து சுகந்தருந்த படிபலர்க்குங் காட்டிமுறை பற்று நீதி
தணந்திருந்த பொதுமடந்தை தானேசா மானியையாஞ் சாற்றுங் காலே (௪)

பரகீயாநாயகிக் கிலக்கியம்.

சகியை நோக்கி நாயகிசொல்லியது.

நதிக்கரை மாம்பொழின் மன்மதன் பூசைக்கு நல்லிடமங்
குதித்திள மாருத மின்மண நல்கு முருவகைமஞ்

சதிர்த்துத் துளித்த திதற்கென்செய் வேனவ ருன்மயங்க
விதித்தன னேயெனை வேதன் சுகவனர் வெற்பின்பின்னே. (௫)

சாமானியாநாயகிக் கிலக்கியம்.

தலைவன் மனத்தொடு சொல்லியது.

அரைப்பணங் காட்டி யநேகம் பணம்பிற ராற்கவர்வாந்
தரைக்கணென் றுள்ள தனதிரு மார்பைத் தனமுணர்த்த
விரைத்தடந் தோயு மிவளைக்கண் டாலெவர் மீளவல்லார்
திரைத்துயின் றோனயன் போற்றுஞ் சுகவனர் சேலத்தினே. (௬)

சுவீயா நாயகியின் பேதங்களும், முத்தையி னிலக்கணமும்,
அம்முத்தையின் பேதங்களும்

எடுத்துரைத்த சுவீயைமுத்தை மத்திமைசற் பிரகற்பை யெனமுப் பேதம்
அடுத்துநிற்கு முத்தைபுதி தாகவரும் யவ்வனத்தா ளிளைய மாது
தொடுத்துணர்த்தி னஞ்ஞாத யவ்வனையி ஞெடுகளபத் துணைப்பொற் கொங்கை
வடுத்துரத்து விழிஞாத யவ்வனையென் றிருபேத மருவு மன்றே. (௭)

முக்தாநாயகிக் கிலக்கியம்.

தலைவன் தலைவியினது நலம்புனைந்துரைத்தல்.

மதன்புரி யவ்வனச் சோலை புதிதின் மலரவதி
விதம்பெறு வண்டிரண் டொத்தகண் டேனுத் தினித்தசொற்சன்
னதம்புகு மன்னவன் மாமுடி யொத்த நகில்கனிகை
விதந்தழு விற்று முகமிச் சுகவனர் வெற்பினட்கே. (௮)

அஞ்ஞாதயவ்வனை ஞாதயவ்வனைகளின் இலக்கணமு மவருட்பிரிவும்.

உரைசெயுமவ் வஞ்ஞாத யவ்வனையவ் வனமடுத்த துண்ராப் பேதை
வரைநிகரு முலைஞாத் யவ்வனைமற் றஃதுணர்வாள் வருமின் னோர்க்குள்
விரையளக நவோடையென்றும் விசுரத்த நவோடையென்றும் விரிந்து சூழ்ந்த
திரையுலகி லிருபேதத் தெரிவையருண் டவரியல்பைத் தெரிவிப் போமால். (௯)

அஞ்ஞாதயவ்வனை நாயகிக்கிலக்கியம் கவிக்கூற்று.

சலஞ்சூழ்கி நின்றுவப் பாற்செவிச் சென்றசை தன்கணைக்கால்
அலரோ வெனத்தொடு மங்கவு ரோம வணியையச்சை
வலமோவென் றேவிலக் குங்கடி பார மதித்துவகை
மெலவே வினவுஞ் சகியைச் சுகவனர் வெற்பணங்கே. (௧௦)

ஞாதயவ்வனை நாயகிக்கிலக்கியம் தலைவி சகியை வினவுதல்.

நயம்பொலி சேல நகர்வாழ் சுகவன நாயகனும்
சயம்பு வடிவிற் பருத்தவென் கொங்கைத் துணையினியெவ்

வியம்புனை புண்ணிய வானாகி ராற்றலை மேற்பிறைகொண்
டியம்புமம் மூர்த்தியி னந்தமுற் றும்பெறு மேந்திழையே. (கக)

நவோடைவிசுரத்தநவோடைகளின் இலக்கணம்.

சகிமுதலோர் பரிகாசத் தால்வருவெட் கமும்பயமுந் தான்மேற் கொண்டு
சுகியெனுநா யகன்சுரதத் தொழிற்கிசையா ணவோடை யந்தச் சுழற்சியின்றி
நெகிழ்தருபூ மலரமளி நேர்ந்துமங்க சங்கோச நீங்காப் பேதை
விகிதகலா மதிவதன விசுரத்த நவோடையென விரிப்பர் நல்லோர். (கஉ)

ஈண்டுக்கூறிய நவோடைகளின் குணங்கள்.

விலகாத தமதுபெரு வெட்கத்தா லுளக்குறிப்பை வெளியாக்காமை
பலபேத நூதனவா பரணாதி களின்மேன்மேற் படருமாசை
மலர்கோப சமயமதின் மதுரவமு தெனுமிருது வார்த்தையின்னை
குலநீதி தனைக்காக்குங் குவளைவிழி நவோடைகளின் குணங்களாமே. (கங)

நவோடா நாயகிக் கிலக்கியம் நாயகன் கருத்து.

கரத்தாற் பிடிக்கினும் பூவணை சேர்க்கினுங் கட்டிமெள்ள
உரத்தா லணைக்கினுந் தான்புறஞ் செல்ல வுடன்விரையும்
தரத்தா லிரதஞ் சிதரா தமைக்கிற் றழுவிடலாம்
வரத்தா லுயருஞ் சுகவனர் வெற்பினிம் மாதினையே. (கச)

விசுரத்த நவோடாநாயகிக்கிலக்கியம் நாயகனுரைத்தல்.

உற்றொரு கைதொடைக் குள்வைத் துடைமுடி யூடடக்கி
மற்றொரு கையின் முலைமுடிக் கண்வடி வாள்புதைத்துச்
சொற்றொடர் சூடுஞ் சுகவனர் வெற்பிற் சுருக்கெனவப்
பொற்றொடி யென்னரு கிற்படுத் தாளுடல் பூரித்ததே. (கரு)

மேலேசொல்லிய மத்தியாநாயகி அதி விசுரத்த நவோடா நாயகிகளின்
இலக்கணமுங் குணங்களும்.

கலவிதனிற் பிரியமும்வெட் கமுஞ்சமமா கப்படைத்த கன்னி தானே
கலனுயர்மத் தியைமிகவு நாணிலதி விசுரத்த நவோடை யென்பர்
குலபதிதப் பிதம்புரிந்த போதுதயி ரியமுளதேற் கோணைச் சொல்லும்
பலனுடையத் தயிரியமின் றேற்கடுஞ்சொல் லும்பகர்தல் பண்பா மன்றே. (கசா)

மத்தியாநாயகிக்கிலக்கியம் கவிக்கூற்று.

துயிலிற் குரிசின் முகங்காண் பரிது துயின்றிலனேற்
பயிலிற் பெரிய விவனங் கரங்களைப் பற்றுவனென்

றயிலெயிற் சிறந்த விழிமாது வெட்கமு மன்புமோங்க
ஒயிலெயிற் பதியணை யுற்றாள் சுகவன மோங்கலமே. (௧௭)

அதிவிசுரத்தநவோடாநாயகிக்கிலக்கியம். நாயக னுரைத்தல்.

கலவி விருப்பினள் போற்படுக் கைக்குட் கடிதடுத்தும்
விலகு வண்முத்த மிடிற்றொடின் மேனி விதிர்த்துழல்வள்
சிலவகை செப்பித் திருத்திறு நாணுவள் சேர்வள்கொஞ்சாள்
உலக மதிக்குஞ் சுகவன நேர்மின்பண் போர்வரிதே. (௧௮)

பிரகற்பைநாயகியினிலக்கணமுமவளுட்பிரிவும் அவ்விலக்கணமும்.

தலைவனுடன் கலவிசெயுஞ் சாமர்த்திய கற்பையெனத் தக்க பெண்மற்
றிவள்சுரதப் பிரியைசுர தானந்த மோகிதையென் றிருபா லாகும்
அவனிமிசைக் கலவிநயப் பவள்சுரதப் பிரியையென்ப ரதினு மின்பத்
துவகைகொளப் பூவைசுர தானந்த மோகிதையென் றுரைக்க லாமே (௧௯)

பிரகற்பாநாயகிக்கிலக்கியம் தலைவன்றலைவியைப்புகழ்ந்துரைத்தல்.

பொறிபல வஞ்சம வின்பந் திளைக்கப் புளகெழுமென்
அறிவனு வேனு மகலாது தன்வசத் தாழவன்பிற்
குறிமத கேளி நடாத்து மிவளைக் கொடுத்துளதாற்
செறிவுற நான்முன் சுகவனர் வெற்பினிற் செய்தவமே. (௨௦)

சுரதப்பிரியாநாயகிக்கிலக்கியம். கவிக்கூற்று.

தடமுலை கொட்டிக முண்டணைத் தாடை தனையகற்றிப்
படர்குழல் கோதித்தன் வாண்முகத் தைப்பதி பார்த்தவுடன்
சுடரெழல் காண்ப னெனநீலப் பூஞ்செவி தோகையினுன்
மடவர லெங்கள் சுகவனர் வெற்பின் மறைத்தனளே. (௨௧

சுரதானந்தமோகிதாநாயகிக்கிலக்கியம். நாயகிசகியொடுசொல்லியது.

சூதேது வைத்திருக் கின்றன னோவென் றணைவனனை
மீதே கலவி தொடுத்தான் சுகவனர் வெற்பினிலப்
போதே யெனையு மறந்தேனங் கேயவன் போன்மயக்க
மாதேநின் னுற்கற்ற கல்வியொன் றேனும் வரவில்லையே. (௨௨

தீராதிபேதங்கள்.

பேசிவரு மத்தியைநற் பிரகற்பை யென்னுமிரு பெண்களுள்ளு
மாசிறயி ரியமுளதாற் றீரையென்று மிலாமையினு லதீரையென்றும்
தேசிலக வஃதிருந்து மிராதவியல் பாற்றீரா தீரையென்றும்
காசினியின் மிசைவழங்கு மப்பேதங் களைவிரித்துக் காட்டுவோமால். (௨௩

மத்தியதீராதிநாயகிகளின் இலக்கணம்.

மனவெகுளிக் குறிப்பையுப சாரவுரை யாலுணர்த்து மடந்தை வாட்கட்
கனதனமத் தியதீரை கடியசொல்லா லழுகையினாற் காட்டு கிற்பாள்
அனநடைகற் றலவுமத்தி யாதீரை யிருவரியல் பாலுந் தோன்ற
முனமறிவித் திடுபவண்மத் தியதீரா தீரையென மொழிபலாமே. (௨௪)

மத்தியதீராநாயகிக்கிலக்கியம். தலைவனோடு தலைவி சொல்லியது.

தோகைகளாடு மலர்க்கா வுலாவித் துவண்டனையோ
ஓகை விடாநின் னுடல்மிக வேர்த்த துணர்குவதென்
றுகையின் மாந்தளி ரால்வீசி நானவ் வயர்வகற்ற
வாகையு ளாய்நினைக் கின்றேன் சுகவனர் மாதலத்தே. (௨௫)

மத்தியாதீரா நாயகிக்கிலக்கியம். தலைவனோடு தலைவி சொல்லியது.

வேறு நிமித்த முரைத்திது காறும் விழித்திருந்தாய்
ஊறு புனல்சிவப் புற்றவென் கண்களுநின் றுள்ளதடு
மாறுமென் னெஞ்சனக் குச்சோலை யிற்கனி வாய்த்ததுவேள்
சீறுவ னென்னை யிதுவென் சுகவனர் சேலமன்னே. (௨௬)

மத்தியதீராதீராநாயகிக்கிலக்கியம். கவிக்கூற்று.

சரச முதற்பல தன்மைக ளாலுஞ் சமானமிலா
வரசனு மென்னுயி ரன்பனு நீயின் றலுத்ததென்ன
விரசு பொழிற்குயில் வேட்டனை யோவென்று விம்மிநின்றாள்
முரசதிர் சேலச் சுகவனர் வெற்பிறை முன்னணங்கே. (௨௭)

பிரபுடதீராதிநாயகிகளின் இலக்கணம்.

மருவநகை யிலாதவள்போன் றிருத்தலினாற் சினமுணர்த்து மதர்வேற் கண்ணி
கருதுபிர புடதீரை யிரட்டியடித் தக்குறிப்பைக் காட்ட வல்லாள்
தருபிரபு டாதீரை யிவ்விருபண் பினுந்தெரியத் தான்செய் கிற்பாள்
திருவினுயர் பிரபுடதீ ராதீரை யெனவடநூல் செப்பு மாலோ. (௨௮)

பிரபுடதீராநாயகிக்கிலக்கியம். தலைவியோடு தலைவன் சொல்லியது.

மலரணை சேர மனமிலை யேனு மதுரமொழி
சிலசொல வுந்தடை யாதுன் சகிகளைச் சீறுதல்போல்
மெலவத னத்தைத் திருப்பினை யுண்மை வெளியிலிடாய்
நலனிது வன்று சுகவனர் மால்வரை நாயகியே. (௨௯)

பிரபுடாதீராநாயகிக்கிலக்கியம். கவிக்கூற்று.

சடைமதி யூடுதன் சாயைகண் டிங்கொரு தையலுற்று
விடையி லெனச்சினங் கொண்டேசொர் ணாம்பிகை யென்னாமின்றி

மிடைவளை யோலிடக் கையெடுத் தோங்கி மிரட்டினளாற்
படைமழு வேந்துஞ் சுகவன நாதர் பயப்படவே. (௲௦)

பிரபுடதீராதீராநாயகிக்கிலக்கியம். தலைவன் மனத்தொடு சொல்லியது.

கடிமா மலரணை சேர்த்தா லுடன்புறங் காட்டுவள்பின்
அடியே யென்றாலு மடிப்ப ளுபசரித் தாலவட்டம்
விடிகாலை மட்டு மிரட்டினு மெத்த மிரட்டுவளெப்
படியோ சுகவனர் வெற்பினெஞ் சேயிவள் பாவனையே. (௲௧)

சேட்டாகனிட்டாதி பேதங்களும் இலக்கணமும்.

சேட்டைகனிட் டைகளெனவித் திரைமுதன் மூவரினுந் திகழ்வ ரோர்சார்
வேட்டவனு லன்புமிக்காள் சேட்டையது சிறிதுபெற்ற மின்க னிட்டை
காட்டுவர்தீ ராசேட்டை கனிட்டையதீ ராசேட்டை கனிட்டை மற்றும்
வாட்டமிலாத் தீராதீ ராசேட்டை கனிட்டையென்று வகுக்குங் காலே. (௲௨)

தீராசேட்டைகனிட்டைகளுக் கிலக்கியம். கவிக்கூற்று.

இருபா லிருவ ருறவணை யொன்றி னிணங்கியபோ
தொருமான் முக்காடிட் டுறங்குன ரொப்பமற் றோர்மயிலின்
அருகே புரண்டொலி யின்றித் துகிலை யவிழ்த்துமெல்ல
விருதோ னெழுப்பினன் சேலச் சுகவனர் வெற்பிடத்தே. (௲௩)

அதீராசேட்டைகனிட்டைகளுக் கிலக்கியம். கவிக்கூற்று.

அருத்தியைத் தான்வெளி யாக்கா திருமனை யாட்டிகளில்
ஒருத்தியைப் பூவுக் கனுப்பிச்சற் றேயிமைத் துள்ளகணிற்
கருத்தினைக் காட்டு முகத்தெழின் மற்றொரு கன்னிதனைத்
திருத்தியச் சோலையிற் சேர்ந்தான் சுகவனர் சேலமன்னே. (௲௪)

தீராதீராசேட்டைகனிட்டைகளுக் கிலக்கியம். கவிக்கூற்று.

இருமட வார்சினந் தோர்பா லுறக்கண் டிணக்குதற்குப்
பருமணி யார மொருத்திகை மேல்வைத்தப் பண்பின்மற்றோர்
பொருவில்பெண் கையில்வைக் கும்போதக் கைதொடல் போல்விலக்கித்
திருமுலை தொட்டு மகிழ்ந்தான் சுகவனர் சேலமன்னே. (௲௫)

க - வது மலர் முற்றும்.

இரண்டாவது மலர்.

பரகீயாபேதங்களு மவ்விலக்கணங்களும்.

கருதுபர கீயைதனிற் கன்னிகைப ரோர்டையெனக் காட்டும் பேத
மிருவகைகன் னிகைதந்தை தாய்முதலோர்க் கடங்கினள் விச்சை தன்னை

ஒருவருமங் கறியாம லொளிப்பவளாம் பரோடைமணந் துளகேள் வற்கு
வெருவிமுன மெடுத்துரைத்த மெல்லியலே போன்றிருக்கு மின்னு மன்றே. (௯௬)

கன்னிகாநாயகிக் கிலக்கியம். கவிக்கூற்று.

புருவவிற் கோட்டிக்கட் பூங்கணை நீட்டிப் புணைகழுத்தின்
குருமணித் தாமமுன் றொடப் புயத்தைக் குழைதழுவத்
திருவிரற் காதிற் செறித்துச் சுகவனர் சேலமதிற்
பருமுலைக் கோமின் சிரித்தோரத் தோர்செல்வற் பார்த்தனளே. (௯௭)

பரோடாநாயகிக் கிலக்கியம். நாயகிதானே யெண்ணியது.

இந்தக் குரிசி லழகென் மனங்கவர்ந் திட்டதந்தோ
சந்தச் சிலைமன் மதனிவ னேயிவன் றன்னைநண்ணிச்
சொந்தக் கணவ னறியாதென் வாறு சுகிப்பனியான்
பந்தச் சுகவனர் நாட்டொளி யேன்செய்த பாவமென்னே. (௯௮)

பரகீயையினுட் பிரிவுகள்.

வேறு.

குத்தை விதத்தை யிலக்கிதைவெங் குலடை யனுசயானையிதோ
டொத்த முதிதை சாதசிதை யுலைபாப் பிரதி பாசத்துறை
தத்தை யனைய வபலாப சதுரை முதற்பே தம்பலமுன்
வைத்த பரகீ யையில்வழங்கி வருமென் றுணர்த்தும் வடநூலே. (௯௯)

குத்தையின் பேதங்கள்.

விடயமறைக்க வல்லகுத்தை விருத்தகரத கோபனைமேல்
வடிவுயிருக்க வருத்திச மாணசுரத கோபனைவெங்
குடிலவிருக்க வருத்திச மாணசுரத கோபனையென்
றுடையதிறத்தின் முப்பேத முறும்பின்விவரித் துரைசெய்வாம். (௱0)

அப்பேதங்களிலிலக்கணம்.

நடந்தகலவி தனைமறைந்து நங்கைகூடமு நாணவிட்டு
மிடைந்தகசுகந்த களபமுலை விருத்தசுரத கோபனைபின்
றொடர்ந்துநடப்ப தாகியவத் நாயகிரிடைத தொழிலொளிக்கு
மடந்தையபித்த வருத்திச மாணசுரத கோபனையே. (௱க)

இதுவுமது.

முந்துநடந்த கலவியும்பின் முயன்றுநடக்குங் கலவியுமங்
கெந்தமணிதர்க் குந்தெரியா நிருக்கமறைக்கு மேந்திழையாள்

வந்தவிருத்த வருத்தீச மாணசுரத கோபனையென்
றந்தவடநூல் வகுத்திடுமற் றவர்பண்பினையு மறிவிப்பாம். (௪௨)

குத்தாபேத திரிவிதநாயகிகளுக்கு மிலக்கியம். கலிக்கூற்று.

அத்தை வெறுக்கினும் பாங்கிக டூறினு மல்லவர்மற்
றெத்தை யுரைக்கினும் பள்ளி புகேனென் றெனையனைசார்
கத்தி கவெரு கென்செய்யு மோசற்றுங் கண்பொருந்தா
தொத்தினி தென்றனண் மெய்போற் சுகவன ரூர்வஞ்சியே. (௪௩)

விதத்தையினிலக்கணமும் பேதங்களும் அவற்றிலக்கணங்களும்.

சமையவுசித சாதுரிய சமர்த்திவிதத்தை யாமவட்குட்
கமையில்வாக்கு விதத்தையென்றுங் கயற்கட்கிரியாம் விதத்தையென்றும்
அமையுமிருபான் முன்னவள்சொல் லதனுன்மேற்காட் டமைதியுளாள்
சிமையமுலைப்பின் னவடொழிலாற் றிறமன்னதுபெற் றிடுபவளே. (௪௪)

வாக்குவிதத்தாநாயகிக் கிலக்கியம். கலிக்கூற்று.

செங்கதிர் பொங்கப் பலபூவும் வாசனை செய்யுமந்தத்
துங்க நதிக்கட் பொழில்வில காமற் சுகங்கருதித்
தங்க வழிச்செல் பவன்வேண் டுவது தகுந்ததன்றே
எங்கள் சுகவனர் வெற்பினென் றோர்பண் ணியம்பினளே. (௪௫)

கிரியாவிதத்தாநாயகிக் கிலக்கியம். கலிக்கூற்று.

பனிநா ளிலந்தைப் பழத்திற்குச் செல்வது பண்பலவென்
றினிதா மணைக்கறி வித்தத் தருவைவெட் டென்னவொரு
தனியாளை நாயக னேவக்கு டாரந் தனைக்கிணற்று
ஙனிநீரி லிட்டு மறைத்தாள் சுகவனர் நாட்டவளே. (௪௬)

இலக்கிதை குலடையென்று நாயகிகளின் இலக்கணம்.

வேறு.

ஒளிப்பறு தனதுசெய்கை யுலகிலெல் லோருங்காண
வெளிப்படை யாக்கிக்கொண்ட மின்னிலக் கிதையாமென்பர்
களிப்பொடு குலவரம்பு கடந்துசேர்ந் துழலுங்காமி
துளிப்புய லிடிக்குமஞ்சாத் துணிவுடைக் குலடையாமே. (௪௭)

இலக்கிதாநாயகிக்கிலக்கியம். கலிக்கூற்று.

இதுவரை யாகிய தாகிய தேமற் றினிச்செயப்போம்
அதுவு முறுதி நடக்கின்ற தூந்தவ ருதுசிடுப்

பதுமதி யின்மை குறூரத்தி லென்ன பலன்சொலென்றாள்
விதுமுக நண்பனை நோக்கிச் சுகவனர் வெற்பொர்மின்னே. (சஅ)

குலடாநாயகிக்கிலக்கியம். கவிக்கூற்று.

மிதுமழை பெய்யு முகில்பல புல்வினை விக்குமலை
தொகுகனி காட்டுந் தருக்களவ் வாறு துணைவர்நல்கத்
தருவன வோவெம் பொருட்டென்ன நீபடைத் தாயெனத்தேன்
நகுமல ரோனை வெறுத்தாள் சுகவனர் நாட்டொர்மின்னே. (சகூ)

அனுசயாநாயகியின் இலக்கணம்.

தாங்கருநற் றிடுசங் கேதத் தலைமது தவறியேனும்
ஆங்கதற் பின்னேவண் டுஞ்சார் பமையுமோ வமைய தோவென்
றேங்கல்பெற் றேறனு முன்சென் றிருப்பனே வென்றேங்கொனப்
பாங்கருக கென்றே றனும்புண் படிபவ ளனுசயானை. (நிo)

அனுசயாநாயகிக் கிலக்கியங்கள். பாங்கிகூற்று.

வன்ன வசந்தம் புகவில வங்கவல் லிப்புதரின்
பன்ன முதிர்ந்தன பார்த்தலுங் கண்புனல் பாய்ந்தவன்றி
என்னலை முங்கொள் சுகவனர் வெற்பிவ ளெண்ணமென்றோ
மின்னனு வம்பனை யோலையைப் போல வெளுத்தவே. (நிக)

இதுவுமது.

நாயகிக்குச் சகி சொல்லியது.

வருந்தே லிருக்கை மருவினி யன்பன் மணப்புறத்திற்
பெருந்தே ரிரவி கதிரும் புகாதிளம் பேடையொடு
திருந்தோர் மயிலுறங் கத்தழைக் கும்பல தேம்பொழில்கள்
இருந்தே யுமவென் சுகவன நாதர்வெற் பேந்திழையே. (நிஉ)

இதுவுமது.

கவிக்கூற்று.

விழிபுனல் பாய விமையாது நிற்குமவ் வேளைதனில்
எழில்புனை சண்பகங் காதில்வைத் துக்கனி யேந்தியன்பின்
வழிவர நோக்கின ளந்தோ சுகவனர் மால்வரையிற்
பொழிமது மாலைப் புரிகுழற் பூண்முலைப் பூங்கொடியே. (நிஙா)

முதிதை சாகஸிகை பிரதிபாசதுரையென்னு நாயகிகளினிலக்கணம்.

வேறு.

பையநினை வின் படிக்கமைவு பார்த்துமகிழ்கூர் பவண்முதிதை
செய்யமுடியாக் காரியமுஞ் செய்யத்துணிவாள் சாகஸிகை

வெய்யதனது சொல்லையவ்வவ் வேளைக்கிசைந்த விதமாற்றுந்
தையல்பிரதி பாசதுரை யென்பர்வடநூற் சான்றோரே. (௫௪)

முதிதாநாயகிக்கிலக்கியம். கவிக்கூற்று.

முதுமாமன் மாமிகண் ணில்லாரிங் நாத்தி முழுச்செவிடி
சதுரான நாயக னூர்க்கே கினனென்னைத் தாங்குகதி
யிதுவேயென் றோர்பதி கற்கோதிக் கொங்கை யெழநெகிழ்த்தாள்
புதுவீர் சுகவனர் வெற்பினண் மேனி புளகிக்கவே. (௫௫)

சாகசிகாநாயகிக்கிலக்கியம். கவிக்கூற்று.

என்விழி கட்டுனைக் காண்பனென் றங்கனுற் றேபிடித்து
நின்விழி கட்டுவ னென்னைப் பிடியென நேயபதி
தன்விழி கட்டிச் சுகவனர் நாட்டத் ததிவிடனைப்
பின்விழி யானில விற்கூப்த்துய்த் தாளொரு பெண்கொடியே. (௫௬)

பிரதிபாசதுராநாயகிக்கிலக்கியம். கவிக்கூற்று.

மதிருவி யாற்றைக் குடங்கொடு நீந்துழி வள்விரலால்
எதிர்மா முதலைதள் ளிப்போய்த்துய்த் தேனவ னின்பமெனுந்
ததிகோன் சகியுருக் கொண்டுற்ற தோர்ந்தித் தகைக்கனவு
விதியோகண் டேனென் றுரைத்தாள் சுகவனர் வெற்பொர்மின்னே. (௫௭)

அபலாபசதுராநாயகியினிலக்கணம்.

மிக்கமோச வார்த்தைகளை வேளைதெரிந்து விரித்துரைத்தும்
துக்கநீடி யவள்போலச் சும்மா வழுதுஞ் சொந்தநண்பன்
பக்கமேவி வேண்டிநிற்கும் படியேயுபாயம் பாராட்டத்
தக்கபாவை யபலாப சதுரையெனுமிச் சகதலமே. (௫௮)

அபலாபசதுராநாயகிக்கிலக்கியம். கவிக்கூற்று.

சுகவன ரூர்மின் னிருட்கரந் தன்னியற் றேய்ந்திடக்கான்
புகவுரு மாற்றிவந் தான்கோ னவனெனப் புல்லியறிந்
திகழ்திரு டாநிற் பிடிக்க நிதந்திரிந் தேன்கிடைத்தாய்
மிகவெளி யாச்சுன்பண் பென்றழு தாள்பதி வேண்டினளே. (௫௯)

சாமானியையினுட்பிரிவும் அவற்றிலக்கணமும்.

ஆங்குமொழிசா மானியைக்கு ளாகந்துகசா மானியையென்
றோங்குபவளுண் டொருத்தியன்னோ ளூரியகணவற் குப்பயந்து
தீங்குசிலநாண் மறைந்தியற்றித் தேர்ந்துபின்பு வெளிச்சென்று
பாங்குபெறுநாட் டினிற்புதிய பரத்தையாகும் பழிப்பினளே. (௬0)

ஆகந்துகசாமான்யாநாயகிக்கிலக்கியம். நாயகியெண்ணியது.

அன்பிற் கடங்கி மறைவா யிதுவரை யன்னியர்பால்
இன்பத் தினைச்சுகித் தேனித் தனைதொரட் டென்னவினித்

துன்பப் படாவிலே மாதர் தெருவடித் துக்கெளிந்து
தென்பச் சுகவனர் வெற்பிற் சதானந்தந் தேடுவனே. (௬௧)

பதினாறுவிதநாயகிகள் வருமாறு.

வேறு.

மாதருக்குண் மத்திமைநற் பிறகற்பை யென்றவிரு வருந்தீராகி
பேதவர்க்கத் தறுவர்களாய்ப் பின்சேட்டா கனிட்டாகி பேதநன்னி
லதமற்ற வியல்பினிற்பன் னிருவர்களாய் முத்தைதையைச் சேர்த் தெண்ணாவன்னோர்
பூதலத்தின் மீதுபதின் மூவகைய ராவரின்னம் புகல்கிற்பேமால். (௬௨)

இதுவுமது.

பரகீயை வகையிலிரு வருமொருசா மானியையும் பகர்ந்துபோந்த
தரமேவு பதின்மூவர் தமிழ்பொருந்த விருமருங்குந் தாநக்கியோடி
அரநேரு மதர்விழிநா யகிகள்பதி னறுவர்களா யமைவரென்ன
மரபாக வடமொழிநா வலரெவரு மினிதுரைர வகுத்தாரன்றே. (௬௩)

வேறு.

கந்தமலி மலரிரண்டாற் பதின்முப்பேத களபதன சுவீயையிலக் கணமுமன்றிப் பந்தமுளவிருவகையாய்வழங்காநின்றபரகீயையிலக்கணமும்பணங்கைக்கொண்டு பிந்தமரு வுறுமொருசா மானியைக்குப் பெற்றவிலக் கணமுமற்றைப் பிரிவுஞ்சொன்னு, மிந்தவித நாயகிக ளெனுமூவர்க்கு மிசைந்தபொதுக் குணங்களேமே லெடுத்துச்சொல்வாம். (௬௪).

உத்தமாதிகுணநாயகிகளின் பேதமும், அவற்றிலக்கணமும்.

உயர்பிரிய நாயகிகள் குணபேதத்தா லுத்தமமத் திமவதம வொழுங்கே யவ்வப், பெயர்பெறுவ ருத்தமநா யகிதன்கேள்வன் பிழைசெயினுந் தானிதமே பேணிச் செய்வா, ளயர்வரிய மத்திமநா யகிமற்றன்னோ னடுத்தேதெனின் றெவை செயினு மவையே செய்வாள், துயரதம நாயகிநன் னலஞ்செய்தாலுந் துணிந்ததுதீங் கெனவெகுளுந் தோகை யாமே. (௬௫)

உத்தமநாயகிக்கிலக்கியம். கலிக்கூற்று.

மறுமான் முலைக்குறி மார்பொடு நேர்மனை வாளணைக்கண்
டுறுமூர லாஞ்சந் தனம்பூசி நோக்கெனு முற்பலத்தாற்
சிறுகா மலர்ச்சித்தின் சொற்பனி நீர்தெளித் தேவியப்ப
நறுநேய வேடிக்கை செய்தாள் சுகவனர் நாட்டணங்கே. (௬௬)

மத்திமநாயகிக்கிலக்கியம். கலிக்கூற்று.

பிழைத்துந் துணிந்து குழல்கோதிக் கோன்சுகம் பேணிநண்ணத்
தழைக்குஞ் சினக்கட் கணையா லொதுங்கச்செய் தாளவன்பின்
குழைக்குஞ்சொற் கொண்டுடை நீக்கச் சுகவனர் குன்றவள்பொன்
இழைக்குப் பணித்தன் னுடற்கற் பகக்கொடி யீந்தனளே. (௬௭)

அதமநாயகிக்கிலக்கியம். தலைவியை நோக்கிச் சகிசொல்லியது.

கதிரா லுடல்வருந் தும்பொடி யாற்பதங் கன்றுநிற்கென்
றெதிர்மா மரையைக் குடையா வெடுத்துமண் ணெங்குமண
முதிர்நீர் தெளிக்கும் பதியைச் சுகவன மூர்த்திவெற்பிற்
கொதிவே லெனச்செங்கண் கொண்டு மிரட்டலென் கோமளமே. (௬௮)

மேலேசொல்லிய நாயகிகளுக்குத் திருத்தாதிபேதங்களும். அவற்றிலக்கணங்களும்.

வேறு.

திருந்துமிவ ரேதிருத்தை யதிருத்தை யொடுதிருத்தா திருத்தை யென்னப், பொருந்துவரா றலவிசெயும் பொழுததனிற் றிருத்தியுற்ற பூவையன்றோர், வருந்தரிய திருத்தையுறா ளதிருத்தை யுற்றுமுறா வடிவேற்கண்ணி, முருந்தனைய முறுவலினா முலைத்திருத்தா திருத்தையென்பர் முதுநூல்வல்லோர். (௬௯)

திருத்தாநாயகிக்கிலக்கியம். நாயகன் பாங்கனொடு சொல்லியது.

இளைத்தேன் மிகவுநிற் கேநா னடிமையென் றின்பவெள்ளந்
திளைத்தே தளரத் தழுவிக் குதலை செழித்தபலாச்
சுளைத்தே னெனப்பல சொல்வாளைக் கூடிச் சுரதவகை
விளைத்தே னெனக்கெதி ருண்டோ சுகவனர் வெற்பிடத்தே. (௭௰)

அதிருத்தாநாயகிக்கிலக்கியம். நாயகன் பாங்கனொடு சொல்லியது.

மார்பை யடிக்கடி தட்டிப்புட் போற்கத்தி வைதுகிள்ளிப்
பார்வையி னுற்றொருடை யாலெச் சரிக்கை பணிச்சிரிப்பை
நேர்வி பரீதப் படுத்தலுந் தும்பின் னெடிதிழுத்துச்
சேர்வ ளிவளைவெல் வாரார் சுகவனர் சேலத்திலே. (௭௧)

திருத்தாதிருத்தாநாயகிக்கிலக்கியம். நாயகன் பாங்கனொடுசொல்லியது.

கனிவாய் முறைமுறை யோங்கித்தன் கூந்தல் கலைந்தசையத்
தனிமா மலர்குழைந் தென்னவென் மார்பினிற் சாய்ந்துநில்லி
தினிதா மினிக்கொஞ்ச மேலேறென் றேசொலு மேந்திழையைத்
தொனிகூர் கலவியில் வென்றேன் சுகவனர் சோலையிலே. (௭௨)

இன்னுமந்த நாயகிகளுக்கு திவ்வியாதிபேதங்களும். அவற்றிலக்கணங்களும்.

மின்னுறழு நுண்ணிடைநா யகிகண்மற்றோர் விதத்தாற்றிவ் வியையுங்கன்னல்
இன்னுரைசொ லதிவ்வியையுந் திவ்வியா திவ்வியையு மெனமுப்பேத
மன்னுவர்வா னுள்ளவடிவ் வியையல்லா ளதிவ்வியைமுன் வானுளாளாய்ப்
பின்னுலகில் வருபவளே திவ்வியா திவ்வியையாம் பிரிக்குங்காலே. (௭௩)

திவ்வியாதிபேதமூன்றற்குமிலக்கியம். கவிக்கூற்று.

சசிமுத லோர்சந் திரமதி யாதியர் தாரளக
வுசித சனகி யுருக்கு மணியுள்ளிட் டோரெவருங்
கசிவுறு மன்பிற் சுகவனர் பாதங் கருதியன்றோ
சுசிபெறு தத்தங் கருத்தின் படிக்கின்பந் துய்த்தனரே. (௭௪)

திவ்வியாநாயகிக்கிலக்கியம். தலைவனெண்ணியது.

அடியாதி சேடன் முடிமேற் படிபடி யாதுவிழி
நெடிதோ வியத்தலர் பங்கே ருகத்தை நிகர்த்திலங்க
வடிவா லொராம விருணீக்கித் தோன்றுமிம் மாதெவளோ
பொடிபூசு மேனிச் சுகவன நாதர் பொருப்பிடத்தே. (எரு)

அதிவ்வியாநாயகிக்கிலக்கியம். தலைவனெண்ணியது.

மயலா லுளத்துள வாட்டத்தைக் கூந்தன் மலருணர்த்தக்
கயலாய பார்வை யெதிர்ந்தோ ரறிவைக் கவர்ந்துவிடப்
புயலூர் சுகவனர் வெற்பிற் பொலியுமிப் பூவைதன
தியலோ மயில்சொற் செயலோ குயில்சிற் றிடையில்லையே. (எசு)

திவ்வியாதிவ்வியாநாயகிக்கிலக்கியம் தலைவனெண்ணியது.

நரகன் னியர்க்கு ளொருகன்னி யாய்நடு நண்ணினுமுற்
சுரகன்னி யேயிவ ளாந்நா லிலக்கணந் தொக்கமையால்
வரகன்னி யல்ல ளெனினிக் கருணை மகிமையுண்டோ
சிரகன்னி நாதர் சுகவனர் வெற்பிற் றிகைக்குநெஞ்சே. (எஎ)

பின்னுமன்னாயகிகளுக்கு அன்னியசம்போகதுக்கிதாதிபேதங்களும்
அன்னியசம்போகதுக்கிதையினது இலக்கணமும்.

மற்றுமவ ரன்னியா சம்போக துக்கிதைவின் மதனேங்கச்சென்
றெற்றுவிழி வக்ரோத்தி கருவிதைநன் மானவதி யெனவுநாம
முற்றிடுவ ரன்னியா சம்போக துக்கிதைபின் னொருத்திதன்னைப்
பற்றிசைதன் பதிபுணர்ந்த பரிசுணர்ந்து துக்கிக்கும் பாவையாமே. (எஅ)

அன்னியசம்போகதுக்கிதைக் கிலக்கியம். தலைவி சகியை வினவுதல்.

தருக்கக லாத சகியே சுகவனர் தஞ்சிலம்பில்
மருக்கமழ் பூம்பொழிற் கேகினை யோவன்றி வாய்மைமன
வுருக்கமி லான்மனை யுற்றனை யோவுன் னுடலிலெங்கு
முருக்க மலரணி யுண்டா கியதென் மொழிகுவையே. (எகூ)

வக்ரோத்திகருவிதையின் பேதங்களும் அவற்றிலக்கணங்களும்.

விதித்துளவக் ரோத்திகரு விதைக்குளுயர் பிரேமகரு விதைகும்பம்போற்
கதித்தமுலைச் சவுந்தரிய கருவிதையென் றிருவகைதன் கணவனேய
மதித்துமதர்த் திடுமடந்தை பிரேமகரு விதைதனது வடிவின்பொற்பால்
உதித்தசெருக் கினளந்தச் சவுந்தரிய கருவிதையென் றுணர்த்துநூலே. (அ0)

பிரேமகருவிதாநாயகிக் கிலக்கியம். தலைவிசகியொடு சொல்லியது.

மாமி பொறுமையென் றுமென்கண் சாடை வழித்திரும்பும்
சாமி யெனக்குத் தருமணிப் பூண்க டாமலிரான்

பூமியி லேனையர் போதனை யாற்றப்பிப் போவதுண்டோ
தேமிளிர் சோலைச் சுகவனர் வெற்பிற் செழுங்குயிலே. (அக)

சவுந்தரியகருவிதாநாயகிக்கிலக்கியம். தலைவிசகியொடுசொல்லியது.

வழுவற்ற மோகத் தெளிவேநின் னீள்கண் வனசகை
முழுமுத் துரைய முதந்தனஞ் செப்பென்றென் முற்றுதிக்குங்
கொழுநற்கு நானென்ன சொல்வேன்சொல் லாளிடிற் குற்றமன்றோ
செழுமைச் சுகவனர் வெற்பூ டுலாவிய சித்திரமே. (அஉ)

மானவதியின் பேதங்கள்.

மானவதி மானமிக்காண் மணவாள னபராத மதித்தேயந்தக்
கானளக மயில்வெளியிற் காட்டுசெய்கை மானமது கருதுங்காலை
ஈனமறு குருமான மிணங்கியமத் தியமான மிலகுமான
மானவகை யாலொருமூன் றுமவற்றி னியல்பையினி யறிவிப்போமால். (அ௩)

திரிவிதமானங்களும் உண்டாவதற்குக்காரணம்.

வேற்றுவனி தையைக்கொழுநன் மேவுகுறி நாயகிதன் விழிக்குநேராத்
தோற்றுதலு மவனவள்பேர் சொல்லுதலு மன்னவனத் தோகைதன்னை
ஏற்றுமன மகிழ்வொடுபார்த் திடலுங்கா ரணமாக வெழுந்தேநிற்கும்
சாற்றுகுரு மானமுதன் மூன்றுமுறை வகையினென்பர் சான்றோர்தாமே. (அ௪)

குருமானநாயகிக்கிலக்கியம். கவிக்கூற்று.

எதிர்சக் களத்தி பதவிரற் கொம்பக் கின்சுவடு
பதிநெற்றி தோன்றச் சுகவனர் வெற்பிற் பதிவரக்கண்
டதிகச் சினங்கொண் டனள்செங்கட் பார்வையி னற்செவிசூழ்
கதிர்முத் தெலாம்புது மாணிக்க மானவக் காரிகைக்கே. (அ௫)

மத்தியமானநாயகிக்கிலக்கியம். கவிக்கூற்று.

தழுவுறு மன்பன் மறுமாதி னாமந் தனைச்சொலவப்
பொழுதி னவன்றிருப் பொன்னு பரனைப் புயவரைகள்
விழுமிய செஞ்சல சம்பூத் திலங்க மிகமுனிந்தாள்
மழுவணி யுங்கைச் சுகவனர் நாட்டுள மாமயிலே. (அ௬)

இலகுமானநாயகிக் கிலக்கியம். கவிக்கூற்று.

உவகையிற் காதலி யோடுறை கோன்மற் றொருத்திதனைப்
பவமொழித் தாளுஞ் சுகவனர் வெற்பிடைப் பார்த்துடனிங்
கிவளிதைக் காணினென் னாமோவென் றெண்ணி யெதிர்திரும்ப
அவனுதற் றீட்டிய மான்மதஞ் சிந்தூர மாகியதே. (அ௭)

திரிவிதமான நிவர்த்தியின் இலக்கணம்.

மிகவருந்தி நிவர்த்திசெயத் தகுந்துளது குருமானம் வேண்டியேசற்
றகமுழுந்து பரிகரிக்க லாவதுமத் தியமான மவைபோலின்றி

இகழ்விலன்ப னெளிதாகத் தணித்திடப்பட் டதுதான்மற் றிலகுமானம்
பகரினைந்த வகையினுந்தீர்ப் பருமானங் கடினராசா பாசமாமே. (௮௮)

குருமானநிவர்த்திக் கிலக்கியம். கவிக்கூற்று.

தத்திய தத்தைநின் போற்பேசக் கேட்டதைத் தான்பிடித்தேன்
கொத்திய திப்படி வேற்றோர் நகத்தின் குறியிதெனப்
புத்திகொ ளேலென் றணிச்சத்திற் கோன்கஞ்சப் பூப்புனைய
ஒத்தினி தாகக் கலந்தாள் சுகவன ரூர்வஞ்சியே. (௮௯)

மத்தியமானநிவர்த்திக் கிலக்கியம். கவிக்கூற்று.

மோகன மாலை கிடைத்த துனக்கெனு முன்முழுது
நீகரு தாதவள் பேரெனச் சிறுத னீதியன்றென்
றாக மதனைப் பணிகோன் கொடுவெந் தணிந்திடலும்
தேக மகிழச் சுகவன ரூர்வஞ்சி சேர்ந்தனளே. (௯௦)

இலகுமானநிவர்த்திக்கிலக்கியம். கவிக்கூற்று.

பிரிவெனி தோவெப் படித்தனித் தாளிந்தப் பேதையெனும்
பரிவத னன்மெலப் பார்த்தே னலதொரு பாவமுமின்
றரிய வமுதிகழ்ந் தார்கஞ்சுண் பார்முனி வாற்றுகெனக்
குரிசி றழுவச் சுகவன ரூர்வஞ்சி கூடினளே. (௯௧)

இராசாபாசத்துக்கிலக்கியம். தலைவன்பாங்கனொடு சொல்லியது.

பணிந்தே னுபசரித் தேன்றொழு தேன்பொற் பணிகொடுபோய்
அணிந்தே னடிக்கடி யாணையிட் டேனவ் வரிவைசினம்
தணிந்தா ளிலைமனங் கல்லோவென் றனைச் சகாதெனத்
துணிந்தாள் சுகவனர் வெற்பினண் பாவென்ன சொல்லுவதே. (௯௨)

ஏகசையான்னியோன்னிய வியோகசையோகத்திற்கும்
பிரேமாதிக்கியத்திற்கு மிலக்கணங்கள்.

ஒருபூவி னணையிலொரு வரையொருவர் பிரிதலுள முவந்து சேர்தல்
கருதேகசையான்னி யோன்னியவி யோகசையோ கந்தா னாகும்
இருதேக மோருயிரென் றிடும்படிநா யகிபுருட ரென்போர் தம்பால்
வருநேய மிகுதிபிரே மாதிக்க மெனும்பழைய வடநூன் மாதோ. (௯௩)

ஏகசையான்னியோன்னிய வியோகசையோகத்துக்கிலக்கியம். கவிக்கூற்று.

துணைவ னதரச் சிவப்பினைக் கண்டு சுருள்பகிரா
தணைமிசை நாயகி பின்காட் டினளவ் வதருளிலென்
றிணையவ னும்புறந் தந்தான் சுகவன ரின்பவெற்பிற்
கணைமத னாற்றுயி லூடவர் நேர்ந்து கலந்தனரே. (௯௪)

பிரேமாதிக்கியத்துக் கிலக்கியம். கவிக்கூற்று.

தொனித்த மறைக்குமெட் டாத சுகவனர் சோலைவெற்பில்
தனித்தனி நாம்பிரிந் தானய லாமென்றிற் சன்னதமும்

இனித்த வுரையுங் கிரீடையு மில்லவென் றேபதியும்
னித்துவர் வாய்மயி லுந்தேர்வர் செய்யக் கடவதென்னே. (கரு)

இத்தனை மலர்களா லிக்குச்சம் முடிவுபெற்றதெனல்.

கறைதவிர்ந்த பொதுவியல்பாற் கனதனநா யகிகளிலக் கணமு மற்றும்
முறையமைந்த மலரிதொன்று முனமலர்ந்த விரண்டுமெனு மூன்று பூவால்
நிறைசிறந்த முதற்குச்சந் துலங்கவலங் கரித்தனமத் தொன்னூ லொப்ப
மறைவிலின்ப மலிபிரண்டா வதுகுச்சந் தனையினிநாம் வகுப்பா மன்றே. (கசு)

ரு-வது மலர் முற்றும்.
முதலாவதுகுச்சம் முற்றிற்று.
ஆகச் செய்யுள் - கஎ

---

இரண்டாவது குச்சம்.

# அஷ்டவித நாயகிகளின் பெயர்.

தினமகிழ்கூர் சுவாதீன பதிகையொடு வாசகசச் சிகையே யன்றிக்
கனவிரகோற் கண்டிதைவிப் பிரலத்தை கண்டிதைபொற் கலச நானுந்
தனகலகாந் தரிதைபுரோ டிதபதிகை மலர்ந்தொசிந்த தளிர்ப்பூங் கொம்பர்
அனவபிசா ரிகையிவர்மற் றட்டவித நாயகிக ளாவர் மாதோ. (க)

சுவாதீனபதிகாநாயகியினிலக்கணமும், அவள்குணங்களும்.

பகலிரவுந் தனதுமன தறிந்துசொன்ன படிநடக்கும் பதிவாய்ந் துள்ளாள்
சுகமருவுஞ் சுவாதீன பதிகையென்ப ரவட்குமலர்த் தோட்டஞ் சுற்றல்
புகழ்மதனன் களிக்கவிழாப் புரிதன்மத மகங்கார பூணல் பின்னும்
மிகநினையுங் காரியமவ் விதமுடித்தல் குணங்களென விளங்கு மன்றே. (உ)

முத்தாசுவாதீனபதிகைக்கிலக்கியம். தலைவிசகியொடு சொல்லியது.

முலையிற் பருமையு மூரலிற் காந்தியும் மோகவிழி
வலையிற் குடிலமு மாடலிற் பாடலில் வல்லமையும்
இலையெற் கெனினு மிமையாமற் பார்ப்ப னெனைக்கொழுநன்
மிலைசொற் சுகவனர் வெற்பணங் கேயென்ன விந்தையிதே. (ங)

மத்தியாசுவாதீன பதிகைக்கிலக்கியம். தலைவிசகியொடு சொல்லியது.

தடமா முலையொடு தற்கும் பலசர சத்தினுக்கும்
இடமே கொடாதுடை நானிறுக் கிக்கொண் டிடர்செயினும்

திடநா யகனன் பொடுவேண் டுவனெனைச் சீறியெங்கும்
கடவா ளிதென்ன வியப்போ சுகவனர் நாட்டணங்கே. (௪)

பிரபுடாசுவாதீனபதிகைக் கிலக்கியம். தலைவிக்குச் சகிசொல்லியது.

முகநகை வாய்கண் மொழிமுலை மற்று முறையிறைந்து
மிகவளர் மோகக் கனியா நினையன்றி வேறாளவெம்
மகரிறை யுங்கள வூடுமெண் ணாதுன் வழியொழுகித்
திகழ்பதி யோடென்ன பேசுஞ் சுகவனர் சேலமின்னே. (௫)

பரகீயாசுவாதீனபதிகைக் கிலக்கியம். தலைவிசகியொடு சொல்லியது.

முனைவேல் விழிமட வார்பலர் தன்மனை மொய்த்தலவப்
புனைமேடை திண்ணை புறமுன்றி லாயம் பொழிலினும்
எனையேயவ் வல்லபன் பார்க்கின் றனனிது வென்னவிந்தை
வினைதீர் முனிவர் பரவுஞ் சுகவனர் வெற்பணங்கே. (௬)

சாமானியாசுவாதீனபதிகைக் கிலக்கியம். தலைவிசகியொடுசொல்லியது.

வேனோர் விழிமட வார்மனை தோறு மிருந்திருக்கத்
தானேகொக் கோக குருவென் றெனையத் தலைவனெண்ணி
வானே யெனப்பொன் மணிபெய்து தொண்டுசெய் வானிதென்ன
நானேமெச் சிக்கொள்ள லாமோ சுகவனர் நாட்டணங்கே. (௭)

க-வது மலர் முற்றும்.

---

வாசகசச்சிகாநாயகியி னிலக்கணமும், அவள் குணங்களும்.

ஆகமுற்ற வணிந்துபதி யணுகுமிப் போ தெனக்கலவிக் கான வெல்லாஞ்
சேகரித்து வைத்தெதிர்பார்த் திருப்பவளே வாசகசச் சிகையா மென்பர்
மேகமொத்த குழற்சகிமார் தமைப்பரிகா சித்தல்பல விதகோ ரிக்கை
தாகமுற்றுத் தூதிகளைத் தான்வினவன் முதலவவ ளன்பண் பாமே. (௮)

முத்தாவாசகசச்சிகைக் கிலக்கியம். கவிக்கூற்று.

சுருள்செயல் புட்பந் தொடுத்தல் வயங்கச் சுடர்திருத்தல்
பொருள்பிற தேட லிவற்றிற் சகிகள் புடைவிரையக்
குருநகை சற்றரும் பத்துகில் சோரவுட் கூசவன்பன்
வருவழி பார்க்கு மொருமான் சுகவனர் மண்டலத்தே. (௯)

மத்தியாவாசகசச் சிகைக்கிலக்கியம். கவிக்கூற்று.

தொழிலைச் சகிகட்குக் காட்டலிற் புட்பந் தொடுக்குமயில்
எழிலிற் பிறரை வெலவேண்டல் போற்பணி யேந்துமன்றிப்
பழியற்ற வோவியம் பார்த்தென மெத்தப் பதிவருமல்
வழியுற்று நோக்குஞ் சுகவனர் வெற்பின் மதனகவே. (௧0)

பிரபுடாவாசகசச்சிகைக்கிலக்கியம். கவிக்கூற்று.

நறைகுழ லூட்டி நகைதுகில் பூட்டி நறுங்களப
நிறைமலர் கஞ்சன மெல்லா மமைத்து நிமிர்படுக்கை
அறைகமழ் சண்பகத் தால்வேய்ந் தெனத்தன் னணிநகவுற்
றிறைவரல் பார்க்குஞ் சுகவனர் வெற்பி னிளங்குயிலே. (௧௧)

பரகீயாவாசகசச்சிகைக்கிலக்கியம். கவிக்கூற்று.

அத்தையைத் தூங்கவைத் துத்தீபத் தைக்கடி தாங்கவித்தோர்
தத்தைமுன் மேடைப் புறுவொலி காட்டித் தனிப்புரண்டு
மெத்தையி லோலை யசைந்திடச் சுற்றி மிகத்தடவி
எத்தயற் சோரனைப் பார்க்குஞ் சுகவன ரின்புரத்தே. (௧௨)

சாமானியாவாசகசச்சிகைக்கிலக்கியம். கவிக்கூற்று.

கச்சு நெகிழ்க்கக்கைக் காப்புமிற் கொங்கை களைப்பிடிக்க
மெச்சு கடுக்கனுஞ் செவ்விதழ்த் தேனுண்ண மேற்சரமு
முச்சுத லெண்ணி மணம்பூசி யன்ப ருளமயங்க
நச்சுறு கண்ணி யிருந்தாள் சுகவனர் நாட்டிடத்தே. (௧௩)

2-வது மலர்முற்றும்.

விரகோற்கண்டிதாநாயகியி னிலக்கணமும், அவள் குணங்களும்.

குறியிடமுற் றிதுவரையிற் கொழுநனிங்கே யடுத்திலனே கூடற் கென்று
செறிவிரகத் தோடுசிந்திப் பவள்விரகோற் கண்டிதையாந் தேக நைதல்
அறிவறுகொட் டாவிவிட லழல்வருந்த னடுங்கல்வினை யாட்டு றுமை
வறியளெனப் பாங்கிகள்பான் மனத்துயர்கூ றுதன்முதலம் மயில்பண் பாமே. (௧௪)

முத்தாவிரகோற்கண்டிதைக் கிலக்கியம். கவிக்கூற்று.

பதியுற்றி லானெவட் கூடினன் கொல்லெனப் பன்னு மின்னு
றெதிர்சொற் சொலாதுறும் நாண்மிக் குயிர்க்கு மினுப்பை மல
ரதின்மெய்க் கவுள்வெளுக் கப்புறம் பார்த்தில ளாய்விழி நீர்
முதிரத் தளருஞ் சுகவனர் வெற்பினொர் மொய் குழலே. (௧௫)

மத்தியாவிரகோற்கண்டிதைக் கிலக்கியம். கவிக்கூற்று.

அழைத்தில ளோமின் னழைத்து மிருட்கஞ்சி யண்ணலின்றே
பிழைத்தெவள் பாற்சிக்கி னானோ மன்னென் றுபிதற்றியிரு
குழைப்பொலி பூந்துகள் வீழ்ந்தெனக் கண்புனல் கூர்தரச்செய்
துழைப்பது மக்கைச் சுகவனர் வெற்புற்ற தோர்குயிலே. (கசு)

பிரபுடாவிரகோற்கண்டிதைக்கிலக்கியம். தலைவிசொல்லியது.

காயே விராத்திரி நீயேயெற் கன்னை கடினனிருள்
நீயே பிதாமரங் காளிங்க மேோகினை நீடிசைகூ
சுயே யிமிர்புதர் நீயே சகியன்ப னெய்திலனென்
வாயே மலர்ந்து சுகவனர் நாட்டென்புண் மாற்றுமினே. (கஎ)

பரகீயாவிரகோற்கண்டிதைக்கிலக்கியம். தலைவிசொல்லியது.

வனம்புகுந் தும்புய னீர்த்துளி மூழ்கியும் மாமலரால்
அனங்கனைப் பூசித்தும் வெட்கத்தைத் தானம தாகவிட்டுந்
தனந்தனி யுற்றும் விழிப்பாம் விரதந் தனைத்தொடுத்தேன்
இனங்குறி யன்பன் சுகவனர் வெற்பினிங் கெய்திலனே. (கஅ)

சாமானியாவிரகோற்கண்டிதைக்கிலக்கியம். கவிக்கூற்று.

அந்தப் பிரிய னிதுவரை யேனிங் கடைந்திலன்மற்
றெந்தச் சிறுக்கி பகட்டின னோபொன் னொமவட்குச்
சிந்தத் துணியினென் செய்வேனென் றுள்ளந் திகைத்துருகுந்தான்
கந்தச் சுகவனர் வெற்போர்பெண் மையயலிற் கட்புனலே. (ககூ)

௩ - வது மலர் முற்றும்.

---

விப்பிரலத்தாநாயகியினிலக்கணமும், அவள்குணங்களும்.

செப்பியசார் படைந்துபதி வராமையினிப் படிமோசஞ்செய்தா னேயென்
றொப்பிலதா மனத்துயர முழப்பவள்விப் பிரலத்தை யுணர்த்தன் னாட்கு
மெய்ப்பொருவே தனைநெடுமூச் செறிதல்சகி களைமுனிதல் விரகங் கூர்தன்
மைப்படிவாள் விழிவழிநீர் மருவுதன்மூர்ச் சித்தலின்ன வகைப்பண் பாமே. (உ0)

முத்தாவிப்பிரலத்தைக் கிலக்கியம். கவிக்கூற்று.

பாங்கியர் தப்பு மொழியானி குஞ்சம் படர்ந்துபதி
ஆங்கில னென்பது கண்டுற நீங்க வறிகிலளாய்த்

தேங்குய கள்ளுருண் வண்டென்ன மருண்டு திசைதொறும்போர்
பூங்கிளி நோக்குஞ் சுகவனர் மாதர் பொருப்பிடத்தே. (௨௧)

மத்தியாவிப்பிரலத்தைக் கிலக்கியம். கவிக்கூற்று.

உற்றே நிருஞ்சத் தொருவரு மின்மை யுணர்ந்துயிர்ப்பாம்
பொற்றே னிதழ்வகைக் கமலதிப் பற்பதி பூஞ்சுருளுஞ்
சற்றே திறந்தகட் பார்வையும் வார்த்தைத் தழுதழுப்பும்
பெற்றே சுகவனர் வெற்பினி லொருபெண் மறந்தே. (௨௨)

பிரபுடாவிப்பிரலத்தைக் கிலக்கியம். கவிக்கூற்று.

குறிவழி னெய்திடங் கண்டிலள் மையிற் கூர்மயலே
யறிசகி யோர்க்குஞ் சொலவில்லைத் தூது மனுப்பவில்லை
மறிமருள் கண்ணி புறம்பார்த்தி டாதலர் வாளிபொரப்
பொறிமத னைப்பண் டெரித்த சுகவனர்ப் போற்றினளே. (௨௩)

பரகீயாவிப்பிரலத்தைக் கிலக்கியம். கவிக்கூற்று.

நாணு நதியைக் கடந்துசர்ப் பத்தை நடுமிதித்து
மாணு விருந்துணை யாகக் குறிவையின் வந்துமன்பற்
காணுமை யாலிவண் ணிடியைவெங் கூற்றின் கடாவொலியாப்
பேணுகின் றுளச் சுகவனர் வெற்பொரு பெண்மெலிந்தே. (௨௪)

சாமானியாவிப்பிரலத்தைக்கிலக்கியம். கவிக்கூற்று.

காமா துரரனை வோரையு மெய்த்துங் கபடியிவ
ளேமா றினளொரு தூதிசொல் லாலென் றிசைந்தபுகர்
தாமா வறியவண் டாமலிழி காட்டித் தளிர்க்கைகொட்டிப்
பூமா முறுவல் சுகவனர் வெற்பிற் புரிந்ததுவே. (௨௫)

௪ - வது மலர் முற்றும்.

---

**கண்டிதாநாயகியினிலக்கணமும், அவள் குணங்களும்.**

அயல்வனிதை தனைப்புணர்ந்த வடையாளத் துடனுதயத் தணுகா நின்ற
நயபதியை மிகமுனியு நாயகிகண் டிதைகுணங்க ளுடுங் காலை
இயல்பொருளி லுரைபகர்த லின்னலொடு தவித்திடுமூச் செறிதல் வாளா
உயர்புகிய சித்திரமொத் தூறுதல்கண்ணீர் கொளல்முதலென் றுணர்த்த லாமே.()

முத்தாகண்டிதைக்கிலக்கியம். கவிக்கூற்று.

கலசக் குறிகடன் மார்பிடைத் தோன்றுவ காண்பனெனச்
சலசக்கை யாற்சொந்த நாயகன் றன்விழி தான்மறைக்கக்
குலபத் தினிவிளை யாட்டிது வென்றுளங் கொண்டுநின்றாள்
புலரிப் பொழுதிற் சுகவன நாதர் பொருப்பிடத்தே. (உஎ).

மத்தியாகண்டிதைக்கிலக்கியம். கவிக்கூற்று.

குதலை யொருத்தி சுகவனர் வெற்பிற்றன் கொண்கனெஞ்சி
லிதர தனக்குறி கண்டெதி ரொன்று மியம்பிலள்பின்
பதறி யுயிர்த்திலள் பானு வுதய பருவமதில்
வதன மிலக்குதல் போலக்கண் ணீரை வடித்தனளே. (உஅ)

பிரபுடாகண்டிதைக் கிலக்கியம். கவிக்கூற்று.

அன்னிய மான்முக குங்கும நெற்றி யணிந்துதயந்
துன்னிய நாயக னைக்கண் டெயிர்ப்புவன் சொற்றவிர்த்தோர்
மின்னிது மங்கள மென்னச் சுகவனர் வெற்பிலவன்
றன்னியல் காணச் சகிகைக்கண் ணாடியைத் தந்தனளே. (உகூ)

பரகீயாகண்டிதைக் கிலக்கியம். கவிக்கூற்று.

மாற்றவ டாயத் தணிதோய் கழுத்தொடு வானுதயத்
தேற்ற பதிவரக் கண்டய லோர்க்கஞ்சி யேகடுஞ்சொற்
சாற்றல ளாய்க்கட் புனல்விரற் கொண்டுபிற் சார்ந்தசகி
மேற்றெளித் தாண்மெய்ச் சுகவனர் வெற்பொரு மெல்லியலே. (௩0)

சாமாணியாகண்டிதைக் கிலக்கியம். கவிக்கூற்று.

சேர்த்திடு கொங்கை யுதயத்துன் மார்பிற் றெரியுதடா
பார்த்திட வேடிக்கை யாயெனக் கீந்த பணந்தவிரப்
பூர்த்தி யுடன்பணி யொன்றரு ளென்றொரு பூவையன்ப
னோர்த்திரு வாழி பறித்தாள் சுகவனர் நீணிலத்தே. (௩க)

ரு - வது மலர் முற்றும்.

---

கலகாந்தரிதாநாயகியி னிலக்கணமும், அவள் குணங்களும்.

அன்பனைவெஞ் சினத்தாலெண் ணாதுநிந்தித் தவமானித் தகற்றிச் சென்ற
பின்புகுழைந் தாகுலிக்கும் பேதைகலகாந்தரிதை பொழுதுச் சீ??

வன்பிரமை பரிதாப மதனவே தனையழுகை வகைக்கா காச்சொல்
என்பழுத லானவைமற் றிவள்குணங்க ளாகவெடுத் திசைப்பர் மேலோர். (கஉ)

முத்தாகலகாந்தரிதைக் கிலக்கியம். கவிக்கூற்று.

சினந்தேகு நாதன்பின் சென்றுபசாரஞ் செயாடனது
மனந்தேர் சகிமுத லோர்க்குவெட் கத்தினவ் வாறுசொலாள்
கனந்தோய் சுகவனர் நாட்டிளங் கால்பொரக் கட்புனல்கொண்
டனந்தாழ் சிறுநடை மின்படுக் கைக்குளயர்குவளே. (கக)

மத்தியாகலகாந்தரிதைக்கிலக்கியம். கவிக்கூற்று.

ஊடர்சகி மார்க்குச் சொலாவிடிற் றிருவ தில்லைசொல்ல
மடநெடு வெட்கம் விடாதென்செய் வோமென வல்லவனூற்
றொடர்கல கஞ்சொல வன்னவர் பாற்சென்றுஞ் சொல்கிலளாய்
உடனெதிர் சென்னி வளைத்தாள் சுகவன ரூர்வஞ்சியே. (கச)

பிரபுடாகலகாந்தரிதைக்கிலக்கியம். கவிக்கூற்று.

வாதுக்கிங் கேன்மட்டி வாயே துவளிந்தனை வாள்விழிகா
ளேதுக்கெங் கோன்முன் சிவந்தீர்கை காள்விரைந் தேன்கலக
நீதித்தப் பாக விளைத்தீர்நன் றீனார் நினைகுவரோ
சோதிச் சுகவனர் நாட்டென் றொருகுயில் சோர்ந்தனளே. (கரு)

பரகீயாகலகாந்தரிதைக்கிலக்கியம். தலைவிசொல்லியது.

தயிரிய பந்தயம் போயிற்றன் றேவெட்கஞ் சாய்ந்ததுற்றோர்
செயிரெழ நொந்தனர் வாய்க்கால்க ளான திரைநதிகள்
உயிரினு மன்பனைப் போபோவென் றேன்சினந் துள்ளதன்றோ
பயில்விதி யின்பயன் யார்க்குஞ் சுகவனர் பாரிடத்தே. (கசா)

சாமானியாகலகாந்தரிதைக்கிலக்கியம். தலைவி சொல்லியது.

உயர்பொற் குவிபல தந்துஞ் சுகவன ரூரிலென்பாற்
றயவுற்றுச் சம்பள மில்லாமற் சேவகத் தன்மைசெய்த
நயசித் தசன்பிழை யொன்றேன் பொறுதின்று நான்சினந்தேன்
வயதுச் சிறிக்கிகட் கையோ பிடரின் மதியுண்மையே. (கஎ)

கா - வது பலர் மூற்றும்.

அபிசாரிகாநாயகியினிலக்கணமும், அவள் குணங்களும்.

தனேந்தலை னனுசரிக்கத் தானவனை யனுசரிக்கத் தகுந்த செய்வாள்
நினேந்தவபி சாரிகையந் நேரங்கட் கேற்றவணி நிறைத்தல் சங்கை
கனத்தமதி வலிகபட மரியவினை முயற்சியைந்தக் கன்னி பண்பாம்
அனத்தைநிகர் சுவீயைபர கீயையபி சாரிகைகட் கற்ற மொன்றே. (சச)

முத்தாபி சாரிகைக்கிலக்கியம். தலைவிக்குச் சகிசொல்லியது.

மேக கணிதன் பயண நிமித்தம் விளக்கமின்றாந்
தோகை யிருடுறந் தாள்சுவர்க் கோழி சுபமொலித்த
நாக ரிகநிகுஞ் சஞ்செலற் கீது நலசமயம்
வாகர் சுகவனர் வெற்பணங் கேயெழு வாய்மகிழ்ந்தே. (சரு)

மத்தியாபிசாரிகைக் கிலக்கியம். தலைவன் றலைவியொடு சொல்லியது.

நாக மிதித்து வருவாயென் பொற்புய நண்ணவெவ்வாய்
மேக விடிக்குமங் கஞ்சாயிங் கென்சொல் வெறுத்துமுக
கோகன கத்தைத் திருப்புவை யென்செய் குவதிதற்கு
மாகர் துதிக்குஞ் சுகவன நாதர் வரைமயிலே. (சகூ)

பிரபுடாபிசாரிகைக்கிலக்கியம். கவிக்கூற்று.

தனபார நின்னிடை தாங்கா திருளிற் றளிரடியால்
அனமேயெவ் வாறுசெல் வாயென்ற பாங்கியை யாயிழைபார்த்
தெனதா மனோரத முங்காம பாகனு மிங்கிருக்கப்
பினரேது தாழ்வு சுகவனர் நாட்டெனப் பேசினளே. (சஎ)

பரகீயாபிசாரிகைக்கிலக்கியம். கவிக்கூற்று.

இரவே பகல்புய லேகதிர் வல்லிரு ளேயொளிவெங்
கரவா கியவழி யேமார்க்கங் காடுக ளேபடுக்கை
தரநீல மெத்தை யுடைமுந்தி யேயெனத் தான்றிரிவள்
விரகா னலத்தி னொருத்தி சுகவனர் வெற்பிடத்தே. (சஅ)

சாமானியாபிசாரிகைக்கிலக்கியம். கவிக்கூற்று.

பரிபுர மாட வளைகள்பண் பாடப் பணைத்தமுலை
சரிசரி யென்று குலுங்கவுல் லாசத் தனிநடைபெற்
றரியபொன் னசை பிடித்துந்த நண்ப னுறையுள்வந்தாள்
அரிய சுகவனர் வெற்பி லொருத்தி யனகிகர்த்தே. (சகூ)

சந்திரிகாபிசாரிகைக்கிலக்கியம். கவிக்கூற்று.

கலைமதி தோன்றிய போதினிற் றானுங் கலைமதிபெற்
றிலைதிகழ் பூணின ளன்ப னிருக்கு மிடங்குறித்து
மலைமுலை யேந்தி நெடுமா லெனும்படி வந்தனளால்
அலைநதி சூழ்ந்த சுகவன நாத ரணிவெற்பினே. (௫௦)

திவாபிசாரிகைக்கிலக்கியம். கவிக்கூற்று.

பரிபர சன்சொற் படிக்கே விழாவணி பார்த்துவர
விதிமுறை யாருஞ் செலும்போது தானும் விரைந்துடன்போ
யதிக வலுவ லிருப்பது போற்பின்னின் றடிமரோர்
மதிமுக மானும்பு மானுஞ் சுகவனர் மண்டலத்தே. (௫௧)

நாயகிகளின் விரிதொகை.

முதல்வகுத்த நாயகிகள் பதினறுவ ருந்திறத்தான் முறையே யித்த
விதமடுத்த வெண்மர்களாய் விளங்குவரவ் வாறுதொகை விரிக்குங் காலை
இதமிகுத்த நூற்றிருபத் தெண்மருத்த மாதிகுண வியையா லன் னோர்
உததிசுற்று முலகின்முன் னூற் றெண்பத்து நால்வர்களா யோங்கு வாரே. (௫௨)

இதுவுமது

இத்தகைய ரினந்திவ்வி யாதியே தத்தாலா யிரத்து நூற்றைம்
பத்திருவ ராஞ்சாதி பேதத்தாற் கணக்கிடிற்பற் பலராய் நிற்பர்
அத்தகைய சுவாதீன பதிகாதி பேதமுத்தைக் கமையா வேனும்
உத்தமமுன் னூலுளவென் றுணர்த்துமென்பர் சிலரதுகொண் டுரைத்தா மன்றே.

அ - வது மலர்முற்றும்.

---

இன்னுஞ் சில நாயகிகள் வருமாறு.

இன்னவித நாயகிக ளெவரினுஞ்சம் பந்த மொன்று மிலரா யின்னும்
பன்னரிய பிரவச்சற் பதிகையென்றுஞ் சமாகச்சற் பதிகை யென்றும்
வன்னமுலை நாயகிகண் மற்றிருவ ருளரென்பர் வடநூல் வல்லோர்
அன்னவர்த மிலக்கணமு மமைகுணமு மினிவிவரித் தறைகு மன்றோ. (௫௩)

பிரவச்சற்பதிகாநாயகியினிலக்கணமும், அவள் குணங்களும்.

அக்கணத்தி லூர்ப்பயண மதுசெயநிச் சயித்தபதி யணங்கே நீங்காப்
பக்கமுற்ற பிரவச்சற் பதிகைமனத் துயர்மருண்ட பார்வைதாபம்
மிக்கடுத்த மூர்ச்சைபெரு மூச்சுமிட றிறங்கியசொல் வெள்ளம் போலும்
மைக்கயற்கண் ணீர்பயணத் தடைக்குறியின் னனவவள்பால்வருபண்பாமே (௫௪)

முக்தாபிரவச்சற்பதிகைக் கிலக்கியம். கவிக்கூற்று.

தலைவன் பயணஞ் சொலவுட னேயுட் டளர்கினளாய்
அலைமென் கொடிமுகம் பாதி வளைக்க வதுதெரிந்து
நிலையங் கவன்பிரி யாதச் சுகவனர் நீள்வரைமின்
முலையொன் றிடக்குயில் போற்சகி நாவின் முழங்கினளே. (௫௬)

மத்தியாபிரவச்சற்பதிகைக் கிலக்கியம். கவிக்கூற்று.

அயல்போ வதனைச் சுகவனர் வெற்ப னடுத்துணர்த்தக்
கயலேர் விழிப்புனல் காட்டா டைச்சொற் களைப்புகலான்
இயல்பா றுயிர்ப்புங்கொ ளாடன் றலையொழுத் தீதெனுமச்
செயல்போல நெற்றியைத் தொட்டா ளடிக்கடிச் சேயிழையே. (௫௭)

பிரபுடாபிரவசசற்பதிகைக்கிலக்கியம். கவிக்கூற்று.

பயணசித் தத்தையன் பன்சொல வெள்ளிலை பாகுநல்கித்
தயவிருக் கட்டுமுற் றும்போய் வருக தடம்புயவென்
இயல்சுபச் செய்தி யினிக்கேட்பை யிவ்வள வேயெனநன்
னயனுறத் தானறி வித்தாள் சுகவனர் நாட்டணங்கே. (௫௮)

பரகீயாபிரவச்சற்பதிகைக் கிலக்கியம். தலைவி தலைவனோடு சொல்லியது.

மாமணக் கேள்வற் றுரும்பாக்கி னேனத்தை மாமனுக்கு
நாமமிட் டேனெறி கெட்டே னுனைநம்பி நான்பயணம்
நீமதித் தாய்விடு மாவூழ் சுகவனர் நீள்வரைபோய்
காமவெப் பூடு விழுறகு மிந்தக் கசட்டுடற்கே. (௫௯)

சாமானியாபிரவச்சற்பதிகைக் கிலக்கியம். கவிக்கூற்று.

அகல்வேனென் றன்பன் சொலநாத வென்மெய் யதன்முனெய்த்து
மிகவே வளைகை நழுவின பார்நின் விரலணியும்
புகலா மிதிலென் றவன்மோ திரத்தையப் போதுமெத்திக்
கககேரு நோக்கி சுகவனர் வெற்பிற் கவர்ந்தனளே. (௬௦)

௯ - வது மலர் முற்றும்.

---

சமாகச்சற்பதிகாநாயகியி னிலக்கணமும், அவள் குணங்களும்.

பதிமறுதே சத்திருந்து வரக்கண்டாள் சமாகச்சற் பதிகை யாமத்
ததியெழுபே ருவகைபுள கதிசயநோக் கொடுவிரக சாந்தி மூரல்
அதிவிதமா முன்னுரைபா ராட்டன்முக மலர்ச்சியொன் று மறிவு ருமை
எதிர்தருமா னந்தவிழிப் புனல்குறிப்பு முடிதன்முத லிவள்பண் பாமே. (௬௧)

முத்தாசமாகச்சற்பநிகைக் கிலக்கியம். கலிக்கூற்று.

இத்தனை நாட்சென்றும் வாராத தென்னின்ன மென்றிரங்கும்
அத்தகி யன்பன் புகழ்மீலை வோர்வை யடியலம்புஞ்
சுத்தநன் னீரொனத் தகுந நகைவெண் கொரிவர்சசித்
துத்தமி சேக்கை சுகவனர் வெற்பிடத் துற்றனளே. (௬௨)

மத்தியாசமாகச்சற்பநிகைக் கிலக்கியம். கலிக்கூற்று.

தூரத் திருந்து பதிவரக் கண்டன்பு தாண்டவன்மிச்
சேரத் துணிவளிற் கேகத் துடிப்ப டிருந்திபன்கி
நேரொத்த தாலவை யத்தெரி யாது நிறம்புனைசிந்
காரப்பொற் பாவை நிகர்த்தாள் சுகவனர் காவமின்னே. (௬௩)

பிரபுடாசமாகச் சற்பநிகைக்கிலக்கியம். விருத்தவிடை.

தனமிசை பொற்புங் கனின்மரு வேறைக்கமுஞ் சாயமிதழ்
துனநகை யும்பெற நேர்பதி தந்ததென் சொல்லதுகேள்
அனநடை கிள்ளை மொழியம் புயமதிக் கானமென்மை
இனிமை மணந்தண் சுகவனர் வெற்பிறை யீந்தனனே. (௬௪)

பரகீயாசமாகச சற்பநிகைக்கிலக்கியம். கலிக்கூற்று.

வருதலை வன்றெரு வூடேகத் தன்மனை வாய்க்கதவின்
அருகினில் வந்தொஞ் சரித்தங்கு ளார்சொற்கா டாதசொல்லி
வெருவற நோக்கி விரசக் கனவினை வோர்வையெனும்
ஒருகட லாலவித் திட்டாள் சுகவன ரூர்வஞ்சியே. (௬௫)

சாமானியாசமாகசசற்பநிகைக்கிலக்கியம். கலிக்கூற்று.

வந்திடு நேய னெதிர்போய் மெய்ப்போற்கண் மழைபொழியத்
தந்திர மாயழைத் துள்ளாக்கி மெத்தை தனிலிருத்திப்
புந்தி மகிழும் படிசெய்து மெள்ளப் பொருண்முடிப்பைச்
சிந்தி விடாதுகைக் கொண்டாள் சுகவனர் சேலமின்னே. (௬௬)

௧௦-வது மலர் முற்றும்.

---

சகிதூதிகளினிலக்கணமும், அவர் குணங்களும்.

அருமையொடு மிகநேசித் தகமகிழும் படியேநா யகியின் பக்கம்
மருவியுறை பவள்சகியாம் வனைதலுபா லம்பனம்பின் வழாத சிட்சை
வெருவில்பரி காசமவள் குணந்தூது செலத்தகுந்த மின்னுந் தூதி.
பருவவிர கந்தெரியப் படுத்தலுஞ்சேர்க் குதலுமிவள் பண்பா மன்றே. (௬௭)

அலங்கரித்தலுக்கிலக்கியம். கவிக்கூற்று.

வகைவகை கோல மூலேக்கிடும் போது மணாளன்விரற்
றகையுயிர் பாய்வன போலவன் கையைச் சகியெழுத
நகைகொ டதட்டிச் சுகவனர் வெற்பினன் னங்கைகண்ணின்
முகைவிரி மாலிகை யாலடித் தாளொரு மோகினியே. (௬௮)

உபாலம்பனத்துக்கிலக்கியம். தலைவியைச் சகிவினவுதல்.

பருவ மழையி னுலகந் தழைக்கும் படிவருங்கார்
பொருவ வுனதுளம் பூரிக்கச் செய்யும் புமானிடத்தில்
கருணையி லாதிருக் கின்றனை யக்குக் கரணமென்னே
வருணா குடில சுகவன நாதர் வரையணங்கே. (௬௯)

சிட்டைக்கிலக்கியம். தலைவிக்குச்சகிசொல்லியது.

சுகமண வாளனைத் தேடிப் பொழிற்புதர் துன்னுவையேல்
பகலளி கோடிபண் பாடிச் சுழலும் படரிரவில்
திகழும நேகச கோரத் திரளினை தேர்ந்துசெல்வாய்
மகபதி போற்றுஞ் சுகவன நாதர் வரைமயிலே. (௭௦)

சகிகள்நாயகியைப்பரிகசித்தலுக் கிலக்கியம். கவிக்கூற்று.

பலவு மெழுதி யுளசித் திரப்பொற் படத்தொருபால்
குலவு சுகவன நாத ருருவுங் குறித்தமைத்து
மெலவிவர் யாரென் றிகுளையர் கேட்கமுன் வெள்கிநகைத்
தலர்விழி யால்விடை தந்தாண் மகிழ்ந்துசொர் ணம்பிகையே. (௭௧)

நாயகிநாயகனைப்பரிகசித்தலுக்கிலக்கியம். கவிக்கூற்று.

சூதாட லிற்றன் பணிகோன் மறைக்கச் சுகவனநன்
னுதா வெடுத்த தருள்சத் தியத்துக்கு நானுவையோ
நீதா னனல்விழி கொண்டாய்வெம் பாம்பொடு நீர்தரித்தாய்
ஆதார மேயவை யென்றுள் சிரித்துச்சொர் ணம்பிகையே. (௭௨)

விரகந்தெரிவித்தலுக்கிலக்கியம். நாயகனுக்குத் தூதி சொல்லியது.

பங்கய னெங்கு மிலங்க வருந்திப் படைத்தகுல
நங்கை யெனும்பெருந் தீபங் கடைத்திசை நண்ணியதால்
சங்கை தவிர்ந்தெழில் பொங்கநின் னேய தயிலநிறை
வெங்கய துங்க னிறைஞ்சுஞ் சுகவனர் வெற்பரசே. (௭௩)

சேர்த்தலுக்கிலக்கியம். நாயகனுக்குத்தூதிசொல்லியது.

சரசந் தெரிபவர் மெச்சு மிராஜவந் ததுசுரும்பின்
திரளென் றிடவிரு ளெங்கும் வளைந்தது தேர்ந்திளைஞர்
விரகங் கொளக்கணை விற்பூட்டி னன்மதவேள்விரைந்து
பரவுஞ் சுகவனர் வெற்போய்செய் வாய்செய் பணிவகளையே. (எச)

கக-வது மலர் முற்றும்.

இத்தனைமலர்களாலிக்குச்சம் முடிவுபெற்றதெனல்.

எட்டுவித நாயகிக ளிலக்கணமும் பின்னிருவ ரியல்புமடைத்து
மட்டுவிரி மலராக மற்றமைந்த பலவுமொரு மலரேயாகக்
கட்டுளவப் பதிநொருபூக் களிவிரண்டாங் குச்சமதைக் கவினச்செய்தாம்
நெட்டுவரிப் புவிமதிக்க நிறைமூன்றாங் குச்சமினி நிகழ்த்து வோமால். (எரு)

இரண்டாவது குச்சம் முற்றும்.

ஆகச்செய்யுள் கஅஉ.

---

உ

சிவமயம்.

## மூன்றாவது குச்சம்.

# நாயகர்களிலக்கணாரம்பம்.

வளமைதிகழ் சேலநகர் வளர்சுக வனேசர்திரு மலர்த்தாள் போற்றி
இளமுறவ னுயகிக ளிலக்கணமு முட்பிரிவி னியல்பு மேனை
உளபலவு மிரண்டுகுச்சத் துணர்த்திவந்தா மினியவர்கட் குரிய ராய
தளவவணி நாயகர்பே தமுமிலக்க ணமும்பிறவுந் தகவிற் சொல்வாம். (க)

நாயகர்பேதமும் பதியினிலக்கணமும் அப்பதியின் பேதமும்.

நாயகர்கள் பதியுமுப பதியுநல்வை சிகனுமென நவிலு மூவ
ராயமைவ ரங்கவர்க்கு ளரியபதி விதிமுறைவேட் டவனு மன்னோன்
ஏயவனு கூலனென்றுந் தட்சிணனென் றுந்திருட்ட னென்று மேனைத்
தூயசட னென்றுமொரு நான்குவகைப் படுமென்பர் தொன்னூல் வல்லோர். (உ)

பதிக்கிலக்கியம். கவிக்கூற்று.

அதிவே ணிலினுஞ்சொர் ணும்பிகை மேனிகன் றுதுவப்ப
மதியே யமுத கதிர்வீ சுனது மணிப்படத்தாற்
புதிதா நிழலினை வாசுகி யேகுடை போற்புரிவான்
நதியே புனறுளி யென்னுஞ் சுகவன நாயகனே. (ங)

அனுகூலதக்ஷிண நாயகர்களின் இலக்கணம.

கலகமதர் விழிப்பரமங் கையர் கடமைச் சொப்பனதனுங் கருதா தென்றுங்
குலமனைவி மீதிலன்பு கூர்ந்திருக்குங் காந்தனனு கூல னாகும்
பலதருண நாயகிகள் பாலுமொன்று போற்பிரியம் படைத்து நிற்போன்
உலகுபுகழ் தட்சிணனென் றுரைப்பர்மற்றோ ரியல்புமெடுத் துணர்த்துவாமே. (௪)

அனுகூலநாயகனுக்கிலக்கியம். தலைவன் சொல்லியது.

தரையே யிருந்து வடைபானு வேதண் சகியினொளிர்
விரைபானை யேகுன் றுதிதென்ற லேயுடல் வேர்வைதணி
யுரைசோலை யேயணித் தாவாய் சுகவன ரூர்முலைமால்
வரைநா யகியெழுந் தாண்மலர் கொய்து வருவதற்கே. (௫)

தக்ஷிணநாயகனுக்கிலக்கியம். கவிக்கூற்று.

சித்தச னுந்தொட ரித்தனை மாதர் திரளிலெவ்வா
றொத்த சமரச பார்வையைப் பேணினன் றொருபுருடன்
முத்த நகையெழு மெய்புள கெய்த முறைமையினன்பாய்
அத்தர் சுகவனர் வெற்பிற்கண் மூடி யமர்ந்தனனே. (௬)

திருட்டசடநாயகர்களினிலக்கணம்.

தவறியற்றி யிருந்துமதிற் சங்கையின்றி நாயகிமுன் சார்ந்து பின்னும்
அவள்வெறுக்கக் கண்டுமக லாதுரிமை பாராட்டி யன்பு கூர்வோன்
உவகைமிக்க திருட்டனாடர்ந் தோங்குமிரு களபமுலை யுடையோர் தம்பாற்
கவடவித்தை சாதிக்குங் கனசமர்த்தன் சடனெனலாங் கருதுங் காலே. (௭)

திருட்டநாயகனுக்கிலக்கியம். தலைவி சகியொடு சொல்லியது.

மணிவடத் தாலடித் தோட்டிவிட் டேனெச மானையவன்
கணிசமுற் றுலெனப் பார்த்திருந் தான்புறங் காப்பினைநான்
தணிவறத் தேடிநின் றேன்றானுந் தேடவந் தான்பிடித்தேன்
நணிபிணைக் குட்படுத் தானென் சுகவனர் நாட்டணங்கே. (௮)

சடநாயகனுக்கிலக்கியம். கவிக்கூற்று.

செழுமலர் சூட்டிச் சரம்பூட்டி நானத் திலகமிட்டு
வழுவற நம்பிய மாதரை ஞானை வளஞ்செயல்போன்
முழுநிருவாணத் தொடுதுள்ளச் சேலை முடியைமெல்ல
விழுமிய கேள்வ னவிழ்த்தான் சுகவனர் வெற்பிடத்தே. (௯)

சடபேதங்களுமவற்றிலக்கணமும்.

வருசடங்கனி லடங்கினராய் மானியென்றுஞ் சதுரனென்றும் வழங்கா நின்றோர்
இருவருள ரவர்கடமின் மானிமன வூரோசமுள்ளோ னென்ன லாகும்
தருவவுரை களினானுங் காட்டுதொழில் களினானுங் கடல்சூழ் ஞாலத்
தருமைபெறு வியங்கியமுள் ளவன்சதுர னெனவுணர்த்து மாதி நூலே. (௧௦)

மானிக்கிலக்கியம். கவிக்கூற்று.

உனதுள மோவச் சிரஞ்சொற் களோவமு தொக்குமெனச்
சொனவுட னோர்சின் றிடாதயல் போய்ப்பின்னுந் துன்னிமுக
வனமலர் கோட்டிச் சுகவனர் வெற்பவன் வைகலுந்தன்
கனவிச னந்தெரி வித்தெனப் பார்த்தனள் காரிகையே. (௧௧)

வார்த்தையால்வியங்கியத்திற்கிலக்கியம். தலைவன்றலைவியை வினவுதல்.

நமனு நடுங்கு நடுநிசி யூடந் நதிக்கரையில்
கமழ்தரு சோலைசெல் கின்ற யுனது களத்தெனசொல்
அமல சுகவனர் வெற்பி னுனக்கய லானலறேன்
சமர்விழி யாபொன் னினுந்துணை யாரத் தனிவழிக்கே. (௧௨)

தொழிலால் வியங்கியத்திற்கிலக்கியம். கவிக்கூற்று.

ஒயிலாக வேயெனு மிச்சம்ப ழத்தைக்கைக் குள்ளமைத்துப்
பயிலா னுயர்ந்த பதிவிந்தை காட்டிடப் பார்த்துமணி
வெயிலார் மனைநிலைச் சித்திரச் சூரிய விம்பமிசை
மயிலோர்கத் தூரிப்பொட் டிட்டாள் சுகவனர் மாநிலத்தே. (௧௩)

க-வது பலர் முற்றும்.

உபபதிவைசிக நாயகர்களின் இலக்கணம்.

வரம்புகெட மறைந்தொழுக வல்லவனே யுபபதியாம் வகுத்துப் போந்த
உரங்கொளனு கூலாதி பேதமிவ னுக்குமடுத் துள்ள வேனும்
தரம்பரவு சடத்துவமே முக்கியமாம் பரத்தையர்தஞ் சரச போகம்
நிரம்பவிழை கின்றசுகி தானேவை சிகனெனலா நினைக்குங் காலே. (௧௪)

உபபதிக்கிலக்கியம். தலைவிசொல்லியது.

அதிபபத் தாலிமை யாதுற்றுப் பார்க்கவொண் ணாதுவளை
இதிறெலிப் பாமென்ப தாலே முயங்கற் கிடமுமில்லை
ததியிதழ்ப் பற்குறி புட்சூரல் காணத் தகாதெனிலிப்
பதியுடற் றேய்வொரு தோய்வோ சுகவனர் பட்டினத்தே. (௧௫)

உ-வது பலர் முற்றும்.

வைசிகனுக்கிலக்கியம். தலைவன்பாங்கனொடு சொல்லியது.

தண்டை புலம்ப வளையம்பக் கும்ப தனந்ததும்பக்
கொண்டை குலுங்கக் குயிலிசை காட்டிக் குலாவுமிவள்
அண்டை யிணங்குவ தேயின்பம் பொன்செல வாயினுமென்
புண்டைநஞ் சுண்ட சுகவன நாதர் பதிநண்பனே. (கசா)

வைசிகநாயகபேதமும் உத்தமவைசிகனிலக்கணமும்.

அத்தகுவை சிகனுத்த மாதிகுணத் தால்வகைமூன் றாகத் தோன்றும்
முத்தநகை நாயகிமற் றெத்தனைகோ பங்கொளினு முகங்கோ ணமன்
மெத்தவுப சாரமவட் கொத்தபடி யடுத்தடுத்து விரும்பிச் செய்வோன்
உத்தமவை சிகனென் றுணர்த்துவர்முன் னூல்களினூ லுயர்ந்த ளோரே. (கஎ)

உத்தமவைசிகனுக்கிலக்கியம். கவிக்கூற்று.

விரிகோபத் தாற்பொது மான்கண் சிவந்த விதந்தெரிந்தும்
தெரியானெனத் தேபுறம் பாராது முன்சொற் சிரிப்பகற்றிப்
பரிவாமெத் தைக்குட் குனிந்துற் றிலைமடிப் பான்பதிபின்
சரியாகத் தாமந் தொடுப்பான் சுகவனர் சார்பிடத்தே. (கஅ)

மத்திமவைசிகனிலக்கணம்.

கருவபரி மளகளப கனதனநா யகிவெகுண்ட காலந் தன்னில்
அருகிலுள தன்சினமு மன்புந்தோன் றாதடக்கி யவடன் பண்பாற்
பருவமன நிலையறிய லாமெனச்சும் மாவிருக்கும் பதியே யின்பம்
மருவுமதி விதசரச மத்திமவை சிகனென்று வகுக்க லாமே. (கக)

மத்திமவைசிகனுக்கிலக்கியம். கவிக்கூற்று.

சரச மகற்றி விழிசிவப் பேற்றித் தலைவிதனக்
திரவெழு தத்தகுங் கோலம் பலவுமிட் டேர்புனைந்து
வரவிடன் மெச்சி யறிவோ மிவடன் மனதெனப்பூண்
உரக் சுகவனர் நாட்டவள் வீட்டின்முன் னுற்றனனே. (உ0)

அதமவைசிகனிலக்கணம்.

கருணைபயம் வெருளிவெட்க மிவைமுழுதுந் தான்விடுத்துக் கனிவு கூர
முருகுவிரி மலரளக முகிழ்முறுவற் களபவிள முலைநல் லாரை
மருவுபொழு திதுசெயலா மிதுசெயலா தெனுமம்மனவி சாரம்
ஒருசிறிது மின்றியிருப் பவனதம வைசிகனென் றுரைக்க லாமே. (உக)

அதமவைசிகனுக்கிலக்கியம். தலைவி சொல்லியது.

நீதி கருணைவெட் கங்கோப நம்பிக்கை நீங்கியிந்த
மேதினி வேசையர் மென்மை யுடம்பை மிகவருத்தும்
வாதினை யறிவ னென்னதந் தாலு மனஞ்சகியேன்
போதினை யொக்குஞ் சுகவன நாதர் பொருப்பிடத்தே. (௨௨)

௩-வது மலர் மருதம்.

புரோடதநாயகனிலக்கணம்.

வேறு.

தளர்ந்துபோய்த் தேசபஞ் சாரத் தற்புகழ்
விளைக்குநா யகிதனை மெய்ம்மை பொய்ம்மையங்
குளங்கிலே யகமகிழ்ந் தந்த கின்றவன்
அளர்ந்தகூர் புரோடித னாதை மென்பரே. (௨௩)

புரோடதநாயகபேதங்கள்.

புரோடித பேதமாம் நம்பு கன்றிடில்
புரோடித பதியெனப் புன்மை றிச்செலும்
புரோடித வுபபதி யெனப்பொ லம்புனை
புரோடித வைசிக னெனப்பொ ருந்துமே. (௨௪)

புரோடிதபதிக்கிலக்கியம். தலைவன்சொல்லியது.

கடிதூட வொளி புலையின நீர்பொழ் கவான்கதவே
படிதுமுன் மாலை புகமதி சொற்சுதை பார்வைமலர்
வடிவினை தோன்ற வளர்பூங் கொடியை மகிழ்ந்தணையா
விடினக லாது சுகவன நாட்டென் விரகவெப்பே. (௨௫)

புரோடிதவுபபதிக்கிலக்கியம். தலைவன் சொல்லியது.

புனலாடச் செல்லும் பொழுதிற் றொடர்ந்துபின் போனவென்னை
முனமேயத் தோடுடல் பூரித்துப் பார்த்து முறுவலித்துத்
தனதாகக் கொண்டுகொண் டாண்டாளை யீண்டுத் தழுவவினை
மனதாவற் கென்னினிச் செய்வேன் சுகவனர் மாநிலத்தே. (௨௬)

புரோடிதவைசிகனுக்கிலக்கியம். தலைவன் சொல்லியது,

மெலநடை தோன்றவெண் மெட்டி கலீரென மேனிமின்னப்
பலநிதி மான்கள்கட் பார்வை வலைக்குட் படத்தெருவூ
டுலவுமவ் வேசை தனைநான் பிரிந்திட வுட்படைக்க
மலரய னுக்கென்ன செய்தேன் சுகவனர் மாதலத்தே. (௨௭)

அபிஞன்நாயகாபாசன்என்னும் இவர்களினிலக்கணம்.

ஆசறு மபிஞனு மன்றி நாயகா
பாசனு மெனவிரு பதிகள் கற்றுணர்
தேசின னபிஞனாந் தெளிவி லாதவன்
ஏசிய நாயகா பாச னென்பவே. (உ௯)

அபிஞனுக்கிலக்கியம். தலைவி சகியொடு சொல்லியது.

எனதுளத் தாடிருக் கின்றவ னென்பதற் கேற்கநின்னை
வனவனைத் தாந்தெரிந் தவ்வவ் வகைமன் மதனுமெச்சத்
தினநடத் துந்தொழி லாற்சகி யேயிச் சிநேகபதி
தனதுபுத் திக்கிணை யுண்டோ சுகவனர் சார்பிடத்தே. (உ௬)

நாயகாபாசனுக்கிலக்கியம். தலைவிசகியொடுசொல்லியது.

ஆரும்பு காமலர்க் கான்றனிச் சென்றரு காயவற்குக்
கோருங் குறிப்பைக்கண் ணாற்காட்டிப் பாகிலை கொள்வதுபோல்
நேருந் தனந்தெரி யத்துகி னீத்துமென் னெஞ்சறியான்
தேரும் படிக்கென்ன செய்வேன் சுகவனர் சேலமின்னே. (௩0)

பரிகாசநாயகனிலக்கணம்.

உளன்பரி காசக னென்ன வோர்பதி
களங்கறு வெவ்விலக் கணனன் றானெனில்
இளங்கொடி யனையவ ரிதயம் வெள்குற
வளங்கெழு பகடிசெய் வகையில் வல்லனே. (௩௧)

பரிகாசகனுக்கிலக்கியம். கவிக்கூற்று.

விழியிற் சகிதனை யேவுகின் றுயன்றி மென்மதுர
மொழியுத் தரவிலை யென்னச் சுகவனர் மூரல்கொள
வழிபொற் கதிர்மதி மாமுகங் கோட்டினள் வாணகைதோய்
எழிலிற் பொலிகொவ்வைச் செவ்வாய்ச்சொ ராறும்பிகை யென்னுமின்னே.

திவ்வியாதிநாயகபேதம்.

திவ்விய வியன்முதற் றிகழ்மும் பேதமும்
அவ்வினை நாயகி கட்க டுத்தபோல்
இவ்வித நாயகர் கட்கு மேற்குமென்
றெவ்விய வடகலை யுணர்ந்து மென்பவே. (௩௩)

திவ்வியநாயகனுக்கிலக்கியம். தலைவி சொல்லியது.

திங்கள் புயங்க மிரண்டு மிணங்கச் சிரந்தனைமந்து
வெங்கன லேந்திப் புலியுடுத் தால மிடற்றடக்கி
அங்கச னைச்செயித் தோராஞ் சுகவன ராமொருவர்
தங்க விடைப்பொலிந் துற்றரென் னெஞ்சந் தொடர்ந்ததுவே. (௧௪)

அதிவ்வியநாயகனுக்கிலக்கியம். தலைவிசொல்லியது.

வடங்களைச் சீறி மணிக்கச்சைச் செற்றி வளங்கலந்து
திடம்படைத் தோங்கிய வெண்முலை யானையைச் சீக்கிரத்தில்
கடம்பனைப் பெற்ற சுகவனர் வெற்பிற்கண் காட்டுகின்றேன்
தடம்புயத் தோடுறு பூட்டினல் லாண்மதக் தாழ்வறிதே.

திவ்வியாதிவ்வியநாயகனுக்கிலக்கியம். தலைவி மனத்தொடு சொல்லியது.

வின்முனை ராம னருச்சுன னாதியர் மேன்மையெலாம்
பன்முறை கேட்டிருக் கின்றேனன் னோர்பற் பலருமிவன்
முன்மரு விற்பகன் மின்மினி போல்வர் முகக்குறிப்பில்
நன்மன மேயிச் சுகவனர் வெற்பன்றன் னாட்டெய்வமே. (௧௫)

௪-வது மலர் முற்றும்.

---

நருமசிவர்களின் பேதம்.

## வேறு.

செப்பிவந்த பதிகளிடத் தினிநரும சசிவரெனச் சிலருண் டன்னோர்
ஒப்பின்று கிரீடைகளுக் குதவிசெய்வோ ராம்விவரித் துணர்த்துங் காலை
தப்பிகந்த பீடமர்த்த கனும்விடனுஞ் சேடகனுந் தனைநே ரில்லாத்
துப்பிசைந்த விதூடகனு மென்றொருநால் வகையினராய்த் தோற்று வாரால். (௧௭)

நருமசிவர்களினிலக்கணம்.

வருபீட மர்த்தகனின் மொழிகொடுநா யகிசினத்தை மறுப்போ னின்பம்
தருகாம நூலில்வல்லோன் விடன்றலைவி தலைவர்களைச் சமய நோக்கி
ஒருசூழல் சேர்ப்பவன்சே டகனங்க விகாரமன்ன வுரைமற் றுலும்
தெருளாய பரிகாசஞ் செய்கிற்போன் விதூடகனுந் தெரியுங் காலே. (௧௮)

பீடமர்த்தகனுக்கிலக்கியம். தலைவியொடு சொல்லியது.

அடமன தூடிருந் தாலுஞ் சரிசொல்லி னுமெளிமை
தொடர்கினை வுன்னை விடாதுடல் வாசிக்குந் தோய்சினத்தன்

விடவிழி சேப்பப்பெற் றோன்பெற்ற தேபலன் மேலுமவன்
றிடவிர தத்தைவந் திக்கேன் சுகவனர் சேலமின்னே. (௩௯)

விடனுக்கிலக்கியம். தலைவிக்குச்சொல்லியது.

மதிமலை மாருதம் வந்தவன் போதை மலிந்தவிவை
பதிகுழ தேச்சுரஞ் சர்வேச் சுரம்பிற் பயிரவமென்
றெதிரறு மாத்திரை யாமத பண்டிக னெய்தியுகின்
கொதிசின போயுள தாமோ சுகவனர் குன்றனங்கே. (௪௰)

சேடகனுக்கிலக்கியம். கலிக்கூற்று.

பருவ முகிலங்க தோவரு கின்றது பார்த்துலக்கும்
கருவ மயிலுமி தோவந்த திங்கினிக் காரியமென்
மருவளர் காவி னமக்கென்று சீர்செறி வான்றனைப்போல்
ஒருவன் மெலமெலிச் சென்றன் சுகவன ருரிடத்தே. (௪௧)

விதூடகனுக்கிலக்கியம். கலிக்கூற்று.

நாயகி மேன்முந்தி நாயகன் பற்றி நயக்கிழுத்துப்
பாயணை நண்ணி முலைக்கச் சவிழ்க்கும் பருவமதில்
போயயல் வைக லறிசேவல் சாதகம் போலொலித்தான்
நேய னொருவன் சுகவனர் வெற்பனை னின்றஞ்சமே. (௪௨)

௩ - வது மலர் முற்றும்.

---

சாத்துவிகோதயவிலக்கணம்.

அன்னியரின் பத்தையிச்சிப் பதனுற்றே கத்தினிலுண் டாகுந் தோற்றம்
தன்னிகருஞ் சாத்துவிகோ தயமாகுதான் சிறவேர்வை தம்ப மேன்மேல்
மன்னியெழும் புளகஞ்சொற் றடுமாற்ற நடுக்கமொளி மழுங்கல் பாட்பம்
துன்னிவரும் பெருமயக்க மென்றிருநால் வகைத்துமுன்னூற் றுணிவி தாமே.

சாத்துவிகோதயத்துக்கிலக்கியம். சகியெண்ணியது.

சொற்றளர் வுங்கவுள் வெண்மையுங் கொங்கைத் துணைவெயர்வும்
உற்றகண் ணீரு மதர நடுக்கு முடற்பொடிப்பும்
கற்ற நடைமந் தமுமன மூர்ச்சையுங் காணுவவிப்
பொற்றொடி பார்த்தனள் போலுஞ் சுகவனர் பொற்பினையே. (௪௩)

சிங்காரபேதமும் சம்போகசிங்காரத்தினிலக்கணமும்.

## வேறு.

கலையு ணர்த்துசிங் காரஞ்சம் போகசிங் காரம்
இலகு விப்பிர லம்பசிங் காரமென் றிரண்டாம்
பலவி தக்கல வியும்புரி பொழுதெழும் பண்பே
பலவு கற்றுசம் போகசிங் காரமா வழங்கும். (சரு)

சம்போகசிங்காரத்துக்கிலக்கியம். நாயகன் சொல்லியது.

கூர்மங் குலுங்கக் குலமலி நாகந் துவழ்ந்துலுக்கப்
பார்வின் சலித்த குதிகொண்ட வெற்பம் பரஞ்சுழன்று
கார்மஞ் சலைந்த மதிபொங்க வெங்குங் கலைமுறிந்த
சீர்மன் சுகவன ரூர்மானை நான்கொஞ்சிச் சேர்பொழுதே. (சசா)

விப்ரலம்பசிங்காரத்தினிலக்கணம்.

பிரிவு பெற்றழிக் கருத்தியன் முற்றுறப் பிழைபால்
பரிபு மப்பாரு வத்தினிற் றோன்றிய பான்மை
உரிய விப்பிர லம்பசிங் காரமென் றுரைப்பர்
அரிய பத்தெனு மவத்தையு மதனிலுண் டாமால். (சஎ)

விப்பிரலம்பசிங்காரத்துக்கிலக்கியம். கவிக்கூற்று.

படர்மழைக் காரின்கண் டம்பன் வருநவழி பார்க்கவுயிர்
மிடறடுத் தன்றவன் முற்பறந் தாயினு மேவவன்றோ
அடர்தனக் குன்றம் புயவிலைத் தோகை யருகணைந்த
மடலுடைத் தாமச் சுகவன ரூர்வஞ்சி மால்வியப்பே. (சஅ)

தசாவத்தைகளின்பெயர்.

## வேறு.

உரியவபி லாசைசிந்தை மிருதிகுண கீர்த்தனைபின் னுத்துவேகம்
சரியில்வில பனந்தணியா வுன்மத்தம் வியாதிபொல்லாச் சடதையோடு
தெரியிலய மெனுமிவையே திகழ்ந்ததசா வத்தைகளாஞ் செவ்வை யாக
வரிசைவட நூற்படியே யவற்றினிலக் கணங்களையும் வகுத்துச் சொல்வாம். (சகூ)

மேற்கூறிய தசாவத்தைகளின் இலக்கணம்.

கலவிநகை யபிலாசை யிவையிலிவை காண்பமெனுங் கருத்தே சிந்தை
குலவிமரு வியசெயலைக் குறித்திடுதன் மிருதியன்பர் குணவி சேடம்

பலவுமுறை முறையெடுத்துப் பகர்தல்குண கீர்த்தனையுட் பரிவு கூர்ந்து
விலகரிய பிறபொருள்கண் முழுமையுந்தாம் வெறுப்பதுத்து வேக மாமே. (௫0)

இதுவுமது.

காதலனைக் குறித்துவரு கற்பனைச்சொல் விலபனமுற் கண்டை யென்றோர்
பேதமதிற் படுமதுகும் மவசரத்தாற் பயனிலவாப் பேசும் வார்த்தை
ஏதமனத் துயரிலுண்டாம் பிரமைமற்றுன் மத்தமது விரண்டாய்த் தோன்றும்
வாதையுடைக் காயகவுன் மத்தமொடு வாசகவுன் மத்த மென்றே. (௫௧)

இதுவுமது.

மதனசர மடரவந்த சந்தாப மெய்யிளைப்பிவ் வகைவி யாதி
அதனமெனு மோகவிகா ரத்தையன்றி மற்றொன்று மறிகி லாத
விதமுடைய வுயிருளதோர் வெவ்வவத்தை சடதையென்பர் மேலை நூலோர்
இதமதில திலயமதற் கிலக்கணமோ டிலக்கியஞ்சொற் றிடவேண் டாவே. (௫௨)

அபிலாசைக்கிலக்கியம். நாயகன்சொல்லியது.

தாவிச் சுகவனர் வெற்பின் மடந்தை சவுந்தரிய
வாவிக்கு ளேயென் மனம்பார்வை வீழ்ந்தன மற்றவற்றில்
பாவித் தனிமனம் பாரத்தி னுழ்ந்தது பார்வைநொய்தின்
மேவிச் சுழன்று மிதந்தவந் தோவென்செய் வேனிதற்கே. (௫௩)

சிந்தைக்கிலக்கியம். நாயகன்சொல்லியது.

இந்தப் புதருற் றடிக்கடி கூவுகின் றேன்குயில்போல்
அந்தக் குமரி வசந்த பருவ மடுத்ததெனச்
சொந்தத் தொடுதன் விழித்தா மரைமலர்த் தோரணநேர்
முந்தப் புரிவள் சுகவனர் வெற்பின் முயன்றுநின்றே. (௫௪)

மிருதிக்கிலக்கியம். சகிசொல்லியது.

அருமைப் பதியைப் பிரிந்துமென் னேகண் ணருவிகொளாள்
ஒருநெட் டுயிர்ப்பும் விடாண்மெய்ப் புதுப்பொடிப் போடிருப்பள்
வெருவச் சமனைமுன் வென்ற சுகவனர் வெற்பிலன்னான்
மருவிச் சுகித்தபண் பெண்ணினள் போலுமிவ் வாணுதலே. (௫௫)

குணகீர்த்தனைக்கிலக்கியம். நாயகன்சொல்லியது.

மொய்யே றளக மடந்தைபொற் கும்ப முலைநெருடும்
கையேகை நன்னலங் காணுங்கண் ணேகண் கலந்தழுந்தும்

நோதலறக் கனவினிடை நோக்கலெழிற் சித்திரத்தி னோக்க லுண்மை
ஆதரவுற் றெதிர்நோக்க லாமவைதா முறையினென்ப ரறிந்து ளோரே. (௬௩)

சொப்பனதெரிசனத்துக்கிலக்கியம். தலைவி சகியொடுசொல்லியது.

நேற்றிரவூடு திருட னொருவனென் னேரடுத்து
மேற்றிகழ் பொற்பணி யொன்றுந் தொடாது விரைவினுள்ளாய்த்
தோற்றிக யத்தைக் கவர்ந்தேகி னானென்ன சொல்லுவன்யான்
கூற்றினை வென்ற சுகவனர் வெற்பிளங் கோகிலமே. (௬௪)

சித்திரதெரிசனத்துக்கிலக்கியம். தலைவிசகியொடுசொல்லியது.

உல்லாச மாகவென் னுள்ளுறை காளை யுருவவியல்
டெல்லா மமைந்த தெனவும் பேத மிலதெனினும்
சொல்லாடு வார்த்தை யிணைத்தாலுங் கொங்கை தொடாதுபுறம்
செல்லாதகம் மாவிச் சுகவனர் வெற்பெழிற் சித்திரமே. (௬௫)

எதார்த்தெரிசனத்துக்கிலக்கியம். தலைவிசொல்லியது.

மனமே வருந்தல் விழிகா ளிமையன்மின் மாரவினிர்
சினமேகொளேல்குளிர் திங்கா ளலர்பயிர் தேறவெழும்
கனமே யெனும்படி நான்றெரி சிக்கக் கருணையினென்
முனமே சுகவனர் வந்தா ரிகோவென்னை முற்றுறுமே. (௬௬)

இத்தனைமலர்களாலிக்குச்சம் முடிவுபெற்றதெனல்.

திரிவிதநா யகர்திறமுப் பூவாகப் பிறரியல்போர் செழும்பூவாகப்
பரிகரம சகிவர்பண்போர் பூவாக வேனையவோ ரைம்பூ வாகச்
சரிமலர்க ளாறினின்மூன் றாங்குச்சம் புனைந்தனங்கட் சுகவண் மூன்றால்
புரிவுறுசிங் காரரச மஞ்சரிமுற் றிற்றுலகம் புகழு மாதோ. (௬௭)

௬௭ - வது மலர் முற்றும்.

## மூன்றாவது குச்சம் முற்றும்.

## வாழி.

முகில்வாழி கடல்வாழி முனிவர்களும் வாழிமறை முதநூல் வாழி
அகிலாதி புவனமுழு வதும்வாழி தமிழ்வாழி யறிஞர் வாழி
சிரிகவு மலர்ச்சோலைச் சேலநகர் வாழிபெருஞ் செல்வம் வாழி
மலிக்கூர்சொ ரைப்பிகைத்தாய் வாழிசுக வனநாதர் வாழி மாதோ.

௫.

## சிங்கார ரச மஞ்சரி




ஆகச் செய்யுள் ௨௫0.

உ

குருபதம் துணை.

பழநிஸ்தலம்

முத்தமிழ்ச்சக்கரவர்த்தியாகிய

ஸ்ரீமத்.

# மு. மாம்பழக்கவிச்சிங்கநாவலரவர்கள்

இயற்றியருளிய

# பிரபந்தத்திரட்டு.

இரண்டாம்பாகம்

சத்திரவிலாசமும், தனிச்செய்யுட்கோவையும்.

இவை

மதுரை ஜில்லா பெரியகுளத்தாலூகா [illegible]கோட்டை

ஸ்ரீமத். பிச்சாண்டி ஆச்சாரியரவர்கள் குமாரர்

M. P. பழநிச்சாமியாசாரியால்

தொகுக்கப்பெற்று

மதுரை

விவேகபாநு அச்சியந்திரசாலையிற்

பதிப்பிக்கப்பெற்றன.

1908.

உ

சேலம் ஜில்லா வேளுக்குறிச்சி ஜமீந்தார்

ஸ்ரீ வேலப்ப கவுண்டரவர்கள் மீது

இயற்றிய

சந்திரவிலாசம்.

# சிறப்புப்பாயிரம்.

திரிசிரபுரம் எஸ். பி. ஜி. காலேஜ் தலைமைத் தமிழ்ப்புலவராகிய மகா-௱-ஸ்ரீ

## அ. க. அமிர்தம்பிள்ளையவர்களியற்றியவை.

### அறுசீர்க்கழி நெடிலடி ஆசிரிய விருத்தம்.

சீர்பூத்த பெருங்கோக்குட் டுவன்வளவன் செழியனிவர் செங்கோ லோச்சி
யர்பூத்த குடைகவித்த தமிழுலகிற் சேரலர்கோ னிசைநீர் நாட்டிற்
கார்பூத்த கொல்லிவரைத் தென்பாங்கர் கூவையெனுங் கனக்குன் றண்மிப்
பேர்பூத்த பொழில்வேளுக் குறிச்சியெனும் பதிவாழ்க்கைப் பீடார் செல்வன். (1)

மஞ்சையமை கைத்தலத்தான் வளமிகுவே ளாண்குலத்தான் மாண்பின் மூத்தான்
நஞ்சையபூ பதிதவத்தான் மஞ்சுதரு வெனவுதித்தா னருட் சீர்த்தான்
விஞ்சையனுக் கலைபயின்றான் வேலப்ப பூபதியை விரைப்பூந் தார்சே
ரஞ்சையமேர் தோணிவப்ப வருந்தமிழின் பாப்பதியு மாக்கி மன்னே. (2)

இறையவன்றான் முன்னன்பி னைந்திணையென் றெடுத்திசைத்த வியனூல் சொல்லுந்
தறையவன்பிற் கைகோள்க ளிரண்டினின்முந் துறுகளவிற் றணிவில் காதற் [றும்
றுறையவண்சேர் முதற்றிணையி லியற்கையமை கைக்கிளையிற் றுயர்பெண் கூற்
பிறையவண்முன் னிலையுமமைத் தகப்பொருட்கிங் கிலக்கியமாப் பிறங்குமாறே. ()

செந்தமிழு மதுசேர்பன் னிலமொழியு நவமணிபோற் செறிய வண்ண
வந்தமிழு மெனுமிசையு மடக்குமுதற் சொல்லணியு மருவிப் பாக
முந்தமிழு வமையிருசி லேடைமுன்னு மணிதிகழ முதிர்பா லாழி
யிந்தமிழு தெனவினிப்ப நூறகவல் விருத்தயாப் பியற்றிச் சேர்த்தே. (4)

முந்திரவி லாச கற்றுஞ் செங்கதிர்முற் கோளுள்கண் முயங்கு வான்மீ
னிந்திரவி லாச லமே கம்புணரி நதிபுடவி யிமையோ ரும்மே
வந்திரவி லாச வண்ட மொப்பவொரு பான்மதியோ டுசாவு மாற்றாற்
சந்திரவி லாச மென வடவியிற்பேர் விளக்கியிந் நூ றந்திட் டானே. (5)

1*

இன்னவணி யாவனெனி னியற்புலவீர் கேண்மின்க ளிமயப் பாவை
முன்னவணி யாவையுந்தன் சிற்றுதரத் தடக்கியருண் முற்றாக் கொங்கை
தென்னவணி லாவுதிரு மகளாகிக் குடைநிழற்றத் திருக்கை லாய
மன்னவணி லாமரபின் மணிமோலி புனைந்ததுசீர் வையை நாடே. (6)

சொன்னாட்ட விளங்குதமி ழிந்நாட்டி லசுரர்குலந் தொலைத்துத் தாருப்
பொன்னாட்ட ரசுகொடுத்துப் புரந்தரனைப் புரந்தசெவ்வேற் புலவன் மேவித்
தன்னாட்ட மடியவர்க்குத் தந்தருளா வினங்குடிப்பேர்ச் சயில மார்ந்து
பன்னாட்ட வம்புரிந்தார் பரவுதிருப் பழனியெனும் பதிவாழ் வுற்றோன். (7)

கோதுபதி யாதகுணன் விசுவமறை யவர்குலத்துக் குருசி லோங்கன்
மாதுபதி யானைமுக னறுமுக னிவர்மறவா மனத்தன் கல்விக்
கோதுபதி வாரகன்போ லுதித்தவன்செம் பியனாட்டி லொளிருங் கோன்மைச்
சேதுபதி வாகனமுங் கவிச்சிங்க மெனுஞ்சிறப்புஞ் செய்யப் பெற்றோன். (8)

காதினியோர் கண்ணாகக் கருதுமன மேடாகக் கலைக ளெல்லா
மேதினியோர் நூல்விட்ட தில்லையெனக் கற்றுணர்ந்தோ னெப்பா னூலு
மோதினியோர் முறையென்று துரைவிரித்துச் சொல்லவல்லோ னுயர்பாவாணர்
மேதினியோர் மன்னர்குழா மெச்சுபுகழ் மாம்பழக்க விச்சிங் கேறே. (9)

இச்சிறந்த நூலதனை யிருந்தமிழ்தேர் பெரும்புலவ ரினிதி னாய்ந்து
மெச்சியுளங் களிகூர விரற்கையா லெழுதாது விளங் கெழுத்தி
லச்சியற்றித் தந்தனன்றிருச் செங்கோட் டிறைவனிணை யடியை யென்றும்
நச்சிமகிழ் நன்மனத்தான் கிட்டினசா மிப்புலமை நலமிக் கோனே. (10)

---

நாகப்பட்டணத்துக்கடுத்த நாகூர் மகா-ள-ள-ஸ்ரீ

## வா. குலாம் காதிறு நாவலரவர்களியற்றியவை.

### கழிநெடிலாசிரியவிருத்தம்.

நிலைவணக்கந் தரவுலகிற் குறுநிலமன் னவர்பதியாய் நிற்போ னிக்குச்
சிலைவணக்கந் தரமார னனையவனென் றுளமாழ்கித் திதலை பூத்த
முலைவணக்கந் தரமடவார் கிழியெழுது மழகினனும் முகன்றாட் கென்றும்
தலைவணக்கந் தரவமர்ந்தோன் றடம்வேளூக் குறிச்சிமிகத் தழைக்க வாழ்வோன்.

வந்திரவி பனிதெறலிற் பகைமுழுதும் புறம்போக்கி வாழும் வாழ்க்கை
மந்திரவி சயசித்தி மாறாத முன்றிலுளான் வள்ளன் மான்மே
கந்திரவி யப்பெருமான் வேலப்ப கவுண்டனிரு கவின்றாள் விம்மச்
சந்திரவி லாசமெனு மரியவொரு நறும்பிணையல் சமர்ப்பித் தானால். (2

ஓம்பழுக்க வினைமறவான் புலவர்குழா மொருங்கேத்து முரிமை யுள்ளான்
பூம்பழுக்க விச்சக்ர வர்த்தியென வுலகுபுகழ் பேர்வை யோர்த்தோன்
பாம்பழுக்க வியதுணர்ந்தும் பன்னூல்செய் வல்லவன்சீர்ப் பழனி வாசன்
மாம்பழக்க விச்சிங்க நாவலனெண் டிசைமுழுதும் வயங்கி யோனே. (3)

கொளக்கவரும் பொருட்டாகச் சொற்றுக வழுக்கா துவிந்தா ருள்ளம்
பிளக்கவரும் வலிகெழுமு மந்நாலை வேலப்பப் பெருமா னென்னும்
அளக்கவரும் புகழுடையா னருமதியே முன்னாக வச்சி லின்னும்
விளக்கவரும படிச்செய்தான் றிருச்செங்கோட் டுழித்தழைக்கும் வித்து வானால்.

கருங்கனந்தம் புயவலியா னிலக்கணத்தே னினிதொழுகக் கல்வி மான்கண்
மருங்கனந்தம் பேர்பரவப் பிரசங்கத் தொடுகவியும் வழங்க லோக்கில்
இருங்கனந்தம் பெருமிதமே யெண்டிசையு நிறுவியவ னியன்முறற் றோர்ந்து
கருங்கனந்தம் பெற்றகிருட் டினசாமி முதலியெனுந் தமிழ்வல் லோனே. (5)

---

சேலம் முனிசிபல் காலேஜ் தமிழ்ப்பண்டிதராகிய மகா-ா-ா-ஸ்ரீ,

## சரவணப்பிள்ளையவர்களியற்றியவை.

---

பண்ணுறு மறைபாடும் பரமனடி யாரெனவே பரிவு கூரு
மெண்ணுறு யடியேனென் றிறைஞ்சுதலு முளநடுங்கி யென்னே யெங்க
ளண்ணுனென் றாசொலிக்கும் வண்ணுனென் றுரைத்திடலு மைய யார்க்குங்
கண்ணுனர் திருவேட நினைப்பித்தி ரினிதேகக் கடவீ ரென்றே. (1)

பொருவரிய பத்திவழி நிலைநின்ற வேந்தன்முதற் புகழ்சால் வேந்தர்
மருவியர சியற்றியசீர்ச் சேரலநாட் டினிற்கூவை வரைப்பா லென்றும்
பெருவளஞ்சேர் தருவேளுக் குறிச்சியினஞ் சையமகிபன் பெற்ற செல்வத்
தருமணியாம் வேலப்ப பூபனைப்பாட் டுடைத்தலைவ னாகக் கொண்டே. (2)

புந்திமகி ழிரதிமறைப் பொருளியல்புஞ் சொல்லினொடு பொருளி னமாண்
புந்திகழ விந்நூலே யின்னூலென் நாலிலெந்நால் புகன்மி னென்னச்
சந்திரவி லாசமெனும் பாமாலை புனைந்தெவர்க்குந் தகைமை சேர்தன்
சந்திரப்பேர் விலாசமதைப் புலப்படுத்தா னன்னவன்பேர் சாற்றக் கேண்மின். (3)

### வேறு.

சாந்தணி முலைக்கொம்பர் போலிடையாள் சாம்பவி யளித்தருள் வேலுடையான்
சேர்ந்தொளிர் மலர்ப்பத மேநினைவான் தேம்பொழிற் பழனியி லேயுறைவான்
ஆய்ந்தவர்க் குறுதுணை யாமறிவான் ஆந்தமிழ்க் கடல்வங்க மேயனையான்
வாய்ந்தநற் கவிச்சிங்க மேவிசையான் மாம்பழக் கவிச்சிங்க நாவலனே. (4)

வேறு.

இன்னநா லதனை யன்னவன் பாலன் பிசைந்துளா ளிமையவ ரேத்தும்
பொன்னவிர் திருச்செங் கோடெனுந் தெய்வப் புண்ணியப் பதியிடை வதிவோன்
பன்னருங் குணஞ்சால் கிருட்டின சாமிப் பாவல னனிதவ முயன்று
வன்னயந் திரத்தா லெழுதியீந் தெவர்க்கும் வளமலி புகழ்மரு வினனே. (5)

---

திருச்செங்கோடு சிற்றம்பல நாவலரவர்கள் மாணாக்கராகிய மகா-௱-௱-ஸ்ரீ

## பழனிவேல் உபாத்தியாயரவர்களியற்றியது.

---

ஆம்பல்தொனித் தாத்திரட்டு மரிமருகன் முருகனென வவனி யோர்கள்
தாம்புகழும் வேள்குறிச்சி நகர்க்கதிபன் வேலப்பன் றரிக்க நாளுந்
தேம்பலசொற் சந்திரவி லாசமெனு நூற்பனுவற் றெரியல் தந்தான்
பூம்பழனஞ் சூழ்பழனி மாம்பழக்க விச்சிங்கப் புலமை யோனே.

---

திருநெல்வேலி ஜில்லா புளியங்குடி மகா-௱-௱-ஸ்ரீ

## முத்துவீரக்கவிராயரவர்களியற்றிய

அகவற்பா.

---

பூமலி கமலப் பொகுட்டில்வீற் றிருக்கும்
மாமகள் கலைமகள் வளர்திருச் சமுகன்
நன்கலைக் கியான நாலெட் டிரட்டியுந்
தென்கலை வடகலைத் திறமெலா முணர்ந்தோன்
நன்மதிக் குடையா னளிர்மதிக் குடையான்
வன்மழுற் றெறதிரு மருவலர்க் குடையான்
பொருபடைக் கையான் புலவரைக் கையான்
தருவென நல்குந் தண்மலர்க் கையான்
வேலப்பன் பேரன் மிகுநிதிக் குபேரன்
வாலசீ வகனென வரும்வியப் பேரன்
மல்லணி புயத்தான் வதனவும் புயத்தான்
கொல்லியம் பொறையான் குவ்வெனும் பொறையான்
தச்சணி முலையார் களமன சங்குலாம்

மச்சகல் லாற்றினன் வல்லிரு ளாற்றினன்
தாழ்விலாப் பவுசு தழைத்திடு மகபதி
வழூர் நாட்டினு ளிசைபுகழ் நாட்டினன்
காளையா பிரமன் கைச்சிலை பிரமன்
வேளையம் புரியான் விண்டொழில் புரியான்
குவலயந் தாங்குங் குலமணிப் புயத்திற்
குவலயந் தரித்த கொற்றவ ரேறு
கும்ப ரிணைத்தின்மேற் கொடுவரி கடகந்தனை
வெம்பரி கடாத்திமாற் றுரைவெல் வென்றியான்
தும்புரு விசையான் சொற்றுறை விசையான்
கம்பகும் பத்தடக் கடாம்பொழி கயத்தான்
மேழியந் துவசன் வித்வஜனத் துவசன்
ஊழிபேர்ந் தாலு முரைபெய ராதான்
பம்முரங் குலையப் படரும்வின் கடக்கும்
மும்முர சொலிகளு முழங்கிய வாயிலான்
குருமொழி தன்னைக் குலமறை மொழியாய்
மருவியே நடக்கும் வாய்மைபெற் றுடையான்
எயில்சூழ்ந் தெழில்பெறு மிராசநன் னகர்வாழ்
கயிலாச நாதர் கழலிணை பணிவோன்
நித்தநூல் மறைப்பொரு ளாகிய நிமலி
அத்தனா ரம்மை யடியிணை தொழுவோன்
கூகையங் கிரியைக் குமரனங் கிரியை
ஓகையாய்ப் பரவு முசிதசற் குணவான்
புருடசிங் கேறு புருடமா மேரு
அருடரு புருடோத் தமனவிர் சிகாமணி
மஞ்சையன் பாகு வழுதிமுன் காத்த
நஞ்சையன் பால னரபரி பாலன்
பாலப்ப மென்னப் பயில்ரச வசனன்
வேலப்ப பூபன் மிகுபுகழ் நாட்டித்
தேம்பழ னங்கள் செறிபொழிற் பழனி
மாம்பழக் கவிச்சிங் கேறுவாக் கமுதாய்
கற்பனை யலங்கா ரக்கவி னார்ந்த
சொற்சுவை பொருட்சுவை தொனிச்சுவை யினிதாய்
அடிமடக் கிடைமடக் கந்தம தான
கடைமடக் குருவகங் கலந்தநற் பொருளாய்
நந்திர வியமென நாவலர் மகிழச்
சந்திர விலாசத் தமிழுரைத் தனனே.

சிறப்புப்பாயிரம் முற்றிற்று.



உ

முருகன்றுணை.

சேலம் ஜில்லா வேளுக்குறிச்சி ஜமீந்தார்

ஸ்ரீ வேலப்ப கவுண்டரவர்கள் மீதியற்றிய

# சந்திரவிலாசம்.

## காப்பு விருத்தம்.

மணிகொண்ட கூவைமலைக் குகனருள்சேர் வேலப்ப மாலை வாழ்த்தித்
திணிகொண்ட பசுந்தமிழாற் சந்திரவி லாசமெனுந் தெரியல் சூட்டக்
கணிகொண்ட பொருள்பலவும் பெறற்பொருட்டிங் கன்பர்மனக் களிவண் டுண்ட
வணிகொண்ட வொருதடங்கோட் டற்புதப்பூங் கற்பகத்தி னடிநேர் வாமே.

## இராசிபுரங் கைலாசநாதர் துதி.

சீர்பூத்த செழுங்கமலத் திருவருள்சேர் வேலப்பச் செல்வர்க் கேய்ந்த
வார்பூத்த நறுந்தமிழாற் சந்திரவி லாசமெனு மாலை சூட்ட
நீர்பூத்த வயல்புடைசூ ழிராசிபுரத் தினிலமர்ந்து நிலைபெற் றோங்கு
மேர்பூத்த கயிலாய நாதர்திரு பாதமல ரிறைஞ்சு வேமால்.

## நூல்

### பாட்டுடைத்தலைவன் சிறப்பு.

கார்கொண்டவு தாரன்கன
கங்காகுல துங்கன்பொன
பார்கொண்டந ரேசன்குண
பலவண்டமி ழறியுந்துரை
தார்கொண்டபு யத்தான்மிக
றருநஞ்சய தீரன்பெற
சீர்கொண்டதொல் புகழான்முதி
சிலப்பணி தானேபுனை

பேர்கொண்டகு பேரன்
லங்காரது ரங்கன்
நேர்கொண்டவு லாசன்
நலவண்டிடை செறியுந்
வேர்கொண்டசெ யத்தான்
வருமின்பகு மாரன்
யோர்கொண்டசொ லிகழான்
வேலப்பபு மானே. (1)

## இதுவுமது

மலர்மாதைய ணம்பூசிப மணிமார்பதி னும்பா
மகளைத்திரு வதனத்தினு மகிழ்கொற்றவை தனைமா
நிலமேதொழு நிமிர்தோளினு நெறியானிறு வியசீர்
நீதித்துரை கூலைக்கிரி நேயக்குக னிருதாள்
விலகாதொளிர் மணவாண்மழை மிடைசோலைகள் புடைசூழ்
வேளைப்பதி வேலப்ப விநோதப்ரபு டகன்
பலவாழ்வினு மகவாணிகர் பரிசேபெறு தவினுற்
பரவுஞ்சுக மருவுமபுகழ் பகைகொஞ்சமு மிலையே. (2)

## இந்நூலின் வரலாறு.

அருளே வடிவாந் திருச்செங்கோட் டர்த்த நாரீ சுரனைப்பெங்க
ளம்மை பெரிய நாயகியை யத்த னாரம் பிகையையன்பர்
மருளே தவிர வருங்கூவை மலைமேவ லவனைப் பணிந்துசெல்வம்
வளர்க்கும் புகழ்வே ளுக்குறிச்சி மன்னன் பரஞ்சை நகர்க்கதிபன்
பொருளே பொழியும் விளியகுலப் புயலிங் கிதங்கு சயசாமி
புதல்வ னெனும்வே லப்பதிட புருடன் பவனிப் பொலிவுகண்ட
தெருளே யுளபெண் களிலொருசித் தினிமால் கனியத் தனித்துதித்த
செழுஞ்சந் திரனைச் சகியாமற் சிடுத்தாள் பலசொற் றொடுத்தாளே. ()

## பாட்டுடைத்தலைவன் வரும்பவனிக்கும், சந்திரனுக்குஞ் சிலேடை.

### அடிமடக்கு.

புகழ்வான் புலவர் புடைசூழப் பொருந்தும் கவளத் தந்திமுந்தப்
போய்ப்பின் பிரியா மாக்கள்களி பூப்பக் கனதண் டிகைபரவத்
தகவாம் பலரு முகமலரத் தழைக்கும் பேரிக் குவளைவிஞ்சச்
சரிக்குமரிகள் விரும்பிமொய்ப்பத் தணியா தெதிர்ந்தார் கலியலறத்
திகழ்பூம் பொழில்வே ளுக்குறிச்சிச் செல்வ நிதிவே லப்பதுரைச்
சிங்க முலவும் பவனியெனத் தெரிய வெழுந்தாய் செழுநிலவே
நகமாங் கிளைக்க வருமுலையார் நகமாங் கிளைக்க வனக்குயில்போ
னடுக்கா துதவிக் கின்றவென்சொ னடுக்கா துதவிக் கேட்பாயே. (4)

## சந்திரனுக்கும், தலைவிக்குஞ் சிலேடை.

### அடிமடக்கு.

மைபல்லவர் முலைபொலிய
வளைந்தவார முருகுலவை
மைபல்லவர முலைபொலிய
விளைந்தவார முருகுலவை
செப்பணிந்த குடியிருந்தந்
திங்களவா னுடைந்தேகன்சீர்
ஐயமிலா மிருவரும்பன்
னருமைமகிழ்மே பெருமைமதி
மானச்சோதி புறந்துலவ
மந்தசங்கமிக்க வருமாய்ந்
மானச்சோதி புறந்துலவ
மந்தசங்கமிக்க வருமேனுன்
மெய்நின்புய வேலப்பதுரைச்
சிங்கவரவா னுடைந்தாய்நீ
பதனைச்சரியா மெனத்துணிந்தே
யாமன்முழுதுங் கேட்பாயே. (5)

### கடைமடக்கு.

வருந்தவருமங் கருமபிறையே
மருவெப்பகலும் படிமுயலே
திருத்த மருளுங் கனவிடையே
திகழுங் கணமே கலைபினமே
பருத்த முலையுங் வனக்கனியே
பரவு மாட்சி யம்மனையே
விருத்த முடைய வூர்கோனே
வேலப்பனுமென் முகந்தானே
மறவான் வருமங் கரும்பிறையே
மயல்வெப்பகலும் படிமுயலே
சிந்தை மருளுங் கனவிடையே
செலுங்கங் கணமே கலைபினமே
பகைதார் முலையுங் வனக்கனியே
பயிலேன் மாட்சி யம்மனையே
விளம்பு முடைய வூர்கோனே
விரும்பாக்கட முகந்தானே. (6)

### கடைமடக்கு.

பாலேதிகர்த்த வெண்ணிலவே
பரிவாய்மிருக சீரிடமே
மாலேவிளைத்த வருமகமே
மயங்கித்தோன்று முத்திரமே
சேலேயடுத்த திடவசமே
சிவஞர்தினமா மாதிரையே
மேலேகொழித்த வனமணலே
வேலப்பனுமென் முகந்தானே
படைவேள்விடு வெண்ணிலவே.
பகர்தண்ணெனுமோர் சீரிடமே
வருந்திச்சுழன்று வருமகமே
மாறுதொலைச முத்திரமே
சேராமுலைமுத் திடவசமே
செறிந்ததிருளின் மாதிரையே
வெறுத்தேனந்த வனமணலே
விரும்பாக்கட முகந்தானே. (7)

## கடைமடக்கு.

மகளிர்க்கிரங்காக் கலைவிதுவே
மணிசூழ்விமான வாகனமே
நிகரற்றுயர்ந்த மண்டலமே
நீர்கான்றிருந்து பரிசிலையே
ககனத்துலவுங் கார்த்திகையே
கறுத்தமாலை வெம்புள்ளே
மிகமெச்சியரா சிமகரமே
வேலப்பனுமென் முகந்தானே

மாறுதாடைக் கலைவிதுவே
வராதோகாடந்த வாகனமே
நிகழ்த்தற்கெளிதோ மண்டலமே
நினக்குமுருகாப் பரிசிலையே
காணச்சகியேன் கார்த்திகையே
காமற்கிருப்பு வெம்புள்ளே
வெதுப்புமெனைவி சிமகரமே
விரும்பாக்கபட முகந்தானே. (8)

## கடைமடக்கு.

மதியினலர்ந்த வலிக்குளமே
வயங்குமதன்வாய்ப் பச்சிலையே
புதியகொடியின் முற்றுணரே
பொறிவண்டுகள்வந் தண்ணறவே
யதிகதுலைதக் தினமுருகே
யடுக்குங்கிழங்கே யிருந்தாரே
விதியினுயருஞ் சத்தமியே
வேலப்பனுமென் முகந்தானே

மலைக்குங்குயிலின் வலிக்குளமே
வளைப்பான்மதன்வாய்ப் பச்சிலையே
புகலுங்குறிப்பு முற்றுணரே
புலருங்களபந் தண்ணறவே
யன்பினேற்கித் தினமுருகே
யறியாமயலா யிருந்தாரே
மெலிந்தேன்முலைவிஞ் சத்தமியே
விரும்பாக்கபட முகந்தானே. (9)

## மன்மதனுக்கும், சந்திரனுக்குஞ் சிலேடை.

## அடிமடக்கு.

அதிராவண்ட மதனில்வந்தா
அப்புவாரி நீயுதிப்பாய்
பதிமானினைவைத் திருந்தனைவிற்
பாவமுதிரப் பவர்க்கருணி
மதியாகிருதர் வலியடக்கு
மார்வம்புணர நயந்தேன்றாய்
புதிதாமதியே விரைந்துதிரும்
பூச்சந்தனமும் பொலியவணி

யதிராவண்ட மதனில்வந்தான்
அப்புவாரி யவனுதிப்பான்
பதிமானினைவைத் திருந்தவிடான்
பாவமுதிரப் பணலாமோ
மால்வேலப்ப மகராசன்
மார்வம்புணர வருத்தடர்ந்தார்
புதிதாமதியே னுனைச்சகியேன்
பூச்சந்தனமும் புலர்ந்தனவே. (10)

## சிவனுக்கும், கோல்லிமலைக்குஞ் சிலேடை.

### அடிமடக்கு.

கங்கையேந்தி மாதங்கங்
கடுக்கைகாட்டிக் கலைவளைத்துக்
செங்கைதோன்று மழுவினன்போற்
செயபொற்புய வேலப்பதுரைச்
தங்கையாமற் புதத்திருந்த
தானங்கடுத்தாய் மதன்குடையாய்த்
கொங்கையேற்ற மலர்புலரக்
கொடுமையலவா வெழக்கொதித்தாய்
கலந்துசூலந் தலையணிந்து
கனத்தேவரைமுன் பரித்தலிறைற்
றிகழுங்கொல்லி மலைக்கதிபன்
சிங்கமகிழுஞ் செழுநிலவே
தங்கையாமற் குடியிருக்குந்
தான்ங்கடுத்தாய் தமியேனைக்
கொங்கையேற்ற முறவலிமை
கொடுமையலவா குறிக்கினிதே. (11)

## உமாதேவிக்கும், கோல்லிமலைக்குஞ் சிலேடை.

### கடைமடக்கு.

தளராதன்ட மடங்கலையுந்
தாங்கியாண்டு மறைநிகழ்ந்த
புளமேன்மையிறு லுமையெனநின்
ஞரவோர்புகழ் வேலப்பசெய
வளராநின்ற ரோகணியே
மறையாதுதிக்குஞ் சித்திரையே
மௌவேசிதறும் பணித்துளியே
விரிந்தநெய்தற் கொழுந்தடமே
தான்பெற்றருவி புதர்தாழத்
தழைக்குமரனோர் புறமேவி
ரேங்குங்கொல்லி மலைக்கதிப
வசிதன்மகிழுஞ் சசிதழுவி
மானூர்கொணர்வா ரோகணியே
மதன்பேரிகைவிஞ் சித்திரையே
மொழிவாமித்யம் பணித்துளியே
விரும்புந்தென்றற் கொழுந்தடமே. ()

## முன் குமரக்கடவுளுக்கும், கோல்லிமலைக்குஞ் சிலேடை.
## பின் சந்திரனுக்கும், திருமாலுக்குஞ் சிலேடை.

ஆறுமுகங்கொண் டபனகத்தை
டண்டத்தினையா தரித்தருளி
வீறுகதிர்வேற் கரகுமர
வேளைப்பதி வேலப்பதுரை
கூறுததியி லுற்பவித்துக்
கூர்கட்கஞ்சங் கெடுத்துரிய
தேறுபுகழ்மா லாயிருந்துங்
கினப்பதறனன் றுனக்குனைத்தான்
யடக்கிக்கனிவாய்க் குஞ்சரிவேட்
டங்கேகயமேற் பொலிதலினல்
வேளாங்கொல்லி மலைவேந்தன்
மெச்சும்புதிய வெண்ணிலவே
குலவிச்செய்ய வல்லிதழீஇக்
கோலமானை முனங்காட்டித்
தினமுமாலா யிருக்குமெனைச்
சிரியாரோபின் பெரியாரே. (1")

### விநாயகனுக்கும் கோல்லிமலைக்குஞ் சிலேடை.
### கடை மடக்கு.

துதிக்கைகொடபா சாங்குசமுந்
தூயவானை முகமேயந்திக்
கதிக்குமியல்பால் விநாயகன்போற்
களபப்புய வேலப்பதுரை
கொதிக்குநிலையு முதிர்கனலே
கொழிக்குமழையா மெனக்கணையே
மதிக்குமணசுந் தேறுதே
மருந்திற்கசக்கு மருந்தேனே

தோற்றியேகக் கோடந்துத்
தூய்முக்கிருக்க மருவிபிகக்
காணுங்கொல்லி மலைக்கோமான்
கருத்துக்கிசைந்த கலைமதியே
கொலைமேவொடுக்க முதிர்கனலே
கொடுமைகாட்டு மெனக்கணையே
மாதாவுரைகா தேறுதே
மதுரக்கனியு மருந்தேனே. (14)

### பிரமதேவனுக்கும், கோல்லிமலைக்குஞ்சிலேடை.
### கடைத்திரிபு.

மாகம்புவன முறைபடைத்து
வரிசைக்கலைமா னினந்தழுவி
யேகந்தவிரு மஞ்சுதலை
இறைவனெனும் வேலப்பதுரை
யாகந்தனின்மால் கொடுத்தானே
யளித்தான்மகன்போர் கொடுத்தானே
தாகஞ்செயுமென் சிந்தனையே
தணிப்பாயினிக்கோ பந்தனையே

வழுத்துமலர்மீ தினிற்பொலிந்து
மடங்காதிருக்கும் பலவடர்ந்தே
யேந்தியயனுங் கொல்லிமலைக்
யெவருந்தொழவிங் கெதிர்தோன்றி
யந்நாளிடரைத் தடுத்தானே
யரும்பார்த்துரைப்பா வடுத்தானே
சலித்தாளொனைத்தான் முந்தனையே
சசியேயுனக்கோர் வந்தனையே. (15)

### இந்திரனுக்கும், கோல்லிமலைக்குஞ் சிலேடை.
### கடைமடக்கு.

மங்குழவச் சிரநீட்டி
மாறுக்கேனு மணிபடைத்து
பொங்குதேவர் கோமகனைப்
புலவோர்புகழ் வேலப்பதுரை
இங்குநீதி மறந்தனையே
யிதுமேலவர்தம் பண்பலவே
சங்குதான் கைக்கமையாதே
தூயீயேன்வருந்த முன்னிலையே

வலியவரவெண் கரிகாட்டி
மதிக்கவரிசந் தனந்தழுவிப்
போலுங்கொல்லி மலைக்கதிபன்
புந்திக்கினிதாம் புதுநிலவே
யெவர்பாற்பயின்றாய் மறந்தனையே
யிசைக்குங்குயிலும் பண்பலவே
தாழாயெனிற்பின் கமையாதே
தழலிற்கொடிதா முன்னிலையே. (16)

### சூரியனுக்கும், கொல்லிமலைக்குஞ் சிலேடை.

### கடைமடக்கு.

தேறலோடப் புள்ளலம்பச்
திரண்டமுளரி வாய்விடப்பச்
மாறலாகாக் கதிரவன்போல்
வளமைப்புகழ் வேலப்பதுரை
தூறலோயா தினமயலே
தூவுந்தென்றற் பொருந்தாதே.
நீறலேதோ முத்தினமே
நித்தஞ்சொலுவள் வடுத்தாயே
சிறப்புத்தருமுற் பலங்குவியத்
செயுமாதவமெத் திசையுமிக
வளருங்கொல்லி மலைக்கதிபன்
மகிழவுதித்து வருநிலவே
சுழற்றுமெனைமுந் தினமயலை
சோர்ந்தன்றிலுங்கண் பொருந்தாதே.
நிமிடமெனக்கு முத்தினமே
நீயுங்கொதிக்க வடுத்தாயே. (20)

### பாட்டுத்தலைவன் புயத்துக்கும், கொல்லிமலைக்குஞ் சிலேடை.

அங்குவலைப மிசைப்பொலிவுற்
யருமைப்புளக மெழுத்தழைத்திட்
லெங்குமுவப்பத் தனதுபுய
னெவரும்புகழ் வேலப்பதுரை
பங்குபெறுபல் கலைநிரம்பப்
பதைக்கமலைவா யலதலையென்
மங்குலளக மாதர்பழி
மதியென்றிடுதற் கெப்படிச்சம்
றகலாவிரைமஞ் சரிதழுவி
டாக்கமேந்து மமைதியிரு
மெனவாழ்கொல்லி மலைக்கதிப
யிதையமிகமெச் சியநிலவே
பயின்றும்பயிலா தவர்போன்று
பதைக்கமலைவா யதிர்த்தடக்காய்
மதிக்கமதியி லாவுனையு
மதித்தாரோசொல் விதித்தாரே. (21)

### சோலைக்கும், கொல்லிமலைக்குஞ் சிலேடை.

### முதன்மடக்கு.

தூயவரும்புங் கவருமொய்ப்பத்
துதிக்கவரிமா விசைகாட்டத்
தாயதமிழ்வே ளுக்குறிச்சி
கதிபனெங்கள் வேலப்ப
மேயவமுத மெனுங்கிரண
வியக்கும்பூர மேயெனைக்கூ
சேயவனுட மேபொருமால்
செப்பும்பரணி யேமுலைமென்
தொடுத்தற்கான மலர்பொலியத்
தோன்றிவளமை சிறப்பவுயர்ந்
யணிதண்டலைநேர் கொல்லிமலைக்
வதுலன்மகிழும் புதுநிலவின்
மேயவமுத விடலாமோ
வியக்கும்பூர வரும்பழிப்பர்
சேயவனுட னுற்றுவனே
செப்பும்பரணி திருத்தேனே. (22)

### சரஸ்வதிக்கும் கரைசையாற்றுக்குஞ் சிலேடை.

#### கடைத்திரிபு.

திருத்தவளப்பங் கயம்பொலியத்
திவளுமணியாழ் கைசிறப்பச்
பொருத்தமுளசொற் புகழ்வாணி
புனிதருணை வேலப்பசெய
கருத்துமுழது மிரும்பாயே
கருகுங்குளிர்ச்சி தரும்பாயே
யுருத்தவுனது கொதிப்பாரே
யுண்மையிதுக ருதிப்பாரே

தெளிவானவரும் படிகமுந்தத்
செறிந்துமிகப்பல் கலைதோன்றப்
போலுங்கரைசை மாநதியான்
போசன்மகிழும் புதுநிலவே
காய்வாய்கருணை விரும்பாயே
கசப்பளதட்டித் திரும்பாயே
யுடம்பிற்கொளச்சம் மதிப்பாரே
யொருமித்தேதசி யுதிப்பாரே. (23)

### திருமகளுக்கும், கரைசையாற்றுக்குஞ் சிலேடை.

#### அடிமுதன்மடக்கு.

கனமாமலைபெற் றிடலாலுங்
கனிசெவ்வனமேற் கொளலாலுங்
வனமாலிகைப்பொன் மடந்தையென
வளர்திண்புய வேலப்பதுரை
சனமேயறிய முலைவிழியஞ்
சனமேகேளா யங்கோதாவி
சினமேதுனக்கிவ் வளவுகுயிற்
சினமேபேசி நீகதிர்வி

கஞ்சங்குலவு சிறப்பாலுங்
கர்ப்பான்மருவ வரலாலும்
வளஞ்சூழ்கரைசை மாநதியான்
மனத்துக்கிசைந்த வான்மதியே
சனமேயணிந்தும் பசந்தனவ
சனமேகொடுத்தாய் தயைவிடுத்தாய்
சினமேவியபா வியும்பலவுஞ்
சினமேனியைப்புண் செய்தானே. (24)

### பூமிதேவியுத்தரீயத்துக்கும், கரைசையாற்றுக்குஞ் சிலேடை.

#### அடிமடக்கு.

வரிசையாக மணந்துமுலை
மாறுவாரம் படைத்துமிக
றெரியவணியுத் தரியமெனத்
செயவேலப்ப பாண்டியன்மெச்
கரியமாலைக் காட்டலருங்
கவடமதனுற் பலனிலையே
பிரியவளைக்கும் புடையடுக்கும்
பின்னுமோதி யவம்புகுமே

மறையப்பரந்தம் புயந்தழுவி
வளமாமுந்தி கொடுபுவிமின்
திகழுங்கரைசை மாநதியான்
சியவெண்ணிலவே தினந்தொறுநீ
கரியமாலைக் காட்டலருங்
கவடமதனுற் பலனிலையே
பிரியவளைக்கும் புடையடுக்கும்
பின்னுமோதி யவம்புகுமே. (25)

### பாட்டுடைத்தலைவன் கருணைக்கும், கரைசையாற்றுக்குஞ் சிலேடை.
### அடிமுதன்மடக்கு.

அடுத்தாமரச்சங் கலங்கொதாங்க    வதிகவலையு மறைந்தோட
வயலெங்கினுங்கே ளாமையெய்த    வெவ்வானனமும் பொலிவுதரத்
தொடுத்தேவளர்தன் கருணையெனத்    தோன்றுங்கரைசை மாநதியாய்
சரதமதன் வேலப்பமொய்    றுரைமெச்சிய நற்சுடர்மதியே
மடுத்தேயாத மலர்வாச    மடுத்தேயாத வினைக்கொடுதன்
மலைக்கானின்ற வரந்தழுந்த    மலைக்கானின்ற வேளையில்வெண்
கடுத்தாளனை நீபுமெள்ளக்    கடுத்தாளனை தாற்றுவதேனோ
கவருழையார் பலரவுங்கக்    கவருழையார் கனிப்பாரே. (26)

### கங்கைக்கும், கரைசையாற்றுக்குஞ் சிலேடை.
### அடிமுதன் மடக்கு.

அரவமணிவார் கோமர    படுத்துவானத் தையுந்தழுவி
யழியாக்கனகந் தனையேந்தி    யலைசூழ்கங்கை போல்வளமை
விரவுகரைசை மாநதியான்    விஞ்சைபலதேர் நஞ்சயமால்
மேன்மைச்சுதன்வே லப்பனை    மேவாவேளை தனிற்சினந்தே
யிரவிவருமவ்விய மதிநீ    யிரவிவருமவ்விய னினைக்க
வில்லை நினைத்தா னொருங்காயில்    வில்லைநினைத்தா நிகழ்ந்ததென்னோ
கரவிலென்று மதன்வளைப்பான்    கரவிலென்று மிரங்காய்வெங்
கலையோவாது பெறுமுளங்    கலையோவாது காட்டினையே. (27)

### திருப்பாற்கடலுக்கும், கரைசையாற்றுக்குஞ் சிலேடை.
### அடிமுதன் மடக்கு.

வானத்தார முதுவாரி    மலியத்தோன்றி யரியமர
மருங்குபடைத்துக் கனகமலை    வரச்சூழ்புளினம் பலவுடைத்தாய்த்
தானத்தீம்பாற் கடல்போலத்    தழைக்குங்கரைசை மாநதியான்
சரசகுண வேலப்பதுரைச்    சாமிமகிழுந் தனிநிலவே
பானத்தேனைப் பழித்தினையுண்    பானத்தேனைப் பகைப்பதென்ன
பாரமரிவை நானினைத்துப்    பாரமரிவை பணலாமோ
கானத்தூடு குயிலிசைக்குங்    கானத்தூடு திகழ்மணியுங்
கருகுமலருங் கொடிதாம்பொங்    கருகுமலருங் காய்தருமே. (28)

### மன்மதனுக்கும், தாசிக்கும், நந்தனவனத்துக்குஞ் சிலேடை.
### கடைமடக்கு.

தருந்தவிலேமூற் கொளலானுந்
தழைக்குங்கிளைபோந் துதலானுந்
முருந்தனினிதின் றெடுத்தமுந்நீர்
மொய்க்குந்தருநந் தனவனங்கண்
மிகுந்தபுகழ்வான் கங்கைகுல
விருதுபுனை வேலப்பமனு
புகுந்தங்கிருக்கு மரும்பிணையே
பூத்துப்பொலிந்த குவலயமே
தாமரசங்காட் டிடலானுந்
தருமாலையும்பெற் றிறலானு
முரசமதனுங் கணிகையும்போன்
முறைசூழிராசி புரநாடன்
விசையன்புவியெண் டிசைவண்ங்க
வேந்தன்மகிழ விரிவிலிற்
புடைக்குந்தன்மா மரும்பிணையே
பொருந்தாமணந்தாய்க் குவலயமே. (29)

### தேவர் நாட்டிற்கும், இராசிபுரநாட்டிற்குஞ் சிலேடை.
### அடிமுதன்மடக்கு.

மயங்காரக வண்டர்மொய்ப்ப
வாரியமுதங் கலித்திரங்க
செயங்கூர்பொன்னு டனவயங்கிச்
செல்வத்துரை வேலப்பனெனுந்
புயங்காதலித்தா ரனந்தருண்டம்
போதென்னகமே பகைகொள்பண்
தயங்காமனது மெழுகுனது
தாவாநிற்பா யிரக்கமிரா
வாசவனங்கண் முறைசூழ
வருந்தாருவகை சிறந்தோங்கச்
செழிக்குமிராசி புரநாடன்
திடச்சற்புருட சிகாமணிதன்
புயங்காதலித்தா ரணிவளர்ந்த
போதென்னகமே யுதிதணந்தார்
தயங்காமனது தழலுலையாத்
தாவாணிற்பாய் தரும்திமே. (30)

### முன் சக்கரவர்த்திக்கும் வயலுக்குஞ் சிலேடை.
### பின் தீப்பந்தத்துக்கும், சந்திரனுக்குஞ் சிலேடை.

தேருங்கயமும் பலபடையுஞ்
சிறப்பத்தோன்றி வரிதழுவிச்
லாரும்பணிவேங் தென்னவய
டருள்வேலப்ப சாமியென
நேருங்கலைசூற் றுதலானு
நீள்வான்கட்டங் கிடலானு
சோருந்தமியேன் மனங்கவர்த்
சுடர்தீப்பந்த மாகிவன்மங்
சேர்க்குழைப்பு மணிமுடியுஞ்
செயும்போர்நெருக்கிப் படிகொள்ளரி
லணிசூழிராசி புரநாடாண்
யணையாளரிற் பணிமதியே
நிகழ்த்துமொருகோல் பெறலானு
நிலைக்கத்தயிலம் புகலானுஞ்
துள்ளுங்காமக் கள்வனுக்குச்
தெர்டுத்தர்ய்வருத்தங் கொடுத்தாயே ( )

பூமிதேவி முகத்துக்கும், இராசிபுரநாட்டுக்குஞ் சிலேடை.
இடைமடக்கு.

வளமைத்தடங்கண் மலருமணி
வளைவார் செவியும் பொலியநுதல்
கொளலிற்புலிமான் வதனமெனக்
குணவேலப்ப குமணனெனக்
களபத்தனமு நிமிர்ந்தனவெங்
கயரெத்தனமு மதனனுள்ளக்
தளவக்கணையு மிரங்காத
தழல்பொங்கணையுஞ் சகிப்பினுமீ
வாயுமாம்பல் வரிசைகளும்
வயனத்தோடு மணந்துகனந்
குறைதீர்ராசி புரநாடன்
கூடாநாள்வெண்மதியேயென்
கடுவொத்தனமுங் கசந்தனமங்
கள்ளத்தனமு மவன்விடுக்குந்
தாய்வக்கணையு முனைப்பார்க்கத்
தருபுன்கணைநான் சகியேனே. (32)

முன் வித்துவான்களுக்கும், யோகிகளுக்கும், வயலுக்குஞ்சிலேடை.
பின் குறிசோல்லும் பூசாரிக்கும், சந்திரனுக்குஞ் சிலேடை.

அடுக்குமேட்டை விலக்கலிறு
லாய்ந்திட்டவித்தை யடக்குதலா
லெடுக்குமேன்மைத் தமிழ்வலருஞ்
சுடர்நத்துமிழ்முத் துணைநகைக்குங்
கடுக்கைமுடிப்புங் கவனிருதாள்
கருணைச்சுதன் வேலப்பகொடைக்
யுடுக்கைபிடித்துப் பலகறைவைத்
யொருபூசாரி யெனவருநீ
லப்பால்வாசித் திடமிகலா
லணிபாவனந்தந் துறைதரலாற்
சுகயோகரும்போற் சூழ்பழனச்
துதிசேரிராசி புரநாடன்
கருதித்தொழுநஞ் சயதுரைதன்
கன்னன்மகிழ்வெண் கலைமதியே
தோங்கியஞ்சக் கரங்காட்டி
யுள்ளமயலெற் கோட்டிலையே. (33)

தேவரம்பைக்கும், வாழைமரத்துக்குஞ் சிலேடை.
கடைமடக்கு.

மருங்குறுவண்டு வருந்தமலர்
வயங்கித்தாங்கு வளைகாய்கண்
ணெருங்குவகையா னடநீடு
நீதிமகவா னரசுபுரி
பொருந்துமணியாய்ப் பொலிராசி
புயவேலப்ப பூபன்மெச்சம்
மிருந்தமததந் தாவளமே
யிலையோபானந் தாவளமே
வரிசைக்கொங்கை யெதிர்ந்துமுந்த
மதர்ப்பவிழையும் பலநிரம்ப
நிலையாலரம்பை நிகரரம்பை
நிழற்கற்பகப்பந் தரைத்தழுவிப்
புரநாட்டதிபன் கிரிகாட்டும்
புலியேகலியேல் புறத்திருளு
யிகலுக்கெங்குந் தாவளமே
யிகழ்ந்தேன்மிகவுந் தாவளமே. (34)

## வயலுக்கும், சோலைக்குஞ் சிலேடை.

### அடிமடக்கு.

சங்கவாவி நெருங்குதலாற்
றம்மேற்பன்னந் தழைத்துளதாற்
பொங்கர்சேர்பன் னையும்பொழிலும்
புவிகாத்தருள் வேலப்பதுரை
கங்குலாவி யேவருந்தக்
கங்குலாவி யேவருந்தக
னெங்குமார்க்க வருங்கிளையு
லெங்குமார்க்க வருங்கிளையு
தமிழ்கூர்மந்தா னிலம்புகலாற்
றருவானெல்லை யளந்திடலாற்
புடைசூழ்திராசி புரநாடன்
புனிதன்மகிழ்வெண் மதியேநீ
கடிசகியா திகழுகின்றாய்
கடிசகியா யெனவெறுத்தே
யெத்தனையுந்தீ யையுமறைந்தா
யெத்தனையுந்தீ தியற்றுவே. (35)

## பாட்டுடைத்தலைவன்கைக்கும், முகிலுக்குஞ் சிலேடை.

### கடைமடக்கு.

மதிக்குமணிமுத் திரையாழி
வந்தவரையா தரித்துநித
றதிக்குந்தனது கரதலம்போற்
றொடர்ந்தேவருட முப்போகந்
தெதிர்க்கும்பகைவர் மதந்தணிக்கு
மின்றதுரை வேலப்பபுவ
யதிர்க்குஞ்சொலரிந் தவளவிட
பாவாய்சிறிது மருளாயே
யெங்கிபயம் படைத்துமுன்னி
மகிழ்ந்துகனக முறைதரலாற்
றெருங்கார்மதிழும் மழைபொழியத்
சுபக்குதிராசி புரநாட
பொங்கவருமை நஞ்சயமே
மேனைந்தன்மனமெச் சியநிலவே
மடித்தார்நீயுந் தவளவிட
யந்தோதமியேன் மருளாயே. (36)

## கடலுக்கும், அகழிக்குஞ் சிலேடை.

### அடிமுதன்மடக்கு.

வளைவாயிருக்கும் படிதழுவும்
மடங்குமரவத் தையுங்காட்டு
வளைவாய்மடுத்தன் றருந்தியமாற்
வகழ்சூழ்வேளைப் பதிமுறைகாத்
களையேகொடுத்தா னீயுமிடர்
கனவிலணைவா னீயுமொரு
விளைமாமயலென் முலைபுணைப்போன்
வேளைமதியே னுள்ளமுமவ்
வயங்கக்குளிர்கொண் டலைநிரப்பும்
மாறுவளம்பெற் றிடுமதனு
கடங்காக்கடலே யெனத்தழைத்த்
தருள்வேலப்ப மகிபனிந்தக்
களையேகொடுத்தாயெனக்கெனைத்தான்
கனவிலணைவா யெனினுமவன்
மெள்ளக்கரத்தாற் றொடின்மதன
வேளைமதியே மெலியாதே. (37)

சக்கரவாளகிரிக்கும், மதிலுக்குஞ்சிலேடை.
அடிமுதன்மடக்கு.

அரியமாவைச் சுமந்துளதா
லமர்வண்டரைநின் றடக்குதலா
லரிசைசேர்சக் கரகிரிபோன்
மால்வேலப்ப மகராசன்
புரியவீரத்தன மோபெண்
பதங்கட்கிளைத்தாய் படைவீரன்
திரிகையாலென் பயனுரைசந்
தீயநியம நீயலது

லலையாக்கருவி பலமிகலா
லணிகாப்புடைத்தா யதிறத்தால்
மதில்சூழ்வேளைப் பதிக்கதிபன்
மகிழும்புதிய வான்மதியே
பரியவீரத்தன மடர்விப்
பதங்கட்கிளைத்தா யதைமறந்து
திரிகையாலென் னையுமுருக்குந்
தீயநியம தாகவின்றே. (38)

முன் கோபுரங்களுக்கும், இராமனுக்குஞ் சிலேடை.
பின் வைத்தியனுக்கும், சந்திரனுக்குஞ் சிலேடை.

தூணிவரக்கார் முகந்தழுவித்
சூழ்மாகவசந் தொட்டுநின்று
யாணிமணிக்கோ புரங்களெல்லா
மருமைவேளை வளம்பதிகாத்
பாணிபிடித்தா னம்பிடிக்கும்
புற்பவகைசிந் தூரத்தினொடு
வீணிலெவர்க்கும் பண்டிதமே
விரதசுரத்தைத் தணிக்காத

தொலையாவடிவா ளிகள்படைத்துச்
தொடருந்தான வரையடக்கி
மயோத்திக்கரச னெனப்பொலியு
தருள்வேலப்ப மகிபனெனைப்
பரிசிதோரார் பழியூரார்
பலமாத்திரையு மடுத்துவந்து
மிகக்காட்டினையிங் கெனக்குமட்டும்
விதமேதுரைப்பாய் வெண்மதியே. (39)

மேன்மாடங்களுக்கும், கற்பகத்தருவுக்குஞ் சிலேடை.
இடையுங்கடையுமடக்கு.

திருத்தமாக மதிலுளதாற்
சீர்வலாரி வருஞ்சிறப்பாற்
குருத்தவாத மணிமாடக்
குலவும்வேளை நகர்தழைக்கும்
கருத்தைத்திருப்பாய் கொதித்திருப்பாய்
குழலுங்குவிப்பாய் கலங்குவிப்பாய்
வருத்தத்தினையே பொருத்தினையே
மயலேவிளைத்து வடிவிளைத்து

சிதையாவண்மை மேற்கொளலாற்
றினமுமணமே பெறுதலினாற்
குழக்கற்பகமே யெனப்பொலிந்து
குமணன்றமிழ் வேலப்பதுரை
காமற்காவா யெனைக்காவாய்
களங்கமொழியாய் கதிமொழியாய்
வளைசோர்ந்தயர்க்கு மடந்தையர்க்கு
மதியில்விதுவே மறுவிதுவே. (40)

### நட்சத்திரங்களுக்கும், பெண்களுக்குஞ்சிலேடை.
கடைமடக்கு.

மாற்றமொழி புட்கரத்துறலால்
பாலையேற்று மின்னுதலான்
போற்றவளரு மிளமகளிர்
புகுதவுயரும் வேளைநகர்ப்
தேற்றமனத்தி னினையானே
திகைக்குங்கதிர்க்கீ யகற்றுமே
யாற்றவிரக மிசையாதே
யுதனுல்விம்மூங் கடிதடமே

வருமெல்லிடைதோன் றுமையினுண்
மற்றுமுலையா வனமிகலாற்
போற்றுரகையு மணிமேடை
புகழ்வேலப்ப புனிதனைனைத்
திறிதுஞ்சகியே னினையானே
சிலைவெனைத்தீ யகற்றுமே
யடருங்கலவி மிசையாதே
யலவாவிடுதி கடிதடமே. (41)

### குபேரனுக்கும் கடைத்தெருவுக்குஞ்சிலேடை.
இடைமடக்கு.

சங்கபதும மெனநிதியந்
தழைத்துவளத்தை யேந்தளகை
துங்கம்பரவு தனதனைப்போற்
தூயபுகழ் வேளைப்பதிவாழ்
சிங்கம் பவனிவந்தெனையெத்
சிலைமா மதனவேள்கலகங்
பங்கம் திளைக்குநிலவேயிப்
பழியே திருந்தாணிகழ்த்துதிவீண்

தழுவிச்சரக்கின் னரர்மதிக்கத்
தாவென்றடுத்த வரிசைபெற்றுத்
துலங்கிப்பலவா வணநெருங்கும்
சமுகசெய வேலப்பதுரைச்
தினன்பின் பவனிகறிகிலேனே
தினமா மதனமயக்கமந்தோ
படிநொந் திளைக்குமெளியேன்மேற்
பகையே திருந்தாதழன்றுமே. (42)

### பூமிதேவிகண்ணுக்கும், வேளைமாநகர்க்குஞ் சிலேடை.
அடிமுதன்மடக்கு

வீறுதருமம் பல்கவென்று
விரவப்பரவு மணிதோன்ற
கூறுபுகழ் வேளைப்பதியிற்
கோமான்றமிழ் வேலப்பசெய
வாறுபெருக நுகர்ந்துபசி
யலுக்குமலைக்கு மதற்குமஞ்சி
மாறுமிதயந் தமியேற்கே
மலினமேனி கலத்தொடுத்தாய்

மேன்மைதழைக்க வாய்ந்தவருள்
விளங்கிப்புவிமான் விழிபோலுங்
குபேரனென்வீற் றிருந்தருளாங்
குமணனெதிர்ந்து கொடுத்தமய
யாறுபெருக முதுமகற்றி
யலுக்குமலைக்கு மன்றியுநாண்
மாறுமிதயந் தோவுணரா
மலினமேனி வான்மதியே. (43)

### தருமசத்திரங்களுக்கும் மேகத்துஞ்சிலேடை.
### கடைமடக்கும், அடிமுதன்மடக்கும்.

பழுக்கத்தண்டு நல்லவன்னம் படைத்துக்கருணை யாதிவரப்
பரிக்கேயமையத் தோசைகந்து பரவப்பாலப் பளிநிறைத்து
வழங்கற்புதத்தான் மழைமுகில்போன் மாறுக்கருமசத்திரங்கண்
மலியும்புகழ் வேளைப்பதிவாழ் மால்வேலப்ப மகிபனிய
முழங்கப்பவனி வந்தடுத்தான் முத்திலெனக்கார் வந்தடுத்தான்
மோகவலையான் விலக்கவச போகவலையான் முழுத்திங்காள்
கழுங்கைக்கான வீணையைத்தி கழுங்கைக்கான பூவைமயில்
களைத்தேனலரை வெறுத்துமனங் களைத்தேனலரை யுகமாமே. (44)

### அளகாபுரிக்கும்,வேளைமாநகர்க்குஞ்சிலேடை.
### கடைமடக்கு.

வளமேயணைய புட்பகவி மானன்களிக்கச் சுகந்திருவர்
மலியவரும்பொன் னிலமுழுதும் வயங்கத்தான வகையினுயர்ந்
தளகாபுரியே யெனத்தழைக்கு மருமைவேளா புரியிலிருந்
தரசுபுரி வேலப்பசெய வண்ணாற்கிசைந்த வெண்ணிலவே
களவேமதனன் படித்தானே காய்வாய்நீயிப் படித்தானே
கங்குல்கலைய மாட்டாதே கலந்தால்விரக மாட்டாதே
தளர்வாமிதனைத் திருத்தாயே தரளநகைமீ திருத்தாயே
சமரினுனக்குஞ் சடைவிலையே தவறுமெனக்குஞ் சடைவிலையே. (45)

### காமதேனுவுக்கும், வேளைமாநகர்க்குஞ் சிலேடை.
### கடைமடக்கு.

தருமச்சுவர்க்கம் பொருந்திநிற்குந் தழைக்குங்கோட்டைமுகங்காட்டுந்
தகவாணிறையின் பணிதழுவுஞ் சமயத்தமிழ்தன் பால்வழங்குங்
கருதிச்சொலுமிக் காரணத்தாற் காமதேனு வையுநிகர்த்துக்
கதிக்கும்புகழ் வேளைப்பதிவாழ் கனவேலப்ப சாமிநமை
மருவிச்சுகிக்க வருவதென்று மயலோமனங்க வருவதென்று
மயங்குமெனது பயந்தேற்றாய் வருத்தம்பலவும் பயந்தேற்றாய்
இருளைப்பெரிய தாக்கினையே யெளிதோமதன தாக்கினையே
யிடைவிடாதிங் கதிர்த்தேவே யெடுத்தெய்தனன்பைங் கதிர்த்தேவே.

சிந்தாமணிக்கும், வேளைமாநகர்க்குஞ் சிலேடை.
கடைமடக்கு.

அனந்தங்குதிரை யிடைவரலா
லழியாவெயில்சுற் றிடுதலினு
கனந்தருள் வேளைப்பதியிற்
கணைசற்குண வேலப்பனுறே
சினந்திங்கெளியேற் குறும்பேறு
தினநான் மனநொந் தானன்றோ
வினந்தன்கிரணம் பொழியாயே
யியம்பற்கரிது நின்றிருட்டே

லவ்வாளையுமே வியசிறப்பா
லணிசூழ்சிந்தா மணியுமெனக்
கவிநீர்த்திடக்கட் டியசெயகங்
கரன்மெச்சியவெண் கலைநிலவே
செய்தாயுனைக்கிக் குறும்பேறு
தெளித்தாற் சுகிர்தந்தானன்றோ
யித்நீயுமிழ்பண் பொழியாயே
யெனையச்சுறுத்து நின்றிருட்டே. (47)

முன் வீரலட்சுமிக்கும், குவளைமாலைக்குஞ் சிலேடை.
பின் சைவாசாரியனுக்கும், சந்திரனுக்குஞ் சிலேடை.

மருவுமடலு நலமதுவும்
வண்டர்பரவி வரத்தழைக்கு
மருமையிவையால் விந்தையென்றே
யணிசூழ்புய வேலப்பதுரை
பருவமடுவிற் படிந்துபொடிப்
பலகைபொலிந்தக் கரமஞ்சும்
மொருமைமனவா ரிதிமதிமீ
குதவிப்பரத னுயிதென்

வயங்கக்காட்டு முனைநோக்கும்
மானுருக்குட் சிறந்திலங்கு
யாருமதிக்கும் படிகுவளை
யன்புக்கிசைந்த வெண்டிங்காள்
மையும்பெற்றுருத்தி ரக்கமுற்றுப்
பயின்றேசைவப் பழம்பேர்ன்று
னுதயவலையாற் கவர்ந்துமதற்
னொழுங்கோவுனக்கீ துரைப்பாயே. (48)

முன் இருநிதிக்கும், குவளைமாலைக்குஞ் சிலேடை.
பின் இராமனுக்கும், சந்திரனுக்குஞ் சிலேடை.

முன்னுளம்போ திவருவதான்
முறையாகக்கண் ணணையுறலான்
சொன்னுவலர்வாழ்த் திருநிதிபோற்
தொடையற்புய வேலப்பகுலோத்
மின்னார்சடைவற் கலைபடைத்து
விஞ்சத்திரரா சியிற்பயின்ற
யென்னுடருமன் னதுநிசமே
திடுதல்வேண்டு மவற்குறவா

மூவாவண்டங் குலவுதலான்
முதிரச்சுகந்தந் தேற்றுகையாற்
றோன்றுநின்ற செழுங்குவளைத்
துங்கற்கிசைந்த தூமதியே
மிகக்கோதண்ட மேற்கொண்டு
விதத்தாலிராம னென்பருனை
லெதிருமீனக் கரனையடர்த்
யிருந்தாய்கருத்தே தியம்புகவே. (49)

## கடை மடக்கு.

வரிசைப்படி தெரிசித்தெழில் வலைபிற்சுழன் மடவார்
வயனத்தட நயனத்திரள் வலிதிற்பதி வனபோல்
விரிவுற்றிடு குவளைத்தொடை மிடைபொற்புய முடையான்
வேலப்ப குணாலப்ரபு மீதிற்பெரு மயல்கூர்
பரிவுக்கொரு புகலேயுள பகைவிட்டெதிர் புகலே
பாருங்கரு துகிலேயயல் பாயும்புனை துகிலே
யெரிவிப்பிது தணியேமுலை யிடைதப்பிய தணியே
யிந்தத்தென நில்வேதனை யென்றெய்த் திடுகிலவே. (50)

## திருமால் சக்கரத்துக்கும், குதிரைக்குஞ் சிலேடை.

## இடைமடக்கு.

அமரர்வணங்க விசையினுயர்ந் தறக்கண்டகர் யாரையுமடக்கி
யசையாமற்றன் றுணையைக்காத் தாடல்படைத்துத் திருமாலின்
கமலநெடுங்கைத் திகிரியைப்போற் கதிகொண்டுலாவி வரும்பரியான்
கருணைத்துரை வேலப்பகுண கனவான்மகிழுங் கதிர்மதியே
தமரதரங்கத் துடனேமெத் தகிரந்தரங்கத் தியதவள
சங்கவாரி யிடைத்தோன்றித் தழைவாரி யிறைத்திறைத்துப்
பமரமுயங்கும் புரிகுழலார் பலருமுயங்கும் படிகொடுமை
பண்ணுமுனையோர் தண்ணவனென் பறவுமுனையோர் படிற்றுரையே. (51)

## சிங்கத்திற்கும் குதிரைக்குஞ் சிலேடை.

## அடிமுதன்மடக்கு.

அங்கககத்தி னணிபெறலா லருங்கல்லணைகாட் டிவருதலா
லமர்வாயங் காக்குதலா லறமாவெற்றி யதுகொளலாற்
சிங்கநிகர்த்துப் பங்கமதத் திகளைத்துகளே செயும்பரியான்
சீர்த்திபுனை வேலப்பதிட செயபூபதிமேன் மயலாகிச்
சங்கமணைத்து மறந்துளங்க சங்கவிருக்கு மெனக்கேயித்
தனைவேதனைதந் தனைபலவந் தனைசொல்லினுமத் தனைமதியாய்
பொங்கவுதித்திட் டிளம்பிணைமான் போல்வாரையுமிப் படிவருத்தும்
பொருட்டாலன்றோ புவிபுனையம் புலியென்றிடுமெற் புதகிலவே. (52)

## முன் சரபத்துக்கும், குதிரைக்குஞ்சிலேடை. பின் கள்ளனுக்கும், சந்திரனுக்குஞ் சிலேடை.

முட்டைவிடுத்துத் தோன்றியதான்
முழங்கிக்கடுந்தோ கையினெழலான்
சட்டைவிசித்த மணிமார்பத்
சரபநிகர்க்குந் துரகதசுந்
வட்டையுருட்டு முலைநெருடி
வாங்குத்திரத்தி னொடுபயின்றும்
சூட்டையுடைத்துங் கனம்புகுந்துங்
கொடியேனருவ வுணர்வையுங்கைக்
முற்றுக்காலெட் டுண்மையினுன்
முறைசூழ்குஞ்சங் காக்குதலாற்
தரியாரெனுங்கே சரிகள்சிந்தச்
தரவேலப்ப தனதனைனை
மருவாநாள்வெண் மதியேநீ
வையத்துறக்கந் தெரிந்துவந்துங்
கொள்ளைக்கள்வ னாகினைபின்
கொண்டவியப்பென் கூறுவனே. (53)

## அடிமுதன் மடக்கு.

அண்டத்தணி தண்டைத்தொனி
யாடிக்குதி போடத்ததி
வண்டச்சம ரின்கர்த்தர்து
மாலச்சுவ வேலப்ப
கொண்டற்கிடை யும்பெற்றெழில்
கோவித்தனை நீதிக்கழ
கண்டற்பமு தங்கைத்தமை
காமற்கமை தீதிற்பழ
யண்டத்தணி விலதா
யாடிக்குதி ரிலைபோல்
வண்டச்சம துறநேர்
மகிபற்கிசை மதியே
கொண்டற்கிடை வருநீ
கோவித்தனை மதமா
கண்டற்பமு மருளாய்
காமற்கமை கருதே. (54)

## அடிமுதன் மடக்கு.

மனவேகமு மனுவாமென
மருளப்பல மொடுசுற்றிய
கனமேவர சரைமோதுபு
காமர்ப்பரி வேலப்ப
யனலார்கனை வடிவாலெளி
யாகாதக மீதோர்நிலை
யெனதாவலு முணராய்பழி
யினியாரரு குளபேரெனி
மனவேகமு முகில்வான்
மருளப்பல வகைவர்
கனமேவர் வுடன்மீள்
கனுளற்கிசை மதியே
யனலார்கனை முனிவா
யாகாதக குணநீ
யெனதாவலு நெடிதா
யினியாரரு ளினனே. (55)

அடிமுதன்மடக்கு.

என்றுந்திட முனிவோர்துதி | யென்றுந்திட விரைதே
ரெழுதூசியு மெழுதூசிய | தெனவேபணி மினவே
குன்றும்படி யுமுலாயமர் | குன்றும்படி யெதிர்பாய்
கோலப்பரி வேலப்ப | குணலற்கிசை மதியே
யொன்றுங்கன லிணைவீசினை | யொன்றுங்கன மறியா
யோகோதய வாகாய்பகை | யோகோதய ருளமேல்
கன்றும்பய வொருநூறுபு | கன்றும்பய னெனதிர்
கவடத்தன மடர்வுற்றமி | கவடத்தன தடமே. (56)

முன் மேகத்துக்கும், யானைக்குஞ் சிலேடை. பின் சிவனுக்கும், சந்திரனுக்குஞ் சிலேடை.

கோடுகடலை மருவியந்தக் | கும்பமுகந்து தடித்துவிஞ்சிக்
கோவந்திரக் கலகமிசைக் | கொண்டுதானங் குலவுதலா
னீடுபருவ மழைமுகிலாய் | னெருங்கிப்பகைவெம் பணிகள்சிந்த
நின்றுமுழங்கு மால்யானை | நிருபனொருபன் னிருகதிரும்
வாடுமருண கிரணமணி | மகுடமகவா னிடர்தவிர்த்த
மானபரன் வேலப்பதிட | மதிமான்மகிழ மானேந்தி
நாடுவிடையிற் பொலிந்துகன்னி | நயந்துகலந்து மெய்வெளுத்து
நம்பனிகர்த்த நீமதற்கு | நட்பாகியதென் னவின்மதியே. (57)

மந்தரகிரிக்கும், யானைக்குஞ் சிலேடை.
அடிமுதன்மடக்கு.

கனத்தகரமோர் பாற்பொருந்திக் | கடம்பமரமொய்த் திடத்தழைத்துக்
கடினப்புரசை யுடைத்தாகிக் | காலுயர்ந்தக் கால்வயங்கச்
சினத்தபனகந் தழுவியதாற் | சிகரப்பெருமந் தரநிகர்த்துச்
செறுநர்சேனைக் கடல்கலக்கிச் | செயம்பெற்றலவுந் திறற்களிற்றுன்
மனத்தி னினைத்த வினைத்துமரு | மனத்தி னவர்க்கு மிகத்தருசம்
மதிமா நிதி வேலப்பதிட | மதிமான் மயலால் வருந்தெனது
தனத்தை வளர்த்தாய் நான்பலதெந் | தனத்தை யலர்க்குத் தோற்றசின்னத்
தனத்தை யறியா யந்தோகந் | தனத்தை யொடுதோன் றியுஞ்சசியே.

## அடிமுதன்மடக்கு.

தரங்கத்தமர மெனவேயுந்
தரங்கத்தமர முறித்ததம்மாந்
துரங்கப்படையும் பொடித்தடர்சிந்
சுழல்குஞ்சர வேலப்பசெய
வரம்பற்றோனை முனிந்துதன்ம
வஞ்சமான வுனாதுகரு
பிரங்கச்சாடை சொலுமாரா
யென்னவாவு மெடித்துபகை
தரங்கத்தமர ருடைந்துபல
தரங்கத்தமர வீசிவந்த
துரங்கப்படையும் படியுழக்கிச்
துறையைக்கலந்து சுலிக்கமுன்னுள்
வரம்பற்றோனை வித்துநின்றாய்
வஞ்சமான மிலதுசிந்தை
பிரங்கச்சாடை கிழிக்குமூலே
யென்னவாவு மினிலவே. (59)

## உவமைவிலக்கு.

நரைக்கவடிவே படைத்ததன்றி
நாலுமருப்பு முகத்தேந்தி
நுரைத்தவொருவற் சுமந்தலைவ
வொக்குநமக்கென் றெக்களித்திட்
வரைத்திண்புய வேலப்பகுண
வருந்துமெனைநீ வருத்துவது
திரைத்தண்கடலு மூணக்காணிற்
சிறிதுமடங்கா தலறுமெனிற்
நடிக்கமடைந்து குணக்குடைத்தாய்
நாளுமிடிவெங் கொடியோனென்
றொழியாதயிரா வதமதுவோ
டுலவிப்பகைவென் றுளிர்யானை
மகராசனைக்கண் டாசைகொண்டு
மதியோமதியே வடவைவளர்
திகைப்பாலோடிப் பயமிகுத்துச்
சேரார்தமிலார் சேராரே. (60)

## திரிபு.

கவளக்கரு வமிகப்பணி
கறமுற்றட ருவதொத்தெதிர்
விவரப்பணி விலர்கட்கிறு
வேழப்ரபு வேலப்ப
யுவரிக்கடு வுனமெச்சுவ
ருருகாமன முடையாயிடர்
தவனத்திர விடைதொட்டன
தைத்தேறுவ சற்றேமய
திவளக்கரு மலைகால்
பொரமுற்றட மதனுல்
திவரப்பணி நிழல்பாய்
வினைதற்கிசை மதியே
தெவரிக்கடு மையினு
தருகாமன லவனே
னவனத்திர மவைநேர்
லைத்தேறுவ தரிதே. (61)

## இதுவுமது

நீடிக்கய மோடித்தனி சாடிக்கய தனின்மா
நீலப்புய னீவிக்கிரி போலப்புய வமரார்
வாடித்துள வீறிட்டுவி சேடித்துள களிறார்
மாலற்புத வேலப்பபு மான்மெச்சிய நிலவே
வேடிக்கைய தாகப்பிறர் கூடிக்கய வினராய்
வீதித்தலை யேசச்செயல் சோதித்தலை குவடா
மூடிக்கதிர் தூய்நிற்குநின் மோடிக்கதிர் கிலர்யா
ரோதித்ததி மோகித்தெனை வாதித்ததி தயமே. (62)

## இடைமடக்கு.

மதமைக்கடல் விதமொத்தெழ மலிகட்கன லதில்வாழ்
வடவைப்பொறி வடிவைப்பெற வகுலித்திர ளெனநேர்
சிதறித்தரி யலர்புக்கிடை திரியப்பொரு களிறார்
சீலப்ரபு வேலப்ப தியாகற்கிசை மதியே
நிதமித்தனை யெனவுட்பகை நியமித்தனை துயிலா
நிலைவஞ்சக மிதுதென்றலி னிகழ்வஞ்சக நினையா
யுதவித்திட மதைவிட்டெனை யுளைவித்திட வியல்போ
வுணர்வேனிலை சகியேனுன தொருவேனிலை யினியே. (63)

## கடைத்திரிபு.

வேந்தர்முதலோர்க் குளசகல விருதுக்கொடியுந் தனிற்படர்ந்து
மேன்மேலோங்கக் கொழுகொம்பாய் விளங்கித்தருமக் கற்பகத்திற்
போந்தகடவுட் காமவல்லி போன்றமேழிக் கொடிக்கதிபன்
பூமான்மகிழ் வேலப்பசெய பூமானிரண்டு புயதலமுங்
காந்தகிரியென் மனதிரும்பே கருவமுனக்கிங் கெனதிரும்பே
கைகூப்பினுநீ யிரங்காயே கருதுன்செயல்காஞ் சிரங்காயே
நீந்தலரிது மயலலையே நிதந்தீரிவ்வா றியலலையே
நெருங்குந்தென்றல் வெம்புலியே நீதிமறந்த வம்புலியே. (64)

## தேவர்களுக்கும், மேழிக்கோடிக்குஞ் சிலேடை.

### கடைமடக்கு.

முற்றுந்தருவா னலந்தழுவி
முறையினுகமுங் கண்டுநின்று
மற்றுன்றிமையோர் பலருமொக்க
வாகைபுனைவே லப்பதுரை
சற்றுங்குளிரா மதித்தீயே
தனிப்பொன்னிருந்த கவைத்தானே
சுற்றுங்கிரண வாவணியே
துதிக்கவெழுந்த வருந்ததியே
மொழியுமேரு வந்தடுத்து
முன்னிவந்திப் பார்க்கருவி
வளருமேழிப் பதாகைபிறன்
மயலான்மனச் வருந்துமென்பாற்
தமியேற்கிதஞ்சம் மதித்தீயே
தாய்தானென்னையேங் கவைத்தானே
சோர்ந்துகழுவ வாவணியே
துளக்கும்வசந்த வருந்ததியே. (65)

## கடலுக்கும், மேகத்திற்கும், முரசுக்குஞ் சிலேடை.

### அடிமுதன்மடக்கு.

வாரமலைபெற் றிடுமணத்தை
வானந்தாமை படைக்குமின்ன
சேரவுவமித் திடும்படிநித்
செயமும்முரசான் வேளைநகர்
யாரமுதிக்குமலை நெருடி
யருத்தியென்னை முயங்கினன்றி
தூரமதியை விடுத்தனைசிந்
சோமாதருக்கே னல்லபரி
வளர்க்குஞ்செல்வந் திடநேரும்
வகையாற்கடலு மழைமுகிலுஞ்
தியமுந்திடுதி டெனத்தொனிக்குஞ்
செழிக்கும்புகழ்வே லப்பதுரை
யாரமுதிக்குமலை யிதழை
யருத்தியென்னை யடங்குவதோ
தூரமதியை நுதல்வெயர்க்குஞ்
சோமாதருக்கே துயர்செயலே. (66)

## இந்திரனுக்கும்,பிரம்மனுக்கும், திருமாலுக்கும்,சிவனுக்கும், முரசுக்குஞ் சிலேடை.

நாகமடுத்துச் சக்கரத்தை
நல்லவாகை காட்டியிந்த
மோகமகவா னிகர்த்ததன்றி
முரசபதிவே லப்பனெனை
சோகமதனை விளைப்பதுவே
துரோகியான வுனக்கெவைநான்
வேகமுடனே தக்கனிட்ட
மேவோர்சாபத் தடிக்கடிபோய்
நாளும்படைத்து வார்பொருந்தி
நான்குவிதகா ரணத்தாலு
மும்மூர்த்திக்குஞ் சரியாயும்
முயங்கும்படிநீ முயலாமற்
தொழிலாக்கொண்டாய் துணிந்துகுருத்
சொலினும்பழிக்கஞ் சுதல்வருமோ
வெய்யசாப மேற்றுமின்ன
வெள்காதழுந்தும் வெண்மதியே. (67)

## வேறு மடக்கு.

விலகுந்தரி யலர்குன்றிடை விடர்தங்குக வறிவோர
மிகவின்பமுறு குகவந்திவண் விரவுஞ்சப மதனு
உலகம்பெரு குகமென்றதி மொழிமுந்துமு முரசா
மேனைதருந்தமிழ் வேலப்ப வதாரப்பரு குடையோன்
மலருந்தனி வடிவங்கொடு வளர்கின்றனை யதுமேல்
வழிதண்கதிர் பொழியுங்குண வகைகொஞ்சமு மறியாய்
நிலவன்பழி யலவாபொர நெடுவன்பழி யலவா
நீதந்தவி ரகமேமெனழு நீதந்தவி ரகமே (68)

## வேறு கடைமடக்கு.

குருவிணை கடவாத குணவான்றமிழ்நூல் கடவாத
கொடையால்வளர்க்குந் தருமதுரைக் கோன்வேலப்ப தருமதுரை
தெருவினூடு பவனிவரச் சென்றேன்மதனென் பவனிவரச்
செய்தான்மயலைப் பொறுக்காதே சிந்தைதிறஞ்செப் பொறுக்காதே.
கருவவாதற் சகமீது கனத்தாரெவர்வஞ் சகமீது
களித்தோசமைய மருங்கேது கலப்பாயுனக்கு மருங்கேது
பொருவதோயா தீங்குதித்தாய் பூவைபனையார் தீங்குறித்தாய்
புலம்புமெனக்கு மானலமே பொருத்தியருள்சோ மானலமே. (69)

## அடிமுதன்மடக்கு.

மலையே நிகர்த்துத் தினந்தொறுங்க மலையே யிருத்தற் கிசைந்துதெவ்வர்
மலையே தணித்து வறிஞர்பொரு மலையே விலக்கி மடந்தையர்பூண்
முலையேய் யணைத்துக் குவளையொடு முலையே மணக்கும் படிவளர்தோண்
முகில்வேலப்ப மகராசன் முகத்துக்கிளைத்த முழுமதியே
விலையே முடிக்குங் குழலவிழ விலையே யுணக்கத் தருகரும்பு
விலையே வளைத்துக் கடற்பெருந்த விலையே முழக்கிப் பொருமதன
னிலையே யகத்துன் னிலையேவே னிலையே நீயுந் தருவாயென்
னிலையே ததிற்சற் றருள்வரம்வி னிலையே நின்று ழலையேனே. (70)

## அடிமுதன்மடக்கு.

மனையே யெனப்பூ விருந்தவெம்மம் மனையே மனசு களிக்கவனு
மனையே நடத்தி வினையிலங்கை மனையே கணையால் வலியடக்கி
முனையே பெறுவீ ரியர்சூழ முனையே மூலகு மொருகுடைக்கீழ்
முறைகாத்தருள்வே லப்பனெனு முகிலுக்கிசைந்த முழுமதியே
சனையே குயில்காட் டிடக்கொடுவந் சனையே மிருக்து வருதிநே
சனையே னுறவு பிடிக்கனையேபோ சனையே பணிய தனைவிடுத்தா
னினையே வரும்போற் றவருடன்றான் னினையே பொரப்பெண் பழிவிளைத
னினையே நினைந்தால் விரகமத னினையே மையரை முனையாயே. (71)

## இடைமுதல் அடிமடக்கு.

அருமைத்தான தமிழ்த்திறமை யறிந்துதான வனிமதிக்க
வருட்சந்தான மெனப்புலவோர்க் கனந்ததான முபசரித்துத்
தருமற்புதசற் குணநிதியெத் தருமப்பயிரும் வளர்க்குமெங்கள்
சக்ரபதிவே லப்பதுரைச் சாமிக்கிசைந்த தனிநிலவே
வருமச்சமரு ளுனக்கென்ன வருமச்சமருள் விளைப்பாய்வீண்
மமதையாற்ற வனக்கொடுங்கா மமதையாற்ற வசமாமோ
வுருவக்கனலான் முனிந்தனையே யுள்ளமுலையு மெய்தானே
யுருவக்கனலான் முனிந்தனையே யுள்ளமுலையு மெய்தானே. (72)

## இடைமடக்கு.

### சொல்முரண்.

அலைசூழ்கடலை யடைத்திலங்கை யதையங்கடலை யாக்கியெதி
ரரக்கர்கடலை வளைப்பவடர்த் தமரர்க்கடலை விளைத்துநின்ற
சிலைவாழ்கரத்தான் சதுர்விததந் திரத்தானார்த்தான் வரத்தின்மிக்க
சேனாபதிவே லப்பகன சீமான்வரிலென் செய்யவல்லாய்
கலையாயறிவைக் கலைத்தாய்மால் காணாய்தணந்தார் கண்டாய்வெங்
கனலாய்மிகவுங் கனன்றாய்சீர் கல்லாயல்ல கற்றாயுண்
மலையாய்கமல மலைத்தாய்தேன் மணவாயாம்பன் மணந்தாய்போர்
மறவாய்பசுந்தே மறந்தாய்சொன் மதியாய்செலத்தா மதித்தாயே. (73)

## அடிமுதன்மடக்கு.

ஆனையிடர்தீர்த் ததிருமழை
யானைநெடுங்காண் டீபமுடை
மானையருளாற் புரந்ததிரு
மாலைப்புயவே லப்பசெய
தானைமிருத்த மதப்பாவி
தானையுருதத் தருமமறந்
யேனைமடவார் போலவெளி
"யேனையோவுன் காந்திசகி
யானைதருங்கோ பாலர்தமை
யானையடல்வீ டணையனு
மானையுரத்தி லிருத்திவளர்
மாலைப்பார்த்தேன் மனம்பார்த்துத்
தானைமலர்க்கு ளொன்றொழித்தெய்
தானைநிகர்த்தாய் நீயுமிங்கே
யேனைநினையா யறக்கொடுமை
யேனையெனத்தோன் றியமதியே. (74)

## சருப்பத்துக்கும் சந்திரனுக்குஞ்சிலேடை.

ஓடியெவியு மொதுங்கமருண்
வுடல்வானீண்டு வன்படங்கொண்
டாடிவருநேர் மையுந்தழுவி
தப்புற்றிருந்து சீறியெழுந்
பாடிமதுர கவிவலவர்
பதியீன்றெடுத்த நயருணவிற்
தேடியணைவ னுகிலென்ன
திடகொக்கோக காருடமந்
டௌமங்கையரத் தவளைசிந்த
டுரிமையாம்பல் வாய்விரித்திட்
யடருமால காலமுயிர்த்
தரவேநிகர்த்தா யானாலும்
பரவுமுதார நஞ்சயபூ
பனன்வேலப்ப சாமியெனைத்
செய்வாய்மதியே யவனுணர்த்துந்
திரத்தாலுனைநான் செயிப்பேனே.(75)

## சோதிடனுக்கும் சந்திரனுக்குஞ் சிலேடை.

குப்பல்சேர மருவலர்பொன்
குமரனருள்பூண் டிந்திரன்போற்
சுப்பரீய கனயோக
சொந்தத்துரைவே லப்பசெய
தப்பவோடு மங்கமஞ்சுந்
தாக்கற்காமக் கவடிநடை
செப்பமாகக் கணிதமுறுந்
சிறந்து மெனக்குச் சுபபலனைத்
குவித்துவணங்கக் கூவைமலைக்
கொலுவிற்றிருந்து கோன்முறைசெய்
சுமுகற்கிளைய துணைவனெங்கள்
துங்கன்மகிழுந் தூய்மதியே
தழுவிமேலோ ரையும்பார்த்துத்
தனைநேர்ந்தஞ்சா தகங்காட்டிச்
திடனுலொருசோ திடனெனவே
தெரிந்தேன்சொலாமற் சினந்தாயே. ()

## யானைக்கும் சந்திரனுக்குஞ் சிலேடை.

மயக்கோடுபய மெதிர்காட்டி
வானத்துதிக்கை தனைத்தழுவி
யயர்க்கமதமால் யானைநிகர்த்
தளர்பூவணைமேல் விழிதுயிலு
நயக்காதலினு லெனதுமுலை
நாளெலாமென் மனக்குகையி
செயக்கூர்வடிவேற் காதருணா
சிங்கங்கண்டு கொண்டாலென்
வளர்ந்துவருமத் தகம்படைத்து
வனமுமுலைத்துக் கனல்வீசி
தடர்க்கின்றனைவெண் சுடர்த்திங்கா
மமையந்தொறுமின் னருள்சுரந்து
நளிர்வெற்பிடமு நான்விழிக்கு
னடுவும்பொருந்தி நயம்பயக்குஞ்
செகன்மோகனவே லப்பதுரைச்
செய்வாயதனைச் செப்புவையே. (77)

## குறத்திக்கும் சந்திரனுக்குஞ் சிலேடை.

மலருங்கமலா சனமடந்தை
வரிசைப்பழநி வேலதுரை
திலகன்கவிஞர் தராதரங்க
செயவேலப்ப தயாநிதிபாற்
குலவுங்கலையே யடுத்துநிறை
குன்றிமாலை யிசைத்துவந்து
தலமெங்கணுமெச் சியகுறத்தி
தணித்தோர்குறியுஞ் சொலாதழன்றாய்
வளர்தஞ்சயவே ளவற்கினிய
மகிழ்சிற்றையன் மண்டலிகர்
டெரியுமருமை மதியூகி
சென்றமனத்தைத் தேடுமென்முன்
கூடைதாங்கிச் சிறந்துபின்னுங்
குணமாத்திரைக்கோ லங்காட்டித்
தனைப்போலிருந்து மெனைப்பார்த்துத்
சகியேயுனக்குத் தகாதிதுவே. (78)

## அடிமுதன் மடக்குத்திரிபு.

கந்தா கியதைத் தகர்த்துவிண்மே
கந்தா சலமே போற்றிரிந்து
தந்தாவளத்தை யடர்த்துவெல்லுந்
சத்ரபதிவே லப்பதுரைச்
வந்தானவனை முன்பார்த்து
வளைத்தான்சிலைய தாயாமல்
பந்தாமெனவே திரண்டதனம்
பரிந்தேனந்தோ மயற்கூடே
கந்தா னதிரச் செறுமிமத
கந்தாகவத்திற் கலந்தவொன்னார்
தந்தாவளத்தை நடத்தியெங்கள்
சாமிவீதி தனிற்பவனி
மகிழ்ந்தேன்மதனும் பின்பார்த்து
வளர்ப்பர்மடவா ரோயாமல்
பருக்குமுனக்கு முரண்டதனம்
பகையேன்றெடுத்தாய் முயற்கூடே.()

### இந்திரனுக்கும் பாட்டுடைத்தலைவனுக்குஞ் சிலேடை.

மடக்கு

சுற்றத்தவரெங் கணுநெருங்கத்
தொடர்கற்பகத்தா ருடன்மலியச்
கொற்றப்புயவே லப்பதிட
குரிசில்போலப் பவனிவந்தான்
மற்றக்குரிசில் வெளிவயிரம்
வைத்தானறிய வெனதுநினை
முற்றப்பகைப்ப தாகாதே
மோசமதியே வாதுதகு

தொகுபண்ணவர்கள் வாழ்த்தெடுப்பத்
சுபவாலிபமேற் கொண்டுகிமிர்
கோலாகலன்பொன் னுலகாண்ட
கும்பிட்டாசைக் கடல்குளித்தேன்
வைப்பதியற்கை யிவனதையுள்
வைத்தானறிய மாட்டாய்நீ
முறையீடேற்கா தாகாதே
மோசமதியே னுனைநானே. (80)

### வடவாமுகாக்கினிக்கும், சந்திரனுக்குஞ் சிலேடை.

கடைமடக்கு.

படர்தந்திடலாற் கொழுந்துகளைப்
பற்றியாழி நிற்பதனாற்
லடருங்கடின வடவைநிக
மதுகாணுருவப் பொருள்வெதுப்பு
சுடர்கொண்டெனைப்போற் கவற்றுதே
சோமனீயிப் படிப்போரே
திடமூர்ந்திடவாழ் வேலப்ப
சீமானருளுஞ் செய்யானே

பாரிக்குதலால் வெம்புகையாற்
பலமாதரையு முருக்குதலா
ராகுமொருபோ துனக்கெனலா
மல்லதருவ வறிவினையுஞ்
துளிக்கண்ணீர்பார்க் கவற்றுதே
தொடுப்பதெனநற் படிப்போரே
சியிரோர்தமையான் வேலப்ப
செயில்வேள்கணைநெஞ் செய்யானே.()

### அடிமடக்குங் கடைமடக்கும்.

பலக்குஞ்சரமுஞ் செயநாடும்
பலக்குஞ்சரமுஞ் செயநாடும்
துலக்குங்கவிநா வலர்க்குதவு
சுதனுகியவே லப்பகன
கலக்குங்கிரண தானவனே
காமக்கடற்பண் பெண்ணுன
விலக்குங்கரமு மஞ்சரியே
மேனிமெலிவுங் கண்டாயே

பரியுமணியு மாடைகளும்
பரியுமணியு மாடைகளும்
சுமுகவிலாச நஞ்சயவேள்
துரைதானென்னைச் சுகியாநாட்
கவடவினைசெய் தானவனே
காயேவினிப்புன் பெண்ணுன
விரிப்பிற்புலரு மஞ்சரியே
வெய்யோன்வரிலிங் கண்டாயே. (82)

## கடைத்திரிபு.

| | | | |
|---|---|---|---|
| மெய்தேர்பழுநிக் | கந்தனமே | வியதாள்பரவிச் | செந்தனமே |
| வித்தைக்கருள்வே | லப்பகன | வேங்கையெதிர்ந்து | வந்தனமே |
| செய்தேன்மிகவிம் | முந்தனமே | தேமற்பலக | லந்தனமே |
| தினிசொல்வதுநித் | தந்தனமே | தெரியேன்சகிமார் | தெந்தனமே |
| பொய்தானுடைய | துந்தனமே | பூசவெறுக்குஞ் | சந்தனமே |
| போகிற்கனற்று | நந்தனமே | பொருந்தாதளக | பந்தனமே |
| மெய்தான்மதன்பூ | டொரந்தனமே | விகலுமவன்ச | யந்தனமே |
| யிந்துவேசீ | யிந்தனமே | யிளகும்பணிப்போற் குந்தனமே. (83) | |

## கடைத்திரிபு.

| | | | |
|---|---|---|---|
| வந்தாள்செனப்பொன் | மேதகமே | வலர்வைத்திறைஞ்சப் | போதகமே |
| மகிழ்ந்தேறியவே | லப்பகுண | மகிபனெனக்குட் | பேதகமே |
| தந்தான்மிகுத்த | தோதகமே | தாய்க்குச்சுபாவ | சாதகமே |
| சரசச்களபச் | சேதகமே | தனத்தில்விளைக்கு | மாதகமே |
| யந்தாமரைப்பன் | ஞேதகமே | யானேன்கசக்கு | மோதகமே |
| யரைக்குணிலாது | வேதகமே | யவிழ்ந்தரித்த | பீதகமே |
| சிந்தாமதற்குக் | காதகமே | செய்தோன்மணங்குன் | றுதகமே |
| சேர்ந்தும்விடாய்வெம் | பாதகமே | திங்களுனக்கிங் | கேதகமே. (84) |

## விலக்கு.

திருமாலெனலா மவன்களிறார்
சிவப்புநிறமே தவற்கனங்கன்
வருவானிவனு ரெனமடவார்
வந்தான்பவனி தொழுதுநின்றேன்
யருமாமறைதே ரத்திரிப்பே
மனையனியற்கைத் தொழில்களைவிட்
பருமீன்மகர நண்டுமுண்டு
படர்தேளையுங்கைக் கொண்டுமற்றும்
செல்வனலனிந் திரனுகிற்
சிலைவேள்யானுஞ்செய் தவப்பயன்போல்
மயங்கவளர்வே லப்பதுரை
வழுவோவிதுவேன் மலைந்தனைநீ
ரந்தனுளன் கணிற்செனித்து
டாடுமாடு மார்ந்தகன்றிப்
பழகிச்சிங்கத் தையுமடுத்துப்
பார்க்கும்பாவிப் பழிநிலவே. (85)

தலைவிக்கும், சந்திரனுக்குஞ் சிலேடை

அடிமுதன்மடக்கு.

மாரா தீரா நதிகுலசோ
மாரா குவளை மலர்ச்செழுந்தா
தாரா தார நிகர்த்துதவு
தனைப்போற்றினர்மங் கையர்பலருஞ்
றீராமைய னன்படைத்தேன்
சேலையணைவாய் நான்விடுப்பேன்
பேராநிலத்து நானிருப்பேன்
பெருமான்பவனி லாநீயெப்

மாரா மானஞ் சயமால்கு
மாரா னுலவசே கரசதுரா
தாரா வெனவே லப்பதுரை
சந்தித்தவன்சுந் தரம்பார்த்தேன்
றீராமைய னீபடைத்தாய்
சேலையணைவாய் நீவிடுப்பாய்
பேராநிலத்து நீயிருப்பாய்
பெருமான்பவனி கண்டாயே. (86)

கடைமடக்கும் இடைமடக்கும்.

கவளக்களிற்றின் மும்முரசங்
கறங்கத்தவிலு மருங்குழலுங்
குவளைப்புயவே லப்பதுரை
கும்பிட்டனர்மங் கையர்பலருந்
றவளக்கலைபா னிறைநிலவே
தக்கவரையுங் காணேனெத்
வெவருக்கோது வேனிதைம்பா
னிச்சையொருவ ரடக்குவதோ

கங்கொம்புறுமி மும்முரசங்
கதிக்கவிசைத்தேன் மருங்குழலுங்
குமணனெனவே பவனிவந்தான்
கும்பிட்டனர்நான் கூடநின்றேன்
தமியேற்கலையா நிலைகாட்டத்
தனைநாள்வரையுங் கனல்வாயோ
விணங்கக்கோது வதுந்தவிர்ந்தே
விரங்கியொருவ மாட்டாயே. (87)

தூது.

தாவியுலகெங் கணும்படர்ந்து
சமுகந்தனிற்சென் றிசைவுபெறத்
வாவியனமுண் டகம்பயிலு
வளர்நந்தவனந் தவிர்க்காது
கூவியலைமென் குயில்காமக்
கொஞ்சுங்கிளிபோர்க் குதிரைதென்றல்
மேவியிவையன் புடனுதவ
மெலியும்பொழுதிங் கெனக்குமுன்னோர்

தழைக்கும்புகழ்வே லப்பதுரை
தக்கதூது விடுப்பமெனில்
மலைவாயிருக்கு மயில்பூவை
மழைக்கார்கொடையாற் பயம்படைக்குங்
கொடியவிரோதிக் குரியசின்னங்
கொடிஞ்சித்தேர்வண் டவன்சிலைநாண்
விரையாவெனவே நான்வருந்தி
மின்வந்தடுத்தாள் வெண்மதியே. (88)

ஓர்கும்பமுமோர் மீனமுமுள்
றுடையாயதானுமுடையாண்மற்
சீர்கொண்டிருகாற் கிரண்டுதிக்க
செழுங்கற்கடகம் படைப்பள்பின்னுஞ்
நேர்கின்றவள்வெம் பணியிரண்டே
நிறைத்தாளதனு னிலைவேலவே
தார்மென்கொடிவே லப்பதுரை
தவிர்த்தென்றெனக்காந் திடம்பிருக
நினக்கிவ்விரண்டுன் டவட்குவில்லையன்
றொருகற்கடக வரிமைபெற்றாய்
சிறப்பன்றியுங்கைத் தலத்துமிரு
சிலராசியினைப் பலராசி
நீகாண்பனபொற் பணிபணங்க
நிலாவை நிலானுக் கத்தகுந்த
தந்தவிரகப் பெருமூர்ச்சை
சஞ்சீவனிபோன் றனள்சசியே. (89)

## படக்கு.

மின்னனிகர்த்த வவள்பார்த்தென்
வேளைமனது விருப்பென்றாள்
னென்னவருத்த மொழியென்றா
னெல்லாங்கூடச் செய்தியென்றா
னன்னநடப்பைந் தோகைகுறிப்
தடர்திங்காள்வே லப்பதுரை
மன்னவுனைக்கண் டுருகியபன்
வாட்டந்தவிர்க்க வேண்டுமென்றான்
மீறுதயவா யானுனக்கிவ்
வேளைமனது விருப்பென்றே
னென்னவருத்த மொழியென்றே
னெங்கோன்கூடச் செய்தியென்றே
பதனுற்குறிப்பை யறிந்துநகைத்
யருமைக்கொலுவற் றடிவணங்கி
மாதர்தமிலோர் சித்தினிப்பெண்
மதியூகியுஞ்சம் மதித்தானே. (90)

## தலைவன்புரிந்த தண்ணருள் கூறல்.

மாலைநினைத்தேங் கினளெனவவ்
மாலைகொடுத்தான் வேலப்ப
வேலைகடக்க வணிகலமு
வெல்லும்படிதானையுங்கொடுத்தான்
காலைதனிற்பூத் திருந்தசெழுங்
கனியப்புறஞ்சோர்ந் தனதேடிக்
சோலைமலர்ப்பஞ் சணையடுத்தேன்
றுயின்றேன்சிறிதங் கெனதாசைத்
வனிதைதொழுது சொலக்குவளை
மகிடனதுவன் றியுமதன
மேன்மேற்கொடுத்தான் பகைமுழுதும்
மீண்டகுயிலா வனைவைபெற்றுக்
கமலம்போல முகமுநெஞ்சுங்
களபமுலைமேற் கச்சுமிட்டுச்
சேற்றுறனுகி மதனுநின்றான்
துரைவந்திடக்கண் டேன்மதியே. (91)

மனதுகனிந்து கனவில்வந்த மகராசேந்த்ரன் மலரணைமேல்
வனிதிலடுத்தென் றனையெடுத்து மடியிலிருத்தி முத்தமிட்டுக்
தனதுகரங்க ளாலுடம்பைத் தடவிவருத்தந் தனைத்தணித்துத்
தயவாய்ப்பேசிப் பரிமளசந் தனங்கள்பூசித் தார்சூட்டி
ஏனதுசிவந்த வாய்க்கினிக்க வேலவிலவங் காதிகள்சேர்த்
திருந்தசுருளுந் திருந்தவளித் திட்டணைத்து நிறைவேற
வுனதுமதம்பின் னிடத்திடம்பெற் றேங்கும்புயவே லப்பதுரை
யுசிதக்கலவி செயத்தொடுத்தா னுலகினதற்கொப் பிலைநிலவே. (92)

## கலவிச்சிறப்புரைத்தல்.

### அடிமுதன்மடக்கு.

கலையு மிரவிக் கையுமணிமே கலையு நெகிழ்த்தா னெகிழ்ந்தவுடன்
கனத்தைக் கடித்தேன் பலவாலிங் கனத்தைத்தொடுத்தான் சனம்படைத்தேன்
பலையு மிதழிற் பதித்தான்சோம் பலையு மறந்தேன் பருவமதிற்
பனகபடத்தை நெருடினிவிற் பனகபடத்தை விடுகனக
மலையு மமுத கலசமுநேர் மலையு முலையைப் பிடிகசக்கு
வாய்க்கு ளமைத்துச் சுவைதிருத்தி வாய்க்கு மெனக்கை மலர்குவித்தே
னலையு மனமு நிலைபெறநா னலையு மகிழும் படிதயவா
யாசைத்துரைவே லப்பனெனை யணைந்ததென்சொல் வேன்மதியே. (93)

### அடிமுதன்மடக்கு.

கனக புயத்தி லணைத்திரண்டு கனக வுளையுஞ் சுவைத்தலர்கோ
கனக விழிநாச் சுழற்றியனங் கனக மலைக்குங் கடிதடமாம்
பனக மிளக்கிக் கழுத்திளஞ்சோ பனக முகினிற் புட்குரலென்
பனக வினப்பற் பலவுறுப்பிற் பனக மழுத்திப் பரிமளசந்
தனக லவைமேற் றிமிர்ந்தேமெத் தனக வணிதாங் கியபருவ
தனக லசங்கைக் கொண்டுபொருந் தனக ராதென் றனைமயக்கி
யனக குணவான் குபேரவுனை யனக விகைவே லப்பதுரை
யருமைக்கலவி நடத்தினன்மற் றதுசொல்லுவதற் கடங்காதே. (94)

## வேறு.

அரிதாகிய மதனைகம
லறிவைக்கரி கரவிக்கைதயி
வரிமாமுலை யுரமேபொர
மறுகத்தொடை யிறுகத்திரள்
புரியோதியி னிறைசேதெரு
பொழுதொத்திட மருவிப்பல
விரிமோகன விதுவேயெனை
மிகவுந்தய வொடுகொஞ்சிய
வறுபோகம துளதா
னமையப்பணி முதிரா
வனையோவிட விடைநான்
வடமுத்துக மலர்சூழ்
புறமீதெழ நயநேர்
புதுமைத்தொழில் களினல்
வேலப்பம கிபன்
விதமிங்கித விதமே. (95)

---

மாமக்கிரி நாணித்தடி
வளருந்தன ரதியுஞ்சிலை
நேமப்படி சோதிப்பை
நிலைகண்டுப ரதிகொண்டிரு
காமக்கடல் பாயத்தரு
கலவித்தொழின் முடிகிச்சுப
தாமப்புய வேலப்ப
தருமெத்தையி லெனைமெச்சிய
மாறத்தகு வனவாய்
மதனஞ்சரி யெனவே
நிதானித்தமு துளதோர்
நினைவுங்கனி வுறநீள்
காதெத்தனை தரமோ
களபப்பரி மளமார்
தயாளப்ரபு வணிகூர்
ததிநற்றதி மதியே. (96)

## கடைமடக்கு.

---

கடற்கண்மடவார் நிதம்பரதங்
கைக்கொண்டடங்காத் தனவானை
யடர்க்கவவன்பின் காட்டியது
மாரவார முழக்கியது
திடத்தபுகழ்வ் வேலப்ப
சியபூங்குழலைக் கோதியதுந்
தொடக்குமெனது தவர்தவமே
தொடுக்கார்பிறர்வன் மங்களமே
கருதுசமுக னிதம்பரதங்
கடவிக்கயற்கே தனவானே
மசையாமணியங் காட்டியது
மணைத்தேர்சங்க முழக்கியதுந்
சீமான்றிரும்ப வேலப்ப
திங்காள்சிலநன் கோதியதுங்
தோன்றுதினிமுந் தவர்தவமே
சுகித்தவகைமா மங்களமே. (97)

## தலைவிக்குஞ் சந்திரனுக்குஞ்சிலேடை.
### அடிமுதன்மடக்கு.

மருவினுயர்ந்த மலரணைமேன்
வாசமாயென் கண்மணியே
யருமைமடிக்குள் வைத்துவெயர்
யப்பான்மருங்கிற் கலைசூழு
பெருகவளைகங் கணம்பொலியப்
பெற்றுத்தழைக்க மாலைமூந்தப்
தருமநிதிவே லப்பதுரைச்
தரக்கண்டுவந்தே னமிற்பேதஞ்
மருவிலகந்துய்த் ததிகவிசு
வாசபாசென் றென்னைமெச்சி
வகற்றிக்கலவி யினைப்பாற்றி
வலைவார்முறைநின் றிடவாரம்
பெருங்கற்கடகஞ் சேமகரம்
பின்னவிலங்க வலங்கரித்துத்
சாமியெனக்கு முனருதன்மை
சற்றுமிலைக்காண் சந்திரனே. (98)

### கடைத்திரிபு.

கருணைபுரிந்த வப்போது
கங்குலகலச் சங்கதிருங்
மருவிமகிழ்ந்த சொற்பனத்தின்
மணிகால்புகவேர்க் காளைநகர்
நிருபனுயர்ந்த கூவைவரை
நெஞ்சனனந்தேன் பாலப்ப
பருவமுகுந்த னேர்வந்தான்
பலித்ததெனநான் றண்ணவனே
கயவரறிவை யொப்போது
கடற்றோன் றியநு செங்கதிரு
மகிமைபிசகா மற்பனத்தின்
வளநீர்வயல்சூழ் வேளைநகர்
நின்றகுகன் றூட் பூவைவரை
நீத்தார்க்கருளும் வேலப்ப
பார்த்தேனெழுமு ஞர்வந்தான்
பணிந்தேனெவர்க்குங் கண்ணவனே. ()

### வாழி.

தயவோர்வடிவா மமிர்தகுண
ததியேநினைத்த படிசகல
லயன்மால்பரவுந் திருச்செங்கோட்
யருமைப்பெரிய நாயகியு
செயமேபுனையுங் கூவைமலைச்
திருவுந்தமிழ்வா ணியும்வாழி
வயல்சூழ்வேளை மாநகரில்
வாழிகிளைஞர் வாழிபுகழ்
சரசத்துரையைத் தெரிசித்த
சவுபாக்கியமுந் தழைத்தனவா
டர்த்தநாரீ சுரன்வாழி
மத்தனூரம் மையும்வாழி
செவ்வேள்வாழி முகில்வாழி
தேவர்முதல்யா வரும்வாழி
வளர்வே லப்பமகராஜன்
வளமைபலவும் வாழியவே. (100)

சந்திரவிலாசம் முற்றிற்று.

உ

முருகன் றுணை.

# தனிச்செய்யுட்கோவை.

மாட்சிமைபொருந்திய இராமநாதபுரம் சமஸ்தானம்

## ஸ்ரீமாந் பொன்னுச்சாமித்தேவரவர்கள்

மஹாசமுகத்திலியற்றிய சிங்கார ரசமிக்க

# செந்தமிழ்க்கவிகள்.

## திரிபு.

தலைவி பாங்கியிடந் தன்னிலைமைகூறித் தூதுவிடுத்தல்

வன்னவிலக் காமனம்பு மலரெளிதோ முலைகளவை வந்தெப்போதுந்
துன்னவிலக் காமனம்பு துநற்கனியும் வெறுத்தனளீ துபிரயாச
மென்னவிலக் காமனம்பு மென்சொல்பொன்னுச் சாமிமன்ன னெனுநரேந்த்ரன்
முன்னவிலக் காமனம்பு ணுமுனெனைக் கலந்துகொஞ்சி முயங்கத்தானே.

தோழிதலைவனிடஞ் சென்றுகூறல்.

மருவமருந் தனங்கனக வனமுலைகண் முழுதுமிருண் மதமாவேறி
வெருவமருந் தனங்கனக மிகுத்தகணை புகுத்தவுனை மேவற்கீதே
பருவமருந் தனங்கனக படிசகியென் றிரங்குமிவள் பயந்தீர்ப்பாய்கந்
தருவமருந் தனங்கனக சரந்தமிழோர்க் குதவுபொன்னுச் சாமிமாலே. (2)

இதுவுமது.

மனத்தடங்கா வுனதுமயல் வலைப்புகுமான் வசந்தமென வந்தபூஞ்சந்
தனத்தடங்கா வெம்புலிக்கு மம்புலிக்கு மயங்கியஞ்சத் தகுமோ காப்பாய்
கனத்தடங்கா முரசதிர்மங் கலசமுக முகசலச கன்னா முன்னாட்
சினத்தடங்கா தலித்தகஞ்சற் செயித்தபொன்னுச் சாமியெனுஞ் செங்கண்மாலே.

இதுவுமது.

குடங்கனக வடம்பழகு கொங்கைசெங்கை பங்கயங்கைக் குங்கோன்மீனப்
படங்கனக மருண்டவிழி யெனுங்குயில்வந் தனள்கலந்து பலகிரீடை
தொடங்கனக குகன்கருணை துலங்கிவளர் நலங்கிர்தமெய்ச் சுகுணலோலா
தடங்கனக சயிலபுய சௌரியபொன் னுச் சாமியெனுந் தளசிங்கேறே. (4)

நங்கையின்றுயரறி நற்றாய்கூறல்.

மகரவட நெடுங்கொடிமன் மதனெனது மகண்மனத்தை வலிமையேமிக்
ககரவட ரெனக்கவர்ந்தா னதையிவள்பெற் றிடவருளிக் காப்பாய்முந்நீர்
நிகரவட மொடுவளைந்த நிருதர்படை முழுதுமன்று நெளியவில்லேந்
துகரவட சயிலபுய சுமுகபொன் னுச் சாமியென்னுந் துரைச்சிங்கேறே. (5)

இதுவுமது.

பொருகரும்பு நெடுஞ்சிலைவேள் பூட்டியமர் காட்டியடர் போட்டிதன்னுன்
முருகரும்பு குழன்மாதுன் மோகமுற்று வருந்துவது முறையோகாப்பாய்
பருகரும்பு தியவமுதப் பசுந்தமிழோர்க் கிசைந்தமனப் படியேயாவுந்
தருகரும்பு னிதமுகிலே சௌரியபொன் னுச் சாமியென்னுஞ் சீரதமாலே. (6)

மகணிலையறிந்து தாய் வண்டுகேட்குணர்த்தல்.

பொருகுவட னயகளிற்றில் வந்தபொன் னுச் சாமிமன்னன் புயங்கண்டாளாம்
பெருகுவட கலைக்கொருதண் பெருங்கடலா மெனதுதவப் பேதைபூங்க
திருகுவட முலைகள்விம்மித் தியங்குவள்சந் திரனையுஞ்செந் தீயென்றேசி
யுருகுவட ருமமுமக்குண் டுற்றதையங் கவர்க்கனிகா னுரைசெய்வீரே. (7)

மன்மதோபாலம்பனம்.

வருமதனு நினைச்சிலர்தண் மதிக்குடையோ னென்பரது வழுவேமாதர்ப்
பொருமதனு நீவருமம் புரிவதெலாம் புரிவிரிநீர்ப் புவனங்காக்குந்
தருமதனு திபதிபொன் னுச் சாமிசெழுங் *கத்திகைதான் றருமேலன்றுன்
பருமதனு கம்புகரும் பைங்கழைவிற் கொருநாளும் பயப்படேனே. (8)

தூதுசென்ற தோழிகூறல்.

வண்டனங்க மிலிநிலவு வலிதுதென்றற் புலியெனமான் வருந்திச் செங்கை
வண்டனங்க ணிகள்களப வகைவெறுத்து மிகவுனது மயலினுற்று
வண்டனங்க மலரணையு மறந்தனண்மற் றிவள்முகம்பார் வாணர்க்கென்றும்
வண்டனங்க வரிசிவிகை வழங்குபொன் னுச் சாமிமன்னு மதிவல்லோனே. (9)

* கத்திகை = மாலை.

## சமஸ்தி 7 சந்தனம் வந்த கட்டளைக்கலிப்பா

கந்தச்சந்தன மெய்யிற்பொருக்கெழுக் கனவசந்தனம் பாலுன்றன்மோகமே
முந்தச்சந்தன மேவிச்செங்தேனும முதுங்கசந் தனவென்றே மயங்கினள்
இந்தச்சந்தன குந்தளப்புனை தெழுகச்சந்தன மின்னிவட் குச்சுகந்
தந்தச்சந்தன தெவ்வமுந்தீர்ந்திடத் தயவுகூர்பொன்னுச் சாமிநரேந்த்ரனே. (10)

### வேறு.

வனமாதங்க மேயமுதேவன தென்னாட்யாதெம் பிடத்திற் சொலற்கென்ன
மானமாதங்க வத்தைதையிதென வழுத்துகென்றனை மார்வேண்ட நின்மய
லானமாதங்க மெல்லாங்குளிர்ந்திட வனைதுவாயொன்ன லார்படை வென்னிடத்
தானமாதங்க மேறிடாத்துமல் தரபுயாபொன்னுச் சாமிநரேந்த்ரனே. (11)

### மடக்கடிவிருத்தம்.

மருவிரி பந்து வெருவுற நொந்து வலைசிமிழ் கடைபட முந்து
வடகிரி கோடத் தடமுகை வாட மருண்டெம் பரஞ்சுழன் றூடப்
பருமணி பொறுத்துக் கருதுகச் சறுத்துப் பனைத்தொளிர் கண்கறு கறுத்துப்
பவத்தொடர் நீங்கும் தவத்தரு மேங்கும் படியடி படர்ந்தடர்ந் தோங்கும்
இருமுலையிருந்து மொருமுலைபொருந்து மெழின்மதன் வரவிவள் வருந்து
மியல்கொள லைமா நயகுணசேமா வின்பநன் கருள்செழுந் தாமா
தருவெனுமேமா பொருபலவீமா சகமெலாம் பணிரகு ராமா
தனையமன் மின்னுக் கிசையபுயபொன்னுச் சாமிரா ஜேந்த்ரவித் தமனே (12)

### காலந்தாழ்த்துவந்த தலைவி காரணங்கூறி வேண்டுதல்.

வருந்தவனை தவிர்கவிக்கு மகுட முன்னாள்
வழங்கினையச் செழுங்கருணை மதித்துத் தான்யான்
பொருந்தவனை யொருவிவிரை வினில்வா ராது
போதுகழித் தனனிதனைப் பொறுத்தல் வேண்டும்
திருந்தவனை கருங்கடலிற் புரிந்து சென்று
தீயவரக் கியர்ப்புவியின் றிரள்வாய் மான்போ
லிருந்தவனை யொருங்கவுட னிலங்கை சாய்த்த
விறைவபொன்னுச் சாமியென்னு மியல்வல் லோனே. (13)

### ஒப்புநலங்கூறி யுரிய தாய் வேண்டல்.

கனகவனத் தானைதனைக் கடிந்துமுலை வளர்ந்துமையல் காட்டி நாளும்
பனகனண்ணி யமலைகைத்துப் பசுவடுத்தே மலையேந்தும் பண்பான் மாலாம்
எனதுதவப் பேதையைவே ளென்பவனம் மானெனவு மிரங்கா தெய்தாற்
றினமுமெவ்வா றதுசகிக்குஞ் சேர்திபொன்னுச் சாமியென்னுஞ் செயசிங்கேறே

## தலைவியின்; பரிசெலாமுணர்ந்த பாங்கிசென்றுரைத்தல்.

படிபுகழ் நிதம்பத்துப் பணவரவுற் றிருந்துமிளம் பாவை நல்லாள்
வடிவுபெறு மதனனென வளர்நினது புயந்தழுவா வகையான் மிக்க
மிடியரென நெடிதுருகி மெலிகுவளோ விவண்முகம்பார் மின்னு ரொன்னார்
தடமகுட முடிதடவு சரணதிவ்யா பரணபொன்னுச் சாமி மாலே. (15)

## சமையல் விவரங்கேட்டபோது சொன்னது.

முதிர்கொடிக்கொத் தவரைக்காய் கத்தரிக்காய் நண்பருப்பு மூலைமாதஞ்சி
மதிமிகவு மிளகுரச மாகிமத னெய்ததியால் வருந்துவாளோ
கதிர்குலவு நினதுபுயக் காமருபூந் தாமமருள் கவிஞர் நாளுந்
துதிபுதுவைப் பதியதிப சுமுகபொன்னுச் சாமியென்னுந் துரைச்சிங்கேறே. (16)

### உவமை விலக்குகள்.

### சந்திரன்.

தலைமைபெறு நிருபர்சிகா மணியாய்ச் சான்றோர்
தமக்கணியா யுதித்தபொன்னுச் சாமியென்னுங்
கலைநிதியே கலாநிதிநின் முகம்போ லென்பர்
கவிஞர்சில ரதுநிதமிக் கவின்கொள் வாமென்
றலைஃதினிடைப் பணிந்துப்படிந் தெழுந்து மாசோ
டாமைகண்டு வெள்கிமெலிந் தறவுங் கூனி
மலையுமல துனதுமுகம் போன்று வெய்ய
வனுக்குமருக் கலியிருளை மாற்றிடாதே. (17)

### கலைவாணி.

வரமுயர்தென் புதுவைப்புரி தவத்தின் சீரால்
வந்தபொன்னுச் சாமிமன்னு வளருன் கல்வித்
தரமுணர்ந்து வியந்துதமிழ் மடந்தை தானுந்
தன்மெய் வெண்மை யாகிவெறி தவழும் வண்டர்
பரவுமல ரிடைக்குடிபுக் கிருந்துமேலாம்
பயனிலமா யினமினியப் பயன்கொள் வாமிந்
நரபதிபா னமையிவரே பெற்ற தாதா
நாமகளே யாமெனநின் னுவுற் றுளே. (18)

## அறுமுகன்—குறுமுனி.

தடசயில புயபொன்னுச் சாமிமன்ற நினதுகல்வித் தரத்தா ஞானி
யடலுடைய குகனுமறு முகங்காட்டி யையனென வமர்ந்தா னன்றிக்
குடமுனிவ னுந்தமிழி லாங்குவடி மேவிபின்னங் குறுகு வானேற்
புடவிதனி லெவருளர்நற் புகழ்வளரு முனக்குநிகர் புகலற் கம்மா. (19)

## காமதேனு.

குடிலநெறி பயின்றுபுலை விரும்பிமட மிகுந்துபயங் கொடுமுட் டுற்ற
கடியசுர பியையடைவோர் கருதுபொருள் பெறுவரெனிற் கபட மின்றிப்
படிமொழிதப் பாதுதிறல் பழுத்தமர்வென் றனந்தநிதி படைத்த நின்னை
நெடிதுறுவோ ரெவைபொருந்தார் நேமபொன்னுச் சாமியென்னு நிருப ரேறே.

## கற்பகதரு.

உவந்து வந்து தாழ்வாரோ ருருவுகொளக் கடியவல ருடைய தாக
நிவந்து வெம்பா மரமெனவாழ் கற்பகமுற் றவரேபன் னிதிகொள் வாரேற்
பவந்த விர்மே லவர்பயிலப் பழிமு னிந்து மதிச்செழுங்கற் பகமாய்ச் சீர்த்தி
துவன்ற பொன்னுச் சாமிமன்ற நினையடைவோர் பெறும்பயன்யாஞ் சொலற்பாற்றோ.

## மழைமேகம்.

கருவிமுகில் கடல்கவர்ந்தோர் பருவமிரும் புனல்பொழியக் கற்றே மல்லான்
மருவுபிறர் பொருள்விரும்பா தநுதினமு நவமணிபொன் வாரி வாரித்
தருமுசித சமுகபொன்னுச் சாமிமக பதிசெழுங்கைத் தலம்போ லேமென்
றுருவமிகக் கறுத்துவெற்பி னூடொதுங்கிப் பனித்துவிண்சென் றுறைபு மாதோ.

## இராஜசமுகத்தின் பெருமை கூறியது.

மங்கரிய பங்கவிடர் வெங்கலியின் முங்கலுறு வார்மீளற்குன்
பொங்கவக ளங்கசமு கங்கருணை வங்கமது போலுமாலோ
கொங்கர்சக ரங்கர்கள்க லிங்கர்பல ருங்கரமுன் கூப்பக்கீர்த்தி
தங்கவளர் துங்கஜய சிங்கமென்னு மெங்கள்பொன்னுச் சாமிமாலே. (23)

## படிகேட்டுக்கொண்டது.

வடிகொளமு தனையபல கலையுமுணர்ந் தடைகுநர்ப்புன் மருளாங்கங்குல்
விடிதரநன் கருள்செயுநின் பெருந்தகைமை யறிந்திருந்தும் விருப்பாலென்னம்
படிபடியென் றடிக்கடியெப் படிமொழிவல் படிமகிழும் படிநாடோறும்
நெடியபுகழ் வளர்க்குமறு நீதபொன்னுச் சாமியெனு நிருபரேறே. (24)

படியளவுசெய்யக்கேட்டது.

கனப்படியா மிதுவெனும்பொற் கமலகர தலசுமுகா கனிந்தசெந்தே
னெனப்படிவண் டிமிர்குழற்பொன் னிணங்குபொன்னுச் சாமிமன்றே விம்பக்கேண்மோ
மனப்படிநா னினைத்தபடி வந்துபடிப் படியுணர்த்த மாட்டேனின்னே
தினப்படியிப் படியுனக்குச் செலும்படியென் றொருபடிநீ செய்குவாயே. (25)

உத்தரவுப்படி படிவிசாரணைசெய்வோர் நடந்துகொள்ளாததைப் பற்றிச்சொல்லியது.

வாமிவுளித் திடநெடுந்தேர் வாணிரவி மறையமலர் வனோர்துவ
நேமிமுனங் கொடுத்தபொன்னுச் சாமிமகி பாவொருசொ னிகழ்த்தக்கேண்மோ
பூமிமிசைப் பத்திதனைப் புத்திதனில் வைத்தினிது புகழ்நின்றோர்க்குச்
சாமிவரங் கொடுத்தாற்பூ சாரியிறாற் பின்னரென்ன தடைசொல்வாமே. (26)

பாராச்சேவகர் தடுத்ததை கூறியது.

தருமகுண மிகுமுனது சமுகமுற்றோர் வறுமையெனச் சலிக்கக்காய்ந்து
வருமிரவி வெயிலதனான் மயக்கமின்றி யானிங்கு வந்தபோழ்தி
லருமைதவிர் பாராச்சே வகர்தமது பெயர்ப்பொருளை யறியக்காட்டிக்
கருவமொடு தடுப்பதென்னே காமர்பொன்னுச் சாமியெனுங் கருணைமாலே. (27)

இறைவர், தமது கரங்களைப் பிடித்துக்குலுக்கியபோது சொன்னது.

அவனிபுக ழுனதுதிரு வடிமலரி னெழுதுகளா லன்றுநீங்காப்
பவமதகன் றொருகரிய பாறையும்பெண் ணாகுமெனிற் பாராவாரந்
துவளவமு தெடுத்தினிய சுரர்க்கருளின் றிருக்கரத்தாற் றொடப்பெற்றேற்குக்
கவலையினி யுளதாமோ காமர்பொன்னுச் சாமியென்னுங் கருணைமாலே. (28)

தமக்குக் காந்தல் வந்திருந்தபோது கூறியது.

உன்னினிய சன்னிதியா னொருவியயன் மருவியதா லுடனேசைவ
நன்னிலைவிட் டன்னியநா னடைபுகுமீ னவனையன்று நலிந்தகாந்த
லென்னிடத்துந் துன்னிவருந் தியதுசற்றே வுனதருளுய்ந் திருந்தேன்வெண்பூத்
தன்னில்வரு கன்னிதிரு வென்னுமின்னு மன்னும்பொன்னுச் சாமிமாலே. (29)

காந்தல் தீர்ந்தபோது சொன்னது.

சொற்செறிமுத் தமிழ்வலர்க்குத் துரங்கமணி சரங்கவிகை துலங்குந்தந்தப்
பொற்சிவிகை முதலவருள் புனிதபொன்னுச் சாமியெனும் புயலேயுன்றன்
மற்செழுந்தண் கருணையெனு மழைநனைப்ப வதனுலென் வறுமையாய
முற்சுரமும் பிற்சினந்த முதுசுரமு மிகவயலாய் முடிந்த மாதோ. (30)

### சிரங்குவந்தவிவரம் தெரிவித்துக்கொண்டது.

மிக்கவடி விற்காத்த விரியன் போனமை விதித்திலன் பாவியென்றே
வேதனை வெறுத்தயர வேதனை விளைகின்ற வெஞ்சிரங் கானவைகளென்
பேலெலாந் தானவர்கண் மிசைதொடுத் தன்றவீ விடுகணை மிடைந்ததொப்ப
மேவின வவற்றியல் விரிக்கவெளி தோவின்னு விண்ணென் றிசிப்பனசில
செக்கர்வன முள்ளெனச் செறிவசில மாறுத தினவுபுரி கின்றனசில
சிறியசில பெரியசில வெரிவசில நாலைந்து சேர்ந்தொன்று பட்டனசில
தெரிவையர் தனம்போற் செழித்தடி பரந்தெழு சிலந்திசில வுள்ளவாவித்
தேசமொவ் வாமையோ தண்ணீர் விரோதமோ தெரியாது பிணியனேகந்
தொக்கதமி யேனைத் தொடர்ந்ததா விரவெலாந் தூக்கமிலை யொருமாதமாச்
சூழ்பணி வருத்தமோ சொல்லமுடி யாதுமேற் றாயசாக் கட்டிரண்டு
துப்பட்டி யிட்டிடன் றேனுற முழுந்தாள் சுருட்டினு நடுக்கறுது
தொந்தரை யிவற்றைச் சகிப்பதெப் படிமுன்பு சொன்னசொற் படிநடாத்தித்
தக்கவுத் தரவுதந் தெம்மையெம் மூர்க்குநீ சடுதியி லனுப்பவேண்டும்
தானவபி மானமுகி லானசிவ ஞானதுரை தமதுமா தவகுமாரா
தமிழ்முத்து ராமலிங் கச்சேது பதிமகிழ் சகோதர சபாபூஜிதா
தர்மப்ர தாபபொன் னுச்சாமி ராஜேந்திர சதுரங்க தளசிங்கமே. (31)

### போர்வை கேட்டுக்கொண்டது.

கற்போர்வை திகரெவருங் கவிதுறந்து புதுவைவயற் களங்கடோறு
நெற்போர்வை கியபடிநன் னிதிப்போர்வைத் திடவுதித்த நிபுணநாளும்
பொற்போர்வை வேலருள் பூத்தபொன்னுச் சாமிமன்ன புகழுக்கேற்ற
நற்போர்வை யின்னமெற்கு நல்கவில்லை பனிவருத்த நவிலொணுதே. (32)

### கவிச்சிங்க மென்ற பட்டம் பெற்றபோது.

கங்கங்குலவு கதிர்வேலான் கனகமேரு கருணைமுகில்
பொங்கம்பெறுதென் புதுவைவளர் பொன்னுச்சாமி பூபனெனக்
கெங்குந்திறல்கூர் கவிச்சிங்க மெனுமோர்பெயரிட் டெழில்வளமை
தங்கும்புகழ்மே லாங்கலையுந் தந்தேயெனையா தரித்தனனே. (33)

### வெண்பா.

சேயே யனையர் செழும்புலவோ ரீன்றெடுத்த
தாயே யனையை பொன்னுச்சாமிமன்னு—தூய
கனங்கொடுத்தன் னோர்மேற் கனியுமன்பா லுண்ணத்
தனங்கொடுத்து நீவளர்ப்ப தால். (34)

## உபயார்த்தமுள்ள வித்தைச் சம்பிரதாயம்.

அட்டவரைகளையுண் டனந்தனை விழுங்கியே ழண்டத்தை யுங்குலுக்கி
யஞ்சாமலிடியைப் பிடித்துப் பொடித்துமரு வலர்தமையெ லாங்கசக்கி
மட்டரியகனலைப் பிழிந்துசா றுக்கியதை வயிறுகொள வாய்மடுத்து
வனவேங்கை யைச்சிமிழில் வைத்தடக்கிக் கொடுமகிழ்ந்து விளை யாடவல்லேம்
துட்டவெங் கலிதனை வெருட்டவொரு வித்தைநீ சொல்லிக் கொடுத்தல்வேண்டும்
துங்கவக ளங்கசது ரங்கதள விங்கிதசு மங்களவ லங்கர்தகுணு
வட்டுடைய கட்டுமொழி விட்டுளம ருட்டுமிள வட்டமுலை யிட்டமடவார்
மதனவன் னப்பூமி துதிசெய்பொன் னுச்சாமி மகராஜ சுகபோஜனே. (35)

### சமஸ்தி.

### வெண்பாக்கள்.

மாலாம்பொன் னுச்சாமி மன்னர்பிரான் றன்னாட்டிற்
சேலாங்கண் மங்கையர்வா சிக்குநல்யாழ்—நீலாம்
பரியிற் பெரியகொடும் பாலை குளிரும்ஆ
கிரியிற் கிரியுருகுங் கேட்டு. (36)

என்றுமொரு தன்மைத் தெனவினிக்கு மொன்னலரை
வென்றபொன் னுச் சாமி விறல்வேந்தே—துன்று
வரிசிலைக்கை வேளயிலான் மாய்ந்தகிர வுஞ்சக்
கிரியின்மயல் காட்டறிஞர் கேள். (37)

போதுரைமட் டும்புகல்வர் பொங்குபொரு ளொன்றீயார்
சீலபொன் னுச் சாமியெனுஞ் சிங்கேறே—சால
மனமிரக்க மில்லாத வன்கணரைத் தேடிக்
கனதனவெ ளாக்கூறிற் கண்டு. (38)

### சமஸ்தி-ஈற்று-கலித்துறை.

அளிக்கும் பனைக்குஞ் சரவுரி யான்முத லாருமஞ்சங்
களிக்கும் பனைக்கும்பிட் டாறு முகனைக் கலந்தெமது
நளிக்கும் பனைக்குந் தெரியாமற் சேர்தரு ணத்திலிந்தப்
புளிக்கும் பனைக்கு நடுவேபொழுது புறப்பட்டதே. (39)



மாட்சிமை பொருந்திய இராமநாதபுரம் சம்ஸ்தானம் மஹாராஜா

## ஸ்ரீமாந். முத்துராமலிங்க சேதுபதியவர்கள்

மஹாசமுகத்திலியற்றிய

# கவிரத்னங்கள்.

### மங்கல வாழ்த்து.

புகழான்ற நகமீன்ற பொன்னின்முலைக் கன்னியொரு புறந்தழீஇப்ப
லகிலாண்ட முதலாண்ட வருண்மோன சிவஞான வமலன்காக்க
பகர்பூங்காத் தொறும்பூவை பதங்கோவைச் செழும்பாவைப் படிக்குந்தேவை
நகரேந்த்ர சமுகமுத்து ராமலிங்க பூமவனை நாளுமாதோ. (40)

### திரிபு.

கோங்குவட்ட முதகனக கும்பமன்பு கொண்டுவண்டு குலவுஞ் செந்தே
னூங்குவட்ட வுண்டுனனி யண்டுமலர்ச் செண்டுமிணை யலவென் றேட்டி
யோங்குவட்ட முலைவனிதை யுனதுமயல் பெருகினள்சே ருவந்து வெள்ளிப்
பூங்குவட்டன் மலர்த்திருத்தாள் போற்றுமுத்து ராமலிங்கப் புனித மாலே. (41)

அனங்கனம்பு மழைபுலிங்க மலைசெவிகட் குருக்கியசெம் பவிர்திங் கட்கோ
மனங்கனம்பு மன்னைபொல்லா வஞ்சகியென் றிரங்கிமதி மறந்து சோர்ந்திம்
மினங்கனம்பு தியகனிபால் வெறுத்தனள்கண் பார்த்தருள்வாய் வியந்த னேக
தனங்கனம்பு ரவிதமிழோர்க் குதவுமுத்து ராமலிங்க தளசிங்கேறே. (42)

### சந்திரோபாலம்பனம்.

பொருப்பவனி தனிற்படர்வ தெனக்குலவு சினக்களிற்றிற் பொலிந்து தோன்றித்
திருப்பவனி வந்தமுத்து ராமலிங்கச் சேதுபதி சீர்கண் டுற்ற
விருப்பவனி தையர்பலர்க்குண் மெலியவள்யா னேபணிகத்தாய் வெள்ளிக் குன்றி
லிருப்பவனி தனையுணர்ந்தன் றேமிதித்தா னினையினமோர்ந் திலைநி லாவே. (43)

### மன்மதோபாலம்பனம்.

திடக்கடவி கடக்களிறு சினக்கடின மனப்பகைவர் திடுக்கிட் டோடி
விடக்கடவி முடுக்கியமர் வெல்லுமுத்து ராமலிங்க வேந்தன் சேர்ந்தான்
சடக்கடவி றடக்கைவிடு சரத்தைமுடி யுரத்தகடற் றடாரி தன்னை
யடக்கடவி யிடைக்குபிலை யகற்றுநினை மதிப்பதிலை யனங்க வேளே. (44)

யமகம்.

வடங்கலங்க ளபங்கழங்கு மறந்தனன்பு சிறந்திணங்க மதிக்கா நின்ற
வடங்கலங்க சனம்பிணைந்த மனந்திருந்த நிவந்தகொங்கை வரையின் பச்சு
வடங்கலங்க நகம்புரிந்து மகிழ்ந்துகொஞ்சி முயங்கெதிர்ந்த மருவ லார்க
வடங்கலங்க வெலுந்துரங்க மகிபமுத்து ராமலிங்க வரிசை மாலே. (45)

இதுவுமது.

மாமனத்தை யிவர்காவல் வலிதோரா ஞச்சுதினி மயங்கிநீலிம்
மாமனத்தை யணிதலுக்கு மாட்டுபணி சூட்டுமணி வளைகள்பூட்டம்
பூமனத்தை யுறவைவிடெவ் வகையினுஞ்சென் றழைத்தினிது வருவன்சேது
மாமனத்தை யலர்புகழு மதனன்முத்து ராமலிங்க மாலைத் தானே. (46)

திரிபு.

அம்மானந் தியும்பகலு மகமிகவான் சன்னைதன்னை யன்னை நோக்கிச்
சும்மானந் தனம்புகினுந் தொடர்வளெனில் நீவிடுத்த தூதுக் கென்ற
மிம்மானந் தரங்கமதி லிணங்குமவ சரமேன்கா ணிலங்குஞ் சால்வைச்
சம்மானந் தமிழ்க்குதவு சமுகமுத்து ராமலிங்க ஜயசிங் கேறே. (47)

இதுவுமது வேறு.

கோலப் பம்பர நேர்முலை மீறநிற் கூடமாமயல் கொண்டு மருண்டுதீம்
பாலப் பம்பர மன்னமு மின்னமும் பருகிலாளைக்கண் பார்மது வார்மல
ராலப் பம்பர வாபர ணத்தனை யர்ச்சித் தேதொழு மன்பா வதிர்திரை
சாலப் பம்பர ஞாலம்புரந்திடுந் தாமவேன்முத்து ராமலிங் கேந்த்ரனே. (48)

வேறு.

எல்லியஞ்சு மாதவரை யாகுந் தாய்க்கு
மிலைக்கருணை சகிக்குமன மிரங்காதென்றே
சொல்லியஞ்சு மாதவரை யுடுத்த வாடை
சோருமுனை நேருமெதிர் தொனிக்கும்வேலைப்
பல்லியஞ்சு மாதவரை வளைப்பான் காமப்
பாவியெனில் யாவர்சகிப் பார்கா ணிந்தச்
சல்லியஞ்சு மாதவரை யினிது காக்குந்
தலைவமுத்து ராமலிங்கத் தமிழ்க் கோமானே. (49)

வேறு.

ஒருவேடன் கணைவெருவ வுருவமயற் பெருவலையுற் றுழன்று மற்றுன்
திருநாமங் கருதுமிந்தத் திங்கள்முகச் செவ்வாய்மான் றியங்க லாமா
வருமானை யாதரித்து மறநீக்கி யநுமானை வாழ்வித் தன்பு
தருமூனை யளித்தருளுந் தலைவமுத்து ராமலிங்கத் தமிழ்க்கோ மானே. (50)

உனதுமயற் பரவைபடிந் துறுகரைகா ணுதுடைந்துள் ளுருகுங் கன்னி
தனதுதனக் குடமிரண்டுந் தருமெனினீ முத்தமொன்று தரலா காதோ
வனகதங்க வணிகுலுங்க வமர்கலங்க வடர்துரங்க வருட்பர சங்க
வனசதுங்க வணிகைபொங்க வளருமுத்து ராமலிங்க வரிசை மாலே. (51)

மிருதங்கம் வாசித்தபோது சொன்னது.

எத்தலமு மதிக்குமுத்து ராமலிங்கச் சேதுபதி யெனுநரேந்த்ரன்
கைத்தலத்தின் மத்தளமி சித்திரங்கண் டத்தகைதாங் கற்பா னன்றோ
சித்தமதில் வாணனுநந் திபுமருள்பூண் டவராய்வெண் சிலம்பூ டின்னஞ்
சுத்தமதி வைத்தசடை யத்தனைநற் பத்திசெய்து துதிக்கின் றாரே. (52)

வீணைகானஞ்செய்த பொழுது பாடியது.

மந்தரமேர் புயத்தன்முத்து ராமலிங்கச் சேதுபதி மதுர கீதச்
செந்தரமோர்ந் தியக்கரெலாந் தினமுமய லுற்றதன்றித் திருந்து வீணைச்
சுந்தரநா ரதனுமந்தத் தும்புருவு மிம்பரிடை தோற்று ராகி
யந்தரமீ தலைந்தனரே லதற்குவமை யெதைப்புகல்வ தறிந்து மாதோ. (53)

ஈற்றுசமஸ்யை.

அஞ்ஞைகளைத் தினந்தினங்கொண் டாடிநனி பாடிமிடி யதனாற் பல்லை
ஞஞ்ஞையெனத் திறக்காதெற் புரக்குமுத்து ராமலிங்க நரேந்த்ர கேண்மோ
கஞ்ஞையுறு சிறியர்பெரி யோரையும்வெல் குவர்விதியார் கடப்பா ரோர்கான்
மஞ்ஞைமிடற் றுட்புகுந்த முள்ளெயிற்று வல்லரவ மகிழுந்தானே. (54)

சால்வை பெற்றபோது சொன்னது.

சால்வைத் துப்பட்டி லகு வள்ளுறைவேன் மன்னர்மன்னன் மகிழ்பா வாணர்
மேல்வைத் துப்பட்டி கையன் னமுங்கொடுத்தா தரித்தருளும் விவேகன் னனீ
ரேல்வைத் துப்பட்டி னஞ்சூழ் முகவைமுத்து ராமலிங்க மெனுநரேந்த்ரன்
சால்வைத் துப்பட்டி யொன்று தந்தெனது புறநடுக்கந் தையுந்தீர்த் தானே. (55)

## உருமால் பெற்றபோதுசொன்னது.

மருமாலை யணியுநவ மணிமகுட நிருபர்வந்து வணங்கச் செல்வந்
தருமாலை வயல்புடைசூழ் தமிழ்முகவை புரந்தருளுந் தளசக் ரேசன்
திருமாலை நிகருமுத்து ராமலிங்கச் சேதுபதி செழும்பொற் கெண்டை
யுருமாலை யெனக்களித்தா னாத்திருந்த மருண்மாலை யோடிற் றன்றே. (56)

## விடுகவி.

*மருவுமுலை காட்டுகின்ற வனப்பினர்நீ ரிற்குளித்து வளையும்பின்பூண்
டருமைபெறு பதம்படித்தங் காடிவரு வார்தாந்தா ரணிய நேர்வார்
கருதுமுறை விடுவர்கணி கையரல்ல ருயர்படைசூழ் கருத லாரைப்
பொருதூரக விஜயமுத்து ராமலிங்க பூபாவுட் பொருள்சொல் வாயே. (57)

## வேறு.

†வரிவளை பூணுவர் கைகாட் டுவர்நடை வாய்ந்திருப்பர்
சரிபெறு மத்தளத் திற்கிணங் காநிற்பர் சாந்துகொள்வர்
சரிகுழல் வேசைய ரல்ல நொடியினிற் சூழ்ந்துசொல்வாய்
விரிகதிர் வேன்முத்து ராமலிங் கேந்த்ர விதரணனே. (58)

‡திரைதரு மெய்யினர் தேம்பி யிளைத்துத் திரிவர்முது
நரையினர் மாலைக்கண் ணார்மிகக் கூனி நடுக்கமுற்றார்
உரைசெயுங் காலைவிருத்த ரலர்மதி யோர்ந்து சொல்வாய்
விரைகமழ் தார்முத்து ராமலிங் கேந்த்ர விதரணனே. (59)

## இதுவுமது.

*கலைதாவு மானுங் கலந்து வருஞ்சிங் கமுமெருது
மலையாடு மேயு மருந்துமுண் டாமுள் வளைந்திருக்கும்
அலைபூங் கொடியொடு தோன்றுமென் சொல்வன மல்லவிது
சிலைதோய் புயமுத்துராமலிங் கேந்த்ர செயசிங்கமே. (60)

## குளிர் கேட்டுக் கொண்டது.

### வெண்பா.

கைக்கொடைக்கு நீயெடுத்த கற்குடைக்குந் தோற்றுடைந்த
மைக்கருங்கார் நின்னையுற்று வாழுமென்னை—யெக்க
நடுக்குவதென் சொல்கமுத்து ராமலிங்க பூபா
தடுத்தருள வேண்டுமினித் தான். (61)

*படை - வாள். †நடை—வழித்திண்ணை. ‡மதி—சந்திரன். *விது—சந்திரன்.

## பின்முடுகு வெண்பா.

அஞ்சே லெனப்பலந்தந் தாணினியார் னேர்நமக்கு
நெஞ்சே கலிப்புலியை நீவெருட்டு—விஞ்சுபெருஞ்
சீர்படைத்த கோனலர்ந்த தேமலர்ப்பொன் மாதிணங்கு
மார்பன்முத்து ராமலிங்க மால். (62)

இந்தா முகத்திவண்மா லெல்லாநீ சுக்கையொன்று
தந்தாலல் லாது தணியாதாற்—பைந்தாது
மொய்த்ததார்வ ணங்குமார்ப முத்துராம லிங்கராஜ
சித்தனேயி ணங்கியோகை செய். (63)

காமனென வுன்னைக் கருதுமின்னைப் பின்னையிங்கே
காமனென வந்தொருவன் காய்வதென்னே—நேமமகு
ராசதுங்க மேன்மைமுத்து ராமலிங்க பூபமெத்த
வாச மொன்று தாரனுப்பு வாய். (64)

## எலிக்கும் புலிக்கும் சிலேடை.

பாயுங் கடிக்கும் பசுகருவா டும்புசிக்குஞ்
சாயுங்குன் றிற்றாவிச் சஞ்சரிக்குந்—தூயபுகழ்
தேங்குமுத்து ராமலிங்கச் சேதுபதிப் பாண்டியனே
வேங்கை யொரு சிற்றெலியா மே. (65)

## கொச்சகக்கலிப்பா.

வாகார் கலவி வகைநடத்தும் வேளை தனி
லாகாதென் றேனலதங் காகாதேன் றேனோநான்
பாகா மெனுமதுரப் பாவாணர் போற்றுகின்ற
நாகாதி காரமுத்து ராமலிங்க பூபதியே. (66)

ஆசை மிகமீறு ததுசகியேன் மேவுதுரை
யேசலா மென்றதலா லேசலா மென்றேனோ
வாசபா ஷென்றுதமிழ் வாணரைமெச் சிப்புரக்கும்
ராசரா சேந்த்ரமுத்து ராமலிங்க பூபதியே. (67)

தோடவிழ்பூ வேள்கணையாற் சோருந் துகிலோடுங்
கூடவளை யென்றதலாற் கூடவளை யென்றேனோ
ஆடலனங் காணமயி லாடவண்டு பாடுசெம்பி
நாடனெனுஞ் சேதுமுத்து ராமலிங்க பூபதியே. (68)

தட்டியார் நீக்குவிப்பார் சந்ததமுந் தென்றல்வருந்
திட்டியூடென் றதலாற் றிட்டியூ டென்றேனோ
யட்டியா காமலென்னை யன்புற் றணைவதினில்
நட்டியா சொல்கமுத்து ராமலிங்க பூபதியே. (69)

வன்னமது ரக்கலவி மாறுது செய்துநா
றென்னகர மென்ற தல்லா லென்னகர மென்றேனோ
கன்னல்கமு கொக்குங் கழனிபுடை சூழ்முகவை
நன்னயகு ணமுத்து ராமலிங்க பூபதியே. (70)

---

சந்திரவிலாச நூலேற்ற வேளுக்குறிச்சி ஜமீந்தார்

## வேலப்பகவுண்டரவர்கள் மீதியற்றியவை.

# மங்கல வாழ்த்துக்கள்.

### ஆசிரியம்.

பொன்பூத்த தினகரப் புத்தேளினிரதவாம் புரவியுண் டயர் வுயிர்ப்பப்
புனலருவி தெண்டிரை புரட்டுதென் பொதியப் பொருப்பிற் பிறந்து பாங்கர்ப்
பொலிசுனை படிந்துபல புட்பமக ரந்தமேற் பூசிமுத் தமிழ் மணந்து
பூஞ்சந்த னுடவி புகுந்துலவி வருசிறு புதுத்தென்ற லால சைந்தே
மின்பூத்த நுண்ணிடை விசும்பரம் பையர்கலவி வெயர்வகல வாலவட்டம்
விசுநெட் டிலைவாழை மென்கனி சொரிந்தமுது வீறிவயன் மடை யுடைப்ப
விரிகதிர்க் குடவளைக ளுதவுநித் திலமதனை விரைவொடு திருத்து மின்ப
மிக்கவளை மைப்பழநி வெற்பினுறை சிற்பரனை வேண்டித் தினந் துதிப்ப
மன்பூத்த காவிநெடு வாவியினை யாடுமட மாதரரி மழைமதர்க் கண்
வலையென வெருண்டுசினை வாளைபா யப்பனி மதிக்கலை கிழிந்து சிந்து
மதுரவமு தினைமெள்ள வாய்மடுத் தரவிந்த மலரமளி தோறு மன்னம்
மழலையம் பார்ப்பின மகிழ்ந்துதுயி லப்பருவ வாழையடர் கின்ற சோலைத்
தென்பூத்த வண்டுமுரல் வேளையம் பதிசெழுந் திருவிஜய வனிதை புலவோர்
செய்துளத போபலன் சித்திக்க வினியபுகழ் திகழவந் தவத ரித்துத்
திசையெலா நிதமதித் திடநீதி மனுமுறை செலுத்துநதி குலசி லாக்ய
சீலப்ர தாபகுண வேலப்ப பூபனுயர் சீர்பெற்று வாழ்க வென்றே. (71)

இதுவுமது.

மலர்வாவி தோய்ந்துவரு மருடகோ டிகளைமழை மாமுகி லெனக் குறித்து
மரகத கலாபமயில் பரதநட மேபுரிய மருவுலவு சோலைக ளெலாம்
விலகாது தேன்கனி வியந்துதவ மென்குவளை மெச்சியிமை யாது நோக்கு
மிக்கசீர் வளமைதிக ழுத்தனூ ரம்பிகைதன் மெய்ப்பதஞ் சென்னி வைப்பாம்
புலவோரை மூடர்பாற் போவது தகாதுநம் பூபனைக் கண்டு கொளினெப்
பொருளுங் கிடைக்குமிவண் வருகென் றழைத்திடுதல் போன்றசை துகிற் பதாக
பலமாட நெடுவீதி பயில்வேளை நகராதி பதிபுருஷ சூடா மணி [கைப்
பகருநஞ் சய வுசித மால்பெற்ற வேலப்ப பாண்டியன் வாழ்க வென்றே. (72)

வெண்பாக்கள்.

கங்கா குலவிஜய காண்டீப னைமதன
சிங்கார ராஜ சிகாமணியை—மங்காத
செல்வமுயர் வேலப்ப சீமானைக் கண்டு கவி
சொல்பவர்க்குண் டாமே சுகம். (73)

விஞ்சையினோர் போற்றுகின்ற வேளுக் குறிச்சிவளர்
நஞ்சையமால் பெற்ற நராதிபதி—மஞ்சைநிகர்
புண்ணியவான் வேலப்ப பூபன் சமுகமுற்றோர்க்
கெண்ணியவெ லாம்பலிக்கு மே. (74)

சீதமுகில் போலுஞ் செயநஞ் சையமகிபன்
மாதவகு மாரன் வசீகரவான்—கீதமுறை
காட்டிவண்டார் மாலைக் கவின்புயவே லப்பதுரை
பேட்டிகண்டார்க் கேதுகலிப் பேய். (75)

கஞ்சமங்கைக் கின்பமனை கல்விக் குரகபதி
தஞ்சமென்றோர்க் குச்சமய சஞ்சீவி—வஞ்சமுதி
ரண்டார்க் கடலரிவே லப்பமகி பன்சமுகங்
கண்டார்க் குளதோ கலி. (76)

வேலனைய கண்ணார் விரும்பி மடலெழுது
சீலகுண வேலப்ப சிங்காரன்—கோலமலர்
மெய்கருணை நெஞ்சம் விளங்குசுக வேளிருக்கை
கைகள்கட லுண்டெழுந்த கார். (77)

சிலேடை,

மாகந் தனைப்போற்றி வண்மையுற்று வாலிபம்பெற்
றாகுந் தருக்குலவு மற்புதத்தாற்—பாகுஞ்செந்
தேனுமென வோதுதமிழ் தேர்ந்தருள்வே லப்பதுரை
தானுமக வானுஞ் சரி. (77)

### இதுவுமது.

பார்க்குள் வளம்படைத்துப் பன்னுங் கலைவேந்தி
யார்க்கு மிடியை யகற்றியதாற்—போர்க்குவடி
வேலே செலுத்துமெங்கள் வேலப்ப பூபதியை
மாலே யெனலா மதித்து. (79)

### உவமைவிலக்கு.

கன்னனெனக் கேட்டதன்றிக் கண்டா ரொருவருண்டோ
அன்னதுண்மை யேனு மவனுமிந்த—மன்னுபுகழ்
வேலப்ப பூபனெதிர் மேவிற் கலைமதிமுன்
கோலக் கதிருவா கும். (80)

### இதுவுமது.

மேகமிடி பெற்றதன்றி விண்டருவண் டர்க்குதவு
மாகபிலை முட்டுளது மற்றிவற்றை—நாகரிக
வுத்தமவே லப்பதுரைக் கொப்பிடுவ தெப்படிநாம்
வித்தைசில கற்றிருந்து மே. (81)

### சோதிடத்திறமை கூறியது.

வல்லானென் றுரு மதித்திட முக் காலமுத
லெல்லா வியல்பு மெடுத்துரைக்கு—முல்லாச
மாதிடஞ்சேர் வேலப்ப மன்னன் கணிததிட
சோதிடங்கள் யாவுமுணர்ந் து. (82)

### வீணைவாசித்தபோது.

தும்புருவு நாரதனுந் துன்னுபல கின்னரரு
மிம்பர்வர நாணி யிருந்தின்னம்—பைம்பொனெடுந்
தூணேரே ரும்புயவுத் துங்கவே லப்பதுரை
வீணாகா தங்கேட்பார் மேல். (83)

### வேட்டைப்பெருமை.

வெம்புலியு மம்புலியும் வெண்கபிலை நாதனைவிட்
டம்புவியில் வாராம லஞ்சியவாற்—பம்புமொன்னார்
கோட்டையைநிர்த் தூளிசெயுங் கோமான்வே லப்பதுரை
வேட்டைதனைக் கண்டு வெருண்டு. (84)

### கோட்டைக்கும் வேட்டைக்குஞ் சிலேடை.

*மலையுடைய தாயிருக்கும் மாவானை நேருங்*
*கலையுளது கோலமிகக் காட்டும்—தலைமைபெறு*
*தாட்டிகன்வே லப்ப தயாளமகி பன்சபையிற்*
*கோட்டைதனை வேட்டையெனக் கூறு.* (85)

### வேட்டைக்குஞ் சாட்டைக்குஞ் சிலேடை.

*கோலங் குலாவுதலாற் கூட்டுவார் காட்டுதலால்*
*மேலும் பிணையும் விரவுதலாற்—சீலஞ்சேர்*
*பாட்டையறி வேலப்ப பாண்டியரா சன்சபையில்*
*வேட்டைதனைச் சாட்டையென விள்.* (86)

### வேட்டைக்குந் துப்பாக்கிக்குஞ் சிலேடை.

*வேலைமிகப் பெற்றுளதால் மிக்கபுத்தி மான்கொளலால்*
*கோலமய மேவுங் குறிப்பதனால்—மாலெனவே*
*நாட்டையாள் வேலப்ப ராசேந் திரன்சபையில்*
*வேட்டைதுப் பாக்கி வெடி.* (87)

### யானைக்கும் பனைமரத்திற்கும் சிலேடை.

*மாக்களைமே லேந்துதலால் வாழுமடல் காட்டுதலால்*
*நீக்கரிய காய்தனையு நீட்டுதலா—லூக்கமிகுஞ்*
*சேனையுள வேலப்ப தேவேந் திரன்சபையில்*
*ஆனைபனை தானென்ன லாம்.* (88)

### மலைக்கும் வலைக்கும் சிலேடை.

*வடமு மடுக்கும் மருவு முளையும்*
*உடையகுறிப் பன்றியுமே லோங்கும்—நெடிய*
*கலைபயில்வே லப்பகொடைக் கன்னன் சபையில்*
*மலையை நிகர்க்கும் வலை.* (89)

### அஷ்ட நாகபந்தம்.

நேரிசைவெண்பா.

*காம லகரி கடலா மமையாது*
*தாமசம தேது சலாமேவி—நீமருவே*
*சீராமா மாநேம தேகபுனி தாகழைவின்*
*மாராவே லப்பபூ மா.* (90)

### நூதன விசித்ர உபயநாகபந்தம்.

மன்மதன்கை வாகை மடங்காது பன்னலென
தன்ம கனக தனிபனியிக்—துன்னூது
சீலப்ர தாபசுக தேகவின்பந் துன்னுதுங்க
வேலப்ப பூபதீ மேவு. (91)

### விடைகேட்டுக்கொண்டது.

மஞ்சார் பொழிற்பழனி மாநகர்விட் டேப்புறப்பட்
டஞ்சாறு மாதங்க ளாயினகாண்—செஞ்சாலி
வேளைநல்லூர் வேலப்ப வேளே யிதுநல்ல
வேளையருள் செய்வாயென் மேல். (92)

### சதுரங்கபந்தம்.

#### கலித்துறை.

நேரதி ராகமின் வந்தா டதியிதி னேடியரு
டாரதின் வஞ்ச மிலட்டி தகாதய தண்கமலே
வீரகண் பாரா விடிற்சந் திரன்பணு மெய்ப்புதுமை
பாரணி நேய புயாசல வேலப்ப பாண்டியனே. (93)

### விருத்தம்.

மணிகொண்ட கற்பகப்பூ வண்டுணைச்செந் தேனருவி வழங்குஞ் செல்வக்
கணிகொண்ட கூவைமலைக் கந்தனர விந்தபதங் கருத்திற் சேர்ப்பாம்
திணிகொண்ட மேருவெனத் திரண்டுபரி மளகளபந் திமிர்ந்து பைம்பொன்
னணிகொண்ட தடம்புயவே லப்பமக ராசனைக்காத் தருள்க வென்றே. (94)

### யமகம்.

கமலவனி தையும்புகழ்மங் களசரசி யுனதுமயல் கனிந்து கங்குற்
கமலவ்னி தனிலகற்றுங் கதிர்மதியு மெதிர்பொரவிற் காம வேண்மிக்
கமலவனி லானமட்டுங் காட்டவருந் தினள்வருமங் கருதல் சன்மார்க்
கமலவனி யாயமிது கருணைபுரி வேலப்ப கண்ய மாலே. (95)

வாகனமு மிதழும்வகை வகைசுவைத்து முத்தமிடு வளைக்குங் கன்னல்
வாகனமு துரையிரதி மதனனென மருவுதிச மயமோங் குஞ்செல்
வாகனமு நிதியுநவ மணியுமணி பணியுநற்சால் வையுமே லான
வாகனமு மதுரகவி வலர்க்குதவும் வேலப்ப வரிசை மாலே. (96)

ஒட்டிவண்டி யிரும்பாழி யோனுமுனக் கிணையலன்மற் றுரையேன் மெத்தக்
கட்டிவண்டி காறுமெனது கருணையினை புரிதிறமை கைத்தாய் பொல்லா
மட்டிவண்டி வேளைகண்டு வருவேன்யான் பொறுபொறுடா வலர்க்கு வாசி
பெட்டிவண்டி முதலவருள் வேலப்ப மோகனகெம் பீர மாலே. (97)

குடகரட நிடதர்திறை கொணரமகி முனதுமயல் கூர்ந்தே னின்ற
வடகரட் நெடிதுழுபல் வதலதயர் கிலவிணைய வருவாய் வண்மைத்
திடகரட மானவொலி திடுதிடென மடவியர்க டிரண்டு மொய்ப்பத்
தடகரட கடகளிறு தனிநுலவு வேலப்ப சரச மாலே. (98)

குடங்களென வளர்ந்துபுழு கணிந்துபரி மளங்குலவு கொங்கைச் செவ்வாய்
மடந்தையுனை நினைந்துமதி மறந்துமயல் மிகுந்தினிது வந்தாள் சேர்வாய்
கடம்புயசுந் தரதீரா தமிழ்வாணர்க் குபகாரா தனகு பேரா
திடம்பரவு நஞ்சையரா ஜேந்த்ரனருள் வேலப்ப செயபூ மானே. (99)

## பெட்டி வண்டி கேட்டது.

வட்டிணங்கு முலைமடவார் மடலெழுதும் வேலப்ப மதனு கேண்மோ
தட்டியொன் றுஞ் சொல்லாமற் சடுதியிலென் மனப்படிக்குச் சதங்கை மாலை
கட்டியெங்கு மதிக்கவல்ல கடினநடை விடைகளொடு கவின்பெற் றோங்கும்
பெட்டிவண்டி முதல்வரிசை பரிதருளி யனுப்புவதுன் பெருமை தானே. (100)

அயன்பார்த்துச் சிருட்டித்தா லாயுவுக்குப் பஞ்சமுண்டோ வதுபோ லிந்த
வியன்பார்க்க வதிகருணை மேன்மைபெறு முனக்கருமொன் மேலுண் டாயில்
மயங்காப்பொன் வரிசைபெட்டி வண்டிகொடுப் பதுவுமொரு மலையோ சொல்லாய்
நயங்கீர்த்தி படைத்தமகா ராஜதுங்க வேலப்ப நளின வானே. (101)

சுரதருவைச் சார்ந்தவர்க்குச் சுடுவெயிற்கோ டையுநறுநீர்த் துறைகண் டார்க்குப்
பரவுதவ னமுமமுதைப் படைத்தவர்க்கு நரைதிரைவெம் பசியும் போல
விரைவினினின் சமுகமுற்றோர் மிடிபடையா ரென்பதுண்மை வெறும்பேச் சன்று
சரதநய குணசமுக சௌரியதிட வேலப்ப தளசிங் கேறே. (102)

தவறுமை யுள்ளசமா சாரமெல்லாஞ் சொல்லிவிட்டேன் சமயங் கண்டாய்
இவனேதோ வெழுதினனென் றெள்ளளவும் பராமுகஞ்செய் திடக் கூடாது
பவநீடு மிடியகலும் படியுடனே யனுப்புவதுன் பார மையா
சிவகூவை மலைமுருகன் றிருவருள்சேர் வேலப்ப செயசிங் கேறே. (103)

வடித்ததமிழ்க் கவிப்புலவோர் மனக்குறிப்பைத் தெரிந்துமுக மலர்ந்தே யந்தப்
படிக்குதவுந் துரைநீயென் பதனுலென் கருத்தினுண்மை பலசொல் கின்றேன்
அடிக்கடியிப் படியேதோ வலட்டுகிறு னெனநினையா தருளல் வேண்டும்
நடித்துவரு துரகதிட நகுலசய வேல்ப்ப நயபூ மானே. (104)

## எண்சீர்க்கழிநெடிலடி விருத்தம்.

சந்ததமுந் தராதரங்கண் டவரவர்க்குத் தகுவரிசை செயுமுனது சமுகந் தேடி
வந்ததுமென் குறிப்புமவ சியமுந்தோன்ற வருந்திருந்து மிப்படிந்தா மதிக்கலாமா
இந்தவொரு காரியத்திற் கென்னசும்மா வித்தனையோ சனைபுகலே யினிய செல்வஞ்
செந்தமிழி னருமையுணர் குணவிவேக திடசுமுக வேலப்ப செயசிங் கேறே. ()

## கட்டளைக்கலிப்பா.

தப்ப ராய சகிமார் களபசந் தனமி தென்னக் கனலினை வீசிவஞ்
சிப்ப ராய வரினும்பொல் லாளென்ன செய்வன் யானினிச் சேர்ந்தெனை யாளுவா
யொப்ப ராய சரமைச்ச ராதிநல் லோர்கள் சூழ வுலகம் புரந்தருள்
சுப்பராய மகிபன் சகோதர தூய வேலப்ப நேயவெம் பீரனே. (106)

## ஆசிரியம்.

### உபயார்த்தமுள்ள வித்தைச் சம்பிரமம் கூறியது.

மலைவின்றி மாதரணி வளையாழி யேழுமொரு வண்ணக் குடத் தடைத்து
வானத்தை யுந்தாண்டி வரைகள்பல வற்றையு மறைத்தகங் கையில டக்கி
யலைகின்ற கானக மனைத்தையுங் கைநகத் தாற்சின்ன பின்ன மாக்கி
யற்புதத் திசைபெற் றமர்ந்ததந் திகளையு மடக்கிவிளை யாட வறிவேம்
கலைதின் றுதிரிகின்ற கடுவேங்கை யொன்றுண்டு காய்ந்ததனை வெல்ல வகைதாங்
கற்றிலேம் பலர்தமைக் கதியென் றடுத்துமவர் கட்குமது தெரிய வில்லை
சிலைதங்கு புயதுங்க செயசிங்க மெனுநீ தெளிந்தருள் செயிற்செய்ய லாஞ்
சீலக்குணலமன வேலப்ப ராஜகன தீரப்ர தாப முகிலே. (107)

## கட்டளைக்கலித்துறை.

சிலைகொண்ட காமன் சினங்கொண்டு போர்செயச் சிந்தை நொந்து
மலைகொண்ட கொங்கை மதங்கொண்டு வாடி வருந்து வளே
விலைகொண்ட பஞ்சணை மேற்கொண்டு லீலை விதம் புரிவாய்
கலைகொண்ட வாணர் கவிக்கருள் வேலப்ப காண்டிப னே. (108)

## இதுவுமது.

கோலம் புனைமுலைக் கும்பங்கள் விம்மக் குழைந் துருகுங்
காலந் தனிற்கணை தொட்டான் மதனுங் கருணை யின்றிச்
சாலங்கள் செய்யத் தகாதினி முத்தந் தர வருவாய்
ஞாலம் புகழ்கன வேலப்ப ராஜ நய துங்கனே. (109)

### கோச்சகம்.

காரடர நீடியபூங் காவனத்தி லிட்டுளது
பாரவளை யென்றதலாற் பாரவளை யென்றேனோ
சோரமிது வென்னவெவள் சும்மா மனம்பொறுப்பள்
வீரர்துதி வேளைநகர் வேலப்ப பாண்டியனே. (110)

நம்பினே னிவ்விளையெந்த நாளுமென்ன நீசெயினுங்
கும்பிடே னென்றதலாற் கும்பிடே னென்றேனோ
வம்பிலே சென்றுழலும் வாணர்களை வன்கழியால்
வெம்பிடா மற்புரக்கும் வேலப்ப பாண்டியனே. (111)

### விருத்தம்.

தருவு மணியு முகிலுநிதி தானுங் காம தேனுவுமோ
ருருவு கொடுவந் தெனப்பலரு முவப்பக் குணமு மொழுங்குமன்புந்
திருவு நலமுங் குலமுநனி திகழத் தோன்றித் திருந்துபுகழ்
மருவு நமது வேலப்ப மகிபன் வாழி வாழியவே. (112)

### கலித்துறை.

புயல்வாழி வாழி புவிவாழி நன்மை பொலிந்து செந்நெல்
வயல்வாழி வாழி வளம்வாவி சீர்கிளை வாழி தமிழ்
இயல்வாழி செல்வமு மின்பமும் வாழி யினிவருட்
செயல்வாழி வாழிநம் வேலப்ப ராசசெய சிங்கமே. (113)

செந்தமி ழின்சுவைத் தெள்ளமு தஞ்செவி தேக்கி மிகச்
சொந்தம மைந்தென் மனப்படி நல்கித் துயர் தவிர்த்துச்
சந்தத முங்கன சற்கீர்த்தி செல்வந் தழைக்க வளர்
மந்தர திண்புய வேலப்பபாண்டியன் வாழிய வே. (114)



### சேலம்ஜில்லா திருச்செங்கோடு தாசில்தார்

## மானுவேல் துரையவர்கள்மீதியற்றியவை.

# திரிபு விருத்தங்கள்.

மணிகொண்ட நெடுங்கடல்சூழ் வருபுவன சராசரம்யா வையுமே நல்கி
யணிகொண்ட மலர்மணம்போ லணைத்துநிறை தனிப்பொருளை யகத்துட் சேர்ப்
கணிகொண்ட கலக்டர்ஜட்ஜி கவர்னர்முத லெவருமகிழ் கல்விச் செல்வத் [பாம்
திணிகொண்ட களபபுய செயமானு வேலரசு செழிக்க வென்றே. (115)

பனவரிசைத் துதிசெய்திருச் செங்கோடு சங்ககிரி பரிபா லிக்குங்
கனவரிசைத் தாசில்தி காரசவு பாக்கியவான் களப கும்பத்
தனவரிகற் கண்மடவார் சரசமதன் மானுவேல் சமுகந் தன்னைச்
செனவரியிற் கண்டுதெரி சிப்பவர்கட் கெப்பொருளுஞ் சித்தி யாமே. (116)

திடக்கரடக் கயமகரத் திருடன்முது கிடவடர்பூந் தென்றல் கோபம்
விடக்கரடக் காடுபயில் வெம்புலிகே ரம்புலிபோய் வெள்கா நிற்ப
வடக்கரடக் கருங்குடக்கர் மற்றவர்கொற் றவர்மயங்கும் மயிலைச் சேர்வி
கடக்கரடக் கடகளிறார் கனமானு வேலெனுஞ்சிங் கார வானே. (117)

இகலகல விடாமதனம் படைவகைவந் திடாயெனிலிங் கெனையார் காப்பர்
புகலகல மனத்தின்மயல் பொறுப்பரிது மறுப்பதென புகழ்முத் தந்தந்
துகலகல கலைவணி தொணிபரவ வினியவிதழ் சுவைத்துக் கொஞ்சிச்
சகலகல விபும்புரிசுந் தரமானு வேலெனுமுத் தமிழ்ச்சிங் கேறே. (118)

யமகம்.

வண்டனந்த மதப்பயல்சம் மதப்படிதான் மதக்கொடுதா மதமி லாதென்
வண்டனிந்த னிலம்பனைத்து வருத்தியதாற் கருத்துருகி மயலி னுற்று
வண்டனந்த னையுமறந்தேன் மலரணையி லெனைமருவ வருவாய் சீத
வண்டனந்த முறைசெழுந்தார் மணிமார்ப மானுவேல் மதிவல் லோனே. (119)

பலக்குமுத மலர்த்துமதிப் பாவிகதிர் தூவியெதிர் பகைக்கு மேன்மேற்
பலக்குமுத தியிளைவிற் படைமதனப் பயல்கணைதைப் பதுகொங் கைக்கும்
பலக்குமுத நாட்சொனசொற் படிதவறு தெனையினிக்கண் பார்கற் றோர்க்குப்
பலக்குமுத வருட்குணவிற் பனமானு வேலுசித பாக்ய வானே. (120)

தாசிலதி கமறுதுரை தாமமெனிற் றடுப்பள்ளையைச் சலியாள் காண மா
தாசிலதி சையுங்குழலுஞ் சரிபழலை தடித்ததெனைத் தழுவ லாகா
தாசிலதி னமதாகத் தயவுபுரி யாததென்ன தமிழ்ச்செங் கோட்டுத்
தாசிலதி காரசெய தரமானு வேலுசித சரச வானே. (121)

### வெண்பாக்கள்.

தக்கதிருச் செங்கோட்டுத் தாசிலதி காரஞ்செய்
மிக்க புகழ்மானு வேல்மகிபன்—பக்க
லடுத்தோ ரினிச்சிறிது மஞ்சாதே நெஞ்சே
தடுத்தோ மருட்சஞ் சலம். (122)

### மாலைமாற்று.

மாருதன லாவேனு மாரதிர வாசரத
தாருவன காமான தாவேரு—மேருவே
தானமா கானவரு தாதரச வாரதிர
மானுவே லானதரு மா. (123)

### வேறு.

தூயகரு ணைக்கதிராற் சூரியற்கு மஞ்சாத
மாயமிடி வல்லிருளை மாற்றுமே—நேயமொடு
பூமிதனை யாளும் புகழ்மானு வேலெனுமென்
சாமிமுக சந்த்ரோ தயம். (124)

அற்பர்கொடைக் கோடைக் கலுத்துலர்ந்த வாணரெனு
நெற்பயிரெ லாந்தழைக்க நேருமே—கற்பகம்போற்
கீர்த்தி பரவுங் கிளைமானு வேல்மகிபன்
வார்த்தை யமிர்த மழை. (125)

உற்றார்க் கமிர்த முறுதார்க் கிடியேறு
கற்றார்க் குதவுங் கருணைமுகில்—மற்றார்க்குஞ்
சீமா னெனத்தாசில் செய்துபுவி காக்கின்ற
மாமானு வேல்மன்ன வன். (126)

### சதுரங்கபந்தம்.

நேம னதிவித காம னனைவர்க்கு நேயகம
சேம சகாயன் சிதபுஞ்சன் சீர்சின வாவிசய
தாமன் மனதிற் சலிக்கா னருட்கல்வி சால்பினொடு
மாமணி நேர வளர்மானு வேல்கன வாசகனே. (127)

## சிங்கார ரசக்கலித்துறைகள்.

வேடிக்கைக் காரி வெகுசுகக் காரி மிகமதனால்
வாடிக்கைக் காரி வலைக்காரி யுன்னை மருவவந்தாள்
பாடிக்கை நீட்டிப் படிக்கின்ற தூயசொற் பாவலரைத்
தேடிக்கை யாதருள் செய்மானு வேலெழிற் சித்தசனே. (128)

பங்க மிலாதபொற் பாவை யன் னுன்னைப் பார்த்து மயல்
பொங்க விளமுலை பூரித் தடரப் பொருந்தினள் சேர்
சங்க கிரிதிருச் செங்கோ டெழில்பெறத் தாசில்செயுந்
தூங்க குணாள சுகமானு வேலுத் துரைச் சிங்கமே. (129)

சினத்துக் கொதித்தன திங்களுந் தென்றலுஞ் சேர்ந் தெனது
தனத்திற் செழிக்கு நகக்குறி வைத்துத் தழுவு கண்டாய்
கனத்துப் பருத்த களப புயாசொற் கவி வலவர்
மனத்திற் குறித்த தருள்மானு வேலெனு மன்ன வனே. (130)

திருத்திய பஞ்சணை மேல்விளை யாடித் தினமு மெனை
வருத்திய காம மயக்கந் தணிய மகிழ்ந் தணைவாய்
தருத்திர ளாந்துஞ் சலாஞ்செய்து நாணத் தமிழ்ப் புலவோர்
கருத்தி னினைத்த தருள்மானு வேலெனுங் கா வலனே. (131)

பந்தைப் பழித்துப் பருத்துப் பசும்பொற் பணியணிந்த
விந்தைப் பரிமள மென்முலை மான்மயன் மீறினள் சேர்
முந்தைப் பலகலை யுந்தேர்ந் தறிவின் முதிர் புலவோர்
சிந்தைப் படியருள் செய்மானு வேலெழிற் சித்தச னே. (132)

## வேறு கலித்துறைகள்.

படிநாட்டி யும்பர் பதிநாட்டி யாளும் பராபரன் பொன்
னடிநாட்டி வாழ்மனத் தான்மானு வேல்வந் தரசர் கட்கு
முடிநாட்டி நீதி முறைநாட்டி நாளு முதிர் தருமக்
கொடிநாட்டி யெங்குங் குடிநாட்டி நீள்புகழ் கொண் டனனே. (133)

நிசங்கட்டி வேத நிலைகட்டி வேண்டு நிதி வறிஞர்
வசங்கட்டி நல்கு மதிமானு வேலருள் வள்ள லொரு
தசங்கட் டியபொருத் தத்தமிழ் வாணர் தமைப் புரக்கத்
துசங்கட்டிக் கீர்த்திச் சுமைகட்டி னன்கடல் சூழ் சகத்தே. (134)

சொலவு மினிய துரைமார் சபாவெனத் தூயகலை
பலவு முணர்விற் பனமானு வேல்வள்ளல் பாருலகிற்
குலவு கருணைத்துப் பாக்கிபி னூற்கொடைக் குண்டுகொண்டு
புலவர் வறுமைப் புலிதனை வாட்டிப் புரட்டுவனே. (135)

வற்றாத பொக்கிச வாரி படிந்து மதூரகவி
கற்றா ரெனுமச் சகலர்கள் [illegible]
முற்று[illegible] முறைமுறை யொப்பு முதற்சொனசொற்
சற்று மிழுந்[தவ] [சொ]ல்லைத் தலமுகிலே. (136)

வெருவா வகோர மிடிநெடுங் கோடை வெயில்வெதுப்ப
வருதாக துன்பத்தை வாணர்க் கிமைப்பினின் மாற்றுங்கண்டீர்
தருவா கியகுயின் விக்டோரி யாமெச்சத் தாசில்செய்யுந்
திருமானு வேலுத் துரைகட் கருணைச் செழுங்கடலே. (137)

எட்டி பழுத்த தெனவிற் றிருக்கின்ற வீனருண
மட்டி யுலுத்தரை வாழ்த்தி யலுத்ததென் வாயினிமேல்
வெட்டியி லப்படிக் கட்டப் படாதென் மிடிதவிர்ப்பாய்
அட்டி செயிற்புக லார்மானு வேலெனு மற்புதனே. (138)

தேர்ந்துமுன் சங்க கிரிதனில் வந்தான் செயசமுகஞ்
சார்ந்தவன் றேசொலிக் கொண்டவின் னப்பந்தனைமுடித்து
நேர்ந்தவெம் மூர்க்கு விரைவிற் செலவிடை நீதருவா
யார்ந்த புகழ்பெற் றருள்மானு வேலெனு மற் புதனே. (139)

சகல கனமும் பொருந்திய செல்வத் தயாநிதிநீ
மிகவுப சார மடிக்கடி நான்சொல வேண்டுவதேன்
பகலு மிரவு நினையே கொண்டாடும் படிவிடைதந்
தகமகிழ் கூர்ந்தருள் வாய்மானு வேலெனு மற்புதனே. (140)

---

விதண்ட வாதிகளான சில மூர்க்கர் வந்து மொட்டைத்தலைக்கும் மயிர்த்தலைக்கு மிணையாக வோர் விருத்தம் கலித்துறை வெண்பா வியற்றுதிரென்று வலிந்தறைகூவி விடுத்த கடாக்களை யக்கணமே யெதிர்த் தழிகக்கும்படி தொடுத்த விடைகள் வருமாறு.

விருத்தம்.

குலவுசடை பில்லைசடைக் குச்சுராக் கடிதாங்கிக் கொண்டை காட்டி
யுலவுபரி மளப்புகைகொண் டுளங்கவரு மதுபெண்கட் கொழிந்த தாகிற்
பலருமுண்டை யெனப்பழிக்கப் படுஞ்சகுனத் தடையாமிப் பண்பா லித்த
வுலகின்மயிர்த் தலைக்கிணையோ வூனமொட்டைத் தலையகர்வீ ருணர்வி லீரே. ()

## கலித்துறை.

உயிர்த்துணை மாத ருவப்ப மணந்தந் துளமுருக்குந்
செயிர்த்தவொன் னார்பணி சீர்மானு வேல்வளர் தேசமதி
லயிர்த்திடக் கட்டை யெனத்தோன் றிடாதழ காகியநன்
மயிர்த்தலைக் குச்சரி யாமோமொட் டைத்தலை வம்பர்களே. (142)

## வெண்பா.

வேலைநிகர் சீர்மானு வேலுத் துரைநாட்டின்
மாலைகொளுஞ் சம்பங்கி வாசமிகுங்—காலைதொறு
நெட்டைத் தடியர்களே நீல மயிர்த்தலைக்கு
மொட்டைத் தலைசரியா மோ. (143)

## விருத்தங்கள்.

கற்பனைசொற் பொருள்சிறந்த கவிபாடி யெப்படிப்பற் காட்டினாலு
மற்பர்மதிப் பதுகிடையா தருமையில்லை பெருமையில்லை யனந்தந் தொல்லை
பற்பலவித் தையுந்தெரிந்த பாண்டியனீ யாதலிற்கண் பார்த்தல் வேண்டுந்
தற்பரனைப் பணிகனசுந் தரமானு வேலெனுமுத் தமிழ்ச்சிங் கேறே. (144)

இவைதரும மிவைபாவ மெனமதியார் நமக்கினிமே லெதிரே தென்று
சவையிலிறு மாந்திருப்பார் தலையசையார் வாய்பேசார் தாசிக் கென்றுற்
குவைகுவைய தாகநிதி கொடுப்பார்மெய்ப் பொருள்புகழாக் குறியா ரிந்த
நவையர்தமி ழறிவர்களோ நவில்மானு வேலெனுநன் னயபூ மானே. (145)

உனதுதிரு வருளொருசற் றுளதாகிற் கதிர்முனிரு ளுடையு மாபோ
லெனதுகுறை முழுதுமிமைப் பினிலகலு மென்பதற்கிங் கெனசந் தேகம்
மனதுதனி னினைத்தபடி வரங்கொடுத்தல் வேண்டுமிதோர் வருத்த மன்று
கனதுதியி னுயர்சயகங் கணமானு வேலெனுஞ்சிங் கார வானே. (146)

துன்பவிருட் கடற்படிந்து சுழலுமெனக் குன்கருணைத் தோணி நல்கி
யின்பசுகக் கரைகாட்டி யெப்படியு மென்னையினியீ டேற்றல் வேண்டும்
பின்பொருவர்க் குபசாரம் பேசேனெல் லாமுனது பெருமை கண்டாய்
வன்பர்மதத் தினைத்தணித்து வளர்விசய மானுவேல் மதிவ லோனே. (147)

## வேறு.

பதிவிடுந்துப் பதினைன்கு மாத மான படியாலுங் கடனாலும் பலநோ யாலும்
துதிசிலர்க்கு நெடுநாட்சம் பளங்கள்செல்லாத் துயராலுங் கடைக்கணக்குச் சுமந்த தாலும்
மதிதனிற்சிந் தித்ததின்னம் நிறைவே றாத வகையாலு மிரவுபகல் வருந்தி நொந்தேன்
ததியிதுகண் பார்த்தெனைரக்ஷித்தல் வேண்டுந் தளமானு வேல்விஜய சௌர்ய வானே. ()

## வேறு.

சொல்லைக் காட்டி யருத்தத்தைக் காட்டிநற் றுதியைக் காட்டிச் சுளிக்கு முழுத்தர்பாற்
பல்லைக் காட்டியே யானலை யாவகை பலனைக் காட்டிப் பயந்தனை யோட்டுவாய்
கல்லைக் காட்டி யிளநீரைக் காட்டிமாங் கனியைக் காட்டிக் கலசத்தைக் காட்டிப்பொன்
வல்லைக் காட்டி வளர்முலை யார்புகழ் மானு வேல்விசு வாசசக் ரேசனே. (149)

## நூதன விசித்திரவுபய நாகபந்தத்தின் சூத்திரம்.

எட்டினுக் காறுகு மெண்ணைந் தினுக்கே யியைந்தபதி னுலதாகும்
ஈரெட்டி னுக்குவரு பதினெட்டு நாலைந் தினுக்குநாற் பத்தாறுதான்
தொட்டவிரு பத்திரண் டெண்மூன்று நாலேழ் துலங்குமிரு பத்தாறதாந்
தோன்றுமெண் ணுறுக்கு முப்பதாம் பத்தைந்து தூயமுப் பத்திரண்டாம்
திட்டமுறு முப்பத்து நான்கினுக் கைம்பத் திரண்டதா மாறேழுடன்
செப்புநாற் பத்தினு லைம்பதிற் றெட்டுடன் சேர்வதோ ரறுபதாகும்
கட்டமில் லாமலறு பத்துமூன் றக்கரங் களையுடைய வெண்பாவிது
கமழ்விசித் திரவுபய நாகபந் தனமாங் கனிந்துருகு செஞ்சொன்மாதே. ()

துருவக்குறிப்பு.

{ 6+8, 14+40, 16+18, 20+46, 22+24, 26+28
30+48, 32+50, 34+52, 42+44, 58+60. } மொத்தவெழுத்துக்கள் 63.

# ஸ்ரீமாந் பொன்னுச்சாமித்தேவரவர்கள்

## விருப்பத்தின்படி கூறிய யோகினியறியும்

## விருத்தம்.

நிறைமதிமுற் றிதிதொடுத்து நிலைமகவான் குபேரனங்கி நிருதி கூற்ற
னறைபுனலுக் கிறைகாற்றீ சானியன்மற் றிவர்திசைவிண் ணவனி யாக
முறையிருக்கும் யோகினிதன் முன்மரணம் பால்பிணிமுன் முதிர்சீர் வெற்றி
நறைவிணிற்பின் மத்திமமித் தன்மைகண்டு வழிநடக்கத் தக்க தாமே. (153)



சென்னை ஹைக்கோர்ட்டு லாயர்

## குருமூர்த்தி அய்யரவர்கள்மீது

### ஆசிரியவிருத்தம்.

புவிதாங்கு கணபண புயங்காதி பதியும் புகன்றிடற் கமையாதநின்
புண்யசாம் ராஜ்யவற் புதகுண நயங்களைப் புகழ்வதெப் படிமற்றுளோர்
புனிதவே தாகமபு ராணஷட் சாஸ்த்ரசம் பூர்ணவித் யாவிநோதா
பூசுரசி ரேஷ்டசத் புருஷோத்த மாதெய்வ பூஜா பலப்ரதாபா
கவிதாங்கு மதுராசு கற்பனு லங்கார கமனஜன பரிபாலனு
காயத்ரி மந்த்ரஜப கவசவப யாஸ்தகங் கணசுல க்ஷண விவேகா
கடினகர் விதபாப கண்டன சமத்கார காம்பீர்ய நிஷ்களங்கா
கற்பக சமானுப காரா சமஸ்தமங் களசமுக ரமணீகரா
செவிதாங்கு மகரகுண் டலமகுட கேயூர தேசாதி தேசராஜ
சேவிதச யின்யகுயின் விக்டோரி யாமெச்சு திவ்யமுத் ராப்ரசன்ன
செயலாய ருத்யோக தீரா க்ருபாநயன திலகமுக சந்த்ரோதயா
சென்னைபுரி வாசரஞ் சிதசுபா ஷிதவஜ்ர தேகா துரந்தரீகா
குவிதாங்கு கனதன குபேரா வகோரகலி கோபா மஹானு பாவா
குங்குமப டீரகற் பூரம்ருக மதகளப கோலவெக் ஞோபவீத
கோகனக மலர்மாலி காபரண மணிமார்ப கோமள சவுக்ய நிபுணு
குலகீர்த்தி யநுகூல பலபூர்த்தி வரசீல குருமூர்த்தி மதலோலனே. (154)

### விருத்தம்.

மாகநிதி சுரபிசிந்தா மணிதருக்கள் பயஞ்செனித்து வருப தார்த்த
மேகமது பின்வெளுத்து விடுமிவற்றை யுனக்குநிகர் விளம்ப லாமோ
தேகதிட வேதகுல சிகாமணியாய் லாயர்முறை தினந டாத்துங்
கோகனக வதனகன குருமூர்த்தி ராஜதிவ்ய குணபூ மானே. (155)

### அஷ்டநாகபந்தம் வெண்பா.

வேத குலதீப மேலா கியலாய
ராதி கருணை யகலாம—னீதநய
மூதறி வாகு முனலோலன் மானபர
நீதகுரு மூர்த்தி நிதி. (156)

### கலித்துறை.

கற்றோர்க்குக் கற்பகங் கல்லார்க்கு வல்லிடி கண்டுகொள்ளப்
பெற்றோர்க்குந் தெய்வத் திருவுக்கும் வாணிக்கும் பீடநம்பி
யுற்றோர்க் கமிர்தந் துரைமார்க்குக் கண்மணி யோங்குலமின்
மற்றோர்க்குந் தாய்நங் குருமூர்த்தி ராஜ வரோதயனே. (157)

### பேறையூர் வித்வான் லிங்கையரவர்கள் சந்தித்தபோது அவரது வித்வ சாமர்த்தியத்தை மெச்சிக்கூறியது.

மலைத்தவனு மலைத்தவனு குலசேகர நாமகனை மகவே யென்பர்
கலைத்திறமைக் கம்பனுமோர் கம்பமென நிற்பனுனைக் கண்டா லென்று
விலைக்கமுகு கற்பகக்கா விந்திரந்து வெள்வரி யிரட்டும் பேறை
நிலைத்தபுகழ் விரசைவ லிங்கையனே நிகரெனக்கார் நிகரா வாரே. (158)

### அப்போது லிங்கையரவர்கள் சொல்லியது.

காம்பழகாய் மிருதுவுற்ற தோளியர்கள் மதனனிலக் கணைங்களாதி
யாம்பழமை யானபதி னெண்புரா ணப்பொருளு மாய்ந்து தேர்ந்து
தாம்பழகி யேயெவருஞ் சபாஷெனமுத் தமிழ்விரிக்குந் தகைமை வாய்ந்த
மாம்பழவா ணனையொருபோ தெண்ணினுங்கண் போர்க்கமுத வாக்குண் டாமே.

### வேறு யமகம்.

கற்றடங்கா வாணருளக் கருவமெனப் பூரிக்குங் களபக் கொங்கைக்
கற்றடங்கா மனசுகொடுங் கணையொறுக்கு மோசிறியேன் கலவிக் கிங்கேக்
கற்றடங்கா தலித்தமின்னார் கனுங்கயர்ந்தே னெனைக்காப்பாய் கலியின் மீத
கற்றடங்கா வதிர்சமுக கோபால சாமியெனுங் கருணைக் கோவே. (160)

### தென்றற் சிறப்பு வெண்பா.

ஒத்தகுணத் தன்ப னுரத்துறங்கு காதலிக்கு
மெத்தவருத் தத்தை விளைத்ததே—சத்ததிடக்
காமனம்பா னுள்ளங் கலங்கும் புதுக்கமலப்
பூமணந்தோய் தென்றற் புலி. (161)

### உடுமலைப்பேட்டை தாசில்தார் விசுவநாத முதலியாரவர்கள் கூறிய வெண்பா.

கும்பமுனி யோவொட்டக் கூத்தனோ சேடனோ
கம்பனோ காளமே கந்தானோ—பம்புவிடப்
பாம்பணியுந் தேவருளும் பாலனுற்று வாழ்பழநி
மாம்பழக்க விச்சிங்க மால். (162)

# உபயார்த்தமுள்ள பிராதுவிண்ணப்பக்கவிகள்.

(தாராபுரம் தாசில்தாரவர்கள்மீது)

ஆசிரியவிருத்தம்.

சீர்கொண்ட தாராபு ரந்தாலு காதாசில் செயுமகா ராஜராஜ
ஸ்ரீகன்ய பார்த்தசா ரதிமுதலி யாரவர்கள் திவ்யசமு கத்திலுக்கு
நேரிலெழு திக்கொண்ட விண்ணப்ப மென்னெனில் நேற்றிராப் போதுகுப்பான்
நெடுநாட் குறிப்பினு லேயென தகத்தெய்தி நிறையுடைமை யைத்திருடினன்
காரிய மெவர்க்குந் தெரிந்ததே மச்சமுங் கைக்குள் ளிருக்கின்றதாம்
காண்டதெளி தல்லவா ரண்டிற் பிடித்திடுதல் கடமையினி லாவுமுளதாற்
கூரிய பழங்குற்ற வாளிகளு முதலியிக் கொடியபதுஷ் டனையடக்கக்
கூடா விடிற்சோர குணமொடுங் காருதலை கூர்ந்தற ஷித்தருள்கவே. (163)

---

## பழநித் தாசில்தாரவர்கள்மீது

வளமலி பழநித் தாசில்தா ராகவளர் மகாராஜ ராஜஸ்ரீ
மாதவ ராயரவர்கள் முன்னிலையில் எழுத்துவிண் ணப்ப மென்னெனில்
களவினன் சொக்கத் தலைவனு மொருவன் கரும்பய லாகவந் தெதிர்த்தான்
கடியகுட் டையுந்தா னுடைப்பனுந் தகப்பன் கையிலங் கிளைமுறித் தவனும்
உளமனை தோறும் புகுவனுங் காண வொணுதவ னுமவன் செய்தி
யொன்றல வென்றன் தனமுடிப் பவிழ்த்தா னுற்றநா ணயமெலாங் கவர்ந்தான்
அளவையில் வயிரக் கற்பையுங்கொள்ளை யடித்தனன் சாக்ஷியுண் டனேகம்
அடித்திடு சமன்சேர்த் தவைகளை விசாரித் தமுல்செலுத் துவதும தருளே. ()

---

## பெரியகுளம் தாசில்தாரவர்கள் மீது.

மகாராஜ ராஜஸ்ரீ தாசில்தா ரிருளப்ப மதியூகி தனது திவ்ய
வரசன்னி தானத்தி லுக்குவந் தனமொடு வரைந்துகொள் பிராதென்னெனிற்
பகர்வாதி கன்னியெதி ரிகள்காம னென்றுகண பதியிரண் டறிசாட்சிகள்
பார்த்திட்ட முத்தொன்று சந்தன மிரண்டுமறு படிசொக்க லிங்கமூன்று
மிகவாதி யாமென்னை முதலாவ தெதிரிதடி விசையினல் வாட்டுகின்ற
வேளையி லிரண்டாவ தெதிரிகர மதனல் வெதுப்பியது கொஞ்சமன்று
திகழ்காய மேயுண்மை தெரிவிக்கு நகைகள்சில சிதறியன கொள்ளைகூடச்
சேர்க்கைசா க்ஷிகள்விசா ரணைசெய்தெ திரிகளைத் தெண்டிக்க விதுசமயமே. ()

ஒருமதனன் பிராதுவர வுடன்வாதி யெதிரி யென்பது ணர்ந்தே லாய
ரருகிலியம் புவதுமதித் தமர்வனசாட் சிகளையுமங் கதட்டி யாட்டி
யிருதிடமுங் குறித்துவரி யிசைநோக்கிக் காலண்ட ரியல்பாய்க் கொண்ட
தருணமிதஞ் சாதுரட்சித் தாற்சுகிர்த மிருளப்ப சரச மாலே. (166)

இதுவுமது.

நானெழுதிக் கொண்டுவந்த விண்ணப்பந் தனைமதித்து நலிவாங் காய
மானதைநே ரினிற் பார்த்து மனுசார சாட்சிகளா லனைத்துங் கேட்டு
மேனெதிரி களையடக்கி யேழையா மெனைக்காக்க வில்லைசித்தந்
தானெனது பாக்கியமெய்த் தையயனந்த ராமையசுந் தரநூ மானே. (167)

## பழநி சிரஸ்தார் சுப்ரமண்ய அய்யரவர்கள் மீது.

மார்க்கமதி லொருவேடன் வல்லமையா லெனையெதிர்த்து வளைநூ ணுடை
சேர்க்கையொடு கொள்ளையிட்டான் சிக்குவதோ வரிதுதுப்புத் திறத்தான் மெல்ல
மூர்க்கனென்று மவனைவரன் முறையடக்கி யென்குறிப்பை முடிக்க வேண்டுந்
தார்க்களப புயசிரஸ்தார் சுப்ரமண்ய கண்யனென்னுஞ் சரச மாலே. (168)

இதுவுமது.

ஏற்றததி பார்த்துநறைந் திடுதிருட்டு வலமாய னென்பான் பெற்ற
சீற்றமத வெங்கட்டன் றினமுமடக் கருப்பனைச்சேர்த் திக்கொண் டென்பால்
மாற்றறிய கலகமிட்டான் மாதரெல்லாஞ் சாட்சிருசு மதித்துத் தீர்ப்புச்
சாற்றவினி யென்னதடை தயவுபுரி சுப்ரமண்ய சரச மாலே. (169)

### இவர்கள் ஒரு சமயம் நாவலரவர்கள் வீட்டிற்கு வந்து பேசிக்கொண்டிருந்து சற்றுநேரம் நித்திரை செய்யப் பள்ளிகொண்டபொழுது சொல்லியது.

பரிதிநிலா வினுங்குளிரப் பரவுதிரைப் பயோததியிற் பண்ணன்னுகந்
தெரிவரிதாய் நெடுவடபத் திரம்வெளுத்து நெளித்தலைந்து செயல்யோசிக்கப்
புரிதவம்யா தெனதகமுற் பூண்டதுநிற் பெறவென்றும் புரத்தற் பண்பாம்
விரிதுதிலா வண்யபுண்ய விப்ரகண்ய சுப்ரமண்ய விஜயமாலே (170)

## சிரஸ்தார் இராமசாமி அய்யரவர்கள் மீதியற்றிய

# பிராது விண்ணப்பங்கள்,

இகல்கருப்பக் தேவன்மகன் காமத் தேவ னென்னிலத்தி னூடுதன்கா லினைநே ரோட்டி
மிகமதர்த்திட் டேறணையைத் தடுத்து நீரை விலக்கிவரம்பையுமழித்தான் விசாரித்தன்னோ
னகமொடுக்கிச் சுகபோக மெனக்குவாய்க்க வுறல்செலுத்தி யெனைரக்ஷித் தருள வேண்டும்
சகமதிக்கப் பழுதிதனிற் சிரஸ்தா ராகித் தருமநடாத் தியராம சாமி மாலே. (171)

## இதுவுமது.

காணிக்க நாட்டாண்மைக் காரன் றண்டற் காரனுத வியினாலே கருப்பன் யாரும் [யான்
பிரமிக்க வயல்புகுந்து போரிற் கொள்ளை பெரிதிட்டா னென்னசெய்வேன் பேதையேன்
பாவுற்ற பண்ணையில்வாழ் குடும்பர் சாட்சி பள்ளிகட்குந் தெரியவரும் பட்ட பாடு
தரணிக்கு ளவனையடர்த் தென்னை ரக்ஷிக்கச் சமயமிது மெய்ராம சாமி மாலே. (172)

## இதுவுமது.

சங்கன்மக னானபொல்லாத் தடிவீர னிருளனையுந் தான்கூட் டிக்கொண்
டெங்கள்வய லினிற்புகுந்தா னென்னசெய்தா னோநகைமற் றெல்லாங் காணேன்
அங்கவனை யடக்கியென தனிதனத்தை முறைப்படிசேர்த் தருளல் வேண்டுந்
துங்கமிகு வேதகுல னுரைராம சாமிமகா சுகுண வானே. (173)

## இதுவுமது.

அடுத்தவள வெல்லிபகைத் ததையுங் கோதை
யடித்ததையு மாரியுஞ்சேர்ந் தடங்கா மற்போர்
தொடுத்ததையு மறிக்கைசெய்து கொண்டேன் கேட்கிற்
சுற்றிலுள்ளோ ரெல்லாருஞ் சொல்வார் சாக்ஷி
சடுத்தமிகு மேற்றடிப்பு மப்போ தேபார்த்
ததுதானே யெதிரிகளைத் தண்டி யாமல்
விடுத்ததென்ன நடப்பைவிசா ரிக்க வேண்டு
மெய்ராம சாமிமகா விவேக வானே. (174)

## நாவலர்போற்றும் நடுவெழுத்தலங்காரம்.

மையனுபரி மதிபரிதி வடங்கள்விபூதி யலர்தூற்ற
வலிதுதரணி பகைபுணரி மனதுபதடி கொடிதுபுய
லையவணைமார் தொழில்பவுரி யாகவருந்து வாட்குமுன்பின்
னடுத்தபேர்க ணடுவுநிலை யறிவித்திடுதல் வேண்டாவோ
செய்யவிடைசேர் வனவிரண்டுந் திரண்டுமதனை யன்னைநன்றைத்
தீதைமகிழ்வைக் கவியையென்னைத் திரத்தையெனநின் னுருத்தொழுமித்
தையறனைநீ கலந்துகொஞ்சித் தழுவச்சமய மிதுகண்டாய்
தர்மப்ரபுவா கியராம சாமீராஜ தயாநிதியே. (175)

இ-ள். உயரி, பரிதி, விபூதி, தரணி, புணரி, பதடி, புயல், பவுரி என்பவற்றின் நடுவுநிலை பரிபூரண தயவு, இதனை மேற்கூறியவாறு வருந்துவாட்கு அறிவித்திடுதல் வேண்டாவோ என்றவாறு. மற்றைய விரண்டக்கரங்களைச்சேர்த்துப் பின்னர்க்கூறிய, மதனை ………………திறத்தை யென்பவைகளிற் கூட்டி முறையே. மதனை-உரி, அன்னைப் பதி, நன்றை-விதி, தீதைத்தணி, மகிழ்வைப்புரி, கவியைப்படி, என்னைப் புல், திரத்தைப் பரி யெனச்சேர்த்துப் பொருண்முடிப்புகொள்க.

---

## மாலைமாற்று நேரிசைவெண்பா.

மாநேமி சாமரா மாருதம தானவல
தாநேய மேனேரா தாதாநா—பூநாதா
தாராநே மேயநே தாலவன தாமதரு
மாராம சாமிநே மா. (176)

---

## சதுரங்கபந்தனம், கலித்துறை.

திங்க ளதனை யடர்முக மாது சினேகியணி
கொங்கியல் போதினை நேர்தன மீதிற் குரோதமென்றே
தங்கி வளரு மணைமேற் கவின்மின்னைச் சாரினிமா
மங்கை திகழும் புயராம சாமி வரோதயனே. (177)

## இயற்றமிழ்வலர்புகழெழுத்தலங்காரம்.

### பதினன்குசீர்க்கழிநெடிலடியாசிரியம்.

அய்யநீ யணுகூர் மவுத்திக புரமென் றறிந்ததி லேழுநாள் கணையா
ளங்கிலை மாற்றெட் டகன்றபின் னுரை சேர்ந் தாதியிற் றயலொடங் தமதாய்ச்
செய்யவைந்தேழெட் டணிபுக முதனாற்செறிவினால் வருமெழுத் திரட்டத்
தீப்புழுப் போன்றைந் தெட்டிகழ்ந் தாறு திகழுதிற் பாதிநான் கிணைத்து
வெய்யவங் கதின்முன் விலக்கினையந் தேற்றி மேற் றனை துவகையே விரும்பி
மிகமெலிந் தனளிங் கைந்துநான் கவட்கு வேறெவ ருணையல தருள்செய்
தய்யசெந் தமிழின் சுவையெலாந் தெரிந்த தொண்டை மண் டலநதிகுலத்துச்
சுயதுணை நிதியா கியபெருந் தகைமைச் சுப்பரா யேந்திர துரையே. (178)

குறிப்பு—
மவுத்திகபுரம் என்பது கோயமுத்தூர், { 1. 2. 3. 4. 5. 6. 7. 8 / ம வு த் தி க பு ர ம் }

---

## சமஸ்தி 7 கவரிவருப்படி யமகம்.

சங்கவரி சுதன்காமந் தழைக்கவரி சிலைவளைத்துத் தையல்நாணச்
சங்கவரி னென்செயுமெய்த் தவங்கவரி வளைக்கலந்து தழுவு நூற்ப்ர
சங்கவரி யகவிசர் தமக்கவரி தயப்படிகுஞ் சரம்பொன் மாது
சங்கவரி சிவிகையருள் தக்கதுங்க சொக்கலிங்க தளசிங் கேறே. (179)

---

போடிநாயக்கனூர் ஜமீன்தார்

## வங்காரு திருமலைப்போடைய துரையவர்கள்மீது.

நலக்குவளை கடற்பேரி தொனிப்பமன துணைத்தேடி நாள்க டோறுஞ்
செலக்குவளை மலர்ப்பகழி மதப்பயலு மெதிர்ப்பவமு திணைக்கைப் பெண்றே
யிலக்குவளை யணைத்ததர வினிப்பருண்மாம் பழக்கனியை மெச்சிச் செம்பொற்
பலக்குவளை தருவங்கார் திருமலைப்போ டயஜயவிற் பன்ன மாலே. (180)

காமராஜய பாண்டிய துரையவர்கள் பட்டாபிஷேக காலத்திற் சொல்லிய

## வாழ்த்துக்கவி.

### ஆசிரியம்.

சீர்பூத்த பங்கயச் செங்கய மெனும்படி திருந்நியின் னருள் பொருந்திச்
செய்யகம் பளமுழுது முய்யவிமை யாதொளிர் செழுங்கட் கொழுங்கட் பசுந்
தார்பூத்த குழலமுதை யன்பரித யத்திற் சரற்கால மதிபோல் வருஞ்
சக்கால தேவிதனை யெக்கால முந்தொழுது தலையால் வணங்குகிற பாம்
வார்பூத்த கொங்கையிசை மங்கைதிரு நங்கைமிக மகிழ்காசை நகராதி பன்
வரசீல வார்குல கிரீடிவங் காருதிரு மலைப்போட யேந்திரன் செய்
'நேர்பூத்த மெய்த்தவமு முத்தமிழ்த் தவமுநில நிறைதவமு முறை விளக்கும்
நீதிமான் காமரா ஜயபாண்டிய துரையவர்கள் நீடூழி வாழ்க வென்றே. (181)

மகுடஞ் சூட்டிய தினத்தில் ராஜசபையிற் கவிப்பிரசங்கம் நடந்தபொழுது முன்னிரண்டடிகளாற் சபையிலொருவர்குறித்த வினவும், உடனே தொடர்ந்து கூறிய கவிச்சிங்கத்தின் விடையுஞ் சேர்ந்த

### வெண்பா.

மாம்பழத்தைப் போலு மதுரமிகு மாம்பழஞ்சொல்
லாம்பழமை கேட்டுமுடி யாட்டிலனென்—நாம்புதுமை
யின்கா சினிபொறுத்தா மென்னுமோ வென்றிருந்தான்
மன்காம ராஜயபூ மான். (182)

கோம்பை ஜமீன்தார்

## திருமலை சக்கப்பாச்சி துரையவர்கள் மீது

### எண்சீர்க் கழிநெடிலடி விருத்தம்.

திருமேவு பசுந்தமிழ்மாம் பழக்கவிச்சிங் கேந்த்ர
சிகாமணிவா சகங்கோம்பை சிறந்திடவீற் றிருக்குந்
தருநேர்கஸ் தூரி ரங்க குமாரதள வாய்ப்ர
தாபமகு டாதிபத்ய சற்குணசக் ரேசன்
அருள்யோக திருமலைசக் கப்பாச்சி மதவே
ளன்பினொடு காண்கவுன தருமைதெரிந் திடநா
மொருவார மாகவிங்கே யுற்றனமா தலினு
னுடனழைத்து வரிசைசெயி லுயர்புகழுண் டாமே. (183)

### சந்தக் கோச்சகம்.

வட்டமுலை மெத்தவும தக்கெழில்ப டைத்தகஜ
மத்தகத லத்திணைநி கர்த்துவள ரக்கணைகள்
விட்டனன்ம தப்பயலு றக்கமுமி லைத்தயவென்
மிசைபுரி தற்குப் போட்டி யாகுமோ
சட்டமொடு மெத்தையிலி ருத்தியொரு முத்தமிடு
சற்றெனினு மிக்கொடுமை யைத்தணிச கிப்பரிது
சிட்டர்புகழ் சற்குணச வுக்கதிட முற்றசெய
திருமலை சக்கப் பாச்சி ராஜனே. (184)

---

### வேறு சந்தம்.

எவர்செப் பியவிய ரீதமித் திரவகை
யிதுபுத் தியிலறி கிலனித் தனைமன
கடைத் தொழில்சரி யலவற் புதமுலை
களப புயத்திற் சேர்த்து மேவுவாய்
புவனத் தரசர்கள் கிரமப் படிதரு
பொருளிட் டடிமுறை பரவப் பொலிவொடு
திவள்பற் பலவிரு துளசற் குணஜய
திருமலை சக்கப் பாச்சி ராஜனே. (185)

---

### விருத்தம்.

மலரகித வேதாந்த வாரிபடிந் தானந்த மதிச்சூன் முறறுக
கலகருண வரவொளிப்பக் கனிவாய்வின் டதிர்ந்துகடைக் கண்பின்காட்டி
அலர்கருணை மழைபொழிபே ரருளானந் தக்குயின்மே வணிவெற் பென்றுங்
குலவுதுரைப் பாண்டியனைக் கண்டவர்தம் பண்டைமனக் குறைதீர் வாரே.* (186)

விருதுகொண்ட பசுந்தமிழ்மாம் பழக்கவிச்சிங் கங்குறிக்கும் விவரம் வாண
ரருமைகண்டு வரிசைபல்லக் கருள்புரியுந் துரைப்பாண்ட்ய வதிபா கேண்மோ
திருவுகந்த வுத்யோகர் சிற்சிலர்கேட் டிருப்பதனாற் றேடி யேனுங்
கருதுகின்ற சுவாகிரண்டு கணமனுப்ப வேண்டுமனங் கனிந்து தானே. (187)

---

### உத்தமபாளையம் சீனியாசாரியாரவர்கள் மீது.

#### நடுவெழுத்தலங்காரம்.

இருப்பிடனொடு வசந்தமன்னை யினியகுழம் பினுக்குநித மிடுப சார்த்தம்
விருப்புறபாரத் திபமிவற்றி னடுநாமா மற்றிரண்டும் விரிப்பக் கேண்மோ
திருத்துாசனை யமுதமரு வலர்மீது விடுபூனமே தினிமே வியார்க்கும்
பெருத்ததிறல் விடமெனைப் போசமிதுத் தருள்கருணை பெருகு வாயே. (188)

குறிப்பு:— இருப்புமுதற் பாத்திப மீறுவுள்ள வைந்தின், பரியாயப்பெயர் முறையே ஆசிர், வேனில், தாமார், மசால், உரிமை என்பன. இவற்றினடுவெழுத்துகள் = சினியாசாரி. ஏனையவிரண்டக்கரங்கள் சேர்ந்தான, ஆர், முதலியவற்றை, அமுதாதியவற்றிற்குக் கூட்டி, பொருண்முடிபு கொள்க.

### அப்பாச்சி பிள்ளையவர்கள் மீது

அப்பாச்சி யம்போல வாகினுந்தா கித்தடைந்தார்க் கருளார் பாற்போ
யப்பாச்சி தறிவீனி லலைபுலவீர் பிறமாத ரருமைக் கொங்கை
யப்பாச்சி கரப்புயன்கா ரனையான்சங் கரமூர்த்தி யருள்சே யெங்கள்
அப்பாச்சி யூகியைக்கொண் டாடுமின்கா ரியசித்தி யாகுந் தானே. (189)

### அநுமந்த நகரம் வித்வான்
### சுந்தரராஜவய்யங்காரவர்கள் மீது

மதிபரிதி தனதிரு மருங்கினு நெருங்கியெழ மறையாத மின்பொருந்தி
வடமேரு கிரிமீது மணமழநீல முகிலொன்று வருகின்ற காட்சியேபோ
லதிர்தவள சங்குசக் ராயுத மிலங்கமல ரரிவைதிரு மார்பில்வாழ
வணியுவண மூர்ந்தன் றழைத்தமத யானைமுன டுத்தபொரு ளைப்பணிகுவாம்
நதிகுலவு மநுமந்த பதிமருவு சஞ்சீவி நாதனு ராதனைவழா
ஞானவே தியர்திலக நயவமிர்த குணவழகர் நன்னிதி தவத்துதித்தோன்
றுதிமகிமை யண்ணு மதன்சகோ தரனுசித சுமுகன்முத் தமிழ்விநோதன்
சுரராஜ னனையசுந் தரராஜ மணிசெழுஞ் சுகமொடு தழைக்கவென்றே.(190)

## ஷை யாரவர்களியற்றிய பிரபந்தங்கட்குக் கொடுத்த சாற்றுக்கவிகள்.

திருவுலவு புவிவனிதை திலதமுக மென்னச் செழித்தோங்கு வில்லி புத்தூர்த்
தென்கோதை மன்மகிழ நன்கோதை யுதித்தருதேவரமு தினுமி னியவாய்க்
கருவுலவு கற்பனை யலங்கார வின்பக் கவிப்பதிக மாலைசூட்டிக்
கருணை கடாக்ஷபரி பூரண விலாசசுப கனயோக வாழ்வு பெற்றான்
மருவுலவு சோலைகதிர் வாம்பரி விடாய்தணிய வளருமநு மந்த நகர்வாழ்
மந்த்ரவே தியர்சிகா மணிசகல சாஸ்த்ரதிட மதுரநய வசனப்ரபு
தருவுலவு கரனெங்க ளழகர்மா முகிலீன்ற சற்புத்ர வித்வ சரபம்
சரதகுண புனிதசுந் தரராஜ ஜயமுத் தமிழ்ச்சக்ர வர்த்தி தானே. (191)

வலசந்த னாளிலைவர் பொருட்டுச் சென்ற மாலெனவான் படிமாட மருகெ லாமங்
கலசந்த னாடவிமா ருதமு லாவிக் கமழ்மதுரை யங்கயற்கட் கௌரி மீது
பலசந்த மாலையனை வருங்கொண் டாடப் பாடினா னனுமந்த பதிவாழ் கின்றோன்
சலசந்த னாதனமாந் திருவார் வேத சற்குலசுந் தரராஜ சாமி தானே. (192)

இக்குவிச தக்கமல மெழிலார் கின்ற வின்மொழிவாண் முகத்தமர்ந்த விரண்டு வாளை
யக்குவிச தந்தரளத் தசனம் பொன்னா ரலர்நிகரு மடிதிகழ்ந்த வடலை யின்சீர்த்
திக்குவிசயப்பதிகந்தமிழாற்செய்தான்செழித்தவனசத்தலங்கறெரிநூன்மார்பன்
சொக்குவிச யற்கருள்வோ னருள்சேர் ஞானச் சுந்தர ராஜக்கவிஞ சுகுணன் மாதோ

மதிவலவ ரிதயவண்டு மகிழவின்சொற் றேனூறுநகர் மணமுஞ் சான்ற
பதிகமல ரணிகயற்கட் பாவைபதஞ் சூட்டியருட் பயன்பெற் றானாற்
புதியபொழி லனுமந்த புரிவேத குலதிலகன் புலவர் கோமான்
சதிர்பரவு மழகர்வரோ தயன்சுதன்சுந் தரராஜ சாமி தானே. (194)

### கலித்துறை.

செந்தாதி னம்புயத் திண்புயன் வேத சிரேட்டனென்று
நந்தாதி லங்கு நிதியனு மந்த நகரில்வளர்
பந்தாதி பன்சுந் தரராஜ வேள்சொன்ன பட்டர்பிரா
னந்தாதி யின்சுவைக் கொப்போ விளர்த்தநல் லாரமுதே. (195)

திருக்கோதை தாளிற் செழுந்தமிழ் மாலை செகமதிக்கப்
பெருக்கோதை வாரி யமுதிற் புனைந்தருள் பெற்றனனா
லிருக்கோதை யன்பொற் பனுமந்த நன்னக ரிந்திரமெய்த்
தருக்கோதை வென்றுள சுந்தர ராஜ தயாநிதியே. (196)

## பழனித்தலம் வே, மவுனகுரு ருத்ரமூர்த்தி யாசாரியாரவர்களுக்கு அருளிய சாற்றுகவி.



சகலவித புவனர க்ஷகசச்சி தானந்த தத்துவ சொரூப மோக்ஷ
சாஸ்வதவ கண்டஸா க்ஷாத்கார வற்புத தயாவிராட் விஸ்வகர்ம
காரக ப்ரம்ஹபஞ் சானனேற் பவநித்ய தபமந்த்ர ஜபவிநோதர்
ஷண்மதஸ் தாபனர் சதாமங்க ளாகர சபாசந்ய தான வரதர்
சத்யநிஷ் களபஞ்ச வேதவித் தாகத் தழைத்தோர் மகத்வ கர்த்தர்
ஸாஸ்த்ரவஷ் டாதச புராணாக மப்ரபல சர்வ கலையும் படைத்தோர்
தவள கயிலாசசசி தரநீல கண்டர்புகழ் சாமர்த்ய பௌ ரோஹிதத்
தலைவராய் சிருங்கேரி தனில் விளங் கியபத்வஷ்ட சங்கராச் சார்ய மூர்த்தி

பகரிய நெல்லையம் பதியிற் றிருக்கின்ற பரசமய கோளரி யெனும்
பரமகுரு ஞானந்தல் மேவு சிவ லிங்ககுரு பரவுதிந் தினி புராதி
பத்யதிட மௌனகுரு ருத்ரமூர்த் திக்கடவுள் பலனுதவு போத னூரிற்
பவரஹித புனிதவி ரப்ரம்ஹ தேசிகன் பலவள நிறைந்த வீப்பூர்
பார்த்திபன் வெங்கடாச் சாரி கெம் பீர சௌபாக்யமிகு நந்தி கொண்டைப்
பகவனுஞ் சிவசங்க்ர யோகீஸ்வ ரன்கவிஞர் பன்னுசீர்க் கன்ன புரிவாழ்
பாஸ்கரோ தயஞான மூர்ததியுயர் தில்லையிற் பவுசுற் றுயர்ந்த திவ்ய
பக்திவடி வாங்கமல மூர்த்திமெய்ஞ் ஞானியிவர் பதத்யான மனசி ருத்தி

விகடமத தடகும்ப விஜயகுஞ் சரதுரக வீரவசு ரேசர் சேனை
வெருவிழுது கிடநடன மிடுகலப மரகத விசித்ரமயி லேறி வென்று
விண்ணுடர் வெஞ்சிறை விலக்கியிந் திரனுக்கு மேன்மைமணி முடிதரித்து
வேதனுக் கும்பொதிய நாதனுக் கும்ப்ரணவ விவரம தனுக்ர கித்து
வேண்டிமுன் னுளினிற் பாண்டியன் கூன்சுர வியாதிகளை நீற்றின் மாற்றி
மேவுமொரு நக்கீர தேவனிட ரைத்தீர்த்து விருதருண கிரி நாவினில்
வீற்றிருந் தவனு லனேக கவிமாலிகை மிலைந்துசிவ போத மூட்டி
மெய்யான தென்பழநி மலைமீ தமர்ந்தவடி வேற்கந்த நாதன் மீது

மகரசல நிதியனைய வாவிபுடை சூழ்பழநி மாநகர் தழைக்கு நிபுணன்
மதுவுமிழ் சகஸ்ரதள வனசகெம் பீரபரி மளதாப களப மார்பன்
மங்கள சுயம்புவிஸ் வப்ரம்ஹ குலசிகா மணிமுத்தை யாச்சாரி தன்
மாதவ குமாரவிஸ் தாரவே லாச்சாரி வரதிட சுபுத்ர ரத்னம்
மதிமௌன குருருத்ர மூர்த்தியாச் சாரியெனு மதுரப்ர சங்க துல்யம்
வடியிட்ட தெள்ளமுது முக்கனி சருக்கரையு மத்தித்த தாமிதென்ன
வழுவாத வகைகீர்த் தனப்ரபந் தத்தினை வகுத்தரங் கேற்றி யப்பால்
வளர்சென்னை பச்சிற் பதித்துமிக நீடூழி வாழ்வுபுகழ் பெற்றன ரோ. (197)

## சொக்கநகர் ஆபத்துக்காத்த பிள்ளை அவர்கள் மீது பாடியவை.

### திரிபு.

புக்கனகர் தினம்புகழப் புவிவனிதை திருவதனும் புயமே போலுஞ்
சொக்கனகர் வள்ளலெங்க டுணையாபத் துக்காத்த துரையைக் கண்டா
லெக்கனகர் விகளுமுனார் விமரானவர் வறுமைமன விருளும் பின்னிட் [வாரே
டொக்கனகர் வுறுமெனிலன் ஞென்பெருந்தன் மையையெவர்தேர்ந் துரைசெய்

### யமகம்.

மானேச ராகவரு மக்குயில்மூந் தியதாலும் வசந்தத் தேர்ப்பூ
மானேச ராகவரு மலர்க்கணைதூ வுதலாலு மலைத்தாள் காப்பாய்
மானேச ராகவரு மனுமுதன்மற் றெவருமெச்ச மருங்கை நீதி
மானேச ராகவரு மகிழ்வாபத் துக்காத்த மதிவல் லோனே. (199)

### இதுவுமது.

கனகமலை யுடையமுகில் கடியவரை மருவுமணி கவனித் தால்வன்
கனகமலை தருமிருகங் கபிலையெனி லுனக்கிணைநி கராரு மாமோ
கனகமலை வாணிகற்றோர் கங்கைசொக்க புரிசெய்தவங் கனிறற் றோன்றிக்
கனகமலை மிசைவிளக்காய்க் கதித்தபுக மாபத்துக் காத்தவேளே. (200)

---

## சாமானிய வசனங்களையே செய்யுளுருவாகச் சொல்லுந் திறமை வாய்ந்த பிள்ளையவர்கள் கவிச்சிங்க நாவலரவர்களைப் புகழ்ந்து சொல்லிய வசனம்.

கம்பனும், ஒட்டக்கூத்தனும், புகழேந்தியும், ஒளவையும், காளமேகமும், படிக்காசுத் தம்பிரானும், பரஞ்சோதி முனிவனும், சிற்றம்பலமும், வெண்பாப் புலியும், வாலசிம்மமும், மற்ற வித்வான்களும், பழனி மாம்பழக்கவிச்சிங்கத்துக் கிணையா ? உலகத்தாரே.

### விருத்தம்.

கம்பனுமொட் டக்கூத்த னும்புகழேந் தியுமவையுங் காள மேக
மும்படிக்கா சுத்தம்பி ரானும்ப ரஞ்சோதி முனிவ னுஞ்சிற்
றம்பலமும் வெண்பாப் புலியும்வால சிம்மமுமற் றவித்து வான்க
ளும்பழனி மாம்பழக்க விச்சிங்கத் துக்கிணையா வுலகத் தாரே. (201)

### அப்போது கவிச்சிங்கம் சொல்லியது.

அருமணலைக் கயிறுதிரித் தாங்குலக வாசகமே யமைபாட் டாகத்
தருநினதுத் தமமகிமைத் தரத்தைநினைக் குந்தொறுமாச் சரியம் யார்க்கும்
வருமொருவர்க் கெளிதலவிம் மார்க்கமம்மா கலசமுனி வனுங்குன் றுற்றான்
கருமுகில்கற் பகமலர்ப்பூங் காவொத்த வாபத்துக் காத்த வேளே. (202)

### பிள்ளையவர்கள் சொல்லியது.

பயங்கொண்டு கருத்துநிலை மாறிமதி தோன்றாத படிக்கு நின்று
நயங்கண்ட வாக்கின்றி யோடுமுகி லுனக்குநிக ராகா நற்ச
மயங்கண்டு தீரதிற மோங்கறிவின் பப்ரசங்க மதுரச் சொல்லாற்
செயங்கொண்டு கவிமாரி பொழியுமாம் பழப்புயலாஞ் சிறப்புற் றோனே. (203)

### கவிச்சிங்கம் சொல்லியவை.

மணிபுரக பதிநாணால் வணங்கினன்பின் புற்றிருந்தான் வனவான் மீக
னணிகலச முனிபயங்கொண் டனன்வாணி மறைவாய்நின் றலர்மேலானாள்
தணிவரிய வுனதுகவித் தரந்தெரிந்தென் றானுனக்குச் சமானம் யார்காண்
கணிதமுத லுளசகல கலையுமுண ராபத்துக் காத்த வேளே. (204)

வனம்புகுதா னிராமனிரா வணன்சூர னிரணியனிவ் வலியோர் மாயார்
முனந்துரியோ தனன்சிதையான் முன்னைநளன்பஞ் சவர்சூதின் முயல மாட்டா
ரனந்தகலா நிதியாயின் னருட்கடலா முனைப்போலோ ரமைச்சுண் டானாற்
கனம்புகழ்கூ றுனதருமை கழறுநர்யா ராபத்துக் காத்த வேளே. (205)

திருவுலவு சுமந்திரன்சத் தியகீர்த்தி திருந்துபட்டி திகழப் பாச்சி
யருமைமதி யூகியின்னோர் யாருநிற்கொவ் வாரேனென் றான்மற் றன்னோர்
சருவஜன சகாயர்களா தமிழறிந்தா ராகவிதை தாஞ்சொன்னாரா
கருதுபல கலைபியல்புங் கற்றாரா வாபத்துக் காத்த வேளே. (206)

மந்திரிமார் கவியறியார் வாணரா சியலறியார் வழக்க மீதான்
முந்தியுளோர் தமிலெவரை மொழிதுநினக் குவமைமனு முறைசொன் மேன்மை
தந்திரகா ரியங்கவிமுத் தமிழருமை மிகுந்துநிதி தழைக்கப் பெற்றுக்
கந்தருவா திபனுமெச்சக் கனம்படைத்த வாபத்துக் காத்த வேளே. (207)

### கலித்துறை.

கல்விக் கொருகடல் காவலர்கட்கிரு கண்மணிசெஞ்
சொல்விற் பனன்மரு வார்க்கிடி யேறு துறையறிந்த
நல்வித் துவஜனர்க் கோருரை யாணி நளினமலர்ச்
செல்விக் கிருப்புநம் மாபத்துக் காத்த செயசிங்கமே. (208)

கனத்தினு மன்பினர் கண்ணினு மெண்ணில் கலையுணர்ந்தோ
ரினத்தினு மன்ன ரிடத்தினுஞ் சென்னி யினுமெனது
மனத்தினும் வாக்கினும் வல்லவர் நல்ல மதிப்பினுமெத்
தினத்தினு முள்ளவ னுபத்துக் காத்த செயசிங்கமே. (209)

சிலவர் பகைற் றனமென்பர் பாடத் திகைத்தனுப்பர்
நலவர் செவிமனந் தித்திக்கச் சொற்கவி நாட்டினையெப்
புலவர் வரினும் புலவரன் றோநின் புகழ்தெரியின்
வலவர் துதிபுரி யாபத்துக் காத்த வரோதயனே. (210)

வெண்பா.

என்னகவி யப்பா வியம்பரிது மற்றகவி
என்னகவி யப்பா வினிதானதே—யன்னகவி
நீதா நயப்பு நிதியாபத் துக்காத்த
நீதா நயப்பு நிதா. (211)

முற்று நினைத்தான் முறையறிநின் போல்வாரே
மற்று நினைத்தான் வழுத்தார்யார்—கற்றுவல்ல
வாபத்துக் காத்த வரசே புலவோர்தந்
தாபத்துக் காத்த ஜனர். (212)

செய்ய மதியார் செயமதிப்பார் மீதுகொளார்
செய்ய மதியார் செயமதிப்பார்—துய்யபுகழ்
மாலாபத் துக்காத்த வள்ள லுண்மை யன்பென்னு
மாலாபத் துக்காத்த வம். (213)

அன்னவயற் சொக்கபுரி யாபத்துக் காத்தவளளா
லுன்னருமைக் கென்று லுண் டோவுதவி—முன்னுகுறள்
கைம்மாறு வேண்டா கடப்பாடு மாரிமாட்
டென்றாற்றுங் கொல்லோ வுலகு. (214)

## இருவர்களுக்கும் வசனரூபமான கவிகளால் நடந்த சம்பாஷணைகள்.

### பிள்ளையவர்கள் சொன்னது.

முன்பு போசன் சமுகத்திலிருந்த காளிதாசன் போலிலை யெந்த வித்வானும் என்பார்கள். நல்ல புத்திமான் மாம்பழக் கவிச்சிங்கத்துக் கொப்பிலையென்பேன் நிச்சயமிது.

வெண்பா.

முன்புபோ சன்ச முகத்திருந்த காளிதா
சன்போ லிலேயெந் தவித்வா னு—மென்பார்கள்
நல்லயுத்தி மான்மாம்ப மூக்கவிச்சிங் கத்துக்கொப்
பில்லையென்பேன் நிச்சய மிது. (215)

## கவிராயரவர்கள் வசனம்.

நமது துரையவர்களைக் காண வின்றைக்கு மனசு துடிக்குது கண்டு முறை யிட்டுக் கொள்வதுசிதமோ கூடாததோ சொல்லுங்கள் பிள்ளையவர்களே.

வெண்பா.

நமது துரையவர்க ளைக்காண வின்றைக்
குமனசுதுடிக் குதுகண்—டுமுறையிட்டுக்
கொள்வ துசிதமோ கூடாத தோசொல்லுங்
கள்பிள் ளையவர் களே. (216)

## பிள்ளையவர்கள் வசனம்.

அய்யா கவிராயரவர்களே தங்களுக்குச் செய்யுமரியாதி விஷயத்தில் அய்ய ரும் நானுஞ்சொன்னோம் நம்மெசமானுஞ் சரியென்றொப்பிமனசுஞ்சுமுகமாச்சுது.

வெண்பா.

அய்யா கவிராய ரவர்களே தங்களுக்குச்
செய்யு மரியா திவிஷயத்தி—லையருநா
னுஞ்சொன்னோ நம்மெசமா னுஞ்சரியென் றொப்பிமன
சுஞ்சு முகமாச் சுது. (217)

## கவிராயரவர்கள் வசனம்.

தாங்களறியாத சமாசாரமென்ன உத்தரவு வாங்கி யென்னை யூர்க்கனுப்பி வைப்பதற்கெல்லாங் கிருபைதான் வேண்டும் மானேஜரவர்களே மெத்த நம்பி னேன் வீண்பேச்சல்ல நிசம்.

வெண்பா.

தாங்களறி யாதசமா சாரமென்ன வுத்தரவு
வாங்கியென்னை யூர்க்கனுப்பி வைப்பதற்கெல்—லாங்கிருபை
தான்வேண்டும் மானே ஜரவர்களே மெத்தநம்பி
னேன்வீண்பேச் சல்ல நிசம். (218)

## பிள்ளையவர்கள் வசனம்.

நமது பிரபுவிடத்தினிலே மருமசங்கதி முழுதும் பேசி முடிவு செய்திருக் கிறேன் அதிக சந்தோஷந்தானே அய்யா கவிராயரே.

வெண்பா.

நமது பிரபுவி டத்தினி லேம
ருமசங் கதிமுழு தும்பே—சிமுடிவு
செய்திருக்கி றேன திகசந்தோ ஷந்தானே
அய்யா கவிரா யரே. (219)

## மருங்காபுரி ஜமீந்தார்
# ஸ்ரீரங்க கிருஷ்ணமுத்து வீரப்பூச்சய துரை அவர்கள் மீது பாடியவை.

கருதுரங்க வடமுடைய காமனைமலர்க் கணைகொடுதக் கணையாற் சோபந்
தருதுரங்க வருத்தமென்றாற் சகிக்கரிது சகிக்கவிது தகிகற் றோர்க்கு
வருதுரங்க மானைவண்டி மாடிபல்லக் கனிராஜ்யை மணிபொன் வெல்கும்
விருதுரங்க கிருஷ்ணமுத்து வீரப்பூச சயராஜ விஜய மாலே. (220)

திசைவணங்கு போசனினுஞ் சிறந்தனை நீ யொளினுனது திறக்கைப் பாடி
மிசைபொருந்து மென்போல்வா ரேன்காளி தாசனினு மினிதி னேங்கார்
வசைதவிர்ந்து வளமிருந்து வளர்மருங்கா புரித்துரைக்க வருகெம்பீர
விசைய ரங்க கிருஷ்ணமுத்து வீரப்பூச் சயராஜ விவேக வானே. (221)

வான்மணந்த பொழின்மருங்கை வரோதயன்மன் னவர்கள்சிகா மணியெனன் றுரைக்
காண்முயங்க விடுபடையான் கனகொடையான் மனுநடையான் கல்விச் செல்வன்
மேன்மைரங்க கிருஷ்ணமுத்து வீரப்பூச் சயதுரைமுன் விரும்பிச் சென்றோ
ரேன்மயங்க வவர்க்கிணையா ரெப்பொருளு மப்பொழுதே யெய்துந் தானே. (222)

விரும்பிரங்க கிருஷ்ணமுத்து வீரப்பூச் சயதுரைசெய் விருந்தின் போது
தரும்புழுகு சவ்வாது சந்தனதாம் பூலமணந் தழைத்து லாவ
வரும்புதிய தென்றலையவ் வானவர்கண் டதிசயித்து வாய்மை தேறி
யரும்புநகை யரம்பையர்தோ ளணைந்தனர்மா தவருமதி லன்புற் றாரே. (223)

சிந்தையன்பு திருந்தியநின் செயநீதி யதிகாரத் திறுமஞ் சாமல்
நிந்தைகொண்ட கலிவீர னென்றபயல் கீர்த்திதனை நீட்டிக் காட்டிப்
பந்தையமுஞ் சொல்லிமிகப் பகட்டுகிறா னவனைநிர்த்தூள் படுத்த வேண்டும்
விந்தைரங்க கிருஷ்ணமுத்து வீரப்பூச் சயராஜ விவேக மாலே. (224)

### விருந்துநடத்தியவிமரிசைகூறல்.

வருந்தியொரு சுவையறிந்தார் விண்ணோ ரன்று
மற்றவரு மிமையோராம் வகையிப் போது
திருந்தியுள வறுசுவையு மெங்கட் கூட்டச்
சிந்தைவைத்தாய் நீதான்மெய்த் திருமா லையா
பொருந்தியுல கினிதுங்கள் புரிந்த தேதற்
புண்ணியம்பொற் பதிமருங்கா புரியாள் வேந்தே
விருந்தினிது சுகுணரங்க கிருஷ்ண முத்து
வீரப்பூச் சயராச விசைய மாலே. (225)

கற்பகத்தை யடைந்தவர்நொந் தாலு நன்னீர்க்
கடலினிடைப் படிந்தவர்தா கங்கொண் டாலும்
பொற்பதிக்கு ளிருக்குமமு தினைக்கைப் பெற்றோர்
பொங்குகனல் வெம்பசியாற் புழுங்கி னாலு
மற்படைத்த மழைநடிச்சென் றவர்வேர்த் தாலும்
வளருனைக்கான் பவர்வருந்து வதுதா னுண்டோ
விற்பனப்ர தாபரங்க கிருஷ்ண முத்து
வீரப்பூச் சயராச விசைய மாலே. (226)

## வேட்டைச்சிறப்பு
### கட்டளைக்கலித்துறை.

கேரள மும்பணி யுங்கொளும் ரங்க கிருஷ்ணமுத்து
வீரது ரந்தரன் வேட்டைகண் டேயத்தி வேங்கையுஞ் சோர்ந்
தாரணி யந்தனி னின்றன பேர்பற்றி யம்புலியின்
வாரண முந்தின மெய்வெளுத் தாற்பின் வகுப்பதென்னே. (227)

### வெண்பா.

மிக்கரங்க கிருஷ்ணமுத்து வீரப்பூச் சையதுரை
சக்ரபதி திவ்ய சமுகமதைச்—சிக்கெனவே
கண்டாலும் வாழ்த்திக் கவிபாடி னாலுமன்பு
கொண்டாலுஞ் செல்வ மிணங் கும். (228)

விந்தைரங்க கிருஷ்ணமுத்து வீரப்பூச் சையதுரை
சிந்தைமகிழ் வேட்டைத் திறமதித்து—முந்தி
யொலிப்புலிகம் பித்த வுயர்ந்த தமிழ்வாணர்
கலிப்புலிபோய் விட்டதன்றே காண். (229)

மன்னித்துக் கொள்கவொரு வார்த்தைவிரைந் தித்தடவை
என்னிஷ்ட முற்ற வினிதருள்வாய்—பொன்னுற்ற
விந்தைரங்க க்ருஷ்ணமுத்து வீரப்பூச் சையனென
வந்ததுங்க ராஜநன்னே மா. (230)

திங்கள்கா ணுக்குமுதஞ் செங்கதிர்கா ணுக்கமல
மங்குல்கா ணுப்பயிர்போல் வாடிமுன்பி—னங்கவையை
வெற்றிரங்க க்ருஷ்ணமுத்து வீரப்பூச் சையமன்னு
மற்றிவைநேர்ந் தொத்தேன் மகிழ்ந்து. (231)

## கடவூர் ஜமீந்தார்.

# கருணைகிரி முத்தைய துரையவர்கள் மீது பாடியவை.

### யமகம்.

கனகமலை முலைவளர்க் கலைதளர வளையுளரக் கவியுங் கங்குற்
கனகமலை யகற்றுமதி கொதிக்கவெயர் வுதிக்கமயல் கதிக்க மான்ம
கனகமலை தரப்பொருதால் யானொருத்தி யாற்றுவனோ கலந்து சேர்மோ
கனகமலை குலவுபுயா கருணைகிரி முத்தையசற் கண்ய வானே. (232)

### இதுவுமது.

டினகர மதின்முலையைக் கசக்கிநெரு டிறுக்குதொடை களைக்கன் னத்தைக்
கடினகர விடாதணைத்துக் கட்டுசபா ஷெனக்கிசைமோ கனநீ லீலை
கடினகர னுதிக்குமட்டுங் கனிவினொடு நடத்துசலாங் கடவூ ரென்னுங்
கடினகர மணிமகுட கருணைகிரி முத்தையசற் கண்ய வானே. (233)

### இதுவுமது.

தங்கவட்ட னயகளபத் தனமோங்க மனமேங்கத் தயங்கி ராமா
தங்கவட்ட மதிக்கவிகைத் தனிமதனெய் தனன்சகிக்கத் தகுமோ காப்பாய்
தங்கவட்ட டியிற்பகடு சங்குழக்கும் வயற்கடவூர் தனிற்சற் கீர்த்தி
தங்கவட்ட திசைதொழவாழ் கருணைகிரி முத்தையசுந் தரபூ மானே. (234)

### விருத்தம்.

விருதரசர் தமில்நளனோர் மிடிபிடித்தா னரிச்சந்த்ரன் விலையா ளானான்
தருமனொரு பொய்யுமுரைத் தனன்விசையன் பேடிபொல்லாத் தடியன் வீமன்
அருள்குமண னடவிபுக்கா னனையகன்னன் கானீன னதனால் யாரைக்
கருதுவது நினக்குவமை கருணைகிரி முத்தயசற் கண்ய வானே. (235)

## ஒபளக் கொண்டம நாயக்கரவர்கள்மீது

### நடுவெழுத்தலங்காரம்.

சுராகளரி தொண்டுநெட்டி துலங்குகப்பஞ் சிவயோகத் தொகையூ டொன்று
விரவுதனி மணையினடு விரைந்துதவு முனும்பினுமோ மிகநன் னூலைக்
கரவையன சத்திரத்தைக் கவியைமனத் தன்மையொன்னார் களைச்சீ லத்தை
யுரமருவு திருஞான வோபளக்கொண் டமராஜ வுசித மாலே. (236)

## இதன்பொருள்.

(தேவர்-விண்டு-அடிமை-தக்கை-பகுதி-சமாதி-விடுதி) இவைகளின் நடுவெழுத்துக்கள் (வண்டிக்குமாடு.) எனைய முன் பின்னான விரண்டக்கரங்களைச் சேர்த்து, நன்னூன் முதலியவற்றை முறையேகொண்டு கூட்டிப் பொருள் கண்டுகொள்க.

## விடுகவி

கவரிகுடை படைமுதலாங் கனசேர்க்கை யமைந்துகுழை கதிக்கப் பூண்டு
திவளுமணி முடிபொறுத்துச் செழுங்களத்திற் போர்கடிந்து செங்கோ லோச்சி
விவரமொடு படியாள்வர் வேந்தரல்ல தேர்ந்திதற்கு விரைந்தர்த் தஞ்சொல்*
லுவகைவளர் திருஞான வோபளக்கொண் டமராஜ வுசித மாலே. (237)

## இதுவுமது.

மருப்பழகு முடியுடையார் வண்டிவருந் தாருரத்தார் வான்மேற் கொண்டார்
விருப்பமுள நலகதியார் மெய்யின் மிக்கார் கான்மருவு மேன்மை யாளர்
பொருப்பனைய களபதடம் புயத்தேவ ரல்லவிடை† புகல்வாய் தன்ம
வுருப்புனித திருஞான வோபளக்கொண் டமராஜ வுசித மாலே. (238)

---

# ராஜய துரையவர்கள் மீது.

## திரிபு.

மோகனகா தனத்தவள மதிகொடிது கனல்வசந்த முழுது மென்றே
யாகனகா தனத்தவள ரணிமுலைபூ ரிப்பவித முமுத மூறக்
கோகனகா தனத்தவள னையவனிதை கூறைகுல குணுல ராஜ
மாகனகா தனத்தவள வளைகலைசோர்ந் தனன்கலந்தி வளைக்காப் பாயே. (239)

## இதுவுமது.

நிரம்பலக்கு முலைகுறித்தென் னேரமுமம் மாரனெய்யு நிலைமை தானோர்
வரம்பலக்கு மரிசகிக்க வசமோகண் பார்நவமா மணிபைம் பொன்வத்
திரம்பலக்கு மதகளிறு திடதுரகங் குடைகவரி செயடால் கண்ட
சரம்பலக்கு நாவலர்க்குத் தருராஜ ராஜேந்த்ர தளசிங் கேறே. (240)

---

* சொல் = நெல். † விடை = காளைமாடு.

### இதுவுமது.

கனகவட நிலவுபல கதிர்பெருக்கி மதியுருக்கிக் கரைக்கப் பூங்கோ
கனகவட னெடுங்கணையெக் காலுமலை போலுமுலை களின்மேல் வின்மோ
கனகவட மொடுதொடுக்காற் கன்னியென்ன செய்வளினிக் காத்தல் வேண்டுங்
கனகவட புயஜயகங் கணராஜ மகிபனெனுங் கருணை மாலே. (241)

### விருத்தம்.

பருவமதி கதிர்வீசப் பரியாசக் குயிலேசப் பகருல் லாசக்
கருவமதன் சணைதூறக் கடல்சீற முலைநீறக் கனிவா யூற
மருவமயல் பெருகினதென் மனப்படிநீ கலவிசெய்ய வருதல் வேண்டும்
துருவனென வுலகமெலாந் துதிராஜ மகராஜ துரைச்சிங் கேறே. (242)

## ஜானகிராம துரையவர்கள் மீது

### மன்மதோபாலம்பனம்.

திடக்கடக்கடா சலமுறர் ஜானகிரா மேந்த்ரனெனைச் சேர்ந்தான் பூநீ
தொடக்கடக்கடா லெடுத்துத் தோன்றவகை யிலையினிமேற் சும்மா வில்லை
மடக்கடக்கடா நமனை வாய்த்தவராற் சிதைத்துமின்ன மதந்நீ ராவுன்
சடக்கடக்கடா மதனு தனித்தவர்பா லலதுனது சமர்செல் லாதே. (243)

### குயில்விடுதூது.

முகடகட திரவிரைவின் முடுகிநெடு வரையினொடு முனிந்து போர்செய்
விகடகட களிறுகட வியஜயஜா னகிராம வேள்பாற் சென்றேன்
மகடகட தனிகுழலு மலிதுகிலு நெகிழுமுலை வளரக் கைசோர்ந்
துகடகட கடெனவளை தொடிதளரு மயல்குயில்காள் சொல்லுவீரே. (244)

### கலித்துறை.

அடடா வினிமால் சகியாதென் றன்னை யணைத்துமுத்தங்
கொடடா முலையைக் கசக்கடடாமனக் கூச்சமதை
விடடா துகிலை விலக்கித் துடைக்குள் விரைந்துமண்டி
யிடடா சமயமென் சானகி ராமதெய் வேந்திரனே. (245)

### இதுவுமது.

மாலைத் திரள்புயன் ஜானகி ராம மகபதிபூஞ்
சோலையி லென்னை யழைத்து நிலாவினிற் சுற்றுடையாஞ்
சேலையை மெல்ல நெகிழ்த்திமல் லாத்திப்பின் செய்தசித்ர
வேலையை யென்னசொல் வேனன்ன மேவெகு வேடிக்கையே. (246)

## கன்னிவாடி ஜமீன்
## குமாரமலையாண்டியப்பைய துரையவர்கள் மீது
### பாடியவை.

மானகரா வணையைவென்ற வரன்புதல்வன் சரங்களினூன் மனத்தி னூடு
மானகரா திருந்துமிக வருந்துமிது பொருந்துவதோ மலர்க்கண் பார்சன்
மானகரா வல்லக்க வார்குலசூ டாமணியாய் வளர்தென் கோதை
மானகரா திபகுமர மலையாண்டி யப்பையசன் மார்க்க வானே. (247)

வாகனந்தந் தம்பதிய வைத்துமுலை தொட்டணையெவ் வகைக்குநீ நிர்
வாகனந்தந் தொழிலறியா மதப்பயலை முடுக்கிவிடு வதுசா மர்த்யம்
வாகனந்தந் தமிழ்பயின்ற வாணர்தர மதித்துதவி மகிழுமேலா
வாகனந்தந் தருள்குமர மலையாண்டி யப்பையசன் மார்க்க வானே. (248)

---

## பழநித்தாலுகா ஓவர்சியர் ஆசீர்வாதம் பிள்ளையவர்கள் மீது
## உபயார்த்தமுள்ள விருத்தம்,

இவ்விட ரோட்டு மராமத்துப் பார்த்த தினிதணை கட்டநீ ரிசைந்தால்
ஒவ்விய குளமுந் தெற்குவாய்க் காலு மொழுக்கமும் போகமு மோங்கும்
வெவ்விய லாற்றுப் பாலவே லையும்பின் விசித்தமாந் தாமத மென்னே
மவ்வலங் குழலார் மதனிக ராசீர் வாதசற் குணசிகா மணியே. (249)

### கலித்துறை.

இலங்கைப்புலி னனிகறனை வென்ற விறைமருகோன்
றுலங்கைப்புலி யுடை யான்சுதன் காந்தட் டுணர்தனையி
கலங்கைப் புலி முலை வள்ளிம் மூளன் கருணைநிறை
வலங்கைப்புலி தனைக்காண்போர்க் கிருநிதி வாய்த்திடுமே. (250)

### கட்டளைக்கலிப்பா.

பூணங் கோட்டை யடர்முலை சிந்தைமேற்
பூரிக் கப்பெரும் போர்புரி மன்மத
பாணங் கோட்டை யவருரை வாட்ட நின்
பால்வந் தேனெனைப் பார்கண் டதிப்பிது
காணங் கோட்டை படர்நித் திலநகைக்
கமல வாணி கடாக்ஷம்பெற் றேயுயர்
சேணங் கோட்டை யதிபா திருமலைத்
தேசி கப்ரபு மக சுரேசனே. (251)

## இவர் கொடுத்த ஈற்றிற்குச் சொல்லிய கலித்துறை.

கக்கரக்கோ வெனுந் தேயித மூமொடு காதலன்மிஞ்
சிக்கரக்கோ கனகம்பற்றி மேவினன் சேனைப்பிரா
னிக்கரக்கோ தண்டம் வாங்கிய நாளிட் டிடாதிருந்தான்
கொக்கரக்கோ வெனக் கூவுது வாரணக் கூட்டமின்னே. (252)

## தேவகோட்டைசின்னையச் செட்டியாரவர்கள் மீது சொல்லிய கவி.

கலைநனி தெரிவிர் சோமன் காரிகை யுமாள் சேலை
விலைதரி யாத தென்ன விதமிதோ விசித்தமையா
நிலைவள மணைந்து செல்வ நிறைமணி மாடம் பைம்பொற்
சிலையினு முயர்ந்த தேவைச் சின்னையச் செட்டி யாரே. (253)

---

## பாகற்பட்டி மிட்டாதார் ரங்கசாமி பிள்ளையவர்கள்மீது

## நடுவெழுத்தலங்காரம்.

சிமிழ்வனிதை நாரதன்கைத் திருவீணை தெய்வவணி திருத்து நேமன்
திமிருமெருக துத்திமிலின் னிலைப்பதத்தி னடுவரிப்பேர் நிருபாகேண்மோ
நமிதபம துரைசென்ன ராயமுகுர் தனையுலுத்த நரரைச் செஞ்சொ
லமிர்தகவி நாவலரை யருள்புகழாற் பரிபாலித் தறஞ்செய் வாயே. (254)

(இதன் பொருள்) சிமிழ் முதல் திமிலீறாகவுள்ளவற்றின் பரியாயப் பெயர்கள் பரணி-நங்கை. மகதி-பூசாரி. நிமில். இவைகளின் நடுவெழுத்துகள் (ரங்கசாமி) யனைய வெழுத்துகளிரண்டினைச் சேர்த்து பின்னர்க் கூறிய வைந்தினுக்கும் பொருள் காண்க.

## விருத்தம்.

கடலினெழு மமிர்தனைய கவியருமை யறியாமற் கடிநாய் போல
மடமடென வாய்திறக்கும் மட்டிலுத்தப் பயல்கள்கண்டு மனசு நாணத்
திடனுடன துரகதமுந் திரவியசம் மானமுநந் திறத்துக் கேற்ப
வுடனருளி விடைதருவா யுசிதரங்க சாமியெனு முயர்வுள் ளோனே. (255)

### கலித்துறை.

கனக்கொடை யாளன் கவிரங்க சாமிமெய்க் காமன்வெற்பி
லெனக்குள செல்வ மிரண்டு குடத்தன மென்பதனாற்
றனக்கன மேகிதம் பத்துப் பணந்தரச் சாற்றுகின்றான்
சினக்கதிர் வேல னிடையினைப் பாமெனத் தேர்ந்திலனே. (256)

### இதுவுமது.

தரைப்பொலி தெய்வத் தருரங்க சாமித் தயாளன் வெற்பில்
விரைப் புரி வார்குழன் மின்னனை யீரிந்த வேளையுங்க
ளுரைப்படி யேமுத்தம் வேண்டிய மட்டு முதவுவன்பெற்
றரைப்பண நீர்தரச் சம்மதி யாத தறிவின்மையே. (527)

### அஷ்டநாகபந்தம்.

### வெண்பா.

வாராத தேதோ மயிலே சினமேது
சீராருந் தூது செலேகாம—நேராகங்
காயு மயநேரா காதேநன் னேமகம
தூய ரங்கசாமி துரை. (258)

---

## வண்ட பொம்மைய நாயக்கரவர்கள்மீது

### வாத்தியங்களாகவமைத்த

### துறைக்கவி.

சிறுபறைமல் லரிபம்பை தத்தாரி பூரிகுழற் சின்னம் பேரி
யுறுமிடங்கா கஞ்சரிசந் திரவலய முரசுசங்க முடுக்கை காள
மறுகியதாற் புத்திதத்தி மத்தளங்கைத் தாளமயல் மாற்ற வேண்டுந்
தறுகண்மரு வலர்பரவுஞ் சரணுடைய பொம்மேந்த்ர தளசிங் கேறே (259)

### இதுவுமது ராகங்களாக.

பூரிகன காம்பரியி ளேடுபட மஞ்சரிகாம் போதி தோடி
யாரபிநா மக்கிரியை மோகனம னேகரிகல் யாணி தேசி
சீரியமு காரிமத்தி மாபதிஸ்ரீ ராகவகை தெரிதல் வேண்டுங்
கூரியபன் னட்டையுங்கைக் கொண்டவண்ட பொம்மேந்த்ர குணபூ மானே.

### ஆயுதங்களாகக்கூறிய

### வெண்பா.

சக்கரஞ்சூ லங்குந் தளமழுக்கோ டாலிகதை
தொக்ககணை வில்வடிவாள் துப்பாக்கி—மிக்கவெழுஞ்
சஞ்சாலி பீரங்கி தானு மிவள்முகம்பா
ரஞ்சாத வண்டபொம் மையா. (261)

### பட்சிகளாகக்கூறிய வெண்பா.

மாரியன்னஞ் மந்தசனைத்தி வாவலுள்ளான் வன்றிகவு
காரிகரு டன்குருகு தாராபோய்—நாரையுறாங்
தூக்கணத்தான் கொண்டலைத்தான் சூழ்வானம் பாடிமயில்
காக்கைவண்ட பொம்முதுங்கா கா. (262)

### சடைமுடியென்னும் பெயர்கொண்டவோர் கணிகைமாதின்

### நடனகீதத்தைப் புகழ்ந்துபாடியது.

படைவிழிகோங் கரும்புமுலை மயிற்சாய லன்னநடை பாலின் சொல்லாள்
இடைதுவளக் கனகயதே சிகமெனுமோர் பரதவிசை யிதற்கொப்பாக
விடையுடையோன் றில்லையிலா டியதைநிகர் யாவர்களும் விரும்பி மெச்சுஞ்
சடைமுடியி னடங்கண்டே யூர்வசிவா னுலகமதிற் றுன்சென் றனளே. (263)

### கரூரில், கவிச்சிங்கமவர்களுக்காகப்

### பாட்டுக்கச்சேரி நடந்தபோது சொல்லியது.

அருமைபர வியகருவூ ரகிலாண்டம் புரிந்ததவ மதனால் வந்த
விருதுபுனை மாரிமுத்து மிருதங்க மும்முத்து மீனாள் கீதச்
சுருதியுநன் னரசிம்மன் றொடுத்தபிட்டி லிசையுமனத் துறவோர் கேட்டாற்
பொருள்கள்பிறி துளவெனவீண் பொழுதகழித் திடவனத்திற் புகமாட் டாரே.

### வேறு.

மலர்வனிதை யருணோக்கு மதுரிதமுத் தமிழ்வாக்கு மகிழ்வுண் டாக்கும்
பலவளமு நனிதேக்கும் பசிவறுமைப் பிணிநீக்கும் பகையைத் தாக்குங்
கலகமன சினைவீக்குங் கடினபவ விருள்போக்குங் கருதிக் காக்குந்
தலமுழுது மகிழிளைய தம்பிமக பதிகருணைச் சமுகந் தானே. (265)

தேனாட்சி தவின்மதவேள் சினந்தெனது மனம்பெரிது திகைப்பக் கங்குற்
பானாட்சி மயமுலைமேற் பகழிதொட்டான் மயல்சகிக்கப் படுமோ மானே
வானாட்சி யதனைமக வாற்கருள்கூர் வேற்கிறைதாள் வழுத்து மெங்கள்
மீனாட்சி மகிபதியை யழைத்துவரி லுனக்குநல மிகவுண் டாமே. (266)

### இரதபந்தம் வெண்பா.

மோடி கருதினுள்ள மோக மெளிதாமோ
தேடி யுறவே செயுமெவருங்—கூடிவைய
மேறேந்து பூமானைப் பீடு மிளிதுதவு
விறேந்து கந்தப்ப வேள். (267)

### அஷ்டநாகபந்தம் வெண்பா.

ஆசை நெடிதா மதுதாழ லாகாது
வாசமய மீது மதாசலமா—பூசுதரு
தேகாம காதேசு தேடிசைவு தாமகலா
வாகா கிருட்டிணபூ மா. (268)

### விசித்ர உபயநாக பந்தம்.

தாசிலதி காரசர சன்கிருட்டி ணதிபதி
யாசைமீனே யானேனிந் தந்திவந்து—பூசலிடுந்
திட்டினவு லாவுதிசை தேவமுது மேசகியா
தட்டியே னீயே யருள். (269)

### ஆலமரத்திற்கும் அறுகம்புல்லிற்குஞ் சிலேடை.

பூமலியுங் காயும் பொலியும் பலனுமுண்டு
நேமவடி யார்மகிழ நின்றிலங்கு—மாமிவையாற்
சீலமுறு மாணமலைத் திவ்யகிஷ்ண பூபதியே
ஆலறுகம் புல்லுநிக ராம். (270)

---

## சேலம் ஜில்லா, முன்சீப் கோர்ட்டு வக்கீலும்
## சித்தாந்த சபைத்தலைவருமான
# அப்பாசாமி பிள்ளையவர்கள் மீது.

---

படர்கடின வகங்காரப் பழந்தறிசாய்த் தெழுந்துநெடும் பாசக் காமத்
தொடர்சிதைய முனிந்துவினைப் பாகெறிந்து மோகவனந் தொலைய வீட்டி
யடர்துரித மடுவுழக்கி யருங்கருணை மதங்கொழித்தங் கடங்கா ஞானத்
கடமருவு பெருமையப்பா சாமிமழ களிறெமையா தரிக்கு மாதோ. (271)

மலரசித வேதாந்த வாரிபடிந் துணர்வெனுஞ்சூல் வயங்கத் தோன்றிச்
சலனவினை நெடுங்கோடை தணியவின்ப மயிலெழுந்து தருக்கி யாடப்
பலவடியர் மனஞானப் பணைதழையக் குணவரையிற் படர்ந்தெஞ் ஞான்று
மலர்கருணை மழைபொழிபு மப்பாசா மிப்புயலை யடைந்து வாழ்வாம். (272)

பொருவரிய துவிதவிருள் புறமிடப்பற் பலவறமீன் பொலிந்து சூழ
மருவடியர் கரகமல மலர்குவிய வனையர்திரு மனத்தண் காந்த
முருகவியந் தேத்துநர்வா யொண்குமுத நிரைவிரிய வொளிர்மெய்ஞ் ஞானத்
தருணவருட் கிரணவப்பா சாமிமுழு மதியைநண்ணித் தாகந் தீர்வாம். (273)

தளர்வரிய பற்பலநூற் றடம்பணைவாய்ந் துயர்ந்துபத்தி தளிர்த்தெஞ் ஞான்றும்
விளைபொறுமை சமந்தமமிவ் விதமலர்ந்து சாந்தநறை வியப்ப வீசித்
திளைகருணைத் தேன்பிலிற்றி யன்பர்கட்கின் பக்கனியைத் திருந்த நல்கி
வளர்புகழப் பாசாமி மாலெனுங்கற் பகத்தைநண்ணி வாழ்து மாதோ. (274)

காமவிருள் விடியவகக் கடுங்குளிரு மொடுங்கநெடுங்கலக்க மீனுந்
தீமதிவெண் மதியுமறைந் திடச்சமய வாதிகள்வாய்ச் செழுஞ்சே தாம்பற்
பூமறுகி யடங்கவன்பர் புனிதமுக மனநளினம் பூப்பத் தோன்றும்
மாமருவப் பாசாமி வான்கதிராற் பொருளுணர்ந்து மயக்கந் தீர்வாம். (275)

விகட்மதக் களிற்றையடர்த் தகங்கார வாளிசின வேங்கை காமப்
பகடிடம்பக் கடமைதர்க்கப் பன்றிழுவே டக்கரடி பவதுன்மார்க்க
வகடடர்பற் பலவிலங்கு மகன்றொதுங்க வெகுண்டெழுந்திங் கதிர்ந்து தோன்றித்
திகழ்ந்திடுமப் பாசாமிச் சிங்கமொன்றுண் டிடர்நரிநந் திறத்து ளுதே. (276)

பொறைநிறைநல்லொழுக்கமுதற்பொருள்செறித்தவிவேகவங்கம்பொலியவூர்ந்து
மறைபகரு நெறிதனைச்சேர் மாண்பினர்க்குக் கதித்தீவை மரபிற் காட்டி
நிறைசுகுண மணிதழுவி நிமலவின்ப வமுதநல்கி நிலைபெற் றோங்குந்
தறைபுகழப் பாசாமித் தடங்கருணைக் கடலடைந்து தாகந் தீர்வாம். (277)

பனகமணி முடிக்கிடந்த பாறிலெவ்வா றில்லறத்திற் பரம ஞான
ஜனகனிருந் தனன்கொலெனுஞ் சந்தேக மறவதற்கோர் சான்றே யாகிக்
கனகநிறை மனைவாழ்விற் கலந்துமம்போ ருகநீரிற் கனிந்து தோன்றும்
அனகனப்பா சாமிதனை யாவரிணை யாவர்தெரிந் தறையின் மாதோ. (278)

மதிமவுலி யெனுங்கருணை நிதிவரத னருட்பாக வழிகைக் கொண்டாங்
கதிர்செனன மரணவென்னோ யகலவுப தேசமருந் தளித்தெஞ் ஞான்றுந்
துதிவிமலப் பத்தியத்தின் றுரையமைத்தன் பரைப்பரம சுகத்திற் சேர்க்கும்
நதிகுலவப் பாசாமி ஞானபண்டி தனையினிது நண்ணி வாழ்வாம். (279)

உற்றுணர்பவ நெடுந்தரங்க வொலிக்கடலுங் கலிக்கடலு மொருங்கு நீந்த
மறுவில்பெரும் புணையாய்ப்பும் மயக்ககற்று மிருதுசஞ்சீ வனியாய் வாய்மை
பெறுமறிஞர் தமக்கணியாய்ப் பிறங்குதிரு வருளுருவாய்ப் பிறழா நீதி
நெறியியலப் பாசாமி நிதிபையடைந் தனமெமக்கு நிகர்மற் றியாரே. (280)

சேலநகர் சிவகுருநாதபிள்ளையவர்கள்மீது

விருத்தம்.

வளையார வாரநெடு வாரிசித்த டாரிகத்த வருந்திக் கைக்குள்
வளையார நிறுத்துவது மறுத்துநிலா வெறுத்துநிலா மனங்கொண் டேங்கி
வளையார மையத்திருத்த வல்லருளை யல்லதினி மணஞ்சூழ் பூங்கு
வளையார மினிதருள்செய் மதனசிவ குருநாத வரிசை மாலே. (281)

தருணங்கா ரியந்தெரிந்து தகுந்தகவி ராயர்கட்குத் தருஞ்சம் மானங்
கருடன்காற் கெச்சமெனக் காணுமெங்கு மாதலினுற் கனிவு கூர்ந்து
வருமன்பால் நீயெனக்கு வரிசைசெய்கின் றதைப்பலரு மதித்தல் வேண்டும்
துருவன்போல் வளரமிர்த சுகுணசிவ குருநாத துரைச்சிங் கேறே. (282)

சேதுபதி சம்ஸ்தானஞ் சிவகங்கை முதலெந்தத் திசைநான் சென்ற
போதுமெவர் பார்த்தாலும் புகழ்ந்துசபா ஷெனமதிக்கப் பொலிவுண் டாக்கி
யோதுகன சிவிகைசிறப் புடனேதந் திடல்வேண்டு முயர்ந்த பைம்பொற்
றகமழ் குவளைபுனை சரசசிவ குருநாத தளசிங் கேறே. (283)

நடுவெழுத்தலங்காரம்—கலித்துறை.

இறைபடிப் பூட லுரைநா நடுவை யினிதுணர்ந்து
முறையெனக் கீந்தருண் மற்றவை யோவெனின் முற்றுமணி
நிறைவுறத் தேர்பரி பெற்றிரு போற்றுதி நீள்குவளை
நறைமலர்த் தாம சிவகுரு நாத நராதிபனே. (284)

(இறை, படிப்பு, ஊடல், உரை, நா.) பூபதி. கல்வி. புலவி. வாக்கு. சிகுவை.



போடிநாயக்கனூர் ஜமீன்தார்

## காமராஜ பாண்டிய துரையவர்கள்

### பட்டாபிஷேககாலத்திலியற்றியது.

இராகம்-சௌராஷ்ட்ரம்-தாளம்-ஆதி.

பல்லவி

கனராஜரீகங் கைக்கொண்டானே—சென்னைக்
கவர்னர்ஜட் ஜிகலெக்ட ரெவருமெச் சுஞ்சீமானே. (கன)

அநுபல்லவி.

வனச தளசரஸ் வதிதிரு மர்து
மருவி வளரவளர் மகிதல மீது
பனக ரதிபனெனும் படிமிக வோது
பனுவற் காமராஜய பாண்டியதுரை யிப்போது. (கன)

சரணங்கள்.

யோக வேதவேதியர் துய்ய—தவவேள்விநன்
றாக வாய்மைத்தருமமு மூய்ய—தவறிடாமல்
வேக மாதமும்மாரி பெய்ய—வருடமோர்மூப்
போக மாகியினிமை செய்ய—வஞ்சமும்பொய்யும்

வெங்கலி யும்பிணி யும்பசி யும்புற ஞோடச்—சுபசோபன
மங்கள முந்தமி ழும்புக ழுங்குதி போடப்—பகைவர்கண்டு
தங்கள கந்தைத விர்ந்துவ னந்தனை நாடக்—குளிர்ந்தமுழுத்
திங்களை வென்றுவ யங்குசெ ழுங்குடை நீடப்—பாவாடைகுஞ்ச

மொய்க்கவிசி ரித்தொகைபி டித்திடுசு ருட்டிகளு லாவ—மசகிரிசொ
லிக்கவிட பக்கொடித னிக்கருட டக்கமுன் மேவ—முற்றவிருது
மொக்கவிர வித்தினக ரக்கடவு ளைச்சிறிது நீவச்—சுமூன்றிரண்டு
பக்கமும சைத்தபரு நித்திலம ணிக்கவரி தாவச்—சகலசட்ட

திட்டமு முறைசெலுத் தியவதி கார
ஸ்ரீஇந்தி யன்சக்ரவர்த் தினிதயை கூர
அட்டதி சையுந்தன தடிநிழல் சேர
அமிர்த வசனனெங்க ளருமைப்ர புகெம் பீரக் (கனராஜ)

2. மலர்வேள் சுந்தரபாண்ட்ய போசன்—மனுவிக்ஞான
குலசேக ரபாண்ட்யவல் லாசன்—அவர்க்கிளைய
பலவான் சொக்கலிங்கபாண்ட் யேசன்—கந்தசாமிநன்
னலனு கியதுணைவில் வாசன்—காமயசாமி

யிங்கித னென்றிவ ருஞ்செறி பந்தினர் யாரும்—கார்யாதிபரும்
தங்கிய கம்பள வங்கிச ரும்பெரி யோரும்—ப்ரதானிகளும்
பொங்கிய மந்த்ரிக ளுங்குறி சம்ப்ரிதி மாரும்—கனிவுகொளக்
கொங்கின ரங்கர்க லிங்கரெ னும்பல பேரும்—தொழுதுதெண்ட

னிட்டிசைவு பெற்றுநிதி கொட்டிவெகு கப்பமது கட்ட—பராக்கெனவே
கட்டியர்மு ழக்கியது திக்தொனிதி ரைக்கடலை யொட்ட—மேருவுங்கர்வம்
விட்டிளகி டப்பரிம ளத்திரள்பு யக்கிரிம ருட்ட—பால்யகன்னிகள்
வட்டிளமு லைத்துணைம தர்த்தணிர விக்கைகளில் முட்ட—மயல்பெருகி

யவரவர் விமரிசை யடிக்கடி பேச
அந்தண ரெவருமந்த் ராக்ஷதை வீச
நவநல வணிகள்விண் ணகரையு மேச
நயசுசரித திடஜெய சமுகவி லாசக் (கனராஜ)

3. மாதர் திவ்யநடன மாட—மதுரிதசங்
கீதர் கல்லுமுருகப் பாட—சர்க்காருத்யோக
நீதர் சினேகமொடு கூட—கலைக்ஞானவி
னோதர் கவிஞர்கள்வி சேட—ஜோடிசால்வையுங்

கண்டிகை யுங்கட கங்களு மங்குலி மின்னும்—கணையாழியும்
தண்டிகை யுஞ்சர மூந்துகி லுங்குவி பொன்னும்—வர்னவிசித்ர
வண்டிக ளும்பரி யுங்கட தந்தியு மின்னும்—வேணவரிசை
கொண்டித யங்கண்ம கிழ்ந்துதி ருந்தினர் பின்னும்—போஜனவகை

சொற்றிடவ தற்குநிகர் யிற்புலவர் கட்டுமுடி யாது—கொடுத்தபாக்கு
வெற்றிலைம கத்துவம்வி ரிப்பரித தற்குவமை யேது—சந்தனம்பன்னீர்
முற்றியபு துப்புழுகு பச்சைபொடி யத்தர்கள்சவ் வாது—கமகமெனச்
சுற்றிலும ணப்பதொர்வி யப்பலவி டக்கைதவி லூது—சின்னம்பேரிபாண்ட்

வாத்யமு முரசொலி மலியவு தாரன்
மாம்பழக் கவிச்சிங்கம் வாழ்த்துப காரன்
பாத்யசு ஜனபரி பாலன தீரன்
பருவ காம ராஜய பாண்ட்ய தனகு பேரன். (கனராஜ)

பொள்ளாச்சித் தாலூகா ராமபட்டினம் ஜமீந்தார் ஸ்ரீமத்
கனம் நந்தகோபாலஎர்ரையதுரையவர்கள் அரண்மனையில் நடந்த

## கல்யாண வைபவம்.



இராகம்-தோடி தாளம்-ஆதி.

பல்லவி.

அரண்மனைக் கல்யாண வைபோகம்—சொல்ல
அமையுமோ இங்குநம விமரிசையுமனேகம் (அரண்)

அநுபல்லவி.

வரமருவு கங்கப்ப வம்ஸசல் லாபன்
மலையாண்டித் துரைபெற்ற மதன்குண தீபன்
பரவு ராமபட்டினப் பாண்டியன்பிர தாபன்
பதுமமுக நந்தகோ பாலஎர்ரைய பூபன் (அரண்)

சரணங்கள்.

1. இந்த நிலவளமை காண—இந்திரவிமானம்
வந்த தெனப்பெருமை பூண—வெகுவிசித்ர
முந்த மதிவலர்கள் பேண—வேலைகளைக்கண்
டந்த மயனுமதி நாண—வாழைகமுகு

பொங்கவி ளைந்தகரும்புமொ ழுங்கினி லுட்டிக்—கூந்தற்பனைச்ச
ரங்கள்கு லுங்கநெ ருங்குகொ டுங்கைக ணீட்டி—வர்ணப்பொம்மைகள்
சங்கமெ னுந்தொகை யுந்தணி வென்றிட மாட்டி—குளோப்புலஸ்தர்
எங்கணு மின்பநி றைந்தசெ ழும்பரவை காட்டிச்—சொலித்திணங்கக்

கொட்டகைதி ருத்திநல வற்புதமி தற்புதமி தென்னப்—பூர்ணகும்பங்கள்
இட்டசுரு திப்படிதி சைத்திசைத ழைத்தினிது மன்ன—முளைப்பாலிகை •
வட்டமிசை யச்சகல பக்கமு மணிக்கவரி மின்ன—பைந்தோரணங்கள்
கட்டியகி ளர்ச்சியிடை மற்றுயர்நி லைத்தவிசு துன்னச்—சுபசோபன

மங்கள கீதம டந்தையர் பாட
வாழ்த்திப் பெரியோர்கள் மந்த்ராக்ஷதை போட
இங்கித வாணரெல் லாருங்கொண் டாட
எங்கள் சொந்தமகரா ஜேந்த்ரன் செயும்விசேட (அரண்)

2. சல்லரி துந்துபி தடாரி—டங்காநகாரா
மல்லரி ஜண்டைதவில் பேரி —உறுமிதுடி
வெல்லரி தாகியதுத் தாரி —தாரை எக்காளஞ்
சில்லரி மாமுரசு பூரி —வாங்காக் கர்ணுக்கள்

கொம்புத வண்டைகு டம்பண வங்குழ லுக—சின்னஞ் சாரங்கி
தம்புரு வின்சுர மண்டலி ரஞ்சித மோக—வீணைபிட்டில்வ
லம்புரி பம்பைத டங்கட லுண்டெழு மேக—கர்ச்சனைபோலப்
பம்பிய திர்ந்துமு ழங்கவு டன்பல மாகத்—தித்திகைத்தாள

மத்தளமி டக்கைசுர பத்தினுட னுத்தமர்கள் படிக்க—திரிகிடஜெணு
தத்திமியெ னப்பரத சித்தினிகள் பற்பலரு நடிக்க—அவர்கள் கற்ற
வித்தையைம தித்தரசர் கட்கிருபு யக்குவடு தடிக்க—வேட்டுப்பாவாடை
மொய்த்திடுசு ருட்டிகொடி வர்க்கநிறை யக்குடைகள் பிடிக்க—நாணுவிநோத

வாண வேடிக்கைகள் வகைவகை சேர
வரிசையிட் டனைவரு மகிழ்வது கூர
வேண பந்துஜனங்கள் விகிர்தர்க ணேர
விருப்ப முடனடத்து மேன்மைப்ரபு சிங்கார (அரண்)

3. ஞான வேதியர் பெருங் கூட்டம்—வீசியபூரி
தான மதில் வறுமை ஓட்டம்—எடுத்ததென்றால்
ஆன தீம் போஜனசி ரேட்டம்—என்னசொல்வது
வான காம தேனுவுந் தேட்டம்—கொள்ளத்தக்கது

சந்தன குங்கும மும்புழு குப்பனி நீரும்—பச்சைக்கற்பூரக்
கந்தமு மண்டம ளந்தன நின்றிமை யோரும்—ஏற்றார் தாம்பூல
விந்தைவி ளம்புவ தன்றுவி ருந்தினர் யாரும்—வஸ்த்ராபரணச்
சுந்தர சம்ப்ரம துங்க மடைந்தனர் பாரும்—வேங்கடாசல

சக்கரத ரக்கடவுள் சத்யபத துத்யவிசு வாசம்—உள்ள தனது
மக்கள்மரு மக்கள்கன முற்றபவ னித்திருவுல் லாசம்—விரித்துரைக்க
மிக்கெவர்க ருத்தினிலு திக்குமியல் மெச்சியது தேசம்—அஷ்டைஸ்வர்யமும்
ஒக்கவபி விர்த்திமரு வப்ரபல லக்ஷ்மிமுழு வேசம்—வைத்தன ளென்றும்

பொருந்து புகழ்வளர் புண்ய சரீரன்
புவனபரி பாலன புனிதகெம் பீரன்
திருந்து மாம்பழக் கவிச்சிங்கவு தாரன்
சீலநிதி நந்தகோ பாலளர்ஜைய தீரன்.

{ அரண்மனைக் கல்யாண வைபோகம்—சொல்ல }
{ அமையுமோ இங்குநம விமரிசையு மனேகம். }

# சீட்டுக் கவித்திரட்டு.

## மாட்சிமை பொருந்திய சிவகங்கைச் சம்ஸ்தானம் மஹாராணியாரவர்கள் மீதியற்றிய மங்கலவாழ்த்து.

சீர்கொண்ட கிரணநித் திலமெடுத் தெறியும்வெண் டிரைக்கருங் கடல் குடித்துச்
செறிகொண்ட லைப்பிடி யெனத்தழுவி யதனொலி செவிப்புகுந் திட மருண்டு
செங்கட் கடாக்கவுட் கும்பகெம் பீரதந் திகள்விரைந் தன திருப்பித்
திடுதிடென் றெதிரத் திடுக்கிட்டு வானரத் திரள்சுர தருப்பாய் தொறுஞ்
சினைமுகையுடைந்தரகனி சிந்தலின் வழிந்தபைந்தேன் சுனைநிறைந்துமீறித்
தினைவிளைத் தருவிபாய்ச் சென்றபுடை வயல்படர் திருப்பரங் குன்றமர்ந்த
சிவசுப்ர மண்யதே சிகனையும் பலவளமை திகழ்கின்றபுல்லத்தி வாழ்
தெய்வமா மையனையு மேனுதி யங்காள தேவியையு மினிது தொழுவாம்

கார்கொண்ட குவளைநின் றிமையாது நோக்கக் கனிந்துருகி நிதி யிறைப்பக்
கலபமயி லகவுபூஞ் சோலைமூ தண்டங் கடந்துமார்த் தாண்ட னித்தங்
கவனவிச் சித்ரமா கதநிறத் துரகதக் கடுநடை விடாய் தணிக்குங்
காவண நிகர்த்துவான் கடவுளர் தமக்குநிழல் காட்டுதென் பாண்டி நாடாங்
கன்னிகண் மணியாய்க் கதித்தசிவ கங்கைமுற் கருதிய தபோ பலத்தின்
காரணத் தாலது சிறப்பவந் நகர்தனிற் கருணைபொறை சீல மன்பு
கற்பறிவு முதலமிர்த சற்குண மனைத்துங் கலந்தொரு சொரூப மான
காட்சியிற் கௌரிவல் லவராஜ ஜகன்மோ கனன்வரத் தவத ரித்துப்

பார்கொண்ட புகழ்முத்து வடுகநா தேந்த்ரதிட பாண்டியனை யீன்றுசீனர்
பாஞ்சாலர் காம்போஜர் சிங்களர்க லிங்கரைம் பத்தாறு தேசத் தரும்
பயபத்தி யொடுகப்ப மிட்டடி வணங்கப் பராக்கெச் சரிக்கை யென்று
பலர்கட்டி யங்கூற நல்வித்வ ஜனர்துதி பரவமுதிர் வேத ஞான
பண்டிதர்க ளாசீர் வதிக்கமந் திரிமார்கள் பக்கத் திசைந்து சூழப்
பந்துக்கள் சேனாதி பதிகள்கரு ணீகர்கார் பார்மணியர் சேர்வை காரர்
பழமைப்ர தானிகள் பணிந்துபணி கேட்பமேற் பணிமதிக் குடை தழைப்பப்
பாவாடை மஜகிரி சுருட்டிகுஞ் சங்கவரி பசியபொன் னாலவட்டந்

தார்கொண்ட டால்விரு தனேகஞ் சொலிப்பத் தடாரிதவில் நாக சின்னந்
தாரையெக் காளந் தவண்டைதுடி கொம்புதுத் தாரிசின் னங்கள் கர்ண
தவளசங் கந்திமிலை முரசுறுமி பூரிகைத் தாளமத் தள மிடக்கை
சல்லரி யுடுக்கைடங் காநகார் தணதண தஞ்ஞெரன முழங்கி யார்ப்பச்
சத்யபா ரிஷ்டராதி காரரா பர்ட்பீஷர் தனது கட்டளை நடாத்தத்
தமிழ்வாணி திருமகள் சதாநட மிடத்தர்ம தானமெண் டிசை வழங்கத்
தங்கநவ ரத்னவிஸ் தாரஜய சிங்கா தனத்திருந் தரசு செய்யுந்
தாயெங்கள்காத்தமமஹாராணிசெங்கோன்மைசவுபாக்யநெடிதோங்கவே. (286)

## பழனித்தேவஸ்தானம் தர்மகர்த்தாவாகிய
## பாப்பன்பட்டி மிட்டாதார் கனம்
# வெங்கிடசாமி நாயக்கரவர்கள்து
## வேட்டைப்புகழ்ச்சி.

**மதி**யும்மை பணிகங்கை நதிகந்த மதுபொங்கு மலர்கொன்றை யணிசெஞ் சடா
மகுடமுடி நிமலரிரு கமலபத மநுதினமு மனசின்மற வாத நேமா
வாய்ந்ததிரை குமுறுகடல் காய்ந்திடினு முயர்சிகர வடமேரு கிரிய சையினு
மருவுதிரி புவனநவ கிரகநிலை பிசகிடினும் வாய்மைதவ றுத பூமா
மதனபுள கிதநளின களபமுலை வனிதையர்கள் மடமெழுது ரூப காமா
வண்டின மடர்ந்துமது வுண்டுசுதி கொண்டிசை மகிழ்ந்துபயில் கின்ற தாமா
மருவலர்கள் படைகண்முது கிடமுடுகி நடனமிட வருவிஜய துரக பீமா
முண்டல நயம்பரவ வும்பர்பய மன்றகல வந்தகோ தண்ட ராமா

**கதி**கொண்ட வண்டபகி ரண்டமெண் டிசையுங் கலங்கவெண் கிரி குலுங்கக்
காந்தார பாஞ்சால காம்போஜ குருநிடத காஸ்மீர மொடுகே ரள
கர்னுட சிங்கள கலிங்ககே கயகுடக கல்யாண சோழ பாண்டிய
கனவங்க முதலான தேசத்தி லுள்ளவர்கள் கையினுற் சன்னை காட்டக்
கனகமணி முரசுதுடி திமிலைதவில் குடமுழவு கருதுமல கோசை திக்தி
கைத்தாள மத்தளஞ் சல்லரி தடாரிசங் கம்பம்பை சொம்பு வாங்கா
கானங்க டாரடங் காநாக சுரநகார் கணகணென் றொலி முழங்கக்
கவிகைபல விருதால வட்டஞ் சுருட்டிடால் கதிர்மண் டலத்த ளாவ

**விதி**கொண்ட கட்டியர் பராக்கெச் சரிக்கையென வேல்வல்ல யஞ்சக் கரம்
வீரசமு தாடுவளை தடிகுடா ரஞ்சவள மேலான பிண்டி பாலம்
வெடிகே டயங்கத்தி முதலாயு தங்களொடு வீரியர்கள் சூழ்ந்து போற்ற
வெஞ்சின மிருங்கரடி தந்திபுலி பன்றிமுயல் மேவுகட மான் மரைமுதல்
மிஞ்சுமிருகங்களையடர்ந்தவைகள்குன்றவெதிர்வென்றுதிறல்கொண்டுமீளும்
வீரப்ர தாபாவு தாரப்ர பலச்முக மேன்மைமக ராஜ யோகா
மேதினியை யாள்கின்ற கும்பினித் துரைமார்கள் மெச்சிய குணுள லோலா
மெய்மைமே ராயவார் குலதிலக னெனவளர் விலாசசம் பன்ன சீலா

**துதி**சொண்ட சகலலோ கங்களும் பணிகின்ற சுஞ்ஞான பழனு புரித்
தாயதே வஸ்தான தர்மகர்த் தாவெனுந் தோர்த்தண்ட ரமணீ கரா
சுருதியுணர் புலவர்கவி யிருளகல வருமுதய சுபகிரண வதன சோமா
துஷ்டரை யடக்குமதி விக்ரம விதக்ஷண சுலக்ஷண சொரூபாகரா
சுரரமுத மனையகவி விஸ்வகுல மாம்பழஞ் சொற்குநிதி யருளு தாரா
துரைராஜ சிங்கமென் றெவருமெச் சியமகா சூரகெம் பீர தீரா
சுத்ததிட முற்றகுரு வப்பமுகில் பெற்றருள் சுபுத்ரகெள மார வீரா
துங்கமரு நீதமதி வெங்கிட சுவாமியதி சுந்தரச பாவுஜித னே. (287)

# சேலம் ஜில்லா முத்தபுரிசமஸ்தானம்
# ஜமீன்தாரணியவர்கள் மீது
## இயற்றியது.

சருவபரி பூர்ணதண் டாயுதக் குமரகுரு சாமிகரு ணைவி லாசம்
சரஸ்வதி கடாக்ஷப்ர சன்னவித் யாப்ரபல சாமர்த்ய வித்வ சரபம்
தர்க்கமிடு வோர்பற் களைப்பொடிப் பொடியாத் தகர்க்கின்ற வஜ்ராயுதம்
சண்டாள ரைப்பிளக் குங்கண்ட கோடாலி சார்ந்தவர்க் கொரு கற்பகம்
ஷட்சாஸ்த்ர பொக்கிஷங் காவ்யக் களஞ்சியம் தவவிஸ்வ குல சிரேஷ்டம்
சம்ப்ரம வளம்பரவு தென்பழநி யம்பதி தழைக்கவரு சந்த்ரோதயம்
தளசேது பதிசமஸ் தானமுத லெங்குஞ் சபாஷென மதித்த ரத்னம்
சற்ஜனர்கள் புகழ்மாம் பழக்கவிச் சிங்கத் தமிழ்ச் சக்ரவர்த்தி நிருபம்

விருதுபுனை நாமக்கல் முதலாக வொன்பதெனு மிட்டாஜ் ஜமீந்தாரி யாய்
விற்றிருக் கின்றமது ரிதவமிர்த குணநிதி விவேகசௌ பாக்ய சாலி
மிகுமன்ன தானசத் திரதரும ரட்சகி விளங்குபல தெய்வ பத்தி
விமலகுரு பத்திப்ரா மணபத்தி தவறாத விசுவாசி சாது சங்க
வேதாந்த சிரவண மஹாராசி போலப்ப விஜயகா ருவ தாரன்
மெச்சுபத் தினிசுலட் சணசிகா மணிவிதி விடாதமது நீத சீலி
விற்பனல வுங்கமகி பாலனை ஸ்வீகார விதியிற் படைத்த மாதா
விச்சித்ர முத்தபுரி மேவுமுத் யாலம்மை மேன்மேன் மகிழ்ந்து காண்க

கருதலர்கள் பணிராம நாதபுர சேதுபதி கன்யசமு கத்தி னிற்போய்க்
கவிமழைபொழிந்தேகவிச்சிங்கமெனமகிமைகைக்கொண்டதொன்றுதானே
கற்றிடு மனேகபா ளையகாரர் வண்டிக் கடுக்கன் சரங்கொ லுசுகள்
கவிகைதண்டிகைகுதிரைவெகுஜோடிசால்வைபொற்கண்டையுருமால்கள்சோமன்
கனகவெகு மதியடிக் கடிநடத் திடநெடுங் கல்விக் கொடிகட்டி னேங் ,
கவினுமிச் சில்லாவில் வேளுக் குறிச்சிவளர் கருணைமே லப்ப பாண்டியன்
கனபெட்டி வண்டிமா டுதவினான் புத்தூர் கனிந்தமா நந்தி துருவங்
கமழ்குமர மங்கலங் கொங்கணு புரமெழில் கதித்தவிட் டம்பா ளையம்

அருமைபர வியபால மேடுபா கற்பட்டி யாதிமிட் டாதா ரர்க
ளனைவோரு நூறுரூ பாவினிற் குறையாம லங்கங்கு நல்கி னார்க
ளதுமுழுது நீகேட் டிருக்கலாம் நமதுசெய லறியாத பேர்க ளில்லை
அன்பிலா தவரிடத் தணுகிடோ மொருவேளை யணுகினுஞ் சும்மா விடோ
மாயிரம் வசைபாடி யாகிலுந் தூற்றுவோ மதிலழிந் தவ ரனந்தர்
அறிவாளர்தம்மைவலியத்தேடிவாழ்த்துவோமதில்வாழ்ந்தபேர்கள்கோடி
யாதலா லிப்போ தசட்டைசெய் யாமலே யைஞ்ஞூறு பொன் முடிப்பும்
அஸ்வமொன் றும்வண்டிமாடிரண்டுங்கொடுத்தகிர்த்திபெறவேண்டுமே. (288)

# ஜமீந்தார் ரங்ககிருஷ்ண முத்துவீரப் பூச்சய துரையவர்கள் மீது.

பூவார் கடம்பணி புயக்குமர குருபாதம் புயசதோ தயத டாகம்
புனிதசரஸ் வதிநடன சாலைகால் யாகம புராணசாஸ் த்ராந்த ரங்கம்
பூர்வவே தாந்தரத் னாகர மிலக்கணப் பொக்கிஷம் புலவர் திலகம்
புனைகற்ப னாலங்க்ர் தப்ரபந் தத்தமிர்த பூரண விசித்ர கும்பம்
போற்றுபழ நித்தலத் தேற்றுமா ணிக்கவற் புதமய நிவாத தீபம்
புறமிகழ் பவர்க்குமதி யார்க்குங் குதர்க்கரென் போர்க்குமொரு வஜ்ரா யுதம்.
பொல்லாவு லோபகண் டனகண்ட கோடாலி போதசூர் யப்ர காசம்
புரவலர்கண் மகிழ்மாம் பழக்கவிச் சிங்கமிப் பொழுதுதேர்ந் தெழுது கடிதம்

மூவா வளம்பரவு வேழமலை யானெந்த முனைவரெதி ரிடினு மலையான்
முத்திறைத்தொழுகுபாலாற்றினேழைகளின்முதிர்கொடும்பசியாற்றினான்
முகிலனைய கருமலைப் பெருமாள் கயற்கணி முழுக்ருபை பழுத்த செல்வன்
மோகனசொ ரூபகம் பளசில்ல வார்வம்ச முதல்வன்முத் தமிழ் விநோதன்
மூவகைக் கவர்னர்க லெக்டர்ஜட் ஜிகளாதி மொழிதுரைக ளெவரு மெச்சு
மொய்பொழின் மருங்கா புரிச்சமஸ் தானமறு முறைமஹா ராஜ போஜன்
முத்துவீ ரப்பூச்ச யப்ரபு தவத்தினின் முளைத்தநிதி ரங்க கிருஷ்ண
முத்துவீ ரப்பூச்ச யேந்த்ரகெம் பீரதுரை முகமலர்ந் தினிது காண்க

தேவாதி தேவன திடத்தினிற் பத்தியுஞ் சிவயோகர் பாலி னன்புந்
தீனஜனர் மீதினி லிரக்கமுந் தருமத் தினிற்பிரிய மும் பொறுமையுஞ்
சீலமுமு தாரவநு கூலமும் பற்பல சிறப்புங் குறிப் பறிதலுந்
திறமாய்ப் படைத்ததிட சாலிநீ யாதலாற் சிலசெய்தி தெரிவிக்கி றோம்
சேதுபதி யான்பொன் னுச்சாமி முன்சமத் திகள்பாடி விருது பெற்றோம்
சிவகங்கை கோம்பைதேவாரமெழு மலையிளசை திகழ்போடி நாயக்க னூர்
தேரிடைய கோட்டைகட வூர்புரவி பாளையஞ் செயராம பட்டி னம்பின்
சேர்ந்தவூற் றுக்குளி சமத்தூர் முதற்சமீன் செய்யமிட் டாக்க ளெங்கும்

பாவா லனேகதண் டிகைபெட்டி வண்டிபொற் பணிகுதிரை ஜோடி சால்வை
பாலிக்க வயல்மானி பமுமுதவ மற்றசம் பன்னர்களு முபச ரிக்கப்
பார்த்தவுத் யோகரை ரோப்யருமி ணங்கவெப் பதியுளோ ருந்து திக்கப்
பாரெலாங் கல்விக் கொடிகட்டி னோம்நமது பான்மையறி யாதவர்க ளியார்
பாரதூ ரந்தரா தரமருமை கண்டுபரி பாலிப்ப தற்கு வல்ல
பாண்ட்யனென் றன்னைநெடு நாளாக நம்பிப் பசுத்தேடி வருகன்று போற்
பருவமதி லுனதுசமு கம்புகுந் தோந்தக்க படிசகல சம்மான மும்
பரிவாய்நடாத்தியொர்சவாரியுந்தந்துசுபபலன்மேன்மைபெறவேண்டுமே. (289)

இதுவுமது.

திருராம நாதபுர சேதுபதி யாம்பொன்னு ஸாமிமக ராஜன் மெச்சித்
தந்தவெகு மதியோ கணக்குக் கடங்காது தநுபவே ளுக்குறி ச்சிச்
சத்ரபதி வேலப்ப முதலியோர்சிட் டுக்கவி தனக்குமுந் நூறு ரூபா
தருபெட்டி வண்டிமா டருளினு னவன்மீது சந்திர விலாசஞ் சொனேனும்

அருகே யழைத்தொரு பாயிரண் டாயிரமு மதிகவரி சையு நல்கினு
னுங்காங் குயர்ந்தமிட் டாதார் ஜமீன்தா ரனேகபல் லக்கு வண்டி
யணிஜோடி சால்வைமுத லானவிம ரிசையடிக் கடிநடத் துவதி யற்கை
யனகபாய பன்பட்டி வெங்கடசு வாமிமா லருமைமா னிய சகாயன்

வருமேன்மை தேர்ந்திடைய கோட்டைகட வூர்முதல் வயங்குசிற் சிலப்ர புக்கள்
வருடத்தி லுக்கொரு பாநூறு நூறுதரு வதுசகச மின்னு முள்ள
வகையெலாம் விவரிக்க முடியாது கனத்யாக வள்ளலென் றுனை யடுத்தோம்
மரியாதை தகுதியாய்ச் செய்துமே லானவொரு வாகனமு முதவல் வேண்டும்

முருகார் புயத்தநின் கீர்த்தியெங் கும்பரவு முதுபுலவர் கட்கீந் திடுன்
முந்துகரு டன்காற் சதங்கையே போலுமனு முறைமருங் காபுரியில் வாழ்
மோகனு முத்துவீ ரப்பூச்ச யேந்த்ரனருள் முகசந்த்ர ரங்க கிருஷ்ண
முத்துவீ ரப்பூச்ச யப்ரபு வெனுநிரு முகுந்தசக் ராதி பதியே. (290)

இதுவுமது.

தடமகுட குண்டல சடானனும் போஜதுக சற்குரு வரப்ர சாதம்
சரஸ்வதி விலாசமுந் தமசேது பதிமெச்சு சண்டப்ர சண்ட வாக்கி
தார்க்கிகர் குடோரிசண் டாளவஞ் சகரைத் தகிக்கின்ற வடவாக்கினி
சர்வபூ ஜிதமாம் பழக்கவிச் சிங்கத் தமிழ்ச்சக்ர வர்த்தி சனது

முடலையுடை யடையலர்கள் செவிகள்கிடு கிடுகிடென முகிலினு முழங்கு வெற்றி
முரசினன் மருங்கா புரிச்சமஸ் தானதுரை முத்தமிழ் விவேக ப்ரபு
முல்லைமலர் மாலிகா பரணகம் பளகுல முழுத்யாகி ரங்க கிருஷ்ண
முத்துவீ ரப்பூச்ச யேந்த்ரகெம் பீரஜகன் மோகனன் மகிழ்ந்து காண்க

திடமது மகிமையுந் தரமுங் குறிப்புந் தெரிந்துகொள் ளத்த குந்த
தீரனென் றுனைநம்பி மெத்தநாட் காத்துளோந் திவ்யகவி ராஜர் தம்மைச்
சிறிதும் வருத்தலா காதுசற் கீர்த்தியே சிதையாத நிசப தார்த்தம்
சிலசொலற் கேகாந்த பேட்டிகேட் டோந்தயவு செய்யாத தால தனையுன் .

ஸரிடமதனில் வெளியிடுகி ஜேம்பெட்டி வண்டிமா டிசைசால்வை சோம னுருமா
லேற்றவா பரணமிவை வரிசையா கக்கொடுத் திடுவதன் றியும ருமையா
யிவ்வேளை யாயிரத் தைந்நூறு ரூபாவு மீயவேண் டியத வசியம்
இன்றைத் தினம்பயண மாகிலுந் தடையின்றி பேறபடுத் துவது நலமே.

இதுவுமது.

காலமே யெழுதியுள கவிதைகளி னுலுட் கருத்தெலாந் தெரிய வரலாம்
கருதுபிர யாணமின் றைக்குநா ளைக்கென்று காக்கவைப் பது ஞாயமா
சீலமே வியநமது வேண்டுகோ ளென்னவொரு திரணமல வோ வுனக்குச்
சிறிதும் பராமுகஞ் செய்யத் தகாதினிச் சீக்கிரத் தினி லழைத்து
ஞாலமே புகழக் குறிப்பைநிறை வேற்றிவிடை நல்கவேண் டியத வசியம்
நல்விஷய மிதுமுன்பின் யோசிக்க வேண்டா நமக்கோ சகிக்கு தில்லை
மூலமே யெனவன்று கூப்பிட்ட மதயானை முன்வந்த ரங்க கிருஷ்ண
முத்துவீ ரப்பூச்ச யேந்த்ரகரு ணாகரா முத்தமிழ் முழுத்யா கியே.

## மங்கல வாழ்த்து.

புயலிந்து வந்துதவழ் பொழில்புடை யடுத்ததண் புனனாட்டு வனிதை வதனம்
போன்றுள்ள திரிசிர புராசலத் தோங்கியருள் புரிதாயு மான பரனைப்
பொன்னடிக் கங்கையே யன்னகா வேரிநதி புணைதிரு வரங் கேசனைப்
பூந்துழாய்க் கருமலைப் பெருமானை யிருகுழை பொருங்கயற் கட்கு மரியை

வயல்விஞ்சு தென்பழனி மாமலை விமானத்துள் வைகுதண் டாயு தக்கை
வரசுப்ர மண்யபக வானையன் பினர்நெஞ்சில் வருசக்க தேவி தன்னை
வரன்முறைசதாகாலமுங்கருதிமலர்தூய்வழுத்தியெதிர்தொழுதுபணிவாம்
வளரிந்தி யாசக்ர வர்த்தினி யெனப்பெயர் வயங்கு குவின் விக்டோரி யா

செயல்கண்டு தயவுமிக வைத்திடக் கவர்னர்ஜட் ஜிகள்கலெக் டருமதிக்கத்
திசைமன்னர் கப்பமிட வறுமைபகை யகலச் செழுந்தருமமுழுது நீடச்
செந்தமிழ் மருங்கா புரிச்சமஸ் தானத் தினிற்கொலு விருந்து நீதித்
திறநடத் துந்துரைப் பாண்டியன் கம்பளச் சில்லவார் குலசி ரேஷ்டன்

மூயல்கின்ற காரியா காரிய நிதானிகொடை முகிலருமை யறிவி வேகி
முரசபதி முத்துவீ ரப்பூச் சயப்ரபு முழுத்தவத் தாலு தித்த
மோகனகி ரீடிகன யோகமக ராஜனெழின் முதிர்சமுக ரங்க கிருஷ்ண
முத்துவீரப்பூச்சயேந்த்ரன்பெருஞ்செல்வமொய்த்ததினைபுகழ்த்தழையவே. ()

## சென்னை ஹைகோர்ட் லாயர் செல்லமையரவர்கள் மீது.

தென்பழநி யம்பதித் தண்டா யுதக்குமர தேசிகன் பத சேகரம்
திவ்யதவ ளாம்போஜ ஜயசல கூஷணவாணி திடபரத நடன கூடம்
திகழிலக் கியவிலக் கணசமுகத் திரமடை திறந்தமது ரப்ர வாகம்
சேதுபதி சமுகமெச் சியமாம்ப ழக்கவிச் சிங்கமெழு தியபா சுரம்
பொன்பரவு நவரத்ன பூஷணா லங்கிர்த புயாசல சபா பூஜிதன்
புநிதசதுர் வேதபா ராயணன் ப்ரம்ஹகுல புண்யகா ருண்ய தேகன்
புகழ்மதுரை மீனாக்ஷி சுந்தரேஸ் வரரருள் பொருந்துசௌ பாக்ய ஸ்ரீமான்
பூர்ணகா யத்ரிஜப சந்திவந் தனஹோம போதகவெக் ஞோப வீதன்
மின்பருவ முகில்போல வித்வஜனர் கட்குதவு விற்பன்ன கன யோகவான்
மேன்மைவெங் கடநாத ஹைகோர்ட்டு லாயரம் வீட்டினில் விஜய கோமகன்
வித்தார னைச்சிறிய தகப்பனெனு முத்தமன் வியந்துதுரை மார்களிர் பாருமே
மிகமதித் திடுலாய ரெனுஞ்செல்ல மகராஜ வேள்களிவு கூர்ந்து காண்க
இன்பமுள நின்பேட்டி கண்டுகொண் டப்பா லிசைந்தசஞ் சாரஞ் செய
வெண்ணியுன தும்தரவை யெதிர்பார்த் திருப்பதா லெம்மைவிரை வினிவ்வ ரவழைத்
திதயக் குறிப்பைநிறை வேற்றுவ துனைச்சார்ந்த தினியதற் குபசார மேன்
எல்லாந் தெரிந்தவர்க் கென்னவிவ ரிப்பதினி யிதுசமய மிதுசமய மே. (294)

## நெல்லையம்பதி வாசிகளான ஸ்ரீ பஞ்சப்ரம்ஹ சந்ததியாரவர்கள் மீது.

தடமருட மகரகுண் டலதிட ஷடானன தயாநிதி தியான புனிதம்
சங்கீத சாகித்ய சம்பூர்ண தனகும்ப சரஸ்வதி சபா மண்டபம்
தளசேது பதிசமஸ் தானபூ ஜிதவித்வ சாமர்த்ய ரத்ன தீபம்
தருபழநி நகர்மாம் பழக்கவிச் சிங்கத் தமிழ்ச்சக்ர வர்த்தி நிருபம்
கடகரட விகடவைங் கரசூர கயமுகக் கடவுளெனு மக்க சாலைக்
கணபதியை யும்பரம கல்யாணி யாய்வந்த காமாக்ஷி யம்மை தனையுங்
கருதுபெரி யோர்கள்பர சமயகோ ளரிநாதர் கமலபத முடி சூடுவோர்
காயத்ரி மந்த்ரசெப சந்தியா வந்தனர் கனகவெக் ஞோப வீதர்
வடகுவடு சூழல கனைத்தும் படைத்தே வளர்க்குமுகி மைப்ர தாபர்
வரபஞ்ச வேதபா ராயணர் விநோதமுகில் வாகனர் சமர்த்தர் மாங்கை
மாநகர்க் கதிபர்திரு நெல்வேலி தனில்வாழு மதுரநய குண சுசீலர்
வல்லவிஸ் வப்ரம்ஹ வம்சசற் ஜனர்களும் மகிழ்வுகூர்ந் தினிது காண்க
அடலரசர் முதலாரு மருமையா யுபசரித் தானைபல் லக்கு வண்டி
யணிஜோடி சால்வைவஸ்த் ராபரண வெகுமதி யடிக்கடி கொடுத்து மெச்சு
மற்புதக் கல்விக் கொடிகட்டி ஞானம்மை யறியாத பேர்க ளில்லை
யாதலால் விவரிப்ப தென்னநிறை கீர்த்திபெற் றருளவிது நற்சமய மே. (1)

## அம்பாசமுத்திரம் சுப்பராய முதலியாரவர்கள் மீது.

செந்திரு மடந்தைதமிழ் மங்கைகுல வுஞ்சரச திவ்யபொற் கமலா சனம்
திருத்திய விலக்கிய விலக்கண மனைத்தையுந் தேர்ந்தஜய கண்டீ ரவம்
செப்பரிய கற்பனை யலங்கார பிம்பஞ் செனித்தகெம் பீர கும்பம்
தேவாமு தேநிகரு நாற்கவித் துறையுந் தெரிந்தமது ரப்ர வாகம்

சந்தன சுகந்தநய மந்தர தடம்புய சவுந்தர மிகுந்த வுஜிதம்
சமயநிர் விஷயசிவ குமரகுரு பரனுபய சரணமற வாத சித்தம்
சம்ப்ரம நிறைந்தபதி னெண்கண புராணதிட தத்வப்ர சங்க துல்யம்
தர்க்கங்கள் பேசிக் குதிக்கின்ற பேர்பற் றகர்க்குங் கடுங் குந்தளம்

வந்தவர் தமைக்கண் டொளிக்கின்ற லுத்தர்களை வகிர்கின்ற வஜ்ரா யுதம்
வளமைபெறு விஸ்வகுல திலகமாம் பழநிநகர் வளர்கின்ற ரத்ன தீபம்
வட்டநில முற்றுமகிழ் முத்தைய விதக்ஷணன் வரத்தினி லுதித்த செல்வம்
மகிமைபெறு சுகவசன மாம்பழக் கவியேறு மனமகிழ்ந் தெழுது மோலை

சுந்தர விலாசஞ்சு முத்ரங்க ரரசுபுரி தோர்த்தண்ட கருணா கரன்
தூயபுகழ் சேர்சுப்ப ராயவா ணவராய சுமுகனெதிர் கொண்டு காண்க
சுகிர்தகுண கர்ணவ தாரதுரை யெனவே துதித்துனைப் பாடி வந்தோம்
தொடுகடக மொடுகுதிரை பொன்னூறு சரிகையணி சோமனுரு மாலருள்வையே. ()

## தென்காசைநகரிற் றேவாங்க சரிதம்பாடி அரங்கேற்றிய சமயத்திற் கூறியது.

சீர்பூத்த பழனியம் பதிதனி லிருந்துனது தென்காசை நகர்வந்து நாம்
சேர்ந்தமா தங்களொரு நான்கான தாலருள் சிறந்ததாய் தந்தை யுறவோர்
தேடிய சினேகரிவ ரன்பினை லெங்களூர் சீக்கிரஞ் செலவெண்ணி னோம்
தேவாங்க சரிதந் தனைப்பகற் பொழுதில்மகிழ் செய்துநீ கேட்ப தன்றிக்

கார்பூத்த வந்திதன் னினுமொரு முகூர்த்தமிக் காதைகேட் டருள வேண்டுங்
கருதுதிரு வனிதையநு தினமுநட மிடுசமுக கனகபுய சயில விதுரா
கற்பக மெனப்பெயர் படைத்தரு வொத்தவுப காரகர் ணவ தாரா
கவிவலவர் புகழமிர்த கிரணமதி வதனசுப கன்னியர்க் கினிய மாரா

தார்பூத்த முல்லையணி மார்பகெம் பீரவிஸ் தாரரண சூர வீரா
தனதனிக ரானரா ஜயராஜ போஜன் றவத்தில்வரு நவசு புத்ரா
சக்காள தேவியிரு சரணமலர் பரவுகன சகலசௌ பாக்ய சீலா
சரசமது ரிதவசன துரிதகோ தண்டவுத் தண்டதோர்த் தண்ட ராமா

வார்பூத்த களபமுறு மதமுலை மடந்தையர்கள் மடலெழுது மதிக ரூபா
மாம்பழக் கவிநா வலன்றமிழை மெச்சிநவ மணிகுலவு மினிய பணிகள்
வளர்சிவிகை குதிரைபல வரிசையுந் தருகின்ற மதனசுக ரமணீ கரா
வங்காரு திருமலைப் போடைய தயாளஜய மகராஜ சுக போஜனே. (297)

## குமரமங்கலம் சுப்பராயபிள்ளையவர்கள் மீது

பார்கொண்ட நவகண்ட பகிரண்ட நிறைந்தண்ட பாவலர்பொற் பததி யானம்
பருவமதி முகத்தவள பாரதி கடாக்ஷவிற் பனகலைக் ஞான பீடம்
பலபுனித வளமைசெறி பழனிநகர் வளர்ஞான பாஸ்கரோ தயவிலாசம்
பாவலோ ரிகள்பகைத பகைக்கவடர் கோடையிடி பரமகுண சுகுண கரம்
சீர்கொண்ட விஸ்வகுல திலகமெத் திசையுஞ் செயித்தசா மர்த்ய துல்யம்
திவ்யரச வேதாந்த சிரவணசி ரோன்மதரஞ் சித்திட சபா பூஜிதம்
திண்டுமுண் டுப்புலவர் கண்டயோ டாவிமுதிர தீர்க்கலை ராக்ய சித்தம்
சேதுபதி சமுகமெச் சியமாம் பழக்கவிச் சிங்கமினி தெழுது நிருபம்
வார்கொண்ட முலைமலர் மடந்தைமரு வியகளப மார்பநதி குலசி ரேஷ்டன்
வண்டிமிர் செழுங்குவளை மாலிகா பரணம்ருக மதசௌர்ய புய பூதரன்
வரிசைபெரு கியகுமர மங்கல மெனும்பதியில் வாழுமக ராஜ போஜன்
மதுரம்ருது வசனகன வான்சுப்ப ராயஜய வள்ளலெதிர் கொண்டு காண்க
கார்கொண்ட முகிலைக் கடக்குநின் கொடையுங் கதித்தோங்கு சௌபாக்யமுங்
கல்விப்ர தாபமும னேகராற் கேட்டுனைக் கருதிவந் தனமா தலாற்
கவனவாம் புரவியுங் கண்டையுரு மாலுங் கவின்சோம னுஞ்சால்வை யும்
கனகமைஞ் ஞூறுமிக் கணமே கொடுத்ததிக கருணைசெய் திடவேண்டு மே.

## இராமபட்டணம் ஜமீந்தார் நந்தகோபால துரையவர்கள்மீது.

காலால் நடந்துவரு கவிராஜ ருக்கொரு கணக்குநற் குதிரை யேறுங்
கல்விமான் கட்கொரு கணக்குவண் டியில்வருங் கவிவலர்க் கொரு கணக்குங்
கனபெட்டி வண்டியுள வித்வான் களுக்கொரு கணக்குமே னவில் வந்த
கவிஞரா னோர்க்கொரு கணக்குச் சிபாரிசுக் காகிதங் கொண்டு கண்ட
மாலான புலவருக் கொருகணக் குச்சால்வை வஜ்ரக் கடுக்கன் முருகு
வாய்ந்தகெண் டைச்சோம னுருமா லணிந்திட்ட வாணருக் கொரு கணக்கு
மற்றுமிப் படியே வழக்கமிப் போதுசில மனிதர்தரு கின்ற வரிசை
வயணடம் பங்களை மதிப்பதே யலது தமிழ் மகிமையா வரு மறிவரோ.
மேலான கல்வித் தராதரம் பார்த்துதவு விஜயகர் னவ தார
விற்பன்ன னீயன்றி வேறொருவ ரிலையென்று மிகவுநினை யேநம்பி னேம்
மேட்டில்விட்டாலுநின்பெருமையேபள்ளத்தில்விட்டாலுநின்பெருமையே
விறுகைக் குபசார மேனுனக் குச்சகல விதமுந் தெரிந்தி ருக்கும்
கோலாக லக்கீர்த்தி குறையாத செல்வங் கொடுப்பவர்க ளேயு யர்ந்தோர்
கூர்ந்துநல் லோர்தமக் கருளுவது கருடன் குலாவுகாற் கெச்ச மாகும்
கோகனக வனிதைகுடி கொண்டமணி மார்பகுங் குமகளப புய பூதரா
குணராம பட்டண சமஸ்தான கனநந்த கோபால புவனேந்த்ர னே. (299)

## உடுமலைப்பேட்டை பஞ்சப்ரம்ஹ சந்ததியார்கள் மீது மங்கலவாழ்த்து.

சீர்பூத்த விரணவித் திலமணி கொழிக்குந் திரைக்கட லிடத்து தித்துத்
திமிரபட லத்தைச் சிதைக்குங் கதிர்க்கசைத் திடுகவரி போன்ற துவசச்
சிகரகோ புரகனக மண்டப விதானச் செழுங்காஞ்சி விற்றி ருக்குந்
தேவிகா மாக்ஷியைத் தென்பழனி வருகுமா தேசிகனை யினிது பணிவாம்

தார்பூத்த குமுதப் புயத்தர்முன் னூன்மார்பர் தனியநும விருது முடையோர்
தகுமெக்கு சீலர்மகு டஞ்பாகர் மாங்கைவில் தாரர்முகில் வாக னத்தோர்
சாஸ்த்ரவே தாகம சமர்த்தர்கா யத்ரிஜெப சந்திவந் தனவி னோதர்
சர்வஜகஸ் ருஷ்டிப்ர தாபபஞ் சப்ரம்ஹ சந்ததிக ளான மேலோர்

பார்பூத்த வுடுமலைப் பேட்டைவாழ் பெரியதன பாண்டியதுரை யங்கணேந்த்ரன்
பாவலர் சகாயனுங் கற்பினி மகிபன்விற் பன்னசுப் பைய தீரன்
பதவாகி சந்திரகு மாரகெம் பீரவான் பலசாலி திரிமூர்த்தி வேள்
பருவவழ கிரிசாமி மேருசின் னச்சாமி பாஞ்சால புருஷ ரத்னம்

நேர்பூத்த தாசரம ணிகரன் வரதப்ப நிஜவசன நயவி வேகி
நீதிசங் கரயதாஷ் டகன்வை யாபுரி நிதானகுரு மூர்த்தி நிபுணன்
நியமமுயர் தருமிவர் முதற்சகல சற்சனர்க ளிடுகிளை தழுவி யெந்த
நிறைசெல்வ முங்கல்வி யுங்கண்ய மும்பெற்று நிதமுந் தழைத் தோங்கவே.

## இடையகோட்டை ஜமீந்தாரவர்கள் மீது.

திடமகுட விபுதர்பணி சரணசிவ குமரகுரு தனதுகரு ணைவி லாசம்
தவளவடி வுடையநய சரஸ்வதி கடாக்ஷவிட் சணகலைக் ஞான பீடம்
சகலவுஜ்ஜி தப்ரபந் தமுநொடி தனிற்சொ லுஞ் சண்டப்ர சண்ட வாக்யம்
தமிழருமை யறியாத சண்டாளர் மார்பைத் தடாரிக்கும் வஜ்ராயு தம்

திடசரத குணதபன தீபமெத் திசையுஞ் செலுத்தும்ப்ர சங்க திவ்யம்
திருத்திய விலக்கிய விலக்கண மெனப்பகர் திரைக்கடல் கடந்த வங்கம்
சிற்றறி வுழுத்தரைத் திரணமு மதிக்காத தீர்க்கவை ராக்யசித்தம்
சேதுபதி சமுகமெச் சியமாம் பழக்கவிச் சிங்கமெமு தியவா சகம்.

வடகுவடு கிடுகிடென நடனமிடு துரகபதி மாகனக பதித ளபதி
மதனரதி பதிசக்ர பதிமிகு தனுதிபதி மானகம் பளகுலபதி
வளமைதிக ழாயபுரி வரிசைலட் சுமிபதி மகீபதி தவத்து தித்த
வரபுத்ர நித்யசுப தவமெய்ப்ர பலசுத்த வசனமக ராஜ போஜன்

அடர்தொடைய லணிமுத்து வேங்கடாத் திரிவிஜய வன்பனெதிர் கொண்டுகொண்க
அதிகமதி யூகியென் றுனதுசமு கத்தையா மாவலொடு தேடி வந்தோம்
ஆதலால் மனதில்மகிழ் வாகவுட னேவர வழைத்துநற் கவிதை வினவி
அமைபெட்டி வண்டியொ டிரண்டெருது நூறுபொன் னஸ்வமுந் தரல்வேண்டுமே.

## ஆய்க்குடி ஜமீன் மானேஜரவர்கள் மீது.

தடகரட கடவிகட சமரகஜ குமரகுரு சரணமகு டாதி பத்யம்
சரஸ்வ திவிலாசமுக் கமசேது பதிமெச்சு சண்டப்ர சண்ட வாக்யம்
தன்மையறி யாதவர்க மைப்பொடிப் பொடியாத் தகர்க்குங் கனக்கு டாரம்
தருபழநி நகர்மாம்ப ழக்கவிச் சிங்கத் தமிழ்ச்சக்ர வர்த்தி சனது

வடக்குவடி நிகர்மருக மதகளப புயகண்ய வாணிந்த்ர குலகி ரீடி
மதகெருவ பருவமுலை வனிதையர்கள் மடலெழுத வளர்மதன கோலா கலன்
வளமைதிக பூர்யபுரி யோபனக் கொண்டயா மகராஜ னுங்கி சைந்த
மானேஜ ரதிகார மாலுலக நாதமதி மந்திரி மகிழ்ந்து காண்க

இடமுடைய நமதுசெய் திகளெலா நன்றாய்த் தெரிந்தே யிருப்ப துமலாற்
சிறுவயது தொட்டுப் பழக்கமல வோவுனது சித்தமிப் படியான தேன்
செல்வாக் கிருக்கின்ற போதுசற் கீர்த்தியைத் தேடுவது தான்வி வேகம்
திரள்விதைக் காய்கறிக் காயில்லை யாவெல்லி செட்டிமெலக் கேக லெக்கா

இடமுழவ துஞ்செல்லு மெங்கள்சொல் வித்வான்க ளென்னகிள் ளுக்கி ரையா
வினியசொந் தப்பரபு வெனத்துணிந் தெண்ணியிதை யெழுதினே முன்னே
யெவர்நமக் காதரவு நீபரா முகமா யிருந்தாற் சுமாவிடுவ மா [யன்றி
வெல்லா முடிக்கவேண் டுவனுனது கடமையினி யிதுதேர்ந்து கொளவேண்டு மே.

முருங்கைநகர் மிட்டாதார்

## சின்னகிருஷ்ணம நாயக்கரவர்கள்மீது.

தென்பழனி மலையில்வளர் தண்டாயு தக்குமர தேசிகன் பதசேக ரம்
திவ்யகலை வாணிசிம் மாசனந் தேசப்ர சித்தநவ ரத்ன தீபம்
சிற்றறிவு ளுத்தத் திருட்டுப் புரட்டரைத் தீக்கின்ற வடவாக் கினி
சேதுபதி சமுகமெச் சியமாம்ப ழக்கவிச் சிங்கமெழு தியவா சகம்

பொன்பரவு களபதிட புயவரத ராஜரருள் பொங்குசெள பாக்யசீமான்
பொழில்சூழ்மு ருங்கைநகர் வளர்கம்ம வார்வமிச் புண்யநய குணவி வேகி
புனிதவான் சுப்பைய பூபதிவ ரத்தில்வரு புத்ரசற் புருஷ மேரு
பூமிபுகழ் சின்னக்கி ருஷ்ணமா மகராஜ போஜனெதிர் கொண்டு காண்க

வன்பர்களை மனமிசை மதிக்கவே மாட்டோ மகிழ்ந்துனைப் போலு யர்ந்த
மதியூகி களைமெத்த வாழ்த்துகின் றதுவே வழக்கமென் னுளநமது
மகிமைதனை யறியாத பேர்களியார் செய்திமுழு வதுமுனக் குத்தெரியு மே
மற்றொருவ ரைப்போல நம்மைநினை யாரெந்த மன்னருங் கொண்டாடு வார்

மின்பருவ மழைமேக மும்பழகு கொடையுடைய விஜயனென் றுனைவிரும்பி
வீறுசீட் டுக்கவிய னுப்பினே மாதலால் விடுதியொன் றேற்ப டுத்தி
விசுவாச மாயுபச ரித்துவித் யாப்ரபல மேன்மைபார்த் துத்த குந்த
வெகுமான நல்கினு னுனதுசற் கீர்த்தியபி விர்த்தியா கப்பெருகு மே.(303)

# தங்கப்பாட்டுகள்.

---

## வேளுக்குறிச்சி ஜமீன்தார் கனம்
## வேலப்ப கவுண்டரவர்கள் மீது.

வீசுபுகழ்தாவும் ராசிபுரமேவும்
வேதகயிலாச நாதர்விசுவாச
மிஞ்சுதர்மகர்த்தன் கொஞ்சுதிருநிர்த்தன்
வேலப்பகிரீடி கோலக்கவிபாடி
வித்வஜனர்சூழ எத்திசையும்வாழ
வீரியமங்காத பேரிசைசங்கீத
மேளந்திருந்த தாளம்பொருந்த
மின்னார்களாட பொன்னார்களோட
விருதுகதிக்க நிருபர்துதிக்க
வெஞ்சினத்தின்மோது குஞ்சரத்தின்மீது
வீதிவரக்கண்டேன் காதன்மிகக்கொண்டேன்
விம்முதுநிதம்பம் கம்முதுகதம்பம்
வேளைபார்த்துக்கவி செய்தால்—தங்கம்
வெகுகோடி புண்யமடி. (1)

வாரிலகுபூரி பேரிகைதடாரி
மல்லரியெக்காளம் சல்லரிகைத்தாளம்
வல்லகொம்புதாரை வெல்லுபம்பைபோரை
வாட்டியடர்ஜண்டை மீட்டியதவண்டை
மத்தளமிடக்கை தித்திகளுடுக்கை
மன்னுதவில்நாக சின்னமுமனேக
மணிமுரசமு மொலிமீற
பணிபவர்கலி பசிமாற

வனிதையர்பலதுதிசெய்யக் கனிவொடுஜகதலமுய்ய
மந்திரிமார்புடைதுன்ன விந்திரனுமிவனென்ன
மாலைப்பொற்புயவாகன் வேலப்பப்ரபுடீகன்
வந்தனனவனையில்கண்டேன் சந்ததமிகமயல்கொண்டேன்
மனசினி லதுசகி யேனே
தன துனை யலதிலை யானே

மன்னவனெதிர்சென்று சொன்னபடிநின்று
வணக்கங்கள் காட்டி யிணக்கமாய்க்கூட்டி
வந்துநீயென்னை ரக்ஷித்தால் தங்கம்
வாஞ்சை மறவேனடி. (2)

வில்லைப்பிடித்துப் பல்லைக்கடித்து
மீசைமுறுக்கி யேசிபுறுக்கி
வீறுகள் கூறிச் சீறுதல்மீறி
வேள்வருவானே வாள்விழிமானே
விடிகனை யென்னை படர்வதன்முன்னை
வெற்றிமிகுபேட்டி பெற்றினிமைகாட்டி
வேண்டினிதான பாண்டியஞான
வேலப்ப மகாராசனைத் தங்கம்
மேவவர நீசொல்லடி. (3)

சித்தர்முனிவோரும் முத்தர்முதல்யாரும்
சேவைசெய்துசூழுங் கூவைமலைவாழுந்
திருமுருகேசன் கருணைவிலாசன்
செஞ்சொலுபகாரன் நஞ்சையகுபேரன்
சிந்தைமகிழ்பாலன் விந்தையநுகூலன்
சீலப்ரதாபன் வேலப்பபூபன்
சித்தசனைப்போலே மெத்தையதின்மேலே
செய்யதுகில்நீக்கிப் பையவசமாக்கி
சேர்தொடையிணைத்து மார்பினிலணைத்துச்
செண்டுமுலைதொட்டுக் கொண்டுகுறியிட்டுத்
தேகதிடமாக மோகசமபோக
திவ்யசுக லீலைதன்னை தங்கம்
செய்ததென்ன சொல்வேனடி. (4)

---

வேறு.

மங்களகுணநிதிவீர கங்கணவிஜமனுதார
மகிபதிரஞ்சயசாமி சுகிர்தசுதன்கனபூமி
மாலொப்பப்புகழ்யோகன் வேலப்பப்ரபுடீகன்
வரிமலரணைதனில்வந்து கரிகரவகைகள்புரிந்து
வளைசரிபரிபுரமாட விளைமதசலநதியோட
வண்டிசைகொண்டையலுங்கச் செண்டிருகொங்கைகுலுங்க
மருவியசமரதி யென்னசொல்வேன் தங்கம்
மதனனு மெதிர்வர மாட்டானடி. (5)

---

## வேறு.

மங்கையர் சிநேகன் கங்கைகுலவாகன்
மாலற்புதசீலன் வேலப்பகுணாலன்
மலரணைமீது மெல்லவொருபோது
வந்துவிளையாடிச் சிந்துகவிபாடி
மையலையுண்டாக்கி தய்யலிடைநீக்கி
வட்டமுலைகிள்ளித் தொட்டமுத்துத்தள்ளி
வரிசைகளைப்போகச் சரசுகமாக
மன்மதனைப்போலே யென்னையொருக்காலே
மயக்கி விட்டு மட்டும் தங்கம்
வாட்டியதை யென்ன சொல்வேன். (6)

மாலைநெடுநேரம் சோலையதினோரம்
மாமலர்கொய்து தாபசஞ்செய்து
மகிழ்கின்றபோதே சகியென்றமாதே
வாலப்ரபுசகன் வேலப்பவைபோகன்
வந்தென்முலைதொட்டான் பந்தயமுமிட்டான்
மதிமுகங்கோட்டி யதிநயங்காட்டி
வணங்கியவென்னை யிணங்கிடப்புன்னை
மறைவில்வருத்திக் குறைவுதிருத்தி
வலிதில்மல்லாத்திச் சலிதியாய்நேத்தி
மண்டியிட்டுக்கொண்டு கண்டிதழ்த்தேனுண்டு
மன்மதபூசை யென்மனதாசை
வளர நடாத்தியதைத் தங்கம்
மறக்க முடியாதடி. (7)

நத்யசோமவாரம் மத்தியானநேரம்
நயபுனலாட நேயமொடுகூடத்
தோகையர்கள்துன்ன வோகைபெறுசின்னத்
தோட்டமதிற்சென்று தேட்டமதாய்நின்று
சோர்க்குகள்விடாது நோக்குகிறபோது
சோலைக்குயில்மாரன் வேலப்பவுதாரன்
சூதிலெனையேச்சுக் காதிலொருபேச்சுச்
சொல்லுவதுபோலே வல்லமையினாலே
தொட்டிதழ்கடித்தான் வட்டிணைபிடித்தான்
சொக்கினே னதுமுதலாய்த் தங்கம்
தூக்கமுங் கிடையாதடி. (8)

சாணையிட்டுத்தீட்டி வேணகத்திபூட்டி
தந்திரமாய்வீசிப் பந்தயமும்பேசிச்
சகலருங்கூடிச் சொகுசுகொண்டாடி
சடுதியிலேவற் படிவிடுசேவற்
சண்டைபார்த்துநின்றேன் கண்டுநேர்த்தியென்றேன்
தாலத்திலிந்த்ரன் வேலப்பசந்த்ரன்
சன்னையொன்றுசெய்தான் யென்னையொன்றுவைதான்
தனித்ததை யாலோசித்தேன் தங்கம்
சப்பிரதாயக காரனடி. (9)

குலைநிலாவும் பலபலபூவுங்
குறையின்றித்தேற்றுந் சிறுதென்றற்காற்றும்
கொஞ்சியொயிலேற்ற வஞ்சியர்கள்போற்ற
கோலப்பராகன் வேலப்பத்யாகன்
கோதிலாதமேடை மீதுலாவுசாடைக்
குறிப்பையன்றாகப் பார்த்தேன் தங்கம்
குமரிப் பிரியனடி. (10)

## மருங்காபுரி ஜமீன்தார்
## ரங்ககிருஷ்ண முத்துவீரப்பூச்செயதுரையவர்கள்மீது.

புதியபலாவுங் கதலியுமாவும்
பொலிந்தமருங்கா மலிந்தமருங்கா
புரிக்கோராசன் வரிசைசேர்போசன்
பூஜிதகம்பளசோமன் ஸ்ரீஜனரஞ்சிதநேமன்
புஞ்சரசகுணநிதி சுஞ்சகுலதனபதி
புத்திமான் வேய்ந்தார்ப்புயவரை
முத்துவீரப்பூச்செயதுரை

புத்ரலட்சணதீரன் உத்தமவச்ரசரீரன்
பொங்குமுத்தமிழ்க்குதார ரங்கக்ருஷ்ணமுத்துவீரப்
பூச்செயகிரீடிமெள்ள வாச்சரியமாகவுள்ள
பூமலர்மெத்தையில்வந்து தேமல்படைத்திருபந்து
போலுமுலைச்சிமிழ்தொட்டு மேலுநகக்குறியிட்டுப்
பொக்கிஷ நிலையதுகண்டு
பக்குவ மதிநிதமுண்டு
பொன்னின்வளைசிந்த மின்னிடைவருந்தப்
புளகிதமொடுதொடைபூட்டி வளர்பலகலைவிகள்காட்டிப்
பூரணதயவுவைத்தான் தங்கப்
புண்யவுபகாரனடி.

---

தங்கப்பாட்டுகள் முற்றும்.